உ

சிவமயம்.

யாழ்ப்பாணத்து நல்லூர்

மஹாவித்துவான்

அரசகேசரி

இயற்றிய

# இரகுவம்மிச மூலமும்,

புன்னாலைக்கட்டுவன்

சி. கணேசையர்

இயற்றிய

# புத்துரையும்.

இவை

கோக்குவில்

சோதிடப்பிரகாசயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டன.

ஆநந்தஞு தைமீ.

விலை ரூபா உ.

உ

சிவமயம்.

# முகவுரை.



பூமலி சோலைப் புன்னையம் பதியி
லாயாக் கடவையி லமர்ந்திடு கயமுகன்
றாய விணையடி தொழுகுதும்
பூமிசை நிலவிப் பொலியவிவ் வுரையே.

வானுறு சினைமிகு மருதடி யமர்ந்த
யானை முகங்கொ ளிறைவற் பரவுதும்
மாநில மீதினின் மருவியிந் நூலுரை
தானில வுற்றுச் சால்புறும் பொருட்டே.

செந்தமிழ்க்காப்பியங்களுள்ளே, சொன்னோக்குப் பொருணோக்குத் தொடைநோக்கு முதலியவற்றாற் சிறந்துவிளங்குவது கம்பராற்செய்யப்பட்ட இராமாவதாரமொன்றுமே என்பது அறிஞர் யாவர்க்கும் ஒப்பமுடிந்ததொன்றேயாம். அதனோடொத்துச் சிறப்புவாய்ந்தது இந்த இரகுவம்மிசமே.

இந்த இரகுவம்மிசஞ்செய்தவர் இற்றைக்கு ஏறக்குறைய முந்நூறுவருஷங்களுக்குமுன்னே யாழ்ப்பாணத்து நல்லூரிலிருந்து அரசாண்ட பரராசசேகரமகாராசாவின் மருகரும், மகாவித்துவானுமாகிய அரசகேசரி என்பவர். நல்லூரின்கீழ்ப்பாகத்திற் பொருந்திய நாயன்மார்கட்டிலுள்ள தாமரைக்குளத்தருகே, ஒரு மேன்மாடத்திலிருந்து இதனைப் பாடினர் என்பர். அரங்கேற்றிய விடம் சோழராசாக்களுடைய இராசதானிகளுளொன்றாகிய திருவாரூர். இந்நூல் கேட்டோன் பரராசசேகரமகாராசன். அஃது;

"இன்ன காதை யியன்ற விரும்பொருட்
டுன்னு செஞ்சொற் றுகடபு தூயநூல்
பன்னு செஞ்சொற் பரராச சேகர
மன்ன னின்ப மனங்கொள வாய்ந்ததே."

என்னும் பாயிரச்செய்யுளானே அறியப்படும்.

[பரராசசேகரமகாராசாவின் காலத்திலே, அவன்றம்பி செகராசசேகரனும், இந்த அரசகேசரிமுதலியோரும் நல்லூரிலே ஒரு செந்தமிழ்ச்சங்கந் தாபித்திருந்தார்களென்றும், மதுரைமுதலிய இடங்களினின்றுந்தருவித்துப் பல ஏட்டுப்பிரதிகளை இராமநாதபுரத்திலிருந்து எழுதுவித்துத் தங்கள்சங்கத்திற் சேர்த்துவைத்தார்களென்றும் சரித்திரகாரர்கள் கூறுவார்கள். இவர்கள்காலத்திலேயே பரராசசேகரம் என்னுஞ் சிறந்த வயித்தியநூலும், செகராசசேகரம் என்னுஞ் சிறந்த சோதிடநூலும் இயற்றப்பட்டன.]

இந்த இரகுவம்மிசத்திற்கு முதனூல் வடமொழியிலே காளிதாசன் என்னும் மகாகவியினாற் செய்யப்பட்ட இரகுவம்மிசமே. சரித்திரமேயன்றி வருணனைகளுஞ் சிறிதும் வழுவாவண்ணம் வடமொழிச்சுலோகங்களைத் தமிழில் மொழிபெயர்த்துச் செய்த அரசகேசரியாருடைய வன்மை எவரானும் வியக்கப்படத்தக்கது. அதற்குக் காட்டாக: வடமொழி இரகுவம்மிசத்திலே,

𑌸𑌰𑌾𑌜𑍍𑌯𑌂𑌗𑍁𑌰𑍁𑌣𑌾𑌦𑌤𑍍𑌤𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌾𑌧𑌿𑌕𑌂𑌬𑌭𑍌।
𑌦𑌿𑌨𑌾𑌨𑍍𑌤𑍇𑌨𑌿𑌹𑌿𑌤𑌂𑌤𑍇𑌜𑌃 𑌸𑌵𑌿𑌤𑍍𑌰𑍇𑌵𑌹𑍁𑌤𑌾𑌶𑌨𑌃॥

என்னுஞ் சுலோகம்

தமிழிலே

"கனைகழல்வீரனுங்காவலான்றரு
புனைமணிமுடியொடும்பொலிந்துதோன்றினான்
றினகரன்றிவாந்தகாலத்திற்சேர்த்திய
வினவொளிகொடுகனலிலங்கிற்றென்னவே."

என இவரான் மொழிபெயர்த்துப் பாடப்பட்டிருக்கின்றது. இப்படியே பெரும்பாலும் ஒவ்வொரு சுலோகமும் மொழிபெயர்த்துப் பாடப்பட்டிருக்கின்றது. இதனால், இவர் தென்மொழியிலன்றி வடமொழியினும் வல்லுநர் என்பது அறியத்தக்கது.

இவர் தமிழிலுள்ள பஞ்சலக்கியங்களுளொன்றாகிய சிலப்பதிகாரத்தில் அதிகம் ஆராய்ச்சியுடையர். அது;

"நீக்குமானன்மழக்குமாயர்நீடிசைநிறையவூது
மூக்கமேன்றளவேயாலையோதையதளவேயுந்த

வாக்குதீங்கொன்றைமீன்பாடரவத்தீங்கொன்றைமாற்றத்
தேக்குவேயேனற்காப்பின்றிறத்தவேயகற்றுமன்றே."

என்பதனானும்,

"அரிமுகமடுத்துவீழுமான்மதவளறுநாறக்
கரிமுகவோடமூர்ந்துசிலதியர்மருங்குகாப்பச்
சுரிமுகநெற்றிதுற்றச்சுடர்மணிவர்க்கந்தொக்க
பரிமுகவோடமூர்ந்துசிலதியர்பாங்குபோனார்."

என்பதனானும், பிறவற்றானுமுணரப்படும்.

இவர் இதனைக் கம்பராற் செய்யப்பட்ட இராமாவதாரத்தைப்போலப் பாடவேண்டுமென்று கருதிப்பாடினார் என்பது கர்ணபரம்பரை. அஃதுண்மையாதல், இராமாவதாரத்துள்ள சொற்பொருட்பிரயோகங்கள் இதன்கண்ணுமாங்காங்குப் பயின்றுவருதலானுணரத்தகும். அன்றியும், கம்பர் சடையப்பவள்ளலை, இராமாவதாரத்தின்கண் இடையிடையேவைத்துப் புகழ்ந்திருத்தல் போல, இவரும் பரராசசேகரனை, இந்த இரகுவம்மிசத்தின்கண் இடையிடையேவைத்துப் புகழ்ந்திருத்தலும் அதற்கோர்சான்றாகும்.

இதன்கணுள்ள மாலையீட்டுப்படலம் எத்தகைக்கவிகளாலும் பாடமுடியாத விசிட்டமுடையதாகப் பாடப்பட்டிருக்கின்றது. அங்ஙனமாதல்,—

"சிறுகொடிவிழிவண்டன்னனம்புயஞ்செலாதுமீள
வுறுமடமானசத்தினெண்டிரையுந்தாகிற்ப
நறுமலர்நளினமாடேநின்றொருநளினமாடே
குறுகனப்பெடையின்மற்றோர்குரிசில்பாற்கொண்டுபோனான்."

என்றும்,

"மாந்தளிர்மேனிநல்லாள்வரிவிழிமான்போய்வல்லே
பாய்ந்தவன்கண்ணிதன்னிற்படாதுறநிற்பத்திங்கள்
காந்தொருவீதிதன்னைக்கடந்தொருவீதிதன்னிற்
போந்தெனமற்றோர்செம்மறன்னயல்கொண்டுபோனாள்."

என்றும்,

"மைதிகழ்கோதைநாட்டக்கருங்கயல்மருண்டுபோயந்
நெய்திகழ்வேலான்மார்பநெடுந்தடத்துருதுநீப்ப

மெய்திகழிமையச்சாரனின்றொருமேருச்சார
லெய்திளமயிலின்மற்றேரேந்தல்பாற்கொண்டுபோனாள்."

என்றும்,

"மொய்வளைவிழிச்சகோரமங்கவன்முகவெண்டிங்கட்
கைவளர்நில்வையுண்ணுதொழிந்திடக்கற்பகத்தின்
மெய்வளாயலேஙின்றோர்மந்தாரத்தயல்போய்மேவுந்
தெய்வமென்கிளியின்மற்றோர்செம்மல்பாற்கொண்டுபுக்காள்."

என்றும்,

"சூதையட்டெழுந்தகொங்கைச்சுனந்தையத்தோகையன்னாள்
காதலின்குறிப்பைநோக்கியருகுபோய்க்களித்துமெல்லப்
பேதையப்பாற்செல்வேமோவென்றிடப்பிடியனாளக்
கோதையைப்பார்த்தபார்வைகொல்லியகிடந்ததன்றே."

என்றுங் கூறியசெய்யுட்களிலும், இன்னும் பிறசெய்யுட்களிலு முள்ள பொருள்வைப்பின் நுண்மையை உற்றுநோக்குந்தோறும் நன்குபுலப்படும்.

இரகுவம்மிசமென்பது இரகுவினுடைய வம்மிசத்தையுணர்த்தும் நூல் என விரியும். சூரியவம்மிசத்தரசர்களுள் இரகு சிறந்தமையின் அவனைக் குலமுதலாகக்கொண்டார். "பாரதம்" என்பதுபோல. லக்-கடத்தல். உ-விகுதி. இலகு என்பது ரல வொற்றுமைபற்றி இரகு என நின்றது. சொற்கடலையும், பகைக்கடலையுங் கடந்தவனென்பது பொருள். அது;

"தெட்டமெய்த்தவப்பயச்சிறுவற்கவ்வயின்
மட்டிலகலைக்கடறணையும்வாளமர்
முட்டியபகையையுமுடிவுகாண்பனென்
றிட்டனரொருபெயரிரகுவென்னவே."

என்பதனுனறியப்படும்.

இதன்கட் சொல்லப்படுவன சூரியவம்மிசத்தரசர்களாகிய திலீபன், அவன் மகன் இரகு, அவன் மகன் அயன், அவன் மகன் தசரதன், அவன் மகன் ஸ்ரீராமன் என்னுமரசர்களுடைய சரித்திரங்களும், ஸ்ரீராமனுக்குப் பின்னும் இருபத்துமூன்று தலைமுறை அரசர்களுடைய சரித்திரங்களுமே.

இந்நூற்குப் பொருள்கூறல் பரம்பரையாய்க் கேட்டறிந்தவர்களுக்கேயன்றி ஏனையோர்க்கு மிகவரிதாகும்.

இத்தகைமையான இந்நூற்கு ஒருரை இருப்பின் எவர்களும் இலகுவில் விளங்கிக்கொள்வார்களென்றுகருதி, ஸ்ரீலஸ்ரீ. ஆறுமுக நாவலரவர்கள் மருகரும், மாணாக்கரும், வித்துவசிரோமணியுமாகிய ஸ்ரீமத். ந. ச. பொன்னம்பலபிள்ளையவர்களிடத்தும், சுன்னாகம், வித்துவான் ஸ்ரீமத், அ. குமாரசுவாமிப்புலவரவர்களிடத்துங் கேட்டறிந்தவாறே யான் இதற்கோருரை எழுதி வெளிப்படுத்தலாயினேன். இவ்வுரை முதனூற் கருத்தோடு மாறுபடாவண்ணம் ஆராய்ந்து எழுதப்பட்டுள்ளது. முதனூற் சுலோகங்களும் இடையிடையே காட்டப்பட்டிருக்கின்றன.

இவ்வுரையை எழுதும்பொழுது எனக்குநேர்ந்த ஐயவிபரீதங்களை நீக்கியும், சொற்பொருட் பிழைகள் வாராதபடி பார்வையிட்டும் உதவிய ஷை புலவரவர்களுடைய நீதிகுன்றா உள்ளப் பெருந்தகைமை என்னாலன்றி இவ்வுலகத்தாலும் என்றும் புகழ்ந்து பாராட்டப்படத்தக்கது.

யாழ்ப்பாணத்திலுள்ள நாட்டுக்கோட்டை நகரத்தாரும், மற்றும்பிரபுக்களும் இவ்வுரையின் இன்றியமையாமையை அறிந்து, இதனை அச்சிற் பதிப்பித்து வெளிப்படுத்தற்குத் தங்கள் தங்களாலியன்றபொருளை உபகரித்துதவிய பெருநன்றி என்னால் மறக்கற்பாலதொன்றன்று.

இவ்வுரையிலே காணப்படும் பிழைகளை எனக்கு நேரே எழுதியறிவிப்பின், அவற்றை நன்றியறிதலோடேற்று மீளத் திருத்தி வெளிப்படுத்துவேன்.

"குணநாடிக்குற்றமுநாடியவற்றுண்
மிகைநாடிமிக்ககொளல்."

புன்னாலைக்கட்டுவன். ஆநந்தஹூ தைமீ.

இங்ஙனம்,
சி. கணேசையர்.

# சிறப்புப்பாயிரம்.

சென்னை பிரஸிடென்ஸி காலேஜ்
தமிழ்ப்பண்டிதர்
மஹாமஹோபாத்தியாயர்
பிரமஸ்ரீ. உ, வே. சாமிநாதையரவர்கள்
இயற்றியது.

ஆசிரியவிருத்தம்.

உலம்பூத்த புயவரச கேசரியா ராய்ந்துமுன
முரைத்த தாய
நலம்பூத்த சுவையிரகு வங்கிசத்திற் கினியவுரை
நன்கி யற்றிப்
பலம்பூத்த தமிழ்வலவர் மதிப்பவெளிப் படுத்தினன்யாழ்ப்
பாண மேயோன்
குலம்பூத்த நலமுடையோன் கணேசையப் பெயராளன்
குணமிக் கோனே.

வண்ணார்பண்ணைச் சைவப்பிரகாசவித்தியாசாலைப்
பிரதம பண்டிதர்
சுன்னாகம்
ஸ்ரீமத். அ. குமாரசுவாமிப் புலவரவர்கள்
இயற்றியது.

ஆசிரியவிருத்தம்.

ஆரியத்திற் புகழ்படைத்த கவிகாளி தாசனெனு
மறிஞர் கோமான்

சூரியற்கு முதன்மைதரு மரபிரகு வமிசமெனச்
சொல்லா நின்ற
பேரியலுங் காப்பியமொன் றினிதளித்தான் பொன்போலப்
பெரிதும் பேணி
ஆரியங்கற் பவரெல்லா மாதியினிற் கற்றுணர்வ
தந்த நூலே. (க)

அவ்விரகு வமிசமெனு நூலகஞ்சேர் பெருமையுட
னருமை யாய்ந்து
திவ்வியசெந் தமிழ்ப்புலவ னரசகே சரியென்று
செப்பும் வேந்தன்
எவ்வெவருந் தமிழ்நாட்டிற் கோரமிர்த மிதுவென்ன
வினிமை சான்ற [பாவிற்
செவ்வியசொற் பொருளமைத்தோர் காப்பியமாய்த் தமிழ்ப்
செய்தா னன்றே. (௨)

சொற்படுமெப் பெருநூலி னமைந்தபொரு ளருங்குரைத்தாய்த்
தோன்று மாற்றால்
கற்பவர்க ளிடரின்றி யிதற்கிதுவே பொருளென்று
காணும் வண்ணம்
சொற்பொருள்க ளினிதுணர்ந்தே யிலக்கணநூன் முடிபுகளுந்
துலங்கக் காட்டி
விற்பனஞ்சே ருரையொன்று வரைந்தளித்தான் யாவனெனின்
விளம்பக் கேண்மோ. (௩)

மாமதுரைத் தமிழ்ச்சங்க மாசிகபத் திரமாகி
வரிசை பெற்ற
காமருசெந் தமிழினிடைக் கற்பவர்க ளுளங்கொள்ளக்
கம்ப நாடன்
பாமருவு நுண்பொருளுங் கவித்திரிவும் பலவேறு
பண்டை நூலின் [குஞ்
தோமருவா மெய்ப்பொருளும் வரைந்தளித்தோ னெழுக்கமி
சுகுண சீலன். (௪)

காசிபகோத் திரமுடையோன் புன்னைநகர்ச் சின்னையர்
காதன் மைந்தன்
தேசிகன்வித் துவசூடா மணிபொன்னம் பலப்பெயர்கொள்
செம்மல் பாங்கே
பேசரிய விலக்கியமு மிலக்கணமும் பிறநூலும்
பெரிது கற்றோன்
பூசுரர்கோன் கணேசனெனும் பெயருடையோன் கவிபாடும்
புலமிக் கோனே. (௫)

---

யாழ்ப்பாணம் இந்துகாலேஜ்
பிரதம தமிழ்ப்பண்டிதர்
பருத்தித்துறை சார்ந்த புலோலி
ஸ்ரீமத். வ. குமாரசுவாமிப்புலவரவர்கள்
இயற்றியது.

ஆசிரியவிருத்தம்.

பெரும்புகழ்பெற்றிட்டமகாகவிகாளிதாசன்வட
மொழியிற்பேசும்
அருங்கவியாம்ரகுவம்சகாவியத்தையரசகே
சரியென்றோதும்
விரும்புசுடர்ப்பரிதிகுலத்தமிழரசன்யாழ்ப்பாண
மிசைநல்லூரான்
இருந்தமிழாற்பாடியமிழ்தெனவருந்தவிருந்திட்டா
னெவர்க்குமன்றே. (௧)

அன்றுரைத்ததமிழிரகுவம்சகாவியமேதா
வியரேயாய்ந்து
நன்றுரைக்கவுணர்வதன்றிநானிலத்தாரறிவரிய
வியல்பாகின்ற
தென்றுளத்தின்மதித்துணர்ந்துதமிழர்கள்யாவருமுவகை
யெய்தும்வண்ணம்

நின்றுலகினிலெபெறவோர்புதியவுரைசெய்தானை
நிகழ்த்தக்கேண்மின். (உ)

சீரோங்குநல்லைநகர்வாசன்வித்வசிரோமணியென்றேகலைஞர்
செப்புந்தப்பில்
பேரோங்குபொன்னம்பலப்பிள்ளையின்பாற்பிரியமுடன்பல்லாண்டு
கற்றோன்மற்றும்
பாரோங்குமதுரைச்செந்தமிழ்ப்பேருற்றபத்திரிகைக்கிராமாவ
தாரச்செய்யுட்
கேரோங்குபாடாந்தரங்கள்மற்றுமெழுதிவிடுத்தேவருக்கு
மிதமேசெய்தோன். (ங)

ஏர்செறியுமல்லாகத்தின்கூறுகியெவ்வளமுந்தந்துலகோர்க்
கினிமையான
நீர்செறியும்புன்னைநகர்வாசன்பெம்மானிமலபாதத்துணைக்கு
நேசன்கஞ்சத்
தார்செறியுங்காசிபகோத்திரச்சின்னையர்தவத்தினுதித்தமதிச்
சற்குணத்தான் [ம்
பார்செறியுந்தமிழைநனியுணர்கணேச பண்டிதனெண்டிசைமதிக்கு
பண்பினனே. (௪)

---

யாழ்ப்பாணம் இந்துகாலேஜ்
பழைய பிரதம தமிழ்ப்பண்டிதர்
தாவடி
ஸ்ரீமத். ஆ. மு. சோமாஸ்கந்தபிள்ளையவர்கள்
இயற்றியது.

ஆசிரியவிருத்தம்.

பொன்னக ரயோத்தி யாண்ட புரவலர் தம்மின் மிக்க
மன்னவ னிரகு வென்பான் மரபினை விளங்கக் கூறி
யன்னதை யிரகு வம்ச மாமென வாரி யத்திற்
பன்னினன் காளி தாச பண்டிதன் பாவ லோனே. (க)

அப்பெருங் காப்பி யத்தை யரசகே சரியென் றோது
மிப்பெரும் புவி யிராச னிருந்தமி ழுதனு லாய்ந்து
திப்பிய வமிர்த மென்றே திசையுளோர் செவிம டுப்பச்
செப்பினு னென்றுந் நின்று செந்தமிழ் சிறக்கத் தானே. (௨)

செந்தமிழ்ப் பாவி னலே செய்தவிந் நூலின் மாடே
வந்தநுண் பொருளி யாவு மரபுளி விளங்கித் தோன்றச்
சந்தமா ருரையீ தொன்று தமிழகஞ் சிறக்கு மாற்றூற்
றந்தனன் யாவ னென்னிற் சாற்றுவ னவனைக் கேண்மின். (௩)

மதுரையில் வைத்த சங்க மாசிக பத்தி ரத்திற்
சதுரனுய்த் தமிழி ராம வவதார மாதி தர்க்க
முதிர்வினுன் முறையே தீட்டு மூதறி வுடைய மேலோன்
மதியினி னுண்மை வாய்ந்தோன் மரபுளி நூல்க ளாய்ந்தோன்.

நன்னகர் நல்லை யாறு முகவனு நாவ லற்கு
மன்னிய மருகன் வித்வ சிரோமணி மதியி னுன்ற
பொன்னவ னனைய பொன்னம் பலவனும் புலவன் றன்பா
லென்னுட னிலக்கி யத்தோ டிலக்கண மினிது கற்றோன். (௫)

சுன்னைவாழ் குமார சாமிச் சொற்றமிழ்ப் புலவன் பானு
மன்னமாண் கலைக ளெல்லா மரிறபத் தெரிந்த செல்வன்
புன்னைவாழ் பூசு ரர்க்குட் புண்ணியப் புருட னுன
நன்னயச் சின்னை யர்க்கு நற்றவப் புதல்வ னுனேன். (௬)

மாசிலா மறைவ லாளர் மணியென வந்து தோன்றி
யாசில்சித் தாந்த நூல்க ளமைவுட னுய்ந்து முள்ளோன்
பூசிதன் குணத்தின் மேன்மை பூண்டிடும் புனித னுனேன்
காசிப கோத்தி ரத்தோன் கணேச பண்டிதன் றானன்றே. (௭)

---

(Government Training College)
கொழும்பு அரசினர் ஆசிரியகல்லூரித்
தமிழ்ப்பண்டிதர்
தென்கோவை
ஸ்ரீமத். ச. கந்தையபிள்ளையவர்கள்
இயற்றியது.



ஆசிரியவிருத்தம்.

மாமேவு வடமொழிதேர் கவிஞரெலாம் பலநெடுநாள்
வருந்தி நோற்ற
தூமேவு தவப்பயனைப் போந்துகவி மழைபொழிந்த
சொர்ண மேகம்
கோமேவு கவிகாளி தாசனென வுலகுபுகழ்
கோமான் செய்த
பாமேவு விசயரகு வமிசமறி ஞருக்கமிர்தாய்ப்
பயிலு மாதோ. (க)

அன்னவட நூற்பொருளைச் செந்தமிழிற் பத்தழகு
மணியுந் தோன்ற
முன்னையநூ னெறியனைத்து மினிதமையக் காப்பியமா
மொழிந்தான் முன்னாண்
மன்னியயாழ்ப் பாணமுறு மன்னவர்கள் குலதிலகன்
மருவா ரேறு
தன்னிகரில் கேள்வியினன் பேரரச கேசரியாந்
தகையான் மிக்கோன். (உ)

கற்பவருக் கருங்குரைத்தா யருந்தொடரும்பொருள்கோளுங்
கரந்து நின்ற
சொற்பொருளு மிகமலிந்து காப்பியங்கட் குளவாய
தொல்லை மாண்பும்
பற்பலவாய் யாழ்ப்பாணப் புலவர்குழாம் பாரம்பரையிற்
பயிலு மாறு

நிற்பதுகண் டிந்நூலுக் குரையியற்ற லவசியமா
நியதி யென்று. (௩)

கருத்துரையும் பதப்பொருளுங் கடாவிடையு மிலக்கணமுங்
காட்ட தாகப்
பொருத்தமுறு மேற்கோளு மெளிதுணர்தற் பாலனவாய்ப்
பொருந்து மாற்றால்
திருத்தமுறும் புத்துரையொன் றறிஞருள மகிழ்பூப்பச்
சிறப்பச் செய்தே
அருத்தியுடன் வெளிப்படுத்தி யுபகரித்தோன் யாவனெனி
லறையக் கேண்மோ. (௪)

செந்தமிழி லிலக்கணமு மிலக்கியமுங் கரைகண்டு
தெளிந்த தீரன்
முந்துபுக ழுறுபொன்னம் பலப்பிள்ளை யெனப்புகலு
முதல்வன் பாலுஞ்
சிந்தையுறை தருசெம்மல் செந்தமிழும் வடமொழியுந்
தேர்ந்த கோமான்
கொந்தலர்பூம் பொழிற்சுன்னைக் குமாரசுவா மிப்பெயர்கொள்
குரவன் பாலும். (௫)

பாவியலு மிலக்கியமு மிலக்கணமுங் கற்றுணர்ந்தோன்
பரந்து கொண்மூக்
காவியலும் புன்னைநகர்க் காசிபகோத் திரத்துதித்தோன்
கற்றோர் தங்கள்
நாவியலும் புகழாளன் சின்னையவேள் புரிதவத்தா
னண்ணும் பாலன்
கோவியலும் புலமையினான் கணேசனெனும் பெயர்படைத்த
குரிசின் மாதோ. (௬)

---

உ

கணபதிதுணை.

# இரகுவம்மிசம்

## மூலமு முரையும்.



### காப்பு.

உதயமா வலரி யெண்ணி லுதித்தன வொளியிற் றூய
சிதைவிலா நிலவுச் செக்கர்ச் செவ்வந்தி மெய்யார் தந்த
புதைகொண்மா மதத்த வாம்ப லானனப் புனிதப் பொற்றே
னிதையவா ரிசத்த தானா லெக்கலை மணவா தெற்கே.

இதன்பொருள். மா உதய அலரி எண் இல் உதித்தன ஒளியிற்று ஆய - பெரிய உதயஞாயிறு அளவில்லாதன உதித்தாற்போன்ற ஒளியினையுடைத்தாய,—சிதைவு இல்லா நிலவுச் செக்கர் செம் அந்தி மெய்யார் தந்த - அழிவில்லாத நிலவினையுடைய செவ்வானம் போன்ற (விபூதியை யணிந்த) திருமேனியையுடையவராகிய சிவபிரானார் தந்தருளிய,—புதைகொள் மா மதத்த ஆம்பல் ஆனன புனித பொன் தேன் - ஆழத்திற்கிடத்தலைக் கொண்ட கரிய மதத்தையுடைய யானைமுகத்தைக்கொண்ட சுத்தமாகிய அழகிய தேன்,—இதையவாரிசத்ததானால் - இதயகமலத்தி லிருந்ததாயின்,—எற்கு எக்கலை மணவாது - எனக்கு எந்தக் கலைஞானம் அடையாது. என்றவாறு.

ஏகாரம் அசைநிலை. இல என்னும் வினைப்பெயரினீற்றகரமும், இல்லாத என்னும் பெயரெச்சத்தீறும் விகாரத்தாற் றொக்கன. எண்ணில் அலரி எனமாற்றிப் பொருள்கோடல் இத்துணைச்சிறப்பின்று. உதித்தால் என்பது உதித்து என விகாரமாய் நின்றது. ஒளியிற்றூயமெய், சிதைவிலாமெய், செவ்வந்திமெய் எனத் தனித்தனி கூட்டி முடிக்க. ஆம்பலானனப் புனிதப்பொற்றேன் = விநாயகக்கடவுள். செந்நிறமான மேனியின்மீது வெண்ணிறமான விபூதி பரந்திருத்தல், செவ்வானத்தின்மீது வெண்ணிலாப்பரந்திருத்தல் போலுமென்பார் நிலவுச்செக்கர்ச்செவ்வந்திமெய்யார் என்றார். உவமையடைக்கியையப் பொருளடை வருவிக்கப்பட்டது. செக்கர், செம் என்பன ஒருபொருட்பன்மொழி. சிதைவிலா என்பதை அந்திக்கேற்றி இல்பொருளுவமையாக்கினு மமையும். தந்த தேன் எனக் கூட்டுக. புதைகொள் மாமதம் என்பதற்கு விசையினால் வீழுமிடத்திலுள்ள பொருளைப் புதைத்தலைக்

கொண்டமதம் எனினுமாம். ஆசிரியர் தாம் எடுத்துக்கொண்ட நூல் இனிது முடியுமாறு முதலில் விநாயகக்கடவுளுக்கு வணக்கங் கூறினுர் என்க. இனி இதன்கண் அலரிப்பூக்கள் அளவிறந்தன பூத்தாற்போன்ற ஒளியையுடைத் தாய செவ்வந்திப்பூப் பூத்த ஆம்பற்பூவிலுள்ள தேன் தாமரையின்கண்ணதா யின் எப்பகுதியவான மணமுண்டாகாது என வேறுமொருபொருள் தொனித்தல் காண்க. (க)

---

# பாயிரம்.

வேறு.

உலகம் யாவையு நிற்பன வுத்தொழில்
விலக லாது விளைத்தும் விளைத்திலா
திலகு நீர்மைய தெப்பொரு ளப்பொரு
ளலகி லாத வருட்கடன் மூழ்குவாம்.

இ-ள். உலகம் யாவையும் நிற்பனவு தொழில் - உலகமெல்லாம் நிலைபெறுதற்குரிய பஞ்சகிருத்தியத்தை,—விலகலாது விளைத்தும் விளைத்திலாது இலகு நீர்மையது எப்பொருள் - இடையறாது (சங்கற்பமாத்திரையானே) இயற்றியும் இயற்றாது விளங்குகின்ற இயல்புடையது எந்தப் பொருளோ,—அப்பொருள் அலகு இலாத அருட்கடல் மூழ்குவாம் - அந்தப் பொருளினது அளவில்லாத கிருபைக்கடலில் (யாம்) மூழ்குவாம். எ-று.

உலகம் என்றது ஈண்டுச் சேதனுசேதனப் பிரபஞ்சங்களை. நிற்பனவு தொழிற்பெயர். விளைத்தும் விளைத்திலாமை - தன் ஒளிமாத்திரையானே தாமரையை யலர்த்தித் தான் விகாரமின்றி நிற்குஞ் சூரியனைப்போலத் தனது சத்தி சங்கற்பமாத்திரையானே உலகினைத் தொழிற்படுத்தித் தான் விகாரமின்றி நிற்றல். இதனை, "கந்தமலரயன்படைக்குமுலகமெல்லாம் ......வருவிப்பன்விகாரங்கண்மருவான்வானின்-முந்திரவியெதிர்முளரியலர்வுறுமொன்றலர்வான்முகையாமொன்ெறுன்றுலருமுறையினுமே"என்னுஞ் செய்யுளானறிக. (சிவப்பிரகாசம்.பொ.ரு) அருட்கடன் மூழ்கினூர்க்கு முடியாததொன்றின்மையின் யாமும் அங்ஙனே மூழ்கி இதனை முடிக்குதுமென்பது குறிப்பெச்சம். இங்ஙனமே "நற்குணக்கடலாடுதனன்றரோ" என்ருர் கம்பரும். (க)

ஆதி யாயனு வாயல வாயரு
ணீதி யாய்நிப மாய்நிப மாவதற்
கேதி லாதவ ரெவ்வெவ ரவ்வவர்
பாத தாமரை சென்னி பரிக்குவாம்.

இ-ள். ஆதியாய்-பதியாகியும்,—அணுவாய்-பசுவாகியும்,—அல்லவாய் - அல்லாதனவாகிய (ஐவகைப்) பாசங்களாயும்,—அருள் நீதியாய் - (இவற்றை யெல்லாம்) அருளோடு நடாத்துவதாயும்,—நிமமாய் - (இவற்றிற்கெல்லாம்) காரணமாகியும்,—நிமம் ஆவதற்கு ஏது இலாதவர் எ எவர் - (அவ்வாறு) காரணமாவதற்கு (ப் பிறிதோர்) காரணமில்லாதவராயும் நின்றவர் எத் தன்மையையுடைய எவரோ,—அ அவர் பாததாமரை சென்னி பரிக்குவாம் - அத்தன்மையையுடைய அவரது திருவடித்தாமரைகளை யாம் சிரசிற் சூடுவாம். எ-று.

ஐவகைப்பாசமாவன மலம், மாயை, கன்மம், மாயேயம், திரோதாயி என்பன. காரணமாவதற்கு அருளே காரணமென்பார் நிமமாவதற்கேதி லாதவர் என்றார். அருள் காரணமாதலை "காரணனாகித்தானே கருணையா லெவையுநல்கி-யாருயிர்முழுதுமேவியனைத்தையுமியற்றிநிற்கும் - பூரணமுத ல்வன்" என்னுஞ் செய்யுளானறிக. (௨)

கோதி கந்த குரவர் பரஞ்சுட
ராதி யாறறு தத்துவ மல்லதென்
றோதி நின்ற குணங்குறி யோதிலார்
சோதி யென்பதை யாமுந் துதித்துமே.

இ-ள். கோது இகந்த குரவர் - குற்றத்தைநீங்கிய பெரியோர்கள்,— பரஞ்சுடர் ஆதி ஆறறு தத்துவம் அல்லது என்று ஓதி - பரஞ்சோதியாகிய முதற்பொருளானது முப்பத்தாறு தத்துவமுமல்லாத வியல்பினையுடையது என்று கூறி,—நின்ற குணம் குறி ஓதிலார் - எஞ்சிநின்ற குணத்தினையும் குறியையும் (அதற்குக்) கூறாதவராய்,—சோதி என்பதையாமும் துதித்தும்- (மாணுக்கனே! நீ,) சோதித்துப்பார் என்று கூறிய பொருளை யாமும் துதிப் பேம். எ-று.

குற்றம் என்றது காமமுதலிய அறுவகைக் குற்றங்களையும். ஓதி என் பதைத் துதித்தும் என இயைக்க. ஓதிலார் என்பதை முற்றாக்கி ஓதிற்றி லர் எனப் பொருள்கூறி ஓதி என்பதை அதனோடு முடிக்கினு மமையும். இப்பொருட்கியைய என்பதை என்பதற்கு அவர் என எழுவாய் வருவிக்க. சோதி ஏவல்வினைமுற்று. சோதித்தல்-அனுபவத்துவைத்தறிதல். இரட் டுறமொழிதலால் அவர் சோதி வடிவாயுள்ளது என்று சொல்லியதை எனவு மொருபொருள் தோன்றவைத்தனர் என்க. முப்பத்தாறு தத்துவத்தையுங் கடந்ததென்பார் "அல்லது" என்றார். "மூலமாகியதத்துவமுழுவதுங்கட ந்து மேலுயர்ந்திடுதனிமுதல்" என்றார் பிறரும். நின்ற என்பதற்கு நிலை பெற்ற எனப் பொருள் கூறினு மமையும். குணங்குறி என்றது நடத்தலக் கணத்தை. (௩)

கற்பு ணைக்கொடு கார்க்கட லீந்துவா
னற்பு தத்தி னமைந்தவ னுசையோற்

சொற்பு ணைக்கொடு சொல்லுதன் மேயினேன்
மற்பு யத்த ரகுவின் மரபரோ.

இ-ள். கார் கடல் - கரிய கடலை,—கல் புணை கொடு - கல்லாகிய புணையைக்கொண்டு,—நீந்துவான் அற்புதத்தின் ஆசை அமைந்தவன்போல் - கடக்கும்படி அற்புதத்தோடு ஆசை (யுற்று) முயன்முனொருவனைப்போல,—மல் புயத்த ரகுவின் மரபு - மற்றொழி லமைந்த புயத்தையுடைய ரகுமகாராசனது வம்மிசமாகிய கடலை,—சொல் புணை கொடு சொல்லுதல் மேயினேன் - கவியாகிய புணையைக் கொண்டு சொல்லிக் கடத்தற்கு (ஆசையுற்று) முயன்றேன். எ-று.

அரோ அசை. இரண்டும் முடிதலரிதென்பதாம். அமைந்தவன் ஆசைபோல் என்பது உவமேயத்திற்கியைய ஆசையுற்று அமைந்தவன்போல் என மாற்றிப் பொருள் கொள்ளப்பட்டது. வினை அவாய்நிலையால் வருவிக்கப்பட்டது. "ஆசைபற்றியறையலுற்றேன்" என்முர் கம்பரும். இதில் பின்னைய இரண்டடியும் ஏகதேசவுருவகம். அற்புதம் கற்புணையைக் கொண்டு கடக்குமதிசயம். இதுமுதல் நான்குசெய்யுளும் அவையடக்கம். அவை அடக்கம் - அவையை அடக்குதல். (ச)

உட்டு ளக்கறு சொற்பொரு ளூக்கமுள்
ளிட்டு ளத்தமிழ் சொல்வனென் றியான்மடக்
கட்டு ளத்தெணல் கையிலி கற்குழி
தொட்டு ளப்புணச் சுட்டுத லொக்குமே.

இ-ள். உள் துளக்கு அறு சொல் பொருள் ஊக்கம் உள் இட்டு - தன்னிடத்தே அசைவுபடுதலை நீங்கிய சொல்வலியையும் பொருள்வலியையும் மனத்திற் கொண்டு,—உள்ள - மதிக்கும்படி,—யான் தமிழ் சொல்வன் என்று மடக் கட்டு உளத்து எண்ணல் - யான் தமிழ்ப்பாவால் (இந்த இரகுவம்மிசத்தைப்) பாடுவேனென்று அறியாமையினது பந்தத்தையுடைய மனத்தில் எண்ணுதல்,—கையிலி கல் குழி தொட்டு உள் அப்பு உணச் சுட்டுதல் ஒக்கும் - கையில்லாதவன் கல்லிற் குழிதோண்டி உள்ளே பொருந்திய நீரை உண்ணும்படி கருதுதலை ஒக்கும். எ-று.

எண்ணல் ஒக்கும் என்க. இரண்டுமுடிதலரிதென்பதாம். வழுவுடையது என்று தள்ளப்படாத சொல் என்பார் உட்டுளக்கறு சொல் என்முர். தமிழ்-ஆகுபெயர். தமிழ்சொல்வன் என்பதற்குத் தமிழிற் சொல்வேன் எனப் பொருள்கூறினு மமையும். (ரு)

அறிய கத்தைவெ லற்புதர்ச் சேரினேன்
சிறிய சொற்பொருட் செம்மை பயக்குமாற்
பொறிய லர்ப்பகை கொண்டல் வோபுனல்
வறிய கற்பனி வாரி யளிப்பதே.

சொல்லின்வழியே,—நல் நெடும் குன்று இசைப்பது போலும் குறிப்பு - மிக நெடிய மலை பிரதித்தொனிசெய்தல்போலும் உணர்ச்சியை யுடைத்து. எ-று.

வீரர்களாகிய ஆரியர்களிருக்குந் திசையாதலின் வடதிசையை வன்றிசை என்றார். அன்றித் துறவுபூண்டிருக்குந் திசையாதலின் அங்ஙனம் கூறினாரெனினு மமையும். வடமொழி என்பதில் வடக்கு வாளாபெயர். வடமொழி ஆகுபெயர். காளிதாசன்வடமொழி என்புழி ஆறும்வேற்றுமை செய்யுட்கிழமைக்கண் வந்தது. "கபிலரதுபாட்டு" என்பதுபோல. இதனால் இந்நூல் அதர்ப்படயாக்கப்பட்டமை கூறப்பட்டது. (அ)

இன்ன காதை யியன்ற விரும்பொருட்
டுன்னு செஞ்சொற் றுகடபு தூயநூல்
பன்னு செஞ்சொற் பரராச சேகர
மன்ன னின்ப மனங்கொள வாய்ந்ததே.

இ-ள். இன்ன காதை இயன்ற இரும் பொருள் துன்னு செஞ் சொல் துகள் தபு தூய நூல் - இந்தக் காதை அமைந்த பெரிய பொருள்களையும் செறிந்த செஞ்சொற்களையுமுடைய குற்றமற்ற நூலானது,—பன்னு செஞ் சொல் பரராசசேகர மன்னன் - சொல்லுகின்ற செஞ்சொற்களையுடைய நூலை அறிந்த பரராசசேகரமகாராசன்,—இன்பம் மனங்கொள வாய்ந்தது- இன்பத்தோடு அங்கீகரித்தலால் சிறப்புற்றது. எ-று.

காதை இயன்ற நூல் எனக் கூட்டுக. நூல் வாய்ந்தது என முடிக்க. கேட்டற்குரிய அறிவுடையானென்பார் பன்னுசெஞ்சொற் பரராசசேகரமன்னன் என்றார். இதனால் இந்நூல் கேட்டவர் இவர் என்பது கூறப்பட்டது.

பாயிர முற்றிற்று.

---

# ஆற்றுப்படலம்.

தெள்ள னந்தம தாகிச் சிறைகொடு
வெள்ளி வெண்கிரி விண்ணெழல் போலெழா
பள்ள வேலை பருகுபு வஞ்சருட்
கள்ள மென்ன விருண்டன காரரோ.

இ-ள். வெள்ளி வெண்கிரி தெள் அனந்தமதாகி சிறைகொடு விண் எழல்போல் கார் எழா - வெள்ளிமலை பல வடிவங்களையுடையதாகி சிறையைக்கொண்டு ஆகாயத்தில் எழுந்து செல்லுதல்போல மேகங்கள் எழுந்து

சென்று,—பள்ளவேலை பருகுபு - ஆழமாகிய கடனீரையுண்டு,—வஞ்சர் கள்ளம் உள் என்ன இருண்டன - வஞ்சகருடைய கள்ளம்பொருந்திய மனத்தைப் போல இருண்டன. எ-று.

வெண்மை வாளாமொழி. வேலை-ஆகுபெயர். அரோ-அசைநிலை. கள்ளம்-வஞ்சகம். கார் எழா பருகுபு இருண்டன என்க. வெள்ளிவெண்கிரி .........எழல்போல் எனவும், வஞ்சர்.........என்ன எனவும் வெண்மை கருமைகட்கு உவமைகூறியவாறு. (௬)

மறிபெ ருந்திரை யுண்டலின் மல்கிய
நறிய வெண்ணுரை பற்றலி னாவினா
னெறிய வாய்ப்புற நீவுதல் செய்தெனச்
செறியு மின்ன றலைத்தலை செய்தவே.

இ-ள். மறி பெரு திரை உண்டலின் - (கரைசார) மறிகின்ற பெரிய திரையையுடைய கடனீரையுண்ணுதலினால்,—மல்கிய நறிய வெள் நுரை பற்றலின் - (அக்கடலின்கண்) நிறைந்துள்ள நல்ல வெண்ணுரைகள் பற்றிக்கொள்ளுதலினால்,—நெறிய வாய்ப்புறம் நாவினால் நீவுதல் செய்தென - நெறிப்பையுடைய வாயின்புறத்தை நாவினாலே தடவினாற்போல,—செறியும் மின்னல் தலைத்தலை செய்த -(அம்மேகங்கள்) செறிந்த மின்னலை இடங்கடோறுஞ் செய்தன. எ-று.

திரை-ஆகுபெயர். நீவுதல் செய்தெனச் செயத என்க. வாய்ப்புறம்-புறவாய். இது தற்குறிப்பேற்றம். (உ)

மேக்கெ றிந்து விரிகட லுண்டுமே
னீக்கெ றிந்த வகடு நிரம்பலா
லேக்கெ றிந்துல கெங்கு மிரைத்திடத்
தேக்கெ றிந்தெனப் பம்பின செல்லரோ.

இ-ள். மேக்கு எறிந்து விரி கடல் உண்டு - (திரைகளை) மேலேவீசிப் பரக்கின்ற கடனீரையுண்டு,—மேல் - பின்,—நீக்கு எறிந்த அகடு நிரம்பலால் - அகன்ற வயிறு நிரம்புதலால்,—தேக்கு எறிந்தென - ஏப்பமிட்டாற்போல,—உலகெங்கும் ஏக்கு எறிந்து இரைத்திட - உலகமுழுவதும் ஏக்கமுற்றுச் சத்தமிடும்படி,—செல் பம்பின - மேகங்கள் ஒலித்தன. எ-று.

உண்டு தேக்கெறிந்தெனப் பம்பின என்க. நீக்கு எறிதல்-நீக்கத்தைப் பரப்புதல். நிரம்பலால் தேக்கெறிந்தென எனக் கூட்டுக. முழக்கின் கடுமையால் ஏக்கெறிந்து இரைத்தன என்க. இதுவு மேலையணி. (௩)

பகடு சுற்றலைப் பைம்புன லோடன
லகட டக்கி யடக்கரி தாயயர்

வகட கைப்பி னுமிழ்வன போலொரு
திகுட னித்தனி கான்றன வெங்குமே.

இ-ள். பகடு சுற்று அலை பைம் புனலோடு அனல் அகடு அடக்கி - தெப்பங்கள் சூழ்ந்து திரிகின்ற கடலிலுள்ள பசிய நீரோடு, அக்கினியையும் வயிற்றில் அடக்கி,—அடக்கரிதாய் அயர்வு உகள் தகைப்பின் - அடக்க முடியாமல் அயர்ச்சி (உறும்படி) புரளுகின்ற தாக்கத்தினுல்,—உமிழ்வன போல் - சத்திப்பதுபோல,—ஒருது இருள் எங்கும் தனிதனி கான்றன - (மேகங்கள்) குறையாமல் இடியை எவ்விடத்துந் தனித்தனியே கான்றன. எ-று.

அடக்கரிதாய் உகள் தகைப்பின் என்க. உகள் தகைப்பின் அடக்கரிதாய் என மாற்றிப் பொருள் கூறினு மமையும். புரளுதல் முழங்குதலைக் குறித்தது. இதுவு மேலையணி. (ச)

அங்க ணாழிசெ லந்தமெய் கொண்டுவெற்
பெங்கு நுங்க விழிந்தன போலவே
மங்குல் வாடை மடுப்ப மயங்கலாற்
பொங்கு தாரை திரண்டு பொழிந்தவே.

இ-ள். அங்கண் ஆழி செல் அந்த மெய் கொண்டு - அவ்விடத்தே கடலிற் சென்ற அந்த (வெண்ணிற) வடிவைக் கொண்டு,—வெற்பு எங்கும் நுங்க இழிந்தன போல - (பொன்) மலை முழுதையும் விழுங்கும்படி இறங்கியதுபோல,—மங்குல் - மேகம்,—வாடை மடுப்ப மயங்கலால் - வாடைக் காற்று முகஞ்செய்ய (அதனோடு) கலத்தலால்,—பொங்கு தாரை திரண்டு பொழிந்த - (அம்மலையின்மேல்) மிக்க தாரையைத் திரண்டு சொரிந்தன. எ-று.

இழிந்தன போலப் பொழிந்தன என்க. வாடை மடுப்பத் தம்முட் கலத்தலால் எனினுமாம். தாரை-மழை ஒழுக்கு. இது வெண்ணிறமுடையதாதலின் அந்த மெய் கொண்டு என்றார். இங்ஙனமே, "வெள்ளிவீழ்தினைவீழ்த்தெனத்தாரைகள்......வழங்கின" என்றார் கம்பரும். இதுவு மேலையணி. (ரு)

உன்னு மாழி யுவர்ப்புன லுண்டுட
னன்ன றும்புன னன்னரி னல்கலா
லன்ன காலை யளக்கரு மற்புதச்
சென்னெ டுங்கலைச் சித்தரி னையவே.

இ-ள். உன்னும் ஆழி உவர்ப்புனல் உண்டு - கருதப்படும் கடலிலுள்ள உவர் நீரை உண்டு,—உடன் நல் நறும் புனல் நன்னரின் நல்கலால் - உடனே நல்ல நறிய நீராக்கி நன்மையோடு தருதலால்,—அன்னகாலை-

அப்பொழுது.—அளக்க அரும் அற்புதச் செல் - அளவிடற்கரிய அற்புதத்தையுடைய மேகம்,—நெடும் கலை சித்தரின் ஆய - மிக்க கலைகளையறிந்த சித்தரைப்போலாயின. எ-று.

அற்புதம் - உவர்நீரை நன்னீராக்குமதிசயம். "தேக்குதெண்டிரைப் புணரிநீர்வெம்மையைச்சிந்தி-யாக்கிவாலொளியுலகில்விட்டேகலால்" என்ருர் கந்தபுராணகாரரும். சித்தர் ஒன்றை ஒன்ருக்குஞ் சித்தியுடையோர்.

விஞ்சு மாமலை மீது விழுங்கிருண்
மஞ்சு கான்றிடு மாலி மறித்தெழ
லெஞ்ச லின்றியவ் வெற்பி னிளங்கிளி
யஞ்சொ லார்கழங் காடுவ போன்றவே.

இ-ள். விஞ்சு மா மலை மீது - மிக்க பெருமையையுடைய மலையின் மேல்,—விழுங்கு இருள் மஞ்சு கான்றிடும் ஆலி மறித்து எழல் - (அதனை) மூடிய இருளையுடைய மேகங்கள் கான்ற நீர்த்துளிகள் மீண்டு மேலெழுதல்,—அ வெற்பின் மேல் - அம்மலையின்மேல்,—இளம் கிளி அம் சொலார் - இளமையான கிளியின்மொழிபோலும் அழகிய சொல்லையுடைய மகளிர்கள்,—எஞ்சல் இன்றிக் கழங்கு ஆடுவ போன்ற - குறைவின்றிக் கழங்காடுதலை ஒத்தன. எ-று.

எழல் போன்ற என முடிக்க. (எ)

துன்று மைப்புயல் சோனையி னம்மலை
முன்றின் முற்றவு நீர்கொடு மூடலான்
மன்றி னித்த நடம்புரி வானவன்
குன்ற மொத்தது செம்பொற் குவடரோ.

இ-ள். துன்று மை புயல் - நெருங்கிய கரிய மேகங்கள்,—சோனையின் நீர்கொடு அம்மலை முன்றில் முற்றவும் மூடலால் - விடாமழையினது நீரினாலே அந்த மலையினது மேலிடம்முழுவதையும் மூடிவிடலால்,—செம்பொன் குவடு - இமயமலை,—மன்றில் நித்தம் நடம்புரி வானவன் குன்றம் ஒத்தது - கனகசபையின்கண்ணே அனவரதமும் நடனஞ்செய்கின்ற சிவபிரானது வெள்ளிமலையை ஒத்தது. எ-று.

செய்யுளாதலிற் சுட்டு முன்வந்தது. செம்மை பொன்னை விசேடித்து நின்றது. முன்றில் மேலிடமென்பதை "வயங்கு பளிங்கு முன்றி-ருன்குலநாளிற்றகைமுத்தமுயிர்த்தசங்கம்" என்பதனுனுமறிக. (இராமா - கடல்-௬௪-ம் செய்யுள். (அ)

புணர்ப ணிக்கிரி நீரிற் புதைத்தவா
னிணர்ம லர்த்தொடை யிந்திர னுலெழா

வணர்லைப்படு மைந்தன் வருத்தநீ
யுணர்தி யென்றங் குணர்த்துவ போன்றவே.

இ-ள். பனிபுணர் கிரி நீரில் புதைத்த வான் - இமயமலையை நீரினால் மூடிய மேகங்கள் (அம்மூடுதலால்),—இணர் மலர் தொடை இந்திரனால் எழா - பூங்கொத்து மலர்ந்த பூவாற் றொடுத்த மாலையை யணிந்த இந்திரனால் எழுந்து,—வணர் அலை படு மைந்தன் வருத்தம் - வளைவாகிய கடலு ளமிழ்ந்திக் கிடக்கின்ற புதல்வனாகிய மைநாகத்தின் வருத்தத்தை.— நீ உணர்தி என்று உணர்த்துவ போன்ற - நீயும் அனுபவித்து அறிகுதி என்று (அதற்கு) உணர்த்துவதை யொத்தன. எ-று.

அங்கு அசைநிலை. வான் போன்ற எனவும், எழா படு மைந்தன் எனவு முடிக்க. படுதல்-அமிழ்ந்திக்கிடத்தல். நீரிலமிழ்ந்திஞேர்படும் வருத்தத்தை ஏனையோரும் பட்டாற்றான் றெரியுமாதலின் உணர்தி என்று உணர்த்துவ போன்ற என்றார். (௯)

வேறு.

கார்த்தலைக் குன்றத் தங்கண் கதத்தவாய் மதத்த மாவி
னீர்த்தலை யருவி பொங்கி நிரந்துகா னிமிர்ந்து கைபோய்த்
தார்த்தலை மரவஞ் சாடிச் சம்பகஞ் சரித்த சோகு
பேர்த்தலை சிந்தி யுந்தி நடந்தன பெரிதி னம்மா.

இ-ள். கார் தலை குன்றத்து - மேகங்கள்படியும் உச்சியையுடைய் அம் மலையினின்றும்,—அங்கண் கதத்தவாய் மதத்த மாவின் நீர் தலை அருவி பொங்கி - அங்கே வேகத்தையுடையனவாய் மதத்தையுடைய யானையைப் போல நீரைத் தன்னிடத்தேயுடைய அருவி கிளர்ந்து,—நிரந்து கால் நிமிர்ந்து கைபோய் - பரந்து உயர்ந்து சென்று,—தார் தலை மரவம் சாடி - பூக்களை மேலேகொண்ட குங்குமமரங்களை அழித்து,—சம்பகம் சரித்து - சம்பகமரங்களைச் சாய்த்து,—அசோகு பேர்த்து - அசோகமரங்களைப் பேரச் செய்து,—அலை சிந்தி உந்தி பெரிதின் நடந்தன - திரைகளை வீசி (அவற்றைத்) தள்ளிக்கொண்டு மிகவுஞ் சென்றன. எ-று.

அம்மா அசைநிலை. யானையும் கிளர்ச்சிகொண்டு பரந்துசென்று உயர்ச்சியோடும் போய் மரங்களை முரித்து நீரைச் சிந்தித் தாண்டிச்செல்லுத லியல்பாதலின் அதனை உவமைகூறினர். உந்துதல் தாண்டுதல் என்னும் பொருள்பயத்தலை "மந்தரைக்கூற்றமும்வழிச்செல்வாரொடு-முந்தியேபோதல்கண்டு" என்பதனாலறிக. (இராமா-ஆற்று-௬௪-ம் செய்யுள்.) (௧0)

தேக்ககி லார நாகஞ் சிந்துரந் திலகந் தீப
மாக்கத மதமா மற்றும் வாரிந்நர் வருத லாலே
மேக்குற நிமிரக் குன்றம் வேலைவாய் மைந்தற் காண்பா
னுக்கமீக் கொள்ளச் சேற லென்னவவ் வருவி மன்னோ.

இ-ள். அ அருவி - அந்த அருவியானது,—தேக்கு அகில் ஆரம் நாகம் சிந்துரம் திலகம் தீபம் மா கத மதமா மற்றும் வாரி நேர் வருதலால் - தேக்கமரங்களையும் அகின்மரங்களையும் சந்தனமரங்களையும் புன்னைமரங்களையும் புளியமரங்களையும் மஞ்சாடிமரங்களையும் சோதிவிருக்கங்களையும் மிக்க விரைவையுடைய யானைகளையும் பிறவற்றையும் வாரிக்கொண்டு எதிரே வருதலால்,—மேக்கு உற நிமிர் அக்குன்றம் - மேலாக நிமிர்ந்த அம் மலையானது,—வேலைவாய் மைந்தன் காண்பான் - கடலின்கண் (அமிழ்ந்திய) தன்புதல்வனாகிய மைநாகத்தைக் காணும்படி - ஆக்கம் மீக்கொள்ள சேறல் அன்ன - செல்வம் அதிகரிக்கச் செல்லுதலைப்போலும். எ-று.

உலகத்திலே ஒருவர் தம் புதல்வர் முதலாயினோரைக் காணும்படி செல்லும்பொழுது தம்மாலியன்ற உபகாரப்பொருள்களைக் கொண்டுசேறலியல்பாதலின் அதனை இக்குன்றத்தின்மேல் ஏற்றி ஆசிரியர் கூறினார் என்க. அதிகரித்தல் - அதிகமாகப் பொருந்தல். (கக)

மலைப்படி யருவி நீத்த மத்தன்மா துலன்றன் சென்னி
கலைப்படி திரிந்து காணிற் காயமொன் றமையா தென்னத்
தலைப்படி யுடல்கொண் டேகித் தலைகண்டு தரிப்பில் சேட
னிலைப்படி யடியுங் காண்பா னிறங்குத னிகர்க்கு மன்றே.

இ-ள். மலை படி அருவி நீத்தம் - மலையிற்றங்கிவீழும் அருவிவெள்ளம்,—மத்தன் மாதுலன்றன் சென்னி கலைப்படி திரிந்து காணில் - சிவபிரானுடைய மாமனாகிய இமயத்தினது தலையைச் சாத்திரப்படி திரிந்து பார்த்தற்கு,—ஒன்று காயம் அமையாது என்ன - ஒருடம்பு போதாதென்று,—தலைப்படி உடல்கொண்டு ஏகி தலைகண்டு - தலை (எவ்வளவோ அத்) துணை உடலைக்கொண்டு சென்று (அதன்) முடியைக்கண்டு,—நிலைப் படி அடியும் காண்பான் இறங்குதல் நிகர்க்கும் - நிலத்தின் கீழ்ப்படிந்த அடியையும் காணும்படி இறங்குதலை நிகர்க்கும். எ-று.

நீத்தம் நிகர்க்கும் என முடிக்க. கலைப்படி காணில் எனக் கூட்டுக. நிலை-நிலம். அது, "நிலைமுதற்றழுவிவிண்ணினிமிர்ந்து" என மேலும் இந்நூலாசிரியரே கூறுமாற்றா னறியப்படும். தலை-ஆயிரம். (கஉ)

இறப்புவி யனந்த பானு வெண்ணில்கா லெரியு மேனும்
வறப்பில நீரதாய மல்லிகை மலராஞ் சோதிச்
சிறப்புறு சரயு வென்னுந் திருநதி தெண்டங் கொள்ளா
வறப்பய னருத்து வாரி னகலிடத் தருத்து மாக்கம்.

இ-ள். புவி இற அனந்த பானு எண் இல் கால் எரியுமேனும் வறப்பு இல நீரதாய - பூமி அழியும்படி அளவில்லாத சூரியர்கள் அளவில்லாத காலம் எரிந்துகொண்டிருந்தாலும் வற்றாத நீரையுடைத்தாய,—மல்லிகை மலர் அம் சோதி சிறப்பு உறு சரயு என்னும் திரு நதி - மல்லிகைப்

பூவின் அழகிய ஒளியையுடைய சிறப்புப்பொருந்திய சரயுவென்கின்ற அழகிய நதியானது,—தெண்டம் கொள்ளா அறப்பயன் அருத்துவாரின் - (ஒருவரைத்) தெண்டித்துத் தருமத்தின் பயனை உண்பிப்பாரைப் போல,— அகலிடத்து ஆக்கம் அருத்தும் - பூமியின்கண்ணே (ஆங்குள்ளாரைத் தானே) தனது செல்வத்தை உண்பிக்கும். எ-று.

தெண்டித்துத் தாமே அறப்பயனை ஊட்டுவாரைப்போலத் தானே தன் பயனாகிய தண்ணீரைக் கொண்டு சென்று கொடுக்குமென்பதாம். ஆக்கம்-நீர். அருத்துவாரின் அருத்தும் என்க. (கங)

சதிர்பட நிமிர்ந்து தாவித் தழல்விழிப் புயங்க மெல்லாம்
விதிர்பட வெளவிப் பச்சை விண்டுவை யெடுத்து வையம்
பிதிர்பட விரைந்து சுற்றிப் பெருஞ்சிறை புடைத்துச் சேட
னதிர்பட வழன்றி டாப்புள் ளரசினிற் போயிற் றன்றே.

இ-ள். சதிர்பட நிமிர்ந்து தாவி - சதுரப்பாடு பொருந்தக் கிளர்ந்து பாய்ந்து,—தழல் விழி புயங்கம் எல்லாம் விதிர்பட வெளவி - அக்கினிகாலும் கண்களையுடைய பாம்புகளையெல்லாம் நடுங்கக் கவர்ந்து,—பச்சை விண்டுவை எடுத்து - பசிய மூங்கில்களை எடுத்துக்கொண்டு,—வையம் பிதிர்பட விரைந்து சுற்றி - பூமி பிதிர்வடையும்படி விரைந்து சூழ்ந்து,—பெரும் சிறை புடைத்து - பெரிய பக்கங்களில் மோதி,—சேடன் அதிர்பட அழன்றிடா - சேடனதிருமாறு வேகங்கொண்டு,—புள் அரசினில் போயிற்று - கருடனைப்போலச் சென்றது. எ-று.

கருடனுக் கியையப் பொருள் கொள்ளுங்கால் விண்டுவை எடுத்து என்பதற்கு விஷ்ணுவைச் சுமந்து என்றும், சிறைபுடைத்து என்பதற்குச் சிறகுகளை அடித்து என்றும், அழலுதல் என்பதற்குக் கோபித்தல் என்றும் பொருள்கொள்க. இது சிலேடையுவமை. (கச)

தடவரை எறிந்திட் டாரத் தாருக னூறி வெய்ய
வடவையி னெரிகட் டான வரையிற மடித்து வாரி
விடமென வயிர வன்மா வீட்டிபு செவ்வேள் வென்றிப்
புடைபட விளங்கும் வைவேல் போலவும் போயிற் றன்றே.

இ-ள். தட வரை எறிந்திட்டு - வளைவான மூங்கில்களைப் பிடுங்கி எறிந்து,—ஆரத் தாரு கல் நூறி - சந்தனமரங்களையும் மலைகளையும் அழித்து,—வெய்ய வடவையின் எரிகண் தானவரை இற மடித்து - கொடிய வடவாமுகாக்கினியைப்போல எரிகின்ற கண்களையுடைய யானைகளை அழியும்படி கொன்று,—விடமென வாரி வயிர வன்மா வீட்டிபு - விடமென்று அள்ளி வயிரத்தையுடைய சிங்கங்களைக் கொன்று,—செவ்வேள் புடைபட விளங்கும் வென்றி வைவேல் போலவும் போயிற்று - சுப்பிரமணியக்கடவுளது பக்கத்திலே பொருந்த விளங்கும் வெற்றியையுடைய கூரிய வேல் போலவுஞ் சென்றது. எ-று.

இனி வேற்கிசையப் பொருள் கொள்ளுங்கால், கிரவுஞ்சமலையைப் பிளந்து தாருகனைக் கொன்று அவுணரை அழியும்படி கொன்று மாமரத்தை வீழ்த்தி விளங்கும் வேல் எனப் பொருள்கொள்க. ஆரத்தாருகனூறி என்பதை ஆரத்தாரு உக நூறி எனக் கண்ணழித்து உக என்பதற்கு அழிய எனப் பொருள்கோடலுமொன்று. விடமென வீட்டுபு எனக் கூட்டி நஞ்சு போலக் கொன்று எனப் பொருள்கோடல் சிறப்பின்று. இதுவுமேலையணி.

பொன்கொழித் தெறிந்துஞ் செய்ய மணிதலை பொடித்துமுத்த
முன்கொழித் திட்டுச் சந்த முருக்குபு முகங்கொ ரோர்ந்துந்
தென்கொழித் தியங்கிற் றல்லாற் றிருநதி சிறப்பின் மிக்க
நன்கொழித் ததைபோ வேக நணிபட நடந்து மம்மா.

இ-ள். திரு நதி - அழகிய நதி,—பொன் கொழித்து எறிந்தும் - பொற்பொடிகளைக் கொழித்துப் பரப்பியும்,—செய்ய மணி தலை பொடித்தும் - மாணிக்கமணிகளைத் தன்மீது தோன்றச் செய்தும்,—முத்தம் முன் கொழித்திட்டு சந்தம் முருக்குபு முகம் கொடு ஊர்ந்தும் - முத்துக்களை முன்னரே கொழித்துச் சந்தன மரங்களைப் பிடுங்கி முற்பக்கத்திற் கொண்டு சென்றும்,—தென் கொழித்து இயங்கிற்று அல்லால் - அழகிய பொருள்களைப் பரப்பிச் சென்றதேயல்லாமல்,—வேகம் நணிபட நடந்தும் - வேகம் மிகப்பொருந்தச் சென்றும்,—சிறப்பின் மிக்க நன்கு ஒழித்ததோ - சிறப்பின்மிக்க நல்ல பொருள்களை விட்டுவிட்டதோ. எ-று.

அம்மா-அசைநிலை. வேகமாய் நடப்போர் நல்ல பொருள்களை விட்டும் விடுவார்கள். இது வேகமாய்ச்சென்றும் நல்ல பொருள்களை விட்டுச் சென்றிலதென்பதாம். இனி இதன்கண் பொன்னுபரணங்களைப் பிடுங்கி எறிந்தும், மணிமாலைகளைப் பொடிபடச் செய்தும், முத்துமாலைகளைப் பிடுங்கி வீசிச் சந்தனத்தை அழித்து முகங்கொண்டு சென்றும் வேகமாக நடந்தும் அழகிற் குறைந்திலதென்பதும் தோன்றுதல் காண்க. வேகமாய்ச் செல்வோர்க்கு வெயர்வையால் அழகு அழியும் என்க. (௧௯)

பெருவரைத் தடங்க டத்திப் பிறங்குவில் லெயினர் யாரும்
வெருவரப் புகுந்து வெள்ளை நுரையுளை விதிர்த்து வாய்விட்
டருவலிக் களிறு நூறி யம்மருப் பெறிந்து பாய்ந்து
பொருசினத் தரியே றென்னப் புறவஞ்சென் றடைந்ததன்றே.

இ-ள். பெருவரை தடங்கள் தத்தி - பெரிய மலைப்பக்கங்கடோறும் பாய்ந்து,—பிறங்கு வில் எயினர் யாரும் வெருவரப் புகுந்து - விளங்குகின்ற வில்லையேந்திய வேட்டுவர்கள் யாவருமஞ்சும்படி புகுந்து,—வெள்ளை நுரை உள் விதிர்த்து - வெண்மையான நுரைகளை உள்ளே சிந்தி,—வாய்விட்டு - ஒலித்து,—அருவலிக் களிறு நூறி - வெல்லுதற்கரிய வலியையுடைய யானைகளைக் கொன்று,—அவ் மருப்பு எறிந்து - அவற்றின் கோடுகளைப் பிடுங்கி எறிந்து,—பாய்ந்து பொரு சினத்து அரி ஏறு என்ன புறவம் சென்று

அடைந்தது - பாய்ந்து பொருகின்ற கோபத்தையுடைய சிங்கேற்றைப்போல முல்லைநிலத்துச் சென்று அடைந்தது. எ-று.

சிங்கேற்றுக்கு இசையப் பொருள்கொள்ளுங்கால் நுரை உளை விதிர்த்து என்பதற்கு நுரைபோலும் பிடர்மயிரை அசைத்து எனப் பொருள் கொள்க. இது சிலேடையுவமை. (கஎ)

ஆசறு தளவச் செம்ம லரிறபத் தைவந் தாயர்
பாசிழை பரந்த முன்றிற் பான்முடை கழீஇவெண் சாந்தம்
பூசுபு நறிய வேங்கைப் புதுமலர் பரப்பிற் றன்றே
தேசுறு முல்லை யாட்குச் செய்தொழி லவரி னம்மா.

இ-ள். தேசு உறு முல்லையாட்கு செய்தொழிலவரின் - அழகுபொருந்திய முல்லைநிலமாகிய முதல்விக்கு ஏவல்செய்யுமகளிரைப்போல,—ஆசு அறு தளவச் செம்மல் அரில் தபத் தைவந்து - குற்றமற்ற முல்லையின் பழம்பூக்களை மாசு நீங்கும்படி நீக்கி (எனவே அலகிட்டு என்றபடி),—ஆயர் பாசு இழை பரந்த முன்றில் பால் முடை கழீஇ - இடையர்களது பசிய ஆபரணங்கள் பரந்த முற்றத்திலுள்ள பாலின்முடையைக் கழுவி,—வெண் சாந்தம் பூசுபு - வெண்மையாகிய சந்தனத்தைப் பூசி (எனவே மெழுகி என்றபடி),—நறிய வேங்கை புதுமலர் பரப்பிற்று - நறுமணம்பொருந்திய வேங்கையின் புதிய மலர்களைப் பரப்பியது. எ-று.

ஏவலாட்டிகளும்அலகிட்டுக் கழுவி மெழுகி மலர்பரப்பல் வழக்காதலின் அவர்களை உவமை கூறினர். (கஅ)

நொவ்விற்கொண் டிளைத்த வன்ன தொழிலிடைநோன்கான்முற்றுந்
தவ்விக்கொண் டெடுத்த வெல்லாந் தலைத்தலை சிதறிற் றேனும்
செவ்விக்கொண் டிமிர்பொன் பூத்த கடுக்கையைச் சிறிதும் போடா
வவ்விக்கொண் டிறந்து போகி மருதத்தை மணந்த தன்றே.

இ-ள். நொவ்வில் கொண்டு இளைத்த அன்ன தொழில் இடை - வருத்தத்துடன் சுமந்து இளைத்தாற்போன்ற தொழிலோடு,—நோன் கான்முற்றும் தவ்விக்கொண்டு எடுத்த எல்லாம் தலை தலை சிதறிற்றேனும் - வலிய காடுமுழுதும் பாய்ந்து கவர்ந்தனவாகிய பொருள்களையெல்லாம் இடந்தோறும் சிதறியதாயினும்,—செவ்வி கொண்டு இமிர் பொன் பூத்த கடுக்கையை சிறிதும் போடாது வவ்விக்கொண்டு - அழகைக்கொண்டு விளங்குகின்ற பொன்போலும் மலரைப்பூத்த கொன்றையைச் சிறிதும் வழுவவிடாது கவர்ந்துகொண்டு,—இறந்து போகி மருதத்தை மணந்தது - கடந்து சென்று மருதநிலத்தைச் சேர்ந்தது. எ-று.

கால்களைத் தவ்விக்கொண்டு என்பதுந் தோன்ற நின்றது. தவ்வுதல் வலிசுருங்க மிதித்தல். சுமந்து இளைத்தோர் சுமந்த பொருள்களையெல்லாம் இடங்கடோறும் போட்டுச்செல்வாராயினும் அரியதாகிய பொ

ன்னைமாத்திரம் போடமாட்டார்கள். அதுபோல இதுவும் எடுத்தவைக ளெல்லாவற்றையும் சிதறியதாயினும் பொன்பூத்த கடுக்கையை மாத்திரம் போடாது கொண்டு சென்றதென்பதாம். பொன் ஆகுபெயர். (கக)

துடித்தெழு தொகைய சங்கப் பல்லியத் துவைப்பி னோதை
பிடித்தளி யிசையி னூன்ற பெருவய லரங்கம் புக்குச்
செடித்தலைக் கருப்பு மென்பூந் திரையினை விட்டிட் டோங்கி
நடித்தெதிர் நடந்த தன்றே நடனியர் தம்மின் மன்னோ.

இ-ள். துடித்து எழு தொகைய சங்கம் பல் இயம் துவைப்பின் ஓதை பிடித்து - துடித்து எழுகின்ற கூட்டமான சங்குகளாகிய பல வாச்சியங் களின் முழக்கோதையைப் பிடித்து,—அளி இசையின் ஊன்ற பெருவயல் அரங்கம் புக்கு - வண்டிசையினால் நிறைந்த பெரிய வயலாகிய அரங் கிற் புகுந்து,—செடிதலை கரும்பு மென் பூ திரையினை விட்டிட்டு ஓங்கி - செடியான தலையையுடைய கரும்பாகிய மெல்லிய பொலிவாகிய திரைப் புடைவையை விட்டுக் கிளர்ந்து,—நடனியர் தம்மில் நடித்து எதிர் நடந் தது - நடனமகளிரைப்போல நடித்து எதிரே சென்றது. எ-று.

நடித்தல் - அசைதல். நடனமகளிரும் வாச்சியங்களொலிக்க அரங்கிற் புகுந்து திரைப்புடைவையை விட்டுக் கிளர்ந்து நடித்தலின் இவ்வாறு கூறி னார் என்க. திரையைச் சிலேடையுருவமாகக்கொண்டு செடித்தலைக் கருப்பு மென்பூ என்பதை அடையாக்கிப் பொருள்கூறுதல் இத்துணைச் சிறப் பின்று. (உ0)

வளத்தன தரங்கச் செங்கை வலமிடம் போக்கி யாடற்
களத்தன விளங்கு வாவிக் காவியங் கண்கள் காட்டித்
தளத்தன கமல மென்பூந் தார்முகந் துளக்கித் தாழா
தளத்தன புன்னை யங்கா னளக்கர்வா யடைந்த தன்றே.

இ-ள். வளத்தன தரங்கச் செம் கை வலம் இடம் போக்கி - (அந்த ஆறானது) வளத்தையுடையனவாகிய திரைகளென்னுஞ் சிவந்த கைகளை வலத்திலும் இடத்திலும் போகச் செய்து (எனவே அபிநயித்து என்ற படி),—ஆடல் களத்தன விளங்கு வாவிக் காவி அம் கண்கள் காட்டி - போ ரைக்கொண்ட களத்தையுடையனவாகிய விளங்குகின்ற வாவியிலுள்ள குவ ளைமலர்களாகிய அழகிய கண்களைக் காட்டி,—தளத்தன கமல மென் பூ தார்முகம் துளக்கி - இதழையுடைய தாமரையின் மெல்லிய பொலிவுபொருந் திய பூவாகிய முகத்தை அசைத்து,—தாழாது அளத்தன புன்னை அம் கான் அளக்கர்வாய் அடைந்தது - தாமதியாது உப்பளங்களையுடைய புன்னைமரச் சோலைகளைக்கொண்ட கரையையுடைய கடலினிடத்தேயடைந்தது. எ-று.

கள்ளத்தனவாகிய கண் என இயைக்க. போக்கி, காட்டி, துளக்கி, அடைந்தது என்க. (உக)

குன்றவான் றலைய வுச்சி மும்மதக் குவட்டி னோடு
கன்றவான் காரான் வாரிக் கழித்தடங் கடந்த காட்சி
துன்றுபே ரியாற்று மூரிக் கதியினிற் றுளக்கி லாது
நின்றவோ திரிந்த வாயிற் றரிப்பவோ நிலையி லாத.

இ-ள். குன்ற வான் தலைய உச்சி மும்மதக் குவட்டினோடு - மலையின் பெரிய சிகரத்தினது உச்சியிலுள்ள யானைகளோடு,—கன்ற ஆன் காரான் வாரி - கன்றுகளையுடைய பசுக்களும் எருமைகளும் வாரப்பட்டு,— கழி தடம் கடந்த - கழிநிலத்தைக் கடந்தன,—காட்சி துன்று பேர் யாறு மூரி கதியினில் - அழகு செறிந்த பெரிய யாற்றினது வலிய கதியின்கண்,—துளக்கிலாது நின்றவோ திரிந்தவாயின் நிலையிலாத தரிப்பவோ - அசையாது நின்றனவாகிய அசரப்பொருள்களோ நிலைகுலைந்தனவானால் நிலையில்லாதனவாகிய சரப்பொருள்கள் நிலையாக நிற்குமோ. எ-று.

நின்றன மரமுதலியன. அவற்றின் றிரிவு மேலே கூறப்பட்டது. ஓகாரங்களில் முன்னையது ஒழியிசை; பின்னையது எதிர்மறை. (உஉ)

மெய்தகுஞ் சயில மொன்றே வெறியது வெறிய தேனும்
பொய்தகுந் தளவ மெங்கும் பூத்தன புனித வேங்கை
நொய்தில்வண் டடங்க ளெங்கும் விரிந்தன பூவை நோக்கிற்
கைதையங் கான மெங்கு மலர்ந்தன கமலக் காடே.

இ-ள். மெய் தகும் சயிலம் ஒன்றே வெறியது - பொருள்மிகுந்த குறிஞ்சிநிலம் ஒன்றே வெறுமையையுடையது,—வெறியதேனும்-அது வெறியதாயினும்,—நோக்கில் - பார்க்குமிடத்து,—புனித வேங்கை பொய் தகும் தளவம் எங்கும் பூத்தன - தன்கணுள்ள வேங்கைப்பூக்களை இன்மைபொருந்திய முல்லையெங்கும் அலரச்செய்தன,—பூவை நொய்தில் வண் தடங்கள் எங்கும் விரிந்தன - காயாமலர்களை விரைவில் அழகிய தடாகங்களெங்கும் விரியச்செய்தன,—கமலக்காடு கைதை அம் கானம் எங்கும் மலர்ந்தன - தாமரைமலர்க்கூட்டத்தைத் தாழைக்காடெங்கும் மலரச்செய்தன. எ-று.

வெறுமை-ஒன்றுமில்லாமை. குறிஞ்சியிலுள்ள வேங்கைப்பூவை முல்லையிற்சேர்த்தமையின் அது வெறிதாயினது என்க. முல்லையின்கணுள்ள பொருள்களை ஆறு அள்ளிக்கொண்டு சென்றமையின் அது ஒன்றுமில்லாததாயிற்று என்பார் பொய்தகுந்தளவம் என்றார். ஆறு குறிஞ்சியிலுள்ள வேங்கைப்பூவை முல்லையின்கண்ணும், முல்லையிலுள்ள காயாம்பூவை மருதத்தின்கண்ணும், மருதத்திலுள்ள தாமரைப்பூவை நெய்தலின்கண்ணும் சேர்த்தது என்பது கருத்து. பூத்தன விரிந்தன மலர்ந்தன என்பனவற்றிற் பிறவினைப்பொருளையுணர்த்தும் விவ்விகுதி தொக்குநின்றன. பன்மை நிலம்பற்றிவந்தது. (உங)

அறைந்தன மணியும் பொன்னு மாரமு மகிலு மேகொண்
டுறைந்தன வூர்கள் குன்றக் கொன்றளித் திடுவ துண்டே

நிறைந்தன வளத்தி ஞகி நிலைதளம் பாத நீர்மை
சிறந்தன பெரியோர்க் கென்கொ லளிப்பது சிறிய ரம்மா.

இ-ள். ஊர்கள் அறைந்தன மணியும் பொன்னும் ஆரமும் அகிலும் கொண்டு உறைந்தன - ஏனைநிலத்தூர்களெல்லாம் சொல்லப்பட்ட மணிகளையும் பொன்னையும் சந்தனமரங்களையும் அகில்களையும் பெற்று இருந்தன,—குன்றக்கு அளித்திடுவது ஒன்று உண்டே - மலைக்கு (அவைகள் கைமாருக) க் கொடுப்பதொன்று உளதா.—நிறைந்தன வளத்தின் ஆகி நிலை தளம்பாத நீர்மை சிறந்தன பெரியோர்க்கு - நிறைந்தனவாகிய வளங்களால் மிக்கவராய் நிலைதளம்பாததன்மையையுடைய சிறந்த பெரியோர்களுக்கு,— சிறியர் அளிப்பது என் - சிறியோர் கைமாருகக் கொடுப்பது யாது? எ-று.

குன்றக்கு என்பதில் அத்துச்சாரியை தொக்குநின்றது. "மாடக்குச் சித்திரமும்" என்பதிற்போல. எவன் என்பது என் என்ருய் ஈண்டின்மைகுறித்து நின்றது. ஆகித் தளம்பாத என இயைக்க. இனி ஆகி என்பதைச் சிறந்த என்பதனோடு முடிப்பினுமமையும். இப்பொருட்கு நீர்மையினுல் என ஆலுருபு விரித்துரைக்க. இது வேற்றுப்பொருள்வைப்பு.(உச)

பற்பல பொருளை யெங்கும் பறித்துடன் பறித்த வெல்லா
மற்பக லாது சிந்தித் தவர்தமக் களித்த லாலே
பொற்பில கொடியோர் தம்மிற் போந்தது போந்த தேனுங்
கற்பக வனமு மாகி நடந்தது கன்னி யாறே.

இ-ள். கன்னி ஆறு - அழிவில்லாத ஆருனது,—பற்பல பொருளை எங்கும் பறித்து பொற்பு இல கொடியோர் தம்மில் போந்தது - பற்பல பொருள்களையெல்லாம் எவ்விடத்தும் பறித்துக்கொண்டு அழிவில்லாத கொடியோர்களைப்போலச் சென்றது,—போந்ததேனும் - அவ்வாறு (கொடியோர்போலச்) சென்றதாயினும்,—உடன் பறித்த எல்லாம் அற்பு அகலாது சிந்தித்தவர்தமக்கு அளித்தலால் - உடனே பறித்தவைகள் எல்லாவற்றையும் அன்புநீங்காது நினைத்தவர்களுக்குக் கொடுத்தலால்,—கற்பகவனமும் ஆகி நடந்தது - கற்பகச் சோலையாகியுஞ் சென்றது. எ-று.

சிந்தித்தவர்தமக்கு என்பதை ஆற்றுக்கு இசையப் பொருள்கொள்ளுங்கால் தான் நினைத்தவர்க்கு என்றும், கற்பகத்துக்கு இசையப் பொருள் கொள்ளுங்கால் தன்னை அன்போடு நினைத்தவர்க்கு என்றும் கொள்க, இதனை இங்ஙனம் மாற்றிப் பொருள்கொள்ளாது யாற்ருெழுக்காக முடித்துப் பொருள்கொண்டு நிரனிறையாகக் கொள்வாருமுளர். (உரு)

நெடுநிலத் தனந்த மாகி நிமிர்நதி மள்ளர் வெள்ளத்
தடையினுட் கிடந்துப் யானந் தவழ்ந்துசெய் நடந்து தாவி
மடுவுறத் திரிந்து மற்றும் வயின்ருெறு முலாவி யாரம்
படுதிரைப் பணில வேலை பட்டது பட்ட தன்றே.

இ-ள். நெடு நிலத்து அனந்தம் ஆகி நிமிர்நதி - நெடிய பூமியினிடத்தே அளவில்லாத பிரிவுடையதாகிச் செல்லுகின்ற நதியானது,—மள்ளர் வெள் ளத்தடையினுள் கிடந்து - மள்ளர்களது அணையுட் கிடந்து,—உய்யானந் தவழ்ந்து - பூஞ்சோலையின்கண்ணே தவழ்ந்து.—செய் நடந்து தாவி - வயல் களில் நடந்து (பின்) பாய்ந்து,—மடு உறத் திரிந்து - வாவிகளில் பொருந் தத் திரிந்து,—மற்றும் வயின் தொறும் உலாவி - மற்று மிடங்கடோறு முலாவி,—ஆரம் படு திரைப் பணில வேலைபட்டது பட்டது - முத்துக்கள் படுகின்ற திரைபொருந்திய சங்குகளையுடைய கடலின்கண்ணே பாய்ந்து கலந்தது. எ-று.

இதன்கண் கிடந்து தவழ்ந்து நடந்து திரிந்து உலாவி அழிந்ததுஎன்ப துந் தோன்றுதல் காண்க. படுதல் உண்டாதல். ஆரம்படு பணிலம்எனக் கூட்டிப் பொருள்கூறினு மமையும். (உசு)

ஆற்றுப்படலமுற்றிற்று.

---

# நாட்டுப்படலம்.

தெளிந யந்தரு நாட்டிடைப் பல்பொருட் டிருவை
யளிந யந்துசிற் சிலசொல வமைந்தன மனைத்து
மொளிந லந்தரு திகிரியா னுலகமேழ் பூத்த
நளின மென்னதை யன்னது கோசல நாடே.

இ-ள். தெளி நயம் தரு நாட்டிடைப் பல் பொருள் திருவை - சிறந்த வளங்களைத் தருகின்ற நாட்டின்கண்ணேயுள்ள பல பொருள்களாலுமாய செல்வத்தினது சிறப்பை,—அளி நயந்து சில்சில சொல அமைந்தனம் - அன்போடு விரும்பிச் சிற்சில வார்த்தைகள் கூறுதற் கியைந்தேம்,—கோசல நாடு - கோசலநாடானது,—ஒளி நலம் அனைத்தும் தரு திகிரியான் எழ் உலகம் பூத்த நளினம் என்னது அன்னது - ஒளியின் நலமெல்லாவற்றை யுந் தருகின்ற சக்கரப்படையையுடையவராகிய விட்டுணுவினது எழுலகங் களையும் பூத்த உந்தியங்கமலம் எத்தன்மையதோ அத்தன்மையது. எ-று.

திருவைச் சிற்சில சொல அமைந்தனம் என்க. பல்பொருட்டிருவை என்பதற்குப் பலபொருள்களினது அழகை எனினுமாம். திருவை விரும்பி அவற்றிற் சிற்சிலவற்றைச் சொல்ல அமைந்தனம் எனினுமாம். எழுலகி லுள்ள பொருள்களு மங்கே காணப்படுதலின் உலகமேழ்பூத்தநளினமென் னதையன்னது என்றார். பூத்தல் - தோற்றுவித்தல். என்னதை என்பதி லுள்ள ஐ சாரியை. இனி நளினம் என் அதை அன்னது கோசலநாடு எனக் கண்ணழித்துப் பொருள்கூறினு மமையும். (க)

விரவித் தண்வயற் குவளைவண் டுழக்கிட மென்றா
திரவுச் செய்திட வாகங்க டணக்குமவ் வெல்லை
நிரவித் தேனிசைத் துயின்றுசூ லுளைந்தெழு நீள்சங்
கரவத் தின்றுயி லெழுவன சரோருகத் தன்னம்.

இ-ள். தண் வயல் குவளை விரவி வண்டு உழக்கிட - தண்ணிய வயல்களிலுள்ள குவளைமலர்களிற் கலந்து வண்டுகள் உழக்க,—மென் தாது இரவுச் செய்திட - (அதனாற்பரந்த) மெல்லிய பூந்தாது இராக்காலத்தைச் செய்ய,—ஆகங்கள் தணக்கும் அ எல்லை - சக்கரவாகங்கள் பிரிகின்ற அப்பொழுது,—சரோருகத்து அன்னம் - தாமரைப்பூவிலுள்ள அன்னங்கள்,—நிரவித் தேன் இசைத் துயின்று - நிரம்பி வண்டுகள் ஒலித்தலால் நித்திரை கொண்டு,—சூல் உளைந்து எழு நீள் சங்கு அரவத்தின் துயில் எழுவன - (பின்) கருப்பவேதனையுற்று எழுகின்ற நெடிய சங்கொலியினால் நித்திரையினின்றும் எழுவன. எ-று.

சக்கரவாகங்கள் பகலிற் கூடி இரவிற் பிரியுமியல்புடையனவாதலின் இரவுச்செய்திடவாகங்கடணக்கும் என்றார். இசை முதனிலைத்தொழிற் பெயர். இரவென்று கருதி அவ்வெல்லையிற்றுயிலும் என்க. அன்னங்கள் சரோருகத்திலே நிரவித் துயின்று எனினுமாம். இப்பொருட்கு இசை பெயர். துயிலுதற்கேற்ற மெல்லோசை என்பது தோன்ற இசை என்றும், எழுதற்கேற்ற வல்லோசை என்பது தோன்ற அரவம் என்றும் கூறினார்.

கலிப்ப வெள்வரால் பாய்தலுங் கட்டவிழ் கழுநீர்
சலிப்ப வுள்புகுந் துழக்கிய தண்ணறும் பெடைநீர்
பலிப்ப வான்றிரை யெறிந்தித ழடைத்தலும் பதைத்துள்
ளொலிப்ப வண்டுலாய்ப் புறத்திருந் திரங்குவ வோடை.

இ-ள். கலிப்ப வெள் வரால் பாய்தலும் கட்டவிழ் கழுநீர் சலிப்ப - (நீர்) ஒலிக்குமாறு வெள்ளிய வரான்மீன்கள் பாய்ந்தவளவிலே முறுக்கவிழ்ந்த செங்கழுநீர்மலர்கள் நெகிழும்படி,—உள் புகுந்து உழக்கிய தண் நறும் பெடை - உள்ளேபுகுந்து உழக்கிய தண்ணிய நல்ல பெடைகள்,—நீர் பலிப்ப வான் திரை எறிந்து இதழ் அடைத்தலும் - நீர் மிகும்படி பெரிய திரைகளை எறிந்து இதழ்களை அடைத்துவிடுதலும்,—பதைத்து உள் ஒலிப்ப - பதைத்து உள்ளே இருந்து ஒலிப்ப,—வண்டு உலாய்ப் புறத்து இருந்து இரங்குவ ஓடை - வண்டுகள் உலாவிப் புறத்தே இருந்து இரங்குவன ஓடைகள். எ-று.

பெடை பதைத்து உள் ஒலிப்ப வண்டு புறத்து இருந்து இரங்குவ ஓடை என்க. இரங்குவ ஓடை என இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்தின்மேலேற்றிக் கூறப்பட்டது. சலிப்ப என்பதற்கு விரிய என நிகழ்காலமாகப் பொருள்கூறினு மமையும். (௩)

வாகி னீர்வளம் பொருமையின் மடற்களம் விம்ம
லாக நோக்கின போலிசைக் குரலரி தரவே
பாக மோடிய வாளையின் பாய்ச்சலாற் கோட்டுப்
பூக ராசியின் பொதிமிட றுடைப்பன பொய்கை.

இ-ள். வாகு இன் நீர் வளம் பொருமையின் - (தமது) அழகுபொருந்திய இனிய நீர்வளத்தைப் பொருமையினாலே,—மடற்களம் விம்மலாக நோக்கினபோல் இசைக்குரல் அரிதர - (கமுகுகள்) மடலையுடைய கழுத்து விம்முதலுற நோக்கின (வாய்த் தன்னுள்ளே கொறுகொறுத்தது) போல இசையினொலியை வண்டுகள் தர,—பாகம் ஓடிய வாளையின் பாய்ச்சலால் - பக்கத்தில் மேலாக எழுந்து ஓடிய வாளைமீனின் பாய்ச்சலினாலே,—கோட்டுப் பூகராசியின் பொதி மிடறு உடைப்பன பொய்கை - கரையிலுள்ள அக்கமுகுக்கூட்டங்களின் மடலாற்பொதிந்த மிடற்றை உடைத்துவிடுவன பொய்கைகள். எ-று.

வாகின் என்பதிலுள்ள இன்னைச் சாரியையாகக் கொள்ளினு மமையும். ஒருவருடைய வளத்தைக்கண்டு பொருமைகொள்வோர் பொருமை மிகுதியினாலே கழுத்துவிம்மி வெடித்துக் கொறுகொறுப்பது இயல்பாதலின் மடற்களம்விம்மலாகநோக்கினபோலிசைக்குரலரிதர என்றார். இசைக்குரல் தர என்றதனாற் கொறுகொறுத்தல் பெற்றாம். பொருமையின் நோக்கினபோல் தர உடைப்பன என்க. (ச)

துழனி நன்னதித் திரைக்கரத் தடிபடாச் சூற்சங்
கழவி னைந்துகொண் டாற்றுபு தலைக்கொடு போகி
யெழநி மிர்ந்தன வளம்பல வீன்றுடன் வளர்க்குங்
கழனி மங்கைகைக் கையடை கொடுப்பன கால்கள்.

இ-ள். துழனி நல் நதித் திரைக் கரத்து அடிபடாச் சூல் சங்கு அழ - ஒலியையுடைய நல்ல நதியினது திரையாகிய கையினலடிபட்டுக் கருவையுடைய சங்கு அழ,—கால்கள் இனைந்துகொண்டு ஆற்றுபு தலைக்கொடு போகி - (அதனைக்) கால்வாய்கள் வருந்திக்கொண்டு தாங்கித் தலையிற்கொண்டுசென்று,—எழ நிமிர்ந்தன வளம் பல ஈன்று உடன் வளர்க்கும் கழனி மங்கை கை - கிளர்ந்து உயர்ந்தனவாகிய வளங்கள் பலவற்றையும் ஈன்று ஒருசேர வளர்க்கின்ற வயலென்னும் பெண்ணினது கையில்,—கையடை கொடுப்பன - அடைக்கலமாகக் கொடுப்பன. எ-று.

பலபிள்ளைகளைப் பெற்றுச் சிறிதும் வருந்தவிடாது வளர்ப்பாட்கு இவ்வோர்குழந்தையை வருந்தவிடாது வளர்த்த லரிதன்றென உணர்ந்து கையடை கொடுப்பன என்பார் வளம்பலவீன்றுடன்வளர்க்குங்கழனிமங்கைகைக்கையடைகொடுப்பன என்றார். அழுதல் என்றதும், இனைதல் என்றதும் ஒலித்தலை. வளம் கமுகு கரும்புமுதலியன. ஆற்றுபு என்பதற்கு ஆறச்செய்து எனப் பொருள்கூறினு மமையும். (ரு)

பயிலு மொண்சினைக் கரங்கொடே யணைத்துடன் பைந்தேன்
றயிலம் வாக்கிமென் றாதெனுங் காப்புறத் தரித்து
வெயில வெண்மதிக் குழவிவண் டிசையினை வேட்டுத்
துயில வின்மலர்த் தொட்டில்கை யசைப்பன சோலை.

இ-ள். சோலை - சோலைகள்;—வெயில வெண் மதிக்குழவி - ஒளியை யுடைய வெண்மையாகிய திங்கட்குழவியை.—பயிலும் ஒண் சினைக் கரம் கொடு அணைத்து - (தன்னிடத்திற்) பொருந்திய ஒள்ளிய கொம்பர்களாகிய கைகளைக்கொண்டணைத்து,—உடன் பைந் தேன் தயிலம் வாக்கி - உடனே பசிய தேனாகிய எண்ணெயை வார்த்து.—மென் தாது எனும் காப்பு உறத் தரித்து - மென்மையாகிய மகரந்தமென்னும் திலகத்தைப் பொருந்த அணிந்து (கிடத்தி),—வண்டு இசையினை வேட்டுத் துயில - (அக்குழவி) வண்டிசையாகிய தாலாட்டை விரும்பிக் கேட்டுத் துயிலும்படி,—இன் மலர் தொட்டில் கையசைப்பன - இனிய மலர்த்தொட்டிலை ஆட்டுதலைச் செய்வன. எ-று.

தரித்து கிடத்தி அசைப்பன, துயில அசைப்பன எனத் தனித்தனி முடிக்க. கிடத்தி என்பது அவாய்நிலையால் வருவிக்கப்பட்டது. இனி இன்மலர்த் தொட்டிலிற் (கிடத்தித்) துயில அதனை ஆட்டுதலைச் செய்வன என மாற்றிப் பொருள்கூறினு மமையும். காப்பு என்றது காவலின்பொருட்டு இடப்பட்ட திலகத்தை. (சு)

நெறிய கட்டவிழ் மைக்குவ ளைப்புன னிலைவாய்ச்
செறிய ணிப்பதி யத்திடை வளரிளஞ் சேல்கள்
பிறிவில் கொத்திழைப் பிணிக்கிடை நெடிதுகை பிழையா
தெறிதொ ழிற்கரு வியினுழைந் தோடுவ வெங்கும்.

இ-ள். நெறிய கட்டு அவிழ் மைக் குவளை புனனிலைவாய்ச் செறி அணிப் பதியத்திடை வளர் இளஞ்சேல்கள் - நெறிப்பையுடைய முறுக்குவிரிந்த கரிய குவளைமலர்களையுடைய தடாகத்தின்கண்ணே நெருங்கிய அழகிய பாசியினிடையே வளருகின்ற இளமையாகிய சேல்கள்,—பிறிவு இல் கொத்து இழைப் பிணிக்கு இடை - பிரிவில்லாத கூட்டமான நூலின் பிணிப்புகளுக்கு இடையே,—நெடிது கைபிழையாது எறி தொழிற் கருவியின் - மிகவுந் தவறாது எறிகின்ற தொழிற்கருவியானது நுழைந்து ஓடுதல் போல,—நுழைந்து எங்கும் ஓடுவ - (அதன்கண்) நுழைந்து எவ்விடத்தும் ஓடுவன. எ-று.

கைபிழையாமை ஒரு சொல். கையோயாது எனினுமாம். பதியத்தினிடையே அதன்கண் வளருகின்ற சேல்கள் நுழைந்து ஓடுவ எனினுமாம். தொழிற்கருவி புடைவைநெய்தற்றொழில்செய்தற்குரிய கருவி. அது நாடா. (எ)

கள்ள ருதன நறுமலர் கருத்தழி களியே
புள்ள ருதன வைகலும் போகலா வஞ்ச
முள்ள ருதன சரோருகங் கண்ணெரிந் துடையத்
துள்ள ருதன கழைபடு நித்திலத் தொகையே.

இ-ள். கள் அருதன நறுமலரே - தேன் நீங்கப்பெருதன நறிய மலர்களே,—கருத்தழி களி அருதன புள்ளே - மனக்கருத்தை அழிக்கின்ற களிப்பு நீங்கப்பெருதண பறவைகளே,—வைகலும் போகலா அஞ்சம் உள் அருதன சரோருகமே - நாடோறும் நீங்காத அன்னங்கள் உள்ளே நீங்கப்பெருதன தாமரைமலர்களே,—கண் நெரிந்து உடையத் துள் அருதன கழைபடும் நித்திலத்தொகையே - கணுக்கள் நெரிந்து உடையத் துள்ளுதல் நீங்காதன மூங்கிலி லுண்டாகின்ற முத்துக்கூட்டங்களே. எ-று.

வைகலும் அருதன எனக் கூட்டுக. புள் என்பதற்கு வண்டு எனப் பொருள்கூறினுமாம். இதனுற் களவெடுப்பாரும், கள்ளுண்டுகளிப்பாரும், வஞ்சமுடையாரும், இரக்கமின்றிக் கோபிப்பாரும் இலரென்பதுந் தோன்றிற்று. இது நியமச்சிலேடை என்னு மலங்காரம். பிரிநிலை எகாரம் முன்னும் பின்னுங் கூட்டப்பட்டது. (அ)

தோய ளித்தொகைக் கருநற வளிப்பன சோலை
வாய்மு கிற்கணி வதுவைசெய் திடுவன வனசஞ்
சாய்க ழைக்கடை யணைவிரித் திடுவன சங்கம்
பாய்பு னற்றலைக் கெதிர்கொள விடுப்பன பழனம்.

இ-ள். தோய் அளித்தொகைக்கு அரு நறவு அளிப்பன சோலை - (தன்னிடத்தே வந்து) வீழ்ந்த வண்டுக்கூட்டங்களுக்கு அரிய தேனைக் கொடுப்பனவாகிய சோலைகள்,—வாய் முகிற்கு அணி வதுவை செய்திடுவன - தன்னிடத்து (வந்து படிந்த) முகில்களுக்கு அழகிய மணக்கோலத்தைச் செய்வன.—வனசம் சாய் கழைக்கு அடை அணை விரித்திடுவன - தாமரைகள் சாய்ந்த கரும்புகளுக்கு இலையாகிய அணையை விரிப்பன,—பழனம் சங்கம் பாய் புனல் தலைக்கு எதிர்கொள விடுப்பன - வயல்கள் சங்குகளைப் பாய்கின்ற நீர்மடைக்கு எதிர்கொள்ளும்படி விடுப்பன. எ-று.

முகில்களிலே பூக்கள் அளாவியிருத்தல் மணக்கோலஞ் செய்ததுபோலவும், தாமரையிலைகளிற் கரும்புகள் சாய அவைகள் அவற்றைத் தாங்கியிருத்தல் அணைவிரித்ததுபோலவும், சங்குகள் குளிர்ச்சியை விரும்பி நீர்மடைக்கு எதிர்சேறல் எதிர்கொள்ளும்படி விடுக்கப்பட்டதுபோலவும் இருந்தன என்க. வாய்முகில் என்பதற்குச் சிறந்த முகில் எனப் பொருள்கூறுவாருமுளர். (கூ)

தேசு நாறுவ மென்னகை நகையொடு சேத்திற்
காசு நாறுவ நித்தில மெனநிகர் காணு

வாச நாறுவ நாவலர் நாவமு தன்னார்
தூசு நாறுவ தெள்ளகிற் படுநறுந் தூமம்.

இ-ள். தேசு நாறுவ மெல் நகை - ஒளியைக் காலுவன மெல்லிய முறுவல்,—நகையொடு சேத்தில் காசு நாறுவ நித்திலம் நிகர் எனக் காணு ஆசு நாறுவ நாவலர் நா - அம்முறுவலோடு உவமையிலே மணியாக விளங்குகின்ற முத்துக்கள் நிகர் என்று கண்டு ஆசுகவிகளைத் தோற்றுவிப்பன நாவலர்களுடைய நாக்கள்.—தெள் அகில் படு நறும் தூமம் அமுதன்னார் தூசு நாறுவ - தெள்ளிய அகிலினின்றுமுண்டாகும் நறும்புகையை அமுதம் போலும் மகளிருடைய வஸ்திரங்கள் பரிமளிப்பன. எ-று.

ஆசு என்பதற்குக் குற்றமென்று பொருள் கூறலுமாம். நகையொடு சேத்தில் காசு நாறுவ நித்திலம் என நிகர் காணு ஆசு நாறுவ நாவலர் நா என்பதற்கு அம்முறுவலோடு உவமையில் முத்துக்கள் குற்றத்தைக் காட்டுவன என்று உவமை காணுத ஆசுகவிகளைத் தோற்றுவிப்பன நாவலர்நா என்றும், அம்முறுவலோடு உவமையிலே முத்துக்கள் நிகர் என்று கண்டு ஆசுகவிகளைப் பாடுகின்ற நாவலர்நா குற்றத்தைப்பொருந்துவன என்றும் பொருள் கூறுவாருமுளர். இவற்றுள் பின்னையபொருட்கு ஆசுநாறுவநாவலர்நாகாசுநாறுவ என மாற்றிக் கொள்க. அமுதன்னார் என்பதை முன் நகை என்பதோடு கூட்டிப் பொருள்கொண்டு பின் அவர் தூசு எனச் சுட்டை வருவித்துப் பொருள்கூறினு மமையும். (௪0)

நோற்ற லும்பலன் பெறுதலுஞ் செயிரெனு நுவறீ
யாற்ற லும்புகழ் விளைத்தலும் பெரியவ ரடியே
போற்ற லும்வெளி றிகத்தலும் புதியநல் விருந்தே
யேற்ற லும்பத மிடுதலு மல்லதொன் றிலையே.

இ-ள். நோற்றலும் பலன்பெறுதலும் - தவஞ்செய்தலும் அதனாற் பிரயோசனத்தை அடைதலும்,—செயிர் எனும் நுவல் தீ ஆற்றலும் புகழ் விளைத்தலும் - கோபமென்னும் (கொடியதென்று) சொல்லப்படுகின்ற அக்கினியைத் தணித்தலும் அதனாற் புகழை வளர்த்தலும்,—பெரியவர் அடி போற்றலும் வெளிறு இகத்தலும் - (கற்றறிந்த) பெரியோர்களது பாதங்களைத் துதித்தலும் அதனால் அறியாமை நீங்குதலும்,—புதிய நல் விருந்து ஏற்றலும் பதம் இடுதலும் - புதிய நல்ல விருந்தை ஓம்புதலும் அன்னமிடுதலும்,—அல்லது ஒன்று இலை - ஆகிய இத்தொழில்களேயன்றி வேறொரு தொழிலும் (அங்கே நிகழ்தல்) இல்லை. எ-று.

செயிரெனுந்தீ எனக் கூட்டுக. ஏனைத் தீயோடு வேற்றுமைதோன்றச் செயிரெனுநுவறீ என்றார். "சினமென்னுஞ்சேர்ந்தாரைக்கொல்லி" என்றார் பிறரும். செயிரெனுநுவறீ என்றாரேனும் உபலக்கணத்தால் ஏனைய குற்றங்களும் கொள்ளப்படும். இது முறையே சந்நியாசத்

தையும், வானப்பிரத்தத்தையும், பிரமசரியத்தையும், இல்லாச்சிரமத்தையும் உணர்த்திநின்றது. (கக)

காரிரும்புறழ் பணைமருப் பிணைத்தலைக் காரான்
மூரி வெம்பிடர் நுகப்பகற் றலைக்கொளீஇ முறையா
லூரிருங்கொழு நுதியிட றிடுமணி யொளியாற்
பாரி னந்தரப் பரிதியோ டிகலுவ பழனம்.

இ-ள். கார் இரும்பு உறழ் பணை இணை மருப்புத் தலை - கரிய இரும்பையொத்த பருத்த இரண்டு கொம்புபொருந்திய தலையையுடைய,—காரான் மூரி வெம்பிடர் நுகப் பகல் தலைக் கொளீஇ - எருமைகளது வலிய வெவ்விய பிடரில் வைக்கப்பட்ட நுகத்தின் நடுவாணியிலே கொழுவி,—முறையால் ஊர் இரு கொழு நுதி இடறிடும் மணி ஒளியால் - முறையோடு உழுகின்ற பெரிய கொழுவின் நுதி இடறி (மேலே) தோற்றுவித்த மணியின் ஒளியினால்,—பழனம் பாரில் அந்தரப் பரிதியோடு இகலுவ - வயல்களானவை பூமியிலே ஆகாயத்தில் வருகின்ற சூரியனோடு மாறுபடுவன. எ-று.

பகல்-நுகத்தின் நடுவாணி. ஊர்தல்-காரியகாரண உபசாரம். இது ஏதுவணி. (கஉ)

மழவு கான்முதிர் பருவநா கதனொடு மருவும்
விழவு செய்வன வேட்கையான் மதகொலி வீக்க
முழவிற் றாகவால் வளைமணித் தீபங்கண் முதிர
வுழவு சாலணி வீதிதொ றூர்ந்துலா வருமால்.

இ-ள். வால் வளை - வெண்மையாகிய சங்குகள்,—மருவும் விழவு செய்வன வேட்கையால் - பொருந்திய விவாக விழவைச் செய்யும் விருப்பத்தினால்,—மதகு ஒலி வீக்கம் முழவிற்று ஆக - மதகின்கணுள்ள ஒலிமிகுதி முழவினொலியாக,—மணித் தீபங்கள் முதிர - இரத்தினதீபங்கள் மிகுந்து ஒளியைக் கால,—மழவு கால் முதிர் பருவ நாகதனொடும் - இளமையைத் தோற்றுவிக்கின்ற முதிர்ந்த பருவத்தையுடைய பெடைச் சங்குகளோடும்,—உழவு சால் அணி வீதிதொறு ஊர்ந்து உலாவரும் - உழவுசாலாகிய அழகிய வீதிதோறும் ஊர்ந்து உலாவரும். எ-று.

இற்று-சாரியை. வளை வேட்கையால் ஆக முதிர நாகதனொடு உலாவரும் என்க. அது பகுதிப்பொருள்விகுதி. விழவு-உலாச்சிறப்பு. (கங)

நிலையு றுத்தடி பெயர்த்திணை யேகுபு நீல
மலையு றுத்தென விடம்புரி கடாவலம் புரியக்
குலையு றுத்திய வயமுறு முழுங்கொழு நுதியின்
றலையு றுத்தலும் வலம்புரி யிடம்புரி தருமால்.

இ-ள். நிலை உறுத்து அடிபெயர்த்து - பூமியினுறுத்தப்பட்ட கால்களைப் பெயர்த்து,—இணை ஏகுபு - இரண்டாகச் சென்று,—நீலமலை உறுத்தென இடம்புரி கடா வலம்புரிய,—நீலமலையை நிலையாக நிறுத்திவிட்டாற்போல இடத்தைச் செய்கின்ற எருமைக்கடாக்கள் வலம்வரும்படி,—குலை உறுத்திய வயல் தொறும் உழும் கொழுநுதியின் தலை உறுத்தலும் - வரம்புகளை அசைவறக் கட்டிய வயல்கடோறும் உழுகின்ற கொழுநுதியின் தலையானது உறுத்தியவளவில்,—வலம்புரி இடம் புரிதரும் - வலம்புரிச்சங்குகள் இடப் பக்கத்திற் செல்லும். எ-று.

ஏகுபு வலம்புரிய உழும் கொழு என இயையும். இடம்புரிகடா - பருத்த கடா. வலம்புரிய இடம்புரியும் என ஓர் சொல்லலங்காரந் தோன்றுதல் காண்க. நிலை உறுத்து என்பதற்கு நிலையாக உறுத்திய எனினும், இடம்புரிதரும் என்பதற்கு இடத்தைவிட்டுச் செல்லும் எனினும் பொருந்தும். (கச)

நெய்த்த மாலைய முத்தொடு பொன்மணி நிறைசால்
பொய்த்த மாலையர்க் கருள்செயாப் பூமகண் மார்பின்
முத்த மாலையு முழுமணி மாலையு முதிரும்
வித்த மாலையு மணிந்தென வயின்றொறும் விளங்கும்.

இ-ள். நெய்த்த மாலைய முத்தொடு பொன் மணி நிறை சால் - நெய்த்தன்மையையுடைய வரிசையான முத்துக்களும் பொன்னும் மணிகளும் நிறைந்த உழவுச் சால்கள்,—பொய்த்த மாலையர்க்கு அருள்செயாப் பூமகள் மார்பில் - பொய்யான ஒழுக்கத்தையுடையாருக்கு (த் தன் வளங்களை) க்கொடாத பூமிதேவியினது மார்பில்,—முத்தமாலையும் முழுமணிமாலையும் முதிரும் வித்தமாலையும் அணிந்தென - முத்துமாலைகளையும் மாணிக்கரத்தினமாலைகளையும் முதிர்ந்த பொன்மாலைகளையும் அணிந்துவிட்டாற்போல,—வயின் தொறும் விளங்கும் - இடங்கடோறும் விளங்கும். எ-று.

ஒடு எண்ணுப்பொருட்டு. செய்யுளாதலின் முறைபிறழக் கூறினர். பூமகளை எழுவாயாக்கினுமாம். (கரு)

சேறு காலிடு மள்ளருள் ளத்திருள் செய்தும்
வீறு சானில வுகுத்தன வென்கொலோ வியக்கே
னேறு தேசிக வளையரி மணிக்கதி ரிகல
நாறு நாறுகைக் கொண்டெழு கடைசியர் நகையே.

இ-ள். ஏறு தேசிக வளை அரி மணிக்கதிர் இகல - உயர்ந்த பொன் வளையல் மரகதமணியின் ஒளியை ஒக்கும்படி,—நாறும் நாறு கைக்கொண்டு எழு கடைசியர் நகை - தோன்றுகின்ற நாற்றுமுடியைக் கையிற்கொண்டு எழுகின்ற மருதநிலமகளிரின் நகையானது,—கால் சேறு இடும் மள்ளர்

உள்ளத்து இருள் செய்தும் - காலாற் சேறுசெய்கின்ற மள்ளரது மனத்தின் கண்ணே இருளைச் செய்தும்,—வீறு சால் நிலவு உகுத்தன - பெருமை சான்ற நிலவைக் கான்றன,—என் வியக்கேன் - (அதனை யான்) எவ்வாறு வியப்பேன். எ-று.

நாற்றின் பச்சைநிறம் வளையலின்கண்ணே தோன்றுதலின் அவ்வளையல் மரகதமணிக்கதிரை ஒத்தது என்க. இருள்செய்தும் நிலவைக்காலுதல் வியக்கப்படத்தக்கதாகலின் என்கொலோவியக்கே னென்றார். இகலக்கொண்டு எழும் மகளிர் என முடிக்க. வளை கதிர் இகல நாறுகின்ற கை என நாறுதலை வளையின் வினையாக்கி முடித்தலும், வளை இகலும்படி நாறும் நாறு என நாற்றின் வினையாக்கி, நாறுதல் ஒளிசெய்தல் எனப் பொருள்கோடலுமொன்று. (கசு)

குவளை மாக்கயத் தராபதத் தன்றியுங் குதலை
திவள மாக்களி கின்னர மிதுனமேற் செயுமாற்
கவள மாக்கன தனப்பிடி நடைக்கருங் கயற்கட்
பவள வாய்க்கடை சியர்வள முடிநடும் பாடல்.

இ-ள். கவளமா கன தனம் பிடி நடை கரும் கயல் கண் பவளவாய் கடைசியர் - களிற்றுயானையை நிகர்த்த பாரமாகிய முலைகளையும் பிடிபோன்ற நடையையும் கரிய கயல்மீன்போன்ற கண்களையும் பவளம்போன்ற வாயையுமுடைய மருதநிலப் பெண்கள்,—வள முடி நடும் பாடல் - வளம் பொருந்திய நாற்றுமுடிகளை நடும்போது பாடும் பாடல்கள்,—குவளை மாக் கயத்து அராபதத்து அன்றியும் - குவளைகளையுடைய பெரிய வாவியிலுள்ள வண்டினிடத்தன்றியும்,—குதலை திவள் அ மாக் களி - குதலைமொழிகளிடத்தே பொருந்திய அந்தப் பெரிய களிப்பை,—கின்னர மிதுனமேல் செயும் - கின்னரவிரட்டைகளிடத்தும் செய்யும். எ-று.

பாடல் களிசெய்யும் என்க. (கஎ)

தொய்யு நோவொடு துணைமலை முலைசுமந் துழலும்
பொய்யி னோடலைந் திடுவதே யல்லது புகுந்த
செய்யி னோதைகொண் டணிமுடி நடுமொழித் தேனர்
கையி னோபுகுந் துலாயது மள்ளர்தங் கருத்தே.

இ-ள். மள்ளர் தம் கருத்து - மள்ளர்களுடைய கருத்தானது,—தொய்யும் நோவொடு துணைமலை முலை சுமந்து உழலும் பொய்யினோடு அலைந்திடுவதே அல்லது - இளைக்கும் வருத்தத்தோடு இரண்டாகிய மலைபோலும் முலையைச் சுமந்து உழலுகின்ற பொய்யாகிய இடையினோடு (கிடந்து) அலைவதேயல்லாமல்,—புகுந்த செய்யின் ஓதைகொண்டு அணிமுடி நடும் மொழித்தேனர் கையினோ புகுந்து உலாயது - தாம் புகுந்த வயலின்கண்

ஆரவாரங்கொண்டு அழகிய நாற்றுமுடிகளை நடுகின்ற பெண்களது கையினிடத்தோ புகுந்துலாவியது. எ-று.

கருத்து அலைவதேயல்லது கையினோ புகுந்துலாயது என்க. பொய் - ஆகுபெயர். ஓ எதிர்மறை. மள்ளர் கருத்துப் பெண்களிடத்தன்றி நாற்று நடுதலிற் சென்றிலதென்பதாம். (கஅ)

கயற்பி றங்கின பிறங்கின கண்கள்செங் கமல
மயற்பி றங்கின பிறங்கின முகங்களா ரத்தி
னியற்பி றங்கின பிறங்கின வெண்ணகை யெண்ணில்
வயற்பி றங்கின பிறங்கின மாதரார் வயினும்.

இ-ள். கயல் பிறங்கின கண்கள் பிறங்கின - கயல்கள் விளங்கின கண்களும் விளங்கின,—அயல் செங்கமலம் பிறங்கின முகங்கள் பிறங்கின - பக்கங்களிலே செந்தாமரைமலர்கள் விளங்கின முகங்களும் விளங்கின,— ஆரத்தின் இயல் பிறங்கின வெண் நகை பிறங்கின - முத்தினது காட்சி விளங்கின வெண்மையாகிய பற்களும் விளங்கின,—எண்ணில் வயல் பிறங்கின மாதரார் வயினும் பிறங்கின - (இங்ஙனமே) ஆராயுமிடத்து வயலிலே விளங்கியவைகள் பெண்களிடத்தும் விளங்கின. எ-று.

ஒப்புமைபற்றி வயற்பிறங்கினபிறங்கின மாதரார் வயினும் என்றார்.

அம்பொ னூபுர மரற்றின வரற்றின வன்னங்
கம்பு கையகத் தொலித்தன வொலித்தன கம்பு
தும்பி கோதையிற் றொனித்தன றொனித்தன சுரும்பு
பைம்பொ னார்வயிற் கலித்தன கலித்தன பழனம்.

இ-ள். அம் பொன் நூபுரம் அரற்றின அன்னம் அரற்றின - அழகிய பொன்னாலாகிய சிலம்புகள் ஒலித்தன அன்னமும் ஒலித்தன,—கம்பு கை அகத்து ஒலித்தன கம்பு ஒலித்தன - வளையல்கள் கையின்கண்ணே ஒலித்தன சங்குகளும் ஒலித்தன,—தும்பி கோதையில் தொனித்தன சுரும்பு தொனித்தன - வண்டுகள் கூந்தலின்கண் ஒலித்தன வண்டுகளும் ஒலித்தன,—பைம்பொனார்வயின் கலித்தன பழனம் கலித்தன - இவ்வாறே பெண்களிடத்தே ஒலித்தவைகள் வயல்களிடத்தும் ஒலித்தன. எ-று.

சிலம்போசை அன்னத்தினொலிபோறலின் சிலம்பு ஒலிக்குப் பதிலாக அன்ன ஒலி கூறப்பட்டது. கம்பு சொன்மாத்திரையளவிற் பதிலாகக் கூறப்பட்டது. இனிச் சங்குவளையலணியும் வழக்குப்பற்றிக் கூறினாரெனினுமாம். பைம்பொனார் - பசிய பொன்போன்றவர். (உ௦)

நடவு நட்டிடு நாரியர்க் கெளியவோ நறுஞ்செய்
வடம தற்றிட மனக்களி விளைத்தவம் மடவார்

சுடர்செய் கற்பல சிந்தினர் சிந்தலுந் துள்ளித்
தடமு லேத்தலைப் பங்கமிட் டெறிந்தன தடிகள்.

இ-ள். நறும் செய் நடவு நட்டிடும் நாரியர்க்கு எளியவோ - நல்ல வயல்களானவை நாற்றுகளை நடுகின்ற பெண்களுக்கு வலிமையிற் குறைந் தனவோ,—வடமது அற்றிட - வடங்களறுதலால்,—மனக்களி விளைத்த அ மடவார் சுடர்செய் கல் பல சிந்தினர் சிந்தலும் - மனக்களிப்பை உண் டாக்கிய அப்பெண்கள் ஒளியைச்செய்கின்ற பல இரத்தினக்கற்களைச் சிந்தினார்கள்; சிந்தினமாத்திரத்திலே,—தடிகள் - வயல்கள்,—துள்ளி தடம் முலைத்தலைப் பங்கம் இட்டு எறிந்தன - துள்ளிப் பெரிய முலையினிடத்தே சேற்றையிட்டெறிந்தன. எ-று.

மனக்களி விளைத்தல்-கள்ளுண்டு மனக்களிப்பை உண்டாக்கல். மன மயக்கத்தினால் வடங்களை அறுத்துவிட அவற்றினின்றும் மணிகள் சிந்தின என்க. துள்ளிப்பங்கமிட்டெறிந்தன என இடத்துநிகழ்பொருளின்றொ ழில் இடத்தின்மேலேற்றிக் கூறப்பட்டது. இதில் பெண்கள் கற்களை எறிய வயல்களுஞ் சபதமிட்டுத் தடிகளை எறிந்தன எனவு மொருபொருள் தொனித்தல் காண்க. (உக)

கொண்ட பல்வளப் பெரியவர் தம்மொடுங் கொடியார்
தண்டு கின்றலிற் றவறலாற் சார்வது முண்டே
யுண்டெனா மாமறு மதிக்கென வுடைத்திடும் வதன
மண்டலங்களும் படைத்தன சேதக மறுக்கள்.

இ-ள். மதிக்கு ஓர் மா மறு உண்டென உடைத்திடும் வதன மண்டலங் களும் - சந்திரமண்டலத்திற்கு ஒரு பெரிய மறு உண்டென்று (அதனைப்) புறங்கொடுக்கச் செய்கின்ற முகமண்டலங்களும்,—சேதக மறுக்கள் படை த்தன - சேற்றாலாகிய மறுக்களைப் பெற்றுக்கொண்டன,—கொண்ட பல் வளப் பெரியவர் தம்மொடும் - கொண்ட பலவளங்களையுடைய பெரியோர் களோடும்,—கொடியார் தண்டுகின்றலில் தவறலால் சார்வதும் உண்டே - கொடியோர் பகைத்தலினால் தீமையேயன்றி அடைவது பிறிதும் உண்டா? எ-று.

இது வேற்றுப்பொருள்வைப்பு. (உஉ)

துத்த மன்னசொல் லியர்புரி யோரொரு தொழிலின்
பைத்த செவ்வியிற் பொலிவன வான்மரம் பத்து
மத்தி றத்தன வையிரு தொழிலுமங் நாற்றுக்
கொத்த செவ்விகொண் டுய்வதற் கையமு முளவோ.

இ-ள். துத்தம் அன்ன சொல்லியர் புரி ஓர் ஒரு தொழிலின் - பால் போன்ற சொல்லையுடையவர்களாகிய மகளிர்கள்செய்கின்ற ஒவ்வொருதொழிலினாலே,—மரம் பத்தும் பைத்த செவ்வியில் பொலிவன - மரங்கள் பத்தும் பசிய அழகினோடு பொலிவடைகின்றன,—அத்திறத்தன ஐயிரு தொழிலும் அந்நாற்றுக்கு ஒத்த - அத்தன்மையவாகிய பத்துத்தொழிலும் அந்த நாற்றுக்கு ஒருசேரப் பொருந்தின.—செவ்விகொண்டு உய்வதற்கு ஐயமும் உளவோ - அங்ஙனமாக அந்நாறு அழகைக்கொண்டு தளிர்ப்பதற்குச் சந்தேகமுமுண்டோ. எ-று.

ஆல்-அசை. ஓகாரம் எதிர்மறைப்பொருளில் வந்தது. மகளிர்தொழில்களாற் பொலியும் மரங்கள் பத்தாவன: மகிழ், பாலை, பாதிரி, முல்லை, புன்னை, குரா, அசோகு, குருக்கத்தி, மா, சண்பகம் என்பன. தொழில்கள் சுவைத்தன் முதலியன. (உங)

புரங்க ளாறிய வுயிரெலா மயக்குவ போர்வே
ளுரங்கொள் வாளியே யாயினு மாங்கொளி ரிழையார்
கரங்க ளாய்வன களைகளங் கவன்முதல் கடையிற்
சரங்க ளாதலின் யாதினும் பெண்மையே சான்ற.

இ-ள். புரங்கள் ஆறிய உயிரெலாம் மயக்குவ - உடம்புகளிற்றங்கிய உயிர்களையெல்லாம் மயக்குவன,—போர் வேள் உரங்கொள் வாளியே யாயினும் - போரையுடைய மன்மதனது வலிமையைக்கொண்ட பாணங்களே யாயினும்,—ஆங்கு ஒளிர் இழையார் கரங்கள் ஆய்வன களைகள் அங்கவன் முதல் கடையிற் சரங்கள் - அங்கே விளங்குகின்ற ஆபரணங்களையுடையவர்களாகிய மகளிர் தங் கைகளாற் கொய்கின்றனவாகிய களைகள் அந்த மன்மதனது முதலிலும் கடையிலுமுள்ள பாணங்களே,—ஆதலின் யாதினும் பெண்மையே சான்ற - ஆதலினால் யாவற்றினும் பெண்டன்மையே மிக்கது. எ-று.

வாளியே என்பதில் ஏகாரம் தேற்றம். சரங்களே என்பதில் தேற்றேகாரம் தொக்குநின்றது. பெண்மையே என்பதில் ஏகாரம் பிரிநிலை. முதல்கடையிற் சரம் - தாமரையும் குவளையும். (உச)

இட்ட மெத்திய வெய்யவ ரிடுக்கண் வந்திறுத்தான்
முட்ட வத்தலைப் பகைவரா குவரென முன்னோர்
பட்டு ரைத்தன காட்டுமா பானுவாற் பரியுங்
கட்ட கட்டலைக் கொட்டைவான் சரோருகக் களையே.

இ-ள். மா பானுவால் பரியும் - பெரிய சூரியனால் வாடுகின்ற,—கட்ட கள் தலை கொட்டை வான் சரோருகக் களை - பிடுங்கப்பட்ட தேனைத் தன்னிடத்தேகொண்ட பொகுட்டினையுடைய தாமரைப்பூக்களாகிய களை

கள்.—இட்டம் மெத்திய வெய்யவர் - நட்பில் மிக்க வெய்யோர்,—இடுக்கண் வந்து இறுத்தால் அத்தலை முட்ட பகைவர் ஆகுவர் என - (நட்கப்பட்டாரிடத்து) ஒரு துன்பம் வந்து சேர்ந்தால் அப்பொழுதே முற்றப் பகைவராகுவாரென்று,—முன்னோர் பட்டு உரைத்தன காட்டும் - முன்னோர்கள் அனுபவித்துச் சொல்லிவைத்தவற்றை (ப்புலப்பட)க் காண்பிக்கும். எ-று.

என உரைத்தன என இயையும். வெய்யவர்-கொடியோர்; சூரியன். இது நிதரிசனம் என்னுமலங்காரம். (உரு)

கார்செ யுங்குழற் கடைசியர் கட்டபூங் காவி
தார்செ யுங்கழைத் தலைப்பொலி வனவவர் தம்மே
லேர்செ யுந்தகை யுருவிலி யுயிர்கொள விகல்வான்
போர்செ யும்படி படையெடுத் தெழுந்தன போலும்.

இ-ள். கார் செயும் குழல் கடைசியர் கட்ட பூங் காவி - மேகத்தினை ஒத்த கூந்தலையுடைய மருதநிலமகளிர் பிடுங்கியெறிந்த பொலிவாகிய கருங்குவளை மலர்கள்,—தார் செயும் கழைத் தலைப் பொலிவன - ஒழுங்கினையுடைய கரும்பினிடத்துப் பொலிவன.—அவர் தம்மேல் - அவர்கண்மீது,—ஏர் செயும் தகை உருவிலி - அழகைச்செய்யுந் தகைமையையுடைய மன்மதன்,—உயிர்கொள இகல் வான் போர் செயும்படி - அவர்களுயிரைக் கொள்ளும் பொருட்டு வலிய பெரிய போரைச் செய்யும்படி,—படை எடுத்து எழுந்தன போலும் - (அம்புதொடுத்துள்ள விற்) படையை எடுத்துக்கொண்டு எழுந்தமையைப் போலும். எ-று.

கொள விகாரம்; காரியப்பொருட்டு. கொள்ளச் செய்யும்படி என இயையும். ஏர் செயும் தகை உருவிலி என்பதற்கு அழகைச்செய்யுந் தகைமையையுடைய உருவம் இல்லாதவன் எனக் கூறினுமமையும். பொலிவன எழுந்தனபோலும் என முடிக்க. கார்செயுங்குழல் என்பதற்குக் கருமையைச்செய்யுங் கூந்தல் எனினும், படை என்பதற்கு அம்பும் வில்லுமாகிய படைகளை எனினும் பொருந்தும். (உசு)

நரப்பு நல்லிசை யளிமுர னளினமென் கழனிப்
பரப்புண் மெல்லிளங் கால்பட வசைசிய பைங்கூழ்
வரப்பு மாமணிச் சுற்றுடை மரகதப் பலகை
நிரப்பு மென்கதிர் நிரைநெறித் திலங்குவ நிகர்க்கும்.

இ-ள். நரம்பு நல் இசை அளி முரல் நளின மென் கழனிப் பரப்புள் - யாழின் நல்ல இசையை வண்டுகள் பாடுகின்ற தாமரைமலர்களை (வரம்பருகுகளிலே) யுடைய மெல்லிய வயற்பரப்பினுள்ளே,—மெல் இளம் கால் பட அசைசிய பைங்கூழ் - மெல்லிய இளங்காற்றானதுபட அசைகின்ற பயிர்

(விளங்குதல்);—வரம்பு மாமணி சுற்று உடை மரகதப் பலகை நிரப்பு மென் கதிர் - வரம்பாக மாணிக்கச்சுற்றையுடைய மரகதப்பலகை (தன்னுள்ளே) நிரப்பிய மெல்லிய கிரணங்கள்,—நிரை நெறித்து இலங்குவ நிகர்க்கும் - நிரையே தடித்து விளங்குதல்போலும். எ-று.

மாணிக்கச்சுற்றுத் தாமரைக்கு உவமை. இலங்குதல் என்பது அவாய் நிலையானே வருவிக்கப்பட்டது. இலங்குதல் நிகர்க்கும் என முடிக்க. பைங்கூழ் இலங்குவனவாகிய கதிரை நிகர்க்கும் எனினுமாம். சுற்று - சூழ்வு. (உஎ)

ஊன்கொ டுத்திடும் வேற்கணர்க் கொதுங்கிடு மாம்பல்
கான்கொ டுத்திடுங் குவளைநாட் கமலமூ விரண்டும்
வான்கொ டுத்திடு மன்னைய ரறுவரின் வழிபாற்
றேன்கொ டுத்திட முருகனின் வளர்ந்தன செந்நெல்.

இ-ள். ஊன் கொடுத்திடும் வேல் கணர்க்கு ஒதுங்கிடும் - (ஊடுருவப் பட்டார்க்கு) ஊனைச்செய்கின்ற வேல்போலுங் கண்களையுடையவர்களாகிய மகளிரது வாய்முதலிய உறுப்புக்களுக்கு (உடைந்து) ஒதுங்குகின்ற,— ஆம்பல் கான் கொடுத்திடும் குவளை நாள் கமலம் மூவிரண்டும் - செவ்வாம்பல்வெள்ளாம்பல்மலர்களும் வாசனையைச்செய்கின்ற செங்குவளை கருங்குவளை மலர்களும் செந்தாமரைவெண்டாமரைமலர்களுமாகிய ஆறும்,— வான் கொடுத்திடும் அன்னையர் அறுவரின் - ஆகாயந் தோற்றுவிக்கின்ற (கார்த்திகைநாண் மீன்களாகிய) தாயரறுவரைப்போல,—வழி தேன் பால் கொடுத்திட - வழிகின்ற தேனாகிய பாலைக் கொடுக்க,—செந்நெல் முருகனின் வளர்ந்தன - செந்நெற்பயிர்கள் குமாரக்கடவுளைப்போல வளர்ந்தன. எ-று.

மூவிரண்டுங் கொடுத்திட செந்நெல் வளர்ந்தன என்க. (உஅ)

தோன்று மப்பயிர் துகடப வெழுந்துசூன் முதிர்ந்திட்
டான்ற மாமர கதப்பொதி யவிழ்ந்தரும் வயிர
மீன்று நெட்டிலைத் தாடொறு மீர்ஞ்சுடர் முத்தங்
கான்று செப்பவ ளக்குலை காய்த்தன வன்றே.

இ-ள். தோன்றும் அப்பயிர் - காணப்படுகின்ற அப்பயிர்கள்,—துகள் தப எழுந்து - குற்றம்நீங்க வளர்ந்து,—சூல் முதிர்ந்திட்டு - கருமுதிர்ந்து,— ஆன்ற மா மரகதப் பொதி அவிழ்ந்து - நிறைந்த பெரிய மரகதம்போலும் பொதி அவிழப்பெற்று,—அரும் வயிரம் ஈன்று - அரிய வயிரம்போலும் (பால் பற்றாத) வெண்கதிர்களை ஈன்று,—நெடு இலை தாள் தொறு ஈர் சுடர் முத்தம் கான்று - நெடிய இலைகளையுடைய தாள்கடோறும் குளிர்ந்த ஒளியையுடைய முத்துப்போலும் (பால்பற்றிய) நெற்களைக் கான்று,—

செம்பவளக்குலை காய்த்தன - சிவந்த பவளம்போலும் நெற்குலைகளைக் காய்த்தன. எ-று.

குற்றம் - களை. தப என்பதைக் காய்த்த என்பதனோடு முடித்துத் துகள் என்பதற்கு ஈதிவாதைகளெனினுமாம். அவை, "மிக்கபெயலோடு பெயலின்மையெலிவிட்டில்கிளி - யக்கணரசண்மையோடாறு" என்பன. வயிரம், முத்தம், பவளம் என்பன ஆகுபெயர்கள். (௨௯)

கூறு வேழத்தி னரம்பையின் வளைந்தன குரல்க
ளூறு செய்திடத் தொடுத்தகூன் குயமொத்த வேனும்
பாறு நெட்டிலைப் பூகமேல் வீழ்ந்தன பழுக்காய்த்
தாறு வேறிடக் கொளீஇயன தோட்டியிற் றங்கும்.

இ-ள். கூறு வேழத்தின் அரம்பையின் வளைந்தன குரல்கள் - சொல்லப்படுகின்ற கரும்புகளிலும் வாழைகளிலும் போய் வளைந்தனவாகிய கதிர்களானவை,—ஊறு செய்திடத் தொடுத்த கூன் குயம் ஒத்தவேனும் - (அவற்றை) வெட்டும்படி தொடுத்த வளைந்த அரிவாளை ஒத்தனவாயினும்,—பாறு நெடு இலைப் பூகமேல் வீழ்ந்தன (குரல்கள்) - பாறிய நெடிய இலையையுடைய கமுகின்மீது போய் வீழ்ந்தனவாகிய கதிர்கள்,—பழுக்காய்த் தாறு வேறிடக் கொளீஇயன தோட்டியின் தங்கும் - பாக்குக்குலைகளைப் பிடுங்கும்படி கொளுவிய தோட்டியைப்போலவும் விளங்கும். எ-று.

குயம் அரியுமியல்பினையுடையது. தோட்டி பிடுங்குமியல்பினையுடையது. (௩௦)

தண்ணெ னீர்மையிற் றலைவளை தடங்கதிர் தழீஇய
வண்ண னீலத்தொ டரும்பவி ழாய்மலர்க் குமுதம்
வண்ண மாநில மடந்தைதன் மகமக வினைமைக்
கண்ணி னொற்றிவாய் முத்தமிட் டனவெனக் கவினும்.

இ-ள். தண்ணென் நீர்மையில் தலைவளை தடம் கதிர் தழீஇய - குளிர்ந்ததன்மையோடு தலையைவளைத்த பெரிய கதிர்கள்சென்று தழுவிய,—அண்ணல் நீலத்தொடு அரும்பு அவிழ் ஆய் குமுதம் மலர் - பெருமைபொருந்திய நீலமலர்களும் அரும்புகள் விரிந்த சிறந்த குமுதமலர்களும்,—வண்ண மா நிலமடந்தை - அழகிய பெருமைபொருந்திய பூமிதேவி,—தன் மக மகவினை மைக் கண்ணின் ஒற்றி வாய் முத்தமிட்டன எனக் கவினும் - தன்பிள்ளையின் பிள்ளையாகியகதிரை மையுண்ட கண்களாலொற்றி வாயினால் முத்தமிட்டாற்போல விளங்கும். எ-று.

மக - நெல். நீலம் கண்போலவும், குமுதம் வாய்போலவு மிருந்தன வென்க. ஒடு எண்ணுப்பொருட்டு. (௩௧)

அருப்ப மாகில வருங்கதி ரகம்புற மசைமீ
மருப்பெய் தாமரை மதுத்தொடாத் தூற்றுபு மறிவ
விருப்பொ டேயுழு தொழிலக மறக்கலை மேலோன்
தருப்பை நீர்நிலத் தையன்மேற் றெளித்தமை தகுமால்.

இ-ள். அருப்பம் ஆகில அரும் கதிர் அகம் புறம் அசை - மாப்பிடியாத அரிய கதிர்கள் அகத்தும் புறத்தும் அசைந்து,—மீ மருப் பெய் தாமரை மதுத் தொடாத் தூற்றுபு மறிவ - மேலாக வாசனையைக்காலுகின்ற தாமரையிலுள்ள தேனைத் தொட்டுத் தெளித்து அசைவன,—உழு தொழில் அகம் அற - உழுதொழிலால் வரும் பாவம் நீங்கும்படி,—கலைமேலோன் விருப்பொடு நிலத்தையல் மேல் தருப்பைநீர் தெளித்தமை தகும் - நூல்களை அறிந்த மேலோராகிய பிரமா விருப்பத்தோடு பூமிதேவியின்மேல் தருப்பையிற்றோய்த்த நீரைப் புரோட்சித்தயையை ஒக்கும். எ-று.

மறிவ தகும் என முடிக்க. அசைந்து என்னும் வினையெச்சம் அசை என ஈறுகெட்டுநின்றது. (௫௨)

நன்னெ டுங்கழைக் கூத்தர்வா தியன்றென நனிதீங்
கன்ன லந்தழைத் தலைச்சிறு குரீஇயினங் கலப்ப
பன்ன ருந்தர ளங்கடா ளுகச்செழும் பவளச்
செந்நெ லங்கதிர்த் தலைதழீஇ வீழ்வன சேல்கள்.

இ-ள். நல் நெடும் கழைக் கூத்தர் வாது இயன்றென - நல்ல நெடிய கழையினின்றுவிளையாடுகின்றகூத்தர்கள் வாதுசெய்து கூத்தாடினாற் போல,—நீம் கன்னல் அம் தழைத்தலை சிறு குரீஇயினம் நனி கலப்ப - இனிய கரும்பினது இலையின்தலையிலே சிறிய குருவிக்கூட்டம் மிகவும் சேர,—பன் அரும் தரளங்கள் தாள் உக - சொல்லுதற்கரிய முத்துக்கள் தாளினின்றுஞ் சொரிதலால்,—சேல்கள் செந்நெல் அம் கதிர் தலைதழீஇ வீழ்வன - சேன்மற்சங்கள் (எழுந்து) செந்நெற்களது அழகிய கதிரின் தலையைத் தழுவி வீழ்வன. எ-று.

சேல்கள் (எழுந்து) தழீஇ வீழ்வன என இயைக்க. எழுந்து என்பது அவாய்நிலையால் வருவிக்கப்பட்டது. கலப்ப தழீஇ வீழ்தல் வாதியன்று கூத்தாடுதல்போலிருந்ததென்க. (௫௩)

நிறைக்கு மொண்சுடர் நெருப்பெழச் சிவந்தன கண்ணி
னிறைக்க ரஞ்சிவப் பெய்திட வெப்பினீர்ங் குரலை
நறைக்க ளுண்டெழீஇ மள்ளரார் பிற்பதி னுலாம்
பிறைக்கொ டும்படை யாலரி கின்றனர் பெரிதும்.

இ-ள். மள்ளரார் - மள்ளர்கள்,—நறை கள் உண்டு எழீஇ - மணம்பொருந்திய கள்ளைக் குடித்து எழுந்து,—ஒண் சுடர் நிறைக்கும் நெருப்பு எழ

சிவந்தன கண்ணின் - ஒள்ளிய சுடர்களை நிறைவிக்கின்ற நெருப்பு எழச் சிவந்த கண்களைப்போல,—இறை கரம் சிவப்பெய்திட - இறைபொருந்திய கையும் சிவக்க,—ஈர் குரலை பிற் பதினுலாம்பிறைக் கொடும்படையால் வெய்தின் பெரிதும் அரிகின்றனர் - தண்ணிய நெற்கதிர்களை அபரபக்கச் சதுர்த்தசியிற்றோன்றிய பிறைபோன்ற வளைந்த அரிவாளினுல் மிகவும் அரிகின்றவர்களாயினுர்கள். எ-று.

கட்குடித்தலால் கண் சிவந்தன என்க. கண்ணிற் சிவப்பெய்திட அரிகின்றனர் என இயையும். (ருச)

காலில் வீழவும் கணத்தலை வணக்கவு நடுக்க
மேல வாகவும் விட்டிடா வெந்தொழில் விளைத்தார்
வாலி தாகவே வளர்த்தன வருமையு மறந்தார்
கோல மள்ளரிற் கொடுந்தொழிற் கொடியரு முளரோ.

இ-ள். காலில் வீழவும் - தங் காலின்மீது விழவும்,—கணத்தலை வணக்கவும் - கூட்டமாகிய தலைகளை வணக்கவும்,—நடுக்கம் மேலவாகவும் - நடுக்கத்தைத் தம்மீதுள்ளனவாகவும்,—விட்டிடா வெம்தொழில் விளைத்தார் - விடாமற் கொடுந்தொழிலைச் செய்தார்கள்,—வாலிதாக வளர்த்தன அருமையும் மறந்தார் - (அவற்றைத் தாம்) செவ்விதாக வளர்த்த அருமையையும் மறந்துவிட்டார்கள்,—கோல மள்ளரில் கொடும் தொழில் கொடியரும் உளரோ - அழகிய மள்ளர்களைப்போலக் கொடுந்தொழிலைச்செய்யும் கொடியாருமுண்டோ. எ-று.

ஓ - எதிர்மறை. வெந்தொழில் அரிதலையும் கொலையையுமுணர்த்திற்று. கீழ் வீழ்ந்தும், கதிர்வளைந்தும் அசைந்தும் நிற்றலை அடியில் வீழ்தலாகவும் தலை வணக்கலாகவும் நடுக்கமாகவும் கூறியது தற்குறிப்பு. தம்மை வணங்குதலையும், அஞ்சுதலையும், தாம் வளர்த்தமையையுங் கருதாது வெந்தொழில்விளைத்தமையின் இவரினும் மிகக் கொடியரில்லை என்பதாம்.

வேறு.

வன்மையர் மள்ளரே மாத ராருமத்
தன்மைய ரென்னிற்பெண் டன்மை யென்கொலாம்
பொன்மைய நூபுரம் புலம்பக் கைக்கொளீஇ
யென்மய மார்பணைத் தெடுத்தன் மேயினுர்.

இ-ள். வன்மையர் மள்ளரே - இரக்கமற்றவர் மள்ளர்களே,—மாதராரும் அத்தன்மையர் என்னின் பெண்டன்மை என் ஆம் - (அவர்) மகளிர்களும் அத்தன்மையராயின் அவர் பெண்டன்மை என்னவாகும்,—பொன்மைய நூபுரம் புலம்ப - பொன்னுலாகிய சிலம்பொலிக்க,—கைக்கொளீஇ எல்மய மார்பு அணைத்து எடுத்தன் மேயினுர் - (மள்ளர் அரிந்த நெற்களைக்) கைக்கொண்டு ஒளிவடிவாய மார்பொடணைத்துச் சுமப்பாராயினுர். எ-று.

ஏகாரம் பிரிநிலை. பெண்களிரக்கமுடையவராதலாற்றான் மள்ளர்கள் அரிந்த நெற்கதிர்களாகிய பிள்ளைகளைத் தூக்கி மார்போடணைத்துச் செல்கின்றனரென்பதாம். புல்ம்பக்கைக்கொளீஇஎடுத்தன்மேயினுர் என்றது அவர்கள் நெற்கதிர்களாகியபிள்ளைகளை அரிந்ததைக் கண்டபொழுதே புலம்பித் தூக்கிச் சென்றனரென்பதைக் குறித்துநின்றது. (௫௬)

இருந்தகை மள்ளராங் கவற்றை யேன்றுபோர்ப்
பெருங்கிரி செய்தனர் பிறங்கு மம்மலை
கரும்பக டுழக்குமுன் வெளிய காரெனு
மரும்பக டுழக்குத லருத நீரவே.

இ-ள். அவற்றை - (மகளிர் சுமந்து வந்த) அந்நெல்லரிகளை,—இருந்தகை மள்ளர் ஏன்று போர்ப் பெருங்கிரி செய்தனர் - பெருந்தகைமையினையுடையமள்ளர்கள் முயன்று பெரியபோர்மலையாகச்செய்தார்கள்,—பிறங்கும் அம் மலை - விளங்குகின்ற அப் போர்மலையானது,—கரும் பகடு உழக்கு முன் - கரிய எருமைக்கடாக்கள் உழக்குதற்கு முன்னரே,—வெளிய கார் எனும் அரும் பகடு உழக்குதல் அருத நீர - வெண்மையாகிய மேகமென்னும் அரிய எருமைக்கடாக்கள் உழக்குதல்நீங்காததன்மையையுடையனவாயின. எ-று.

நீர குறிப்பு வினைமுற்று. ஆக்கம் தொக்குவந்தது. (௫எ)

வழக்குறு பலன்றவம் வருந்திச் செய்துளோ
னிழக்கவே தண்டியா வெறுழிற் கொள்வபோற்
பழக்கதிர் வறிதுறப் பரிய வான்பகட்
டுழக்கியங் கப்பய னொருகொண் டாரரோ.

இ-ள். தவம் வருந்திச் செய்துளோன் இழக்க - தவத்தைவருந்திச் செய்தோன் இழக்கும்படி,—வழங்குறு பலன் - (அவனுக்குக்) கொடுக்கப்பட்ட பயனை,—தண்டியா எறுழில் கொள்வபோல் - தண்டித்து வலிதாகக் கவர்வதுபோல,—அங்கு பழக் கதிர் வறிதுறப் பரிய வான் பகடு உழக்கி - அங்கே முற்றிய கதிர் வறிதாகும்படி பருத்த பெரிய எருமைக்கடாக்களால் உழக்குவித்து,—அப் பயன் ஒரு கொண்டார் - அதன்கணுள்ள (நெல்லாகிய) பயனைக் குறைவின்றிக் கொண்டார்கள். எ-று.

வழக்கு - விகாரம். தவம் வருந்திச் செய்துளோன் - நெற்கதிர். (௫அ)

கழியமா விளைபலன் மற்றுங் கைக்கொளன்
மொழியவாந் தகையதோ முயன்ற வப்பல
னொழிவுறு கொண்டுபல் சகட மூர்தரும்
வழியலால் வழியெலா மற்றொன் றில்லையே.

இ-ள். கழிய விளை மா பலன் மற்றும் கைக் கொளல் மொழிய ஆம் தகையதோ - மிகவும் விளைந்த பெரிய பயன்கள் பிறவற்றையும் கைக்கொள்ளுதல் சொல்லற்கியைந்த தன்மையதோ,—முயன்ற அப் பலன் ஒழிவுறு கொண்டு - (மள்ளர்கள்) முயன்றுசெய்த அப்பயன்களையெல்லாம் முற்றக் கொண்டு,—பல் சகடம் ஊர்தரும் வழியலால் - பல பண்டிகள் ஊருகின்ற வழிகளாயிருந்தனவேயல்லாமல்,—வழியெல்லாம் மற்றொன்று இல்லை - வழிகளெல்லாம் வேறொன்றுசெல்லும் வழிகளாயிருக்கவில்லை. எ-று.

ஓ-எதிர்மறை. பிற என்றது முதிரைமுதலியனவற்றை. (௩௯)

ஈட்டகன் சரோருக ராக வெய்யிலான்
மீட்டகன் றிடமனம் விடாத செய்யெலாம்
வேட்டக மதிப்பதவ் விளைவின் றென்றுதண்
கோட்டகம் பரிதியங் குடிங்கு கூடுமே.

இ-ள். ஈடு அகல் சரோருக ராக வெய்யிலால் - பெருமையினையுடைய அகன்ற பதுமராகமணியின் வெய்யிலினால்,—மீட்டு அகன்றிட மனம் விடாத செய்யெலாம் - மீண்டு செல்லுதற்கு மனத்தைவிடாத வயலினிடமெல்லாம்,—வேட்டு அகம் மதிப்பது அவ்விளைவு இன்றென்று - விரும்பி மனத்தில் மதிப்பதாகிய அவ்விளைவுகளில்லையென்று,—பரிதி அம் குடிங்கு தண் கோட்டகம் கூடும் - சக்கரவாகம் தண்ணிய கோட்டகத்தை அடையும். எ-று.

கோட்டகம் - பயிருடைத்தான நீர்நிலை. சக்கரவாகங்களின் புணர்ச்சிக்குரிய பகற்காலத்தைப் பதுமராகவெய்யிலாற் காட்டிச் செல்லவிடாது அவற்றின் மனதைப் பிணித்துக்கொண்ட வயல் என்பார் ஈட்டகன்......... விடாத செய்யென்றார். புணர்ச்சிக்குரியவிடமாயினும் உணவைப் பெறுதற்குரியவிடமன்மையின் விட்டுநீங்குமென்பதாம். கோட்டகங்கூடுமென்பதற்கு கோட்டகத்திலே புணரும் எனப் பொருள்கொண்டு அதற்கேற்ப அகம்மதிப்பதவ்விளைவின்று என்பதற்கு பகலில்லையென மனத்தின்மதிப்பதாகிய அந்நிகழ்ச்சி எமக்கு இல்லையென்று எனப் பொருள்கூறுவாருமுளர். (௪0)

கத்தியா டளித்தொகை களியின் கட்களாற்
பத்தியா னவமெனப் பண்ணைவிட் டெழா
நத்தியா னஞ்செய முதலி ஞண்மல
ருத்தியா னத்துமொ ருததி காட்டுமால்.

இ-ள். கத்தி ஆடு அளித்தொகை - ஒலித்துச் சுழல்கின்ற வண்டுக்கூட்டங்கள்,—நத்து நவம் எனப் பண்ணை விட்டு எழா பத்தியால் யானம்

செய - சங்குகள் புதிதானவொருகடல் என்று கருதி வயலைவிட்டெழுந்து வரிசையோடு செல்லும்படி,—முதலின் - முதன்மையோடு,—களி இன் கட்களால் - களிப்பைத்தரும் இனிய தேன்களால்,—நாள் மலர் உத்தியானத்தும் ஓர் உததி காட்டும் - புதிய மலர்களையுடைய சோலையின்கண்ணும் ஒரு கடலைக் காண்பிக்கும். எ-று.

அளித்தொகை காட்டும், கட்களால் காட்டும், யானஞ்செயக்காட்டும் எனத் தனித்தனி கூட்டுக. வண்டுகள் உழக்கலாற் சொரிகின்ற தேன் சோலையிற் கடல்போல நிற்றலின், அதனை ஒரு கடல் என்று கருதி அதனிடத்தே சங்குகள் வயலைவிட்டுச் சென்றன என்பது கருத்து. இனி இதற்கு சங்குகள் புதிய தேனென்று அதன்கணுசையினுல் செல்ல கத்தி ஆடுகின்ற வண்டுகள் கட்களால் ஓர் உததிகாட்டும் எனப் பொருள்கூறினும் அமையும். இப்பொருட்கு ஒலியும் தேனும் சங்கும் கூடிக் கடலைக் காட்டும் என்பது கருத்தாகக் கொள்க. (சக)

நாட்டக விலந்தைய நார மீதெலாஞ்
சேட்டளி மாயையஞ் சேடி கொண்டுறீஇ
யீட்டுக மயிற்றடங் குழற்க ணீண்டலர்
சூட்டுவ வெனச்சினைச் செம்ம றாற்றுமால்.

இ-ள். மாயை சேடி - அன்பினையுடைய தோழியானவள்,—கொண்டு உறீஇ - கொண்டுவந்து,—ஈடு உகமயில் தடம் குழற்கண் ஈண்டு அலர் சூட்டுவ என - பெருமைபொருந்திய பூமிதேவியினது பெரிய கூந்தலின் கண்ணே மிக்க மலர்களைச் சூட்டுதல் போல,—சேடு அளி - பெருமைபொருந்திய வண்டுகள்,—சினைச் செம்மல் - கொம்பர்களிலுள்ள பழம்பூக்களை,—நாடு அக இலந்தைய நாரமீதெலாம் தூற்றும் - மருதநிலத்தின்கணுள்ள குளங்களிலுள்ள பாசிகளின்மீதெல்லாம் சொரிவன. எ-று.

அம் - சாரியை. உகமயில் - பூமியாகிய பெண். நாரம் - பாசி. (சஉ)

நான்றுவார் மதுச்சொரி தருநன் காவெலா
மீன்றவாய் தழீஇமக விரங்கல் போலொலி
யான்றவா ரணத்துவா யடைப்ப வம்புலி
யூன்றுகோ டுழநெகா வுடையி றுலரோ.

இ-ள். நான்று வார் மது சொரிதரும் நன் கா எலாம் - தாங்கிவடிகின்ற தேனைச் சொரியும் நல்ல சோலைகளிலெல்லாம்,—ஈன்ற ஆய் தழீஇ மகவு இரங்கல்போல் ஒலி ஆன்ற வாரணத்து வாய் - பெற்றதாயைத் தழுவிப் பிள்ளையழுதல்போல ஒலியை நிறைவித்த சங்கின் வாயை,—அம்புலி ஊன்று கோடு உழ நெகா உடை இறுல் - சந்திரனது ஊன்றிய கோடானது கீறுதலினுல் நெகிழ்ந்து உடைந்த தேனிறுல்கள்,—அடைப்ப - (தம்மிடத்தினின்று சொரியுந் தேனுல்) அடைத்துவிடுவன. எ-று.

தாயைத் தழுவி அழும்பிள்ளையைத் தாய் பாலைக் கொடுத்து அதனழுகையை மாற்றுதல்போல, சோலையின்கண் இருந்து ஒலிக்கும் சங்கினொலியை அச்சோலையிலுள்ள தேனிறால் தேனைச்சொரிந்து மாற்றும் என்பதாம். சங்கு பிள்ளை. சோலை தாய். (சங)

அன்னனி கடத்துயி ரடுநர் கட்சிய
மின்னகு விளக்கென வுயிர்கண் மேல்விழ
பன்னக மணிகளா லசைபைங் கூட்டிடு
கின்னக விளக்கமெத் திசையுங் கீறுமே.

இ-ள். அல் கடத்து உயிர் நளி அடுநர் கட்சிய மின்நகு விளக்கென - இருளிலே காட்டின்கண் உயிர்களை மிகவும் கொல்வோர் (ஏற்றிய) கூட்டின்கணுள்ள ஒளிவிளங்குகின்ற விளக்கிற்போல,—உயிர்கள் மேல் விழ - சீவராசிகள் தன்மீது வந்துவிழ,—பன்னக மணிகளால் அசை பைங் கூடு இடு கின்னக விளக்கம் எத்திசையும் கீறும் - நாகரத்தினங்களால் அசைகின்ற பசிய கூட்டின்கணேற்றிய தூக்கணங்குருவியின் விளக்கு எத்திசையிலுள்ள இருளையுந் (தன்னொளியாற்) கிழிக்கும். எ-று.

விழ கீறும் எனவும், இடுவிளக்கு எனவு மியைக்க. வேட்டையாடுவோர் காட்டிலேயுள்ள முயல்களைப் பிடிக்கும்படி ஆழமான ஒரு குழி தோண்டி அதன்கண் ஒரு தம்பத்தை நாட்டி அதன் நுனியிலே பலதுவாரங்கள் செய்யப்பட்ட ஒரு குடத்தை வைத்து அதன்கண் ஒரு தீபத்தை ஏற்றிவைக்க; அத்தீபவொளியைத் துவாரங்களின்வழியாகக் காட்டிலுள்ள முயல்கள் கண்டு தாமுண்ணுதற்கேற்ற மின்மினிக்கூட்டமென்று கருதி அங்குவந்து அக்குடத்தின்மேற் பாய்ந்து கீழுள்ள குழியில்விழ; அவற்றை அவர்கள் அகப்படுத்தும் வழக்கு நோக்கி அன்னனிகடத்துயிரடுநர்கட்சியமின்னகுவிளக்கெனவுயிர்கண்மேல்விழ என்றார். குடம் கூடுபோன்றிருத்தலிற் கட்சி எனப்பட்டது. இனிக் கடத்து என்பதிலுள்ள அத்தைச் சாரியையாக்கிக் கட்சியோடு கூட்டிக் கடமாகிய கட்சி என்றும், மின்னகு விளக்கு என்பதற்கு மின்மினிபோல விளங்குகின்ற விளக்கு என்றும் பொருள் கூறுவாருமுளர். அவர் கடம் குடமென்றும், மின்மினி என்பது கடைகுறைந்து மின் என நின்றது என்றுங் கொள்வர். (சச)

வேறு.

ஈர்ந்த நுண்பாளை வாய்நின் றிழிதுளி யிணர்த்தா ரேறி
வார்ந்துகே டறந்து நெக்க வான்கனி மயங்கிச் சால்பு
பேர்ந்துதே னருவி யூலிற் பிறந்துபேர் மறந்த வென்று
னேர்ந்தவா றின்ன தென்று நிறுப்பரி தெவர்க்கு மாதோ.

இ-ள். ஈர்ந்த நுண் பாளை வாய் நின்று இழி துளி - அரிந்த நுண்ணிய பாளையினிடத்தினின்றும் சொரிகின்ற கட்டுளிகள்,—இணர் தார்

ஏறி வார்ந்து சேள் துறந்து - சொத்தின்கணுள்ள பூவினிடத்து ஏறி வடிந்து நிறம் வேறுபட்டு,—நெக்க வான்கனி மயங்கி சால்பு பேர்ந்து - நெகிழ்ந்த பெரிய பழச்சாற்ரோடு கலந்து குணம் வேறுபட்டு,—தேன் அறா இறாவில் பிறந்து பேர் மறந்த என்றால் - தேன் நீங்காத இறாலின்கண்ணே தோன்றிப் பேர் மறக்கப்பட்டனவென்றால்,—நேர்ந்த ஆறு இன்னது என்று எவர்க்கும் நிறுப்பரிது - அடைந்தவழி இன்னதென்று எவராலும் நிறுத்துச் சொல்லுதல் கூடாது. எ-று.

கள்ளு சார்பால் பேர்மாறி வேறுபட்டது. ஆகையால் கீழோர் மேலோராவர் என்பதாம். கீழாந்தன்மையையுடைய ஒருவருக்கு மேன்மை வருங்காலத்து யாதோ ஒருவழியாய் வந்துசேரும்; அது வந்தவழியை இவ்வழி என்று நிறுத்துச்சொல்லுதல் ஒருவர்க்குங் கூடாது என்பார் நேர்ந்தவாறின்னதென்றுநிறுப்பரிதெவர்க்கும் என்றார். இது வேற்றுப் பொருள்வைப்பு. (சஙி)

பச்சடைப் பதுமத் தாதி பாங்குறப் பாய்காற் பாணி
நிச்சய மருத்துச் செய்ய நீலங்க ணோக்கி நெக்க
வச்சில தேரை வாய்விட் டரற்றமெல் லணையி னாய
கச்சப வெரிந்மீ தேறிக் கம்புசூல் கழிக்கு மாதோ.

இ-ள். கம்பு - சங்கு,—பசு அடை பதுமத் தாதி பாங்கு உற - பசிய இலைகளையுடைய தாமரைமலராகிய தாதி பக்கத்திற்பொருந்த,—பாய் கால் பாணி நிச்சயம் மருத்துச் செய்ய - பாய்கின்ற கால்வாயிலுள்ள நீர் உண்மையாக மருத்துவஞ்செய்ய,—நீலம் கண் நோக்கி நெக - நீலங்கள் பார்த்து மனம் நெகிழ,—அ சில தேரை வாய்விட்டு அரற்ற - அங்குள்ள சில தேரைகள் வாய்விட்டுப் புலம்ப,—மெல்லணையின் ஆய கச்சப வெரிந் மீது ஏறி சூல் கழிக்கும் - மெல்லிய அணைபோலக் கிடக்கின்ற ஆமையின் முதுகின் மேல் ஏறிக் கருவை ஈனும். எ-று.

கருப்பவதியானவள் களைப்புவந்தகாலத்திற் றன்னைத் தாங்கும் தாதி பக்கத்திற் பொருந்தவும், மருத்துச்செய்வாள் மருத்துச் செய்யவும், தான் படும் வருத்தநோக்கிச் சிலபெண்கள் மனநெகிழவும், சிலபெண்கள் புலம்பவும் அணையின்மேலேறிக் கருவை யீனுவளாதலின் அவ்வியல்பினைச் சங்கின்மேலேற்றி இங்ஙனம் கூறினார் என்க. (சரு)

புடைப்படு சுரிசங் கொவ்வாக் களத்தியர் நகைதம் பொற்பிற்
படைப்படு நாணந் தீர்ப்பான் பஞ்சின்மெல் லடியிற் றாக்கித்
தடைப்பட வொளித்த வன்ன தகைத்தரோ மேதித் தாளிற்
கிடைப்படு சேற்றா லாற்றிற் கீழ்ப்படு தரள மன்னோ.

இ-ள். மேதித் தாளில் கிடைப்படு சேற்றால் ஆற்றின் கீழ்ப்படு தரளம் - எருமைகளின் றாளிற்கிடத்தலைக்கொண்ட சேற்றினால் வழியிலே

கீழ்ப்பட்டு மறைந்த முத்துக்கள்,—புடைப்படு சுரிசங்கு ஒவ்வாக் களத்தியர் நகை தம் பொற்பின் படைப்படு நாணந் தீர்ப்பான் - பருத்த சுரித்த சங்கு நிகராகாத கழுத்தினையுடைய மகளிர்களது பற்களின் அழகினாலே பெற்றுக்கொள்ளப்பட்ட நாணத்தைத் தீர்க்குமாறு,—பஞ்சின் மெல் அடியில் தாக்கி தடைப்பட ஒளித்த அன்ன தகைத்து - பஞ்சூட்டிய மெல்லிய அடியிலே உறுத்தித் தடைப்படும்படிசெய்ய ஒளித்திருந்தாற்போன்ற தகைமையினையுடையது. எ-று.

தாளம் தகைத்து என இயையும். செய்ய என்பது அவாய்நிலையானே வருவிக்கப்பட்டது. படைப்படு என்பதற்கு உண்டான எனப் பொருள் கூறினுமமையும். (சஎ)

மாதரார் ஞெகிழி யோதை யினமென மரீஇயம் மாண்பி
னுதகா வென்ன வன்ன மயல்செல வளகம் மாடே
மேதகா வெறுப்ப வேட்ப வாயின விளைய மின்னார்
பாதசா லத்த மென்கா னடைதொடர் பரிசின் மாதோ.

இ-ள். மாதரார் ஞெகிழி ஓதை இனம் என மரீஇ - பெண்களது சிலம்புகளினோசையை இனமென்று கருதிச் சென்று,—அவ் மாண்பின் ஆ தகா என்ன அன்னம் அயல் செல - அவற்றின்குணத்தினால் ஆ இது தகாது என்று அன்னம் பக்கத்தே செல்ல,—அளகு அவ் மாடே மேதகா வெறுப்ப - பெடை அவற்றின்பக்கத்தே மேவாது வெறுப்பனவும்,—இளைய மின்னார் பாதசாலத்த மென் கால் நடை தொடர் பரிசின் வேட்ப ஆயின - இளைய மகளிரது பாதசாலமணிந்த மெல்லிய காலின் நடையைத் தொடர்ந்ததன்மையினால் விரும்புவனவுமாயின. எ-று.

வேற்றுப்பெடையை விரும்பிச் சென்றதென்று கருதி வெறுப்பும், கால் நடைக்குத் தோலாது தொடர்ந்து சென்றதன்மையினால் விருப்புமுளவாயின என்பது கருத்து. தொடர்பரிசின் என்பதற்கு தொடர்ந்து போனது (என்று கருதுந்) தன்மையினால் எனப் பொருள்கூறி அதனை விரும்புதற்கு ஏதுவாக்குவாருமுளர். வெறுப்பன விரும்புவனவாயின எனினுமாம். (சஅ)

காதியங் கிணைக்கட் செவ்வாய்க் கடைசியர் காம ரம்ம
வோதிமங் களிற்செஞ் சாந்த வளறுபா ரொன்ற வோடித்
தீதின்மென் சிவிறி நீர்மேற் சிந்துபு திரித லாலே
மேதியங் குழிவா யன்றி வெள்ளிடைப் படுக்கு மன்னோ.

இ-ள். காது இயங்கு இணைக்கண் செம் வாய்க் கடைசியர் - காதுவரையும் செல்லுகின்ற இருகண்களையும் சிவந்த வாயையுமுடைய மருதநிலமகளிர்,—காமர் அம்ம ஓதிமங்களில் செஞ் சாந்த அளறு பார் ஒன்ற ஓடி - அழகிய தனமலைகளில் அணிந்த செம்மையாகிய சந்தனக்குழம்பு பூமியிலே

விழும்படி ஓடி,—தீதில் மென் சிவிறிநீர் மேல் சிந்துபு திரிதலால் - குற்றமில்லாத மெல்லிய சிவிறிநீரை ஒருவர்மேல் ஒருவர் வீசித் திரிதலால்,—மேதி - எருமைகள்,—அம் குழிவாய் அன்றி வெள்ளிடைப் படுக்கும் - நீர்க்குழிகளிலே அல்லாமல் வெளியிடங்களிலும் படுக்கும். எ-று.

சேறும் நீருங் கலந்து நீர்க்குழிபோற் கிடத்தலால் வெள்ளிடையிலும் படுக்கும் என்க. (சுக)

கணிப்புது மலர்ச்செஞ் சூட்டு நுதற்குறக் கன்னி மாதர்
மணிக்கருங் கதுப்பிற் காந்தட் பிங்குசம் வழுவ வாசத்
திணித்துணைக் கொம்மை யம்ம மசைவுறச் சிகண்டி யோடு
தணிப்பில தூங்க லோசை தழைப்பன சார லெங்கும்.

இ-ள். கணி புது மலர் செம் சூட்டு நுதல் குறக் கன்னி மாதர் - வேங்கையினது புதிய மலராகிய சிவந்த சூட்டையணிந்த நுதலையுடைய வேட்டுவக் கன்னிப்பெண்கள்,—மணி கரும் கதுப்பில் காந்தள் பிங்குசம் வழுவ-நீலமணிபோலும் கரிய கூந்தலினின்றும் காந்தண்மலராகிய பின்குச்சம் வழுவவும்,—வாசத் திணித்துணைக் கொம்மை அம்மம் அசைவுற - வாசனையைக் கொண்ட திணிந்த இரண்டாகிய திரண்ட முலைகள் அசையவும்,—சிகண்டியோடு தணிப்பில தூங்கல் ஓசை சாரல் எங்கும் தழைப்பன - மயிலோடு நீங்காத ஆடலைச்செய்தற்கணுண்டான ஓசையானது மலைச்சாரலெங்கும் தழைப்பன. எ-று.

தூங்கல் என்பது தூங்கலைச்செய்தல் எனத் தன் தொழிலை நிகழ்த்து தன்மேல் நின்றது. வழுவவும் அசையவும் தூங்கலைச்செய்தற்கணுண்டான ஓசை என்க. இதுமுதல் மூன்றுசெய்யுளாற் குறிஞ்சிநிலங் கூறுகின்றார்.()

குலமணி வாரிச் செம்பொற் குழிதொட்டு மூலங் கொள்ளும்
வலனுயர் வரிவிற் காமர் மகிழ்நர்த மலர்க்கை சேப்ப
விலவிதழ்க் கொடிச்சி நல்லா ரிருங்கணீர் கழூஉந லின்ப
நலனுறு நகிலச் சாந்தத் தப்புநன் னலத்த தன்றே.

இ-ள். செம்பொன் குழி தொட்டு குலமணி வாரி மூலம் கொள்ளும் - சிவந்த பொற்குழிகளைத் தோண்டி அவற்றிலுள்ள இரத்தினங்களை வாரிக் கிழங்குகளை எடுக்கும்,—வலன் உயர் வரிவில் காமர் மகிழ்நர்தம் மலர் கை சேப்ப - வெற்றியாலுயர்ந்த வரிந்த வில்லையேந்திய அழகிய நாயகரது மலர்போலுங் கை சிவப்படைய,—இலவு இதழ் கொடிச்சி நல்லார் இரும் கணீர் கழூஉ - இலவமலர்போலும் இதழையுடைய வேட்டுவமகளிர் மிக்க கண்ணீரால் அக்கையைக் கழுவி,—நல் இன்ப நலன் உறு நகிலச்சாந்தத்து அப்பும் நன் நலத்தது - நல்ல இன்பமாகிய நலத்தைப்பொருந்திய முலையின்கணணிந்த சாந்தினை லப்புகின்ற நல்ல நன்மையையுடையது. எ-று.

நன்மை - உபகாரம். சிவப்ப கழூஉ அப்பும் நலத்தது என வினை முடிபுசெய்க. குழிதோண்டும்பொழுது இரத்தினங்கள் வெளிப்பட அவற்றையும் கிழங்கோடு கொள்வார் என்பார் குலமணிவாரிச்செம்பொற்குழி தொட்டுமூலங்கொள்ளும் என்றார். பொருட்கிசைய மாற்றியுரைக்கப்பட்டது. "வள்ளிகொள்பவர்தொள்வனமாமணி" என்றார் பிறரும். வாரி- அள்ளி. இனி வாரி எறிந்துவிட்டு எனப் பொருள் கூறுவாருமுளர். நலத்தது என்னும் வினைமுற்றிற்கு எழுவாய் குறிஞ்சி. (ருக)

திருமணிவயிரத் தோட்டுச்செழுங்குழை மடவார்கொங்கைப்
பெருமணி கவர்ந்த தென்னப் பிறங்குதிண் கரிக்க டாத்த
வருமணி யலங்க றாங்க வழிவில வருவி யந்தண்
குருமணி வயிர மாலை கொள்வது குறிஞ்சி யன்றே.

இ-ள். குறிஞ்சி - குறிஞ்சிநிலமானது,—திரு வயிரமணி தோட்டுச் செழும் குழை மடவார் கொங்கைப் பெரும் அணி கவர்ந்தது என்ன - அழகிய வயிரமணிகளாற்செய்த தோட்டினையணிந்த செழிய காதினையுடைய பெண்களது தனங்களின் பெரிய அழகைக் கவர்ந்ததென்று சொல்லும்படி.— பிறங்கு திண் கரி கடாத்த அருமணி அலங்கல் தூங்க - விளங்குகின்ற திண்ணிய யானைகளது மதமாகிய அரிய நீலமணிமாலை தூங்க,—அழிவு இல அருவி அந்தண் குருமணி வயிரமாலை கொள்வது - அழிவில்லாத அருவியாகிய அழகிய குளிர்ந்த ஒளிபொருந்திய வயிரமணிமாலையைக் கொள்வது. எ-று.

என்னக் கொள்வது எனவும் தூங்கக்கொள்வது எனவும் தனித்தனி முடிக்க. தூங்கக் கொள்வது கவர்ந்ததுபோலிருந்தது என்க. மலை முலைக்குவமையாதலின் இங்ஙனம் கூறினர். அத்து அ என்பன அல்வழிக் கண்வந்த சாரியை. "உற்பலத்தகண்" என்புழிப்போல. (குறைகூறு- உரு-ம் செய்.) (ருஉ)

சித்தமுண் காமத் தீயாற் கொப்புளம் பொடித்த சீர்போற்
குத்திர முலைமேற் றுள்ளி கொள்ளவாய்ச் சியர்கன் றேங்கக்
கைத்தலைப் பாச மீர்க்க மறுகுவ காசி றாழி
மத்தெறி தயிரோ வற்றே யாடவர் மனமு மாதோ.

இ-ள். சித்தம் உண் காமத் தீயால் கொப்புளம் பொடித்த சீர்போல் குத்திர முலைமேல் துள்ளிகொள்ள - மனத்தைக்கவர்ந்த காமாக்கினியினாற் கொப்புளம் உண்டானதன்மையைப்போல மலைபோலும் முலையின்மேல் துள்ளிகள் தெறிக்கவும்,—கன்று ஏங்க - வளையல் ஒலிக்கவும்,—ஆய்ச்சியர் கைத்தலப் பாசம் ஈர்க்க மறுகுவ - இடைச்சியர்களது கைத்தலப்பாசம் இழுக்கச் சுழல்வன,—காசில் தாழி மத்து எறி தயிரோ - குற்றமில்லாத கலசத்தின்கணுள்ள மத்தாற் கலக்கப்படுகின்ற தயிர்மாத்திரமா,—ஆடவர் மனமும் அற்று - ஆடவர்களுடைய மனமும் அத்தன்மைத்து. எ-று.

கொள்ளவும் ஏங்கவும் ஈர்க்கவும் மறுகுவ எனமுடிக்க. கைத்தலப்பாசம் என்பது கையின்கணுள்ள கயிறு எனவும், கைமேல் வைத்த அன்பு எனவும் இருபொருள்படநின்றது. இதுமுதல் இரண்டுசெய்யுள்களான் முல்லைநிலங் கூறுகின்றார். (௫௩)

இளைத்தநூன் மருங்குற் செவ்வா யிடைச்சிய ரிருக்கையாரத்
தளைத்தவான் கன்று கூய சேயொலித் தமரந் தாழக்
கிளைத்தகோ வலர்முல் லைத்தார் கிண்டுவண் டுபாங்கங் கூடத்
துளைத்தவேய்ங்குழற்சாதாரிதொம்மெனத்தொனிக்குமன்றே

இ-ள். இளைத்த நூல் மருங்குல் செவ்வாய் இடைச்சியர் - துவண்ட நூல்போன்ற இடையையும் சிவந்த வாயையுமுடைய இடைச்சியர்கள்,— இருக்கை ஆரத் தளைத்த ஆன் கன்று கூய சேய் ஒலித் தமரம் தாழ - தம் மிருப்பிடங்களிற் பொருந்தக் கட்டிய பசுக்கன்றைக் கூப்பிட்ட பேரொலி தாழும்படி,—கிளைத்த கோவலர் முல்லைத்தார் கிண்டு வண்டு உபாங்கம் கூட - கூட்டமான இடையர்களது முல்லைமாலைகளைக் கிண்டுகின்ற வண்டுகள் பக்கவாத்தியங்களாகப்பொருந்த,—துளைத்த வேய்ங்குழல் சாதாரி தொம்மெனத் தொனிக்கும் - துளைக்கப்பட்ட வேய்ங்குழலிலூதப்பட்ட சாதாரிப்பண் தொம்மென்றொலிக்கும். எ-று.

தாழத் தொனிக்கும் என்க. உபாங்கம் - பக்கவாத்தியம். (௫௪)

பாட்டளி மந்த வோசை செவ்வழிப் பண்ணிற் பாட
மீட்டளத் தியர்க டாரம் பாடுப விளரி வேண்டார்
மாட்டரும் புன்னை செவ்வி மணநறுந் தாதிற் செம்பொன்
காட்டிட வெள்ளி வெண்டோ டெடுப்பன காயற் கைதை.

இ-ள். பாட்டு அளி மந்த ஓசை செவ்வழிப்பண்ணில் பாட - பாட்டினையுடைய வண்டுகள் மந்த இசையைச் செவ்வழிப்பண்ணாற் பாட,—அளத்தியர்கள் விளரி வேண்டார் மீட்டுத் தாரம் பாடுப - நெய்தனிலமகளிர் விளரிப்பண்ணை விரும்பாராய் மீள உச்சவிசையைப் பாடுவார்கள்,—மாடு அரும் புன்னை செவ்வி மண நறும் தாதில் செம்பொன் காட்டிட - (பரிசேந்துவாரில்) பக்கத்திலுள்ள அரிய புன்னைகள் அழகிய வாசனைபொருந்திய நல்ல பூந்தாதினாற் செம்பொன்னைக் காண்பிக்க,—காயல் கைதை வெண்தோடு வெள்ளி எடுப்பன - கழிக்கரைகளிலுள்ள தாழைகள் வெள்ளிய பூவிதழாகிய வெள்ளியைத் தாங்குவன. எ-று.

மீட்டு என்பதற்கு (அவ்வோசையைத்) திருப்பி எனப் பொருள்கூறுவாருமுளர். இதுமுதல் இரண்டுசெய்யுள்களால் நெய்தனிலங் கூறுகின்றார்.

மலையன ககன வேலி வைப்பன மருத மாவின் [மோ
றலையன பொருள்க ளெல்லாந் திசைத்திசைத் தழுவித் தம்

டலையன பஃறி போத வளித்தலி னவைகொண் டாசை
நிலையன விலைமின் னாரி னிறைவளஞ் சுரக்கு நெய்தல்.

இ-ள். அலையன பஃறி - கடலிலுள்ள தோணிகள்,—மலையன சுரன வேலிவைப்பன மருதமாவின் றலையன பொருள்களெல்லாந் திசை திசை தழுவி,—குறிஞ்சியின்கணுள்ளனவும் முல்லையினிடத்துள்ளனவும் மருதநிலத்தினிடத்துள்ளனவுமாகிய பொருள்களெல்லாவற்றையும் திசைகடோறுஞ்சென்று ஏற்றி,—தம்மோடு போத அளித்தலின் - தம்மிடத்து மிகவுந் தருதலினல்,—அவைகொண்டு நெய்தல் ஆசை நிலையன விலைமின்னாரின் நிறைவளம் சுரக்கும் - அவற்றைப்பெற்று நெய்தனிலமானது ஆசையினிலையையுடைய விலைமகளிரைப்போல நிறைந்த வளங்களைப் பலர்க்குங் கொடுக்கும். எ-று.

தம் இடப்பன்மை குறித்துநின்றது. இனித் தம்மோடு தழுவி எனினுமாம். பொருளை விலைக்கேற்பப் பலர்க்குங் கொடுத்தலின் விலைமின்னாரி னிறைவளஞ்சுரக்கும் எனப்பட்டது. விலைமின்னாரும் தம் நலத்தை விலைக்கேற்பப் பலர்க்குங் கொடுப்பர் என்க. (ருசு)

கொடிச்சியர் குறிஞ்சிப் பாடற் காய்ச்சியர் குரவை தூங்கு
மடிச்சிலம் பொலிக்கு வேட்குங் கடைசிய ரகத்த வன்ன
நடைக்கெதிர் கலாபம் விம்ம வளத்தியர் தம்மி னாளுந்
தொடிக்கர மெறிந்து நக்கு நடப்பன தோற்றத் தெங்கும்.

இ-ள். எங்கும் - நெய்தனிலமெங்கும்,—கொடிச்சியர் குறிஞ்சிப்பாடற்கு ஆய்ச்சியர் குரவை தூங்கும் அடிச் சிலம்பு ஒலிக்கு வேட்கும் - கொடிச்சியர்களது குறிஞ்சிப்பாடலுக்கு ஒப்ப இடைச்சியர்கள் குரவையாடுகின்ற அடிகளிலணிந்த சிலம்பினேசைக்கு விரும்பிச்செல்லுகின்ற,—கடைசியர் அகத்த அன்னநடைக்கு எதிர் - கடைசியரிடத்தவாகிய அன்னத்தினடைக்கெதிரே,—கலாபம் விம்ம அளத்தியர் தம்மில் நாளும் தொடிக்கரம் எறிந்து நக்கு நடப்பன தோற்றத்த - கலாபம் ஒலிக்க அளத்தியர்கள் தம்முள்ளே நாடோறும் வளையலையணிந்த கைகளை ஒன்றேடொன்று அடித்துச் சிரித்து நடக்கின்ற தோற்றத்தையுடையன. எ-று.

எங்கும் தோற்றத்த என முடிக்க. அகரம் விகாரத்தாற் றெக்குநின்றது. குறிஞ்சி - ஓர்பண். குரவை - கைகோத்தாடல். கலாபம் பதினறுகோவைமணி. இதில் கொடிச்சியர், ஆய்ச்சியர், கடைசியர், அளத்தியர் என நானிலப்பெண்களையுங் கூறியதோடு முறையே அவர்களுக்குரிய குறிஞ்சிப்பாடல், குரவை தூங்குமடிச்சிலம்பொலி, அன்னநடை, நடத்தல் என்பவைகளைத் தொடர்ச்சியாய்க் கூறி நானிலத் திணைமயக்கங் கூறியவாறுகாண்க. கொடிச்சியர் குறிஞ்சிநிலமகளிர். ஆய்ச்சியர் முல்லைநிலமகளிர். கடைசியர் மருதநிலமகளிர். அளத்தியர் நெய்தனிலமகளிர். (ருஎ)

கான்சூழற் குறத்தி நல்லார் கணிமலர் கொள்ளு மோதைக்
கான்கிளைக் காப்புச் செய்தங் கண்டர்நின் றாற்று மோதை
தான்புனக் குறிஞ்சி யெங்குந் தழைத்தலிற் றாழ்விற் கால
வான்கலித் தனவென் றோகை மஞ்ஞைநின் றாலு மன்னோ.

இ-ள். கான்சூழல் குறத்தி நல்லார் கணிமலர் கொள்ளும் ஓதைக்கு-வாசனைபொருந்திய கூந்தலையுடைய வேட்டுவமகளிர் வேங்கைப்பூக்களை ஆய்கின்ற (புலி புலி என்னும்) ஒலிக்கு (அஞ்சி),—அங்கு ஆன் கிளைக் காப்புச் செய்து நின்று அண்டர் அரற்றும் ஓதை - அம்முல்லைநிலத்திலே பசுக் கூட்டங்களைக் காவல்செய்துநின்று இடையர்கள் ஆரவாரிக்கும் ஒலி,—புனக் குறிஞ்சி எங்கும் தழைத்தலின் - தினைப்புனங்களையுடைய குறிஞ்சி நிலமெங்குந் தழைத்தலினாலே,—தாழ் வில் கால வான்கலித்தன என்று ஓகை மஞ்ஞைநின்று ஆலும் - தாழ்ந்த வில்லையுடைய காலமுகில்கள் முழங்கின என்று கருதிக் களிப்பினையுடைய மயில்கள் நின்று கூத்தாடும். எ-று.

இது குறிஞ்சியும் முல்லையும் தம்முண்மயங்கிய திணைமயக்கம். பூத்திருக்கும் வேங்கைமரம் புலிபோன்றிருத்தலின் பூப்பறிக்கையிற் பெண்கள் புலிபுலி என்பது அந்நிலவழக்கு. மலைபடுகடாத்திலே நச்சினார்க்கினியரும் "வேங்கைப்பூவைச் சூடுதற்கு மகளிர் புலிபுலி என்று கூப்பிடும் ஏமத்தையுடைய ஆரவாரமும்" என்றார். இது மயக்கவணி. (ருஅ)

தங்கணற் புளினந் தோறு முணங்கு மீன் கவருஞ் சங்க
கங்கபத் திரநன் னீழன் மருதமேல் விதானங் காட்ட
வங்கயல் கவ்வி யோடி யொதுங்குதோ றாறு நீழற்
பங்கயப் பழன நாரைக் களிப்பன முல்லைப் பந்தர்.

இ-ள். தங்கு அணல் புளினந் தோறும் உணங்கு மீன் கவரும் - பொருந்திய வாயினால் மணற் குன்றுகடோறுங் காய்கின்ற மீன்களைக் கவருகின்ற,—சங்க கங்கபத்திர நல் நீழல் மருதமேல் விதானம் காட்ட - கூட்டமான பருந்தின் நல்ல நிழல் மருதநிலத்தின்மேல் (செய்த) மேற்கட்டியைக் காண்பிக்க,—அம் கயல் கவ்வி ஓடி ஒதுங்கு தோறு ஆறும் நீழல் - அழகிய கயல்மீன்களைக் கவ்விக்கொண்டு ஓடி ஒதுங்குந்தோறும் ஆறியிருக்கும் நிழலை,—பங்கயப் பழன நாரைக்கு முல்லைப்பந்தர் அளிப்பன - தாமரைகளையுடைய வயலிலுள்ள நாரைகளுக்கு முல்லைப்பந்தர்கள் கொடுப்பன. எ-று.

இதனால் நெய்தலுக்கும் மருதத்திற்கும், மருதத்திற்கும் முல்லைக்கும் மயக்கங் கூறப்பட்டது. அணலால் என்புழி ஆல் உருபு தொக்குநின்றது. தங்களுடைய புளினம் என்றால் இத்துணைச் சிறப்பின்று. (ருக)

## குறிஞ்சித்திணைமயக்கம்.

கடுப்பொதி நயன வாளிக் குறத்தியர் காமர் கண்ணி
தொடுப்பமென் ஞாக மாறிச் சூடல்புன் ஞாகஞ் சோரா
தெடுப்பவிக் கார நேர்கொண் டீவவே யாரமேறக் [ண்ணெய்
கொடுப்பநற் கண்டில் வெண்ணெய் கொள்வதோ வாவின் வெ

இ-ள். கடு பொதி நயன வாளிக் குறத்தியர் - நஞ்சுபொதிந்த கண்ணாகிய பாணத்தையுடைய குறத்தியர்களால்,—காமர் கண்ணி தொடுப்ப மென்ஞாகம் மாறி - (நெய்தநிலமகளிர்க்கு) அழகுபொருந்திய மாலையைத் தொடுத்தற்கு மென்மையான நாகப்பூக்களைக் கொடுத்து,—சூடல் புன்ஞாகம் சோராது எடுப்ப - தாம் சூடுதற்குப் புன்னைமலர்கள் சோர்வின்றி எடுக்கப்படுகின்றன,—இக்கு ஆர நேர் கொண்டு ஆரம் ஈவ - இன்னும் அவர்களால் (மருதநிலத்துள்ள) கரும்புகளை நிறைய எதிரே பெற்றுக்கொண்டு சந்தனமரங்கள் கொடுக்கப்படுகின்றன,—நல் கண்டில்வெண்ணெய் உற கொடுப்ப ஆவின்வெண்ணெய் கொள்வது - இன்னும் அவர்களால் கண்டில் வெண்ணெய்கள் முல்லைநிலத்துள்ளார்க்கு மிகக் கொடுக்கப்படுகின்றன. (அவர்களிடத்தில்) பசுவின் வெண்ணெய் வாங்கப்படுகின்றது. எ-று.

நாகம் கண்டில்வெண்ணெய் என்பன குறிஞ்சிநிலத்துக்குரிய மரங்கள். அது "நடுக்குறுசந்தஞ்சிந்துரத்தொடுநெரந்தநாகங்-கடுக்கையார் வேங்கைகோங்குபச்சிலைகண்டில்வெண்ணெய்" என்னும் இராமாவதாரச் செய்யுளானும், "நரந்தநாகநள்ளிருணாறி" என்னுங் குறிஞ்சிப்பாட்டில் (கூசு-ம் வரி) நாகம் என்பதற்கு நாகப்பூ என நச்சினார்க்கினியர் கூறியதனானும் அறியப்படும்.

இதனால் குறிஞ்சிநிலம் தனக்குரிய பண்டமாற்றினால் ஏனை மூன்று நிலங்களோடும் மயங்கியதாகக் கூறப்பபட்டது. எங்ஙனமெனின்: குறிஞ்சிநிலத்திலுள்ள மகளிர் தம் நிலத்துக்குரிய நாகமுதலியமூன்றையுங் கொடுத்து முறையே நெய்தல் மருதம் முல்லை என்னும் மூன்றற்குமுரிய புன்னாகமுதலியமூன்றையும் பெற்றுக்கொள்வார்களென்பதனால் என்க.

| | | |
|---|---|---|
| நாகம்<br>ஆரம்<br>கண்டில்வெண்ணெய் | குறிஞ்சிக்குரியன.<br>இவை மரம். | புன்னாகம் நெய்தற்குரியது.<br>இக்கு மருதத்திற்குரியது.<br>ஆவின்வெண்ணெய் முல்லைக்குரியது. |

இனி இதன்கண் முதலடியொழிந்த மூன்றடிகளிலும் நாகம் ஆரம் வெண்ணெய் என்பவைகளால் மடக்கு என்னுஞ் சொல்லலங்காரமுமமைத்துக் கூறப்பட்டிருத்தல் காண்க. இம்மடக்கு இரண்டாமூன்றாமடிகளில் இரண்டாமைந்தாஞ் சீர்களிலும், நான்காமடியில் மூன்றாமாறாஞ் சீர்களிலும் வந்தது. இது பரிவருத்தன அணி. (சுo)

## முல்லைத்திணைமயக்கம்.

நீக்குமா னழைக்கு மாயர் நீடிசை நிறைய வூது
மூக்கமேன் றளவே யாலை யோதைய தளவே யுந்த
வாக்குதீங் கொன்றை மீன்பா டரவத்தீங் கொன்றை மாற்றத்
தேக்குவே யேனற் காப்பின் றிறத்தவே யகற்று மன்றே.

இ-ள். நீக்கும் ஆன் அழைக்கும் ஆயர் நீடு இசை நிறைய ஊதும்-(கட்டினின்றும்) நீக்கிய பசுக்களை அழைக்கின்ற ஆயர்கள் நெடிய இசை நிறையும்படி ஊதுகின்ற,—ஊக்கம் மென் தளவு ஆலை ஓதையது அளவு உந்த - ஊக்கத்தையுடைய மெல்லிய முல்லைக்குழலோசை கருப்பாலையி னோசையினளவைத்தள்ள,—வாக்கு தீம் கொன்றை மீன்பாடு அரவத் தீங்கு ஒன்றை மாற்ற - (இன்னும் அவர்களால்) இசையைப் பெய்து ஊதப்படுகின்ற இனிய கொன்றைக் குழலோசை மீன்படுதற்கணுண்டான (பறை) ஒலியின் தீமை ஒன்றையு மாற்றிவிட, —தேக்கு வேய் ஏனல் காப்பின் திறத்த அகற்றும் - (இன்னும் அவர்களால்) இசையைநிறைத்து ஊதப்படுகின்ற வேய்ங்குழலினோசை தினைக்காவலின்பகுதியான ஓசைகளை நீக்கும். எ-று.

மேன்றளவு - நீட்டல்விகாரம். சிலப்பதிகாரகாரர் கூறிய "ஆம்பலந் தீங்குழல்" "கொன்றையந்தீங்குழல்" "முல்லையந்தீங்குழல்" என்னு மூன்றையும் ஆம்பலந் தீங்குழலை நீக்கி, "வேய்ங்குழல்" ஒன்றுகூட்டி இந்நூலாசிரியர் கூறினர்போலும். அன்றி: "ஆம்பல்கீசகம்வேல்வேரலரி யமைதிகிரிவேழ-மேம்படுவரைமூவெட்டுமூங்கிலாம்வெதிருமப்பேர்" எனச் சூடாமணிநிகண்டிற் கூறியவாறு (ஆம்பல்) மூங்கில் எனக் கொண்டு வேய் எனக்கூறினரெனினு மமையும். வேய் எனக் கருவிகூறலின் முன்னையவற்றைப் பண் என்றல் சிறப்பின்று. மீன்பாடரவம் என்றது மீன்கோட்பறையி னொலியை. அது "கலவர்மீன்படுத்தெழுப்புசாப்பறையொலிகறங்கத்தீதெனத்தன்னு-ளலவர்சாலிகொய்தண்ணுமைத்ததும்பொலியடக்கிமேலெழு" என்பதனானறியப்படும். காப்பின்றிறத்த ஓசை என்றது தட்டை, குணில், தழலையாதியவற்றினோசையை. அது "தட்டைகுணிறழலைதாங்கித்தினைப்புனத்தைக் - கிட்டலுருவண்ணங்கிளிமுதற்புள்ளோட்டினளே" என்பதனானறியப்படும். இவ்வாறே கம்பரும் "புன்றலைப்புனங் காப்புடைபோதரச்சென்றிருக்கும்" என்றார். தளவு, கொன்றை, வேய் என்பன ஆகுபெயர்கள்.

இதனால் முல்லைநிலம் தனக்குரிய இசைக்குழல்களால் ஏனை மூன்று நிலங்களோடு மயங்கியதாகக் கூறப்பட்டது. எங்ஙனமெனின்: முல்லை தன்னிடத்துள்ள ஆயரூதும் இசைக்குழல்களினோசையால் முறையே மருதம், நெய்தல், குறிஞ்சி என்னுநிலங்கள் மூன்றற்குமுரிய ஆலையோதை முதலிய மூன்றையுமகற்றுமென்பதனால் என்க.

| | | |
|---|---|---|
| தளவு<br>கொன்றை<br>வேய் | முல்லைக்குரியன.<br>இவை பண்ணி<br>லடங்கும். | ஆலை மருதத்திற்குரியது.<br>மீன் நெய்தற்குரியது.<br>ஏனல் குறிஞ்சிக்குரியது. |

இனி இதன்கண் முதலடியொழிந்த ஏனை மூன்றடிகளிலும் தளவு, கொன்றை, வேய் என்பவைகளால் மடக்கு என்னுஞ் சொல்லலங்காரமு மமைத்துக் கூறப்பட்டிருத்தல் காண்க. இம்மடக்கு இரண்டா மூன்று மடிகளில் இரண்டா மைந்தாஞ் சீர்களிலும், நாலாமடியில் முதலாம் நான்காஞ் சீர்களிலும் வந்தது. இதுவு மேலே அணி. (௬௧)

## மருதத்திணைமயக்கம்.

நீங்கருஞ் செவ்வித் தாய நிறைவள மருத மாக்கள்
தாங்கொளுங் கானற் றேனிற் றழைப்பன கானற் றாழை
யாங்குழு மமலை யாற்கூ யழைப்பன வமலை வேழம்
பாங்கொடி சாற்றா லோங்கும் பசுங்கொடி முல்லை யன்றே.

இ-ள். நீங்கு அரும் செவ்வித்து ஆய நிறைவள மருத மாக்கள் கொளும் - (அடைந்தோர்) விட்டுநீங்குதற்கரிய செவ்வியையுடைத்தாய் நிறைந்த வளத்தைக்கொண்ட மருதநிலமாக்கள் கொள்ளுகின்ற,—கா நல் தேனில் கானல் தாழை தழைப்பன - காவிலுள்ள நல்ல தேனால் கழிக்கரைகளிலுள்ள தாழைகள் தழைப்பன,—ஆங்கு உழும் அமலையால் அ மலை கூயழைப்பன - அங்கே (அவர்கள்) உழுகின்ற ஒலியினால் அக்குறிஞ்சி நிலத்திலுள்ள மலைகள் எதிரே கூப்பிடுவன,—வேழம் பாங்கு ஒடி சாற்றால் பசும் முல்லைக்கொடி ஓங்கும் - (அவர்கள்) கரும்புகளைப் பக்கங்களிலே ஒடிக்கின்ற சாற்றினாற் பசிய முல்லைக்கொடிகள் வளரும். எ-று.

இதனால் மருதநிலம் தனக்குரிய தேன்முதலியவற்றை உபகாரஞ் செய்தலால் ஏனை மூன்றுநிலங்களோடும் மயங்கியதாகக் கூறப்பட்டது. எங்ஙனமெனின்: மருதநிலமாக்கள்செய்யும்தேன்கோடன்முதலிய தொழில்களால் முறையே நெய்தல், குறிஞ்சி, முல்லையென்னும் நிலங்கள் மூன்றற்குமுரிய தாழைதழைத்தன் முதலிய மூன்றும் நிகழ்தலினால் என்க.

| | | |
|---|---|---|
| காவிலுள்ள தேனைக்கோடல்<br>உழுதல்<br>வேழமொடித்தல் | மருதத்திற்குரியன.<br>இவை தொழில். | தாழை நெய்தற்குரியது.<br>மலை குறிஞ்சிக்குரியது.<br>முல்லை முல்லைக்குரியது. |

இனி இதன்கண் முதலடியொழிந்த ஏனை மூன்றடிகளிலும் கானல், அமலை, கொடி என்பவைகளால் மடக்கு என்னுஞ் சொல்லலங்காரமுமமைத்துக் கூறப்பட்டிருத்தல் காண்க. இம்மடக்கு முற்செய்யுளிற் கூறிய வாறு வந்தது. இதுவு மேலே அணி. (௬௨)

## நெய்தற்றிணைமயக்கம்.

கயற்குல வதோமு கானற் கழிக்கரைக் கைதை மென்னீ
றயற்கணி யடலை யாய்த்தா ரநற்கணி கொள்ளத் தேனை

நயக்கரு விளைகொண் டொண்பூ நவக்கரு விளைப்ப வெட்டை
வயற்கயல் குருகெ னுமா மலர்க்கயன் மருளு மாதோ.

இ-ள். கயற்குலம் அதோமுகா நல் கழிக்கரைக் கைதை மெல் நீறு - கயற்கூட்டங்களைக்கொண்ட அதோமுகத்தையுடைய நல்ல கழிக்கரைகளிலுள்ள தாழைகளின் மெல்லிய நீற்றை,—அயற்கு அணி அடலையாய் தார் அம் நல் கணிகொள்ள - சிவபிரானுக்கு அணியப்படும் விபூதிபோலப் பூக்களையுடைய அழகிய நல்ல வேங்கைகள்கொள்ள,—தேனை நய கருவிளை கொண்டு ஒண்பூ நவம் கரு விளைப்ப - அத்தாழைகளின் தேனை நல்ல கருவிளை ஏற்று ஒள்ளிய பூவாகிய புதிய கருவை உண்டாக்க,—எட்டை வயற் கயல் குருகு எனு மாமலர்க்கு அயல் மருளும் - அத்தாழைகளின் பூவை வயலிலுள்ள கயல்கள் குருகென்று தாமரைமலர்களுக்கருகே மயங்கி ஒளிக்கும். எ-று.

ஐயன் அயன் எனப் போலியாயிற்று. அதோமுகாம் - நீட்டல்விகாரம். அதோமுகம்-ஆற்றுநீர்க்கழிமுகம்.

இதனால் நெய்தனிலம் தனக்குரிய தாழையினீறுமுதலியவற்றைக் கொள்ளப்படுதலால் ஏனை மூன்றுநிலங்களோடும் மயங்கியதாகக் கூறப்பட்டது. எங்ஙனமெனின்; நெய்தற்குரிய கைதையி னீறுமுதலியவற்றை முறையே குறிஞ்சி, முல்லை, மருதம் என்னும் மூன்றற்குமுரிய கணிமுதலிய மூன்றும் கொள்ளுதலினால் என்க.

| | | |
|---|---|---|
| கைதைநீறு<br>அதன்தேன்<br>அதன் பூ | நெய்தற்குரியன.<br>இவை மரத்திலடங்கும். | கணி குறிஞ்சிக்குரியது.<br>கருவிளை முல்லைக்குரியது.<br>வயற்கயல் மருதத்திற்குரியது. |

இனி, இதன்கண் முதலடியொழிந்த மூன்றடிகளிலும் கணி, கருவிளை, கயல் என்பவைகளால் மடக்கு என்னும் அலங்காரமும் அமைத்துக் கூறப்பட்டிருத்தல் காண்க. இம்மடக்கு இரண்டாம் நான்காமடிகளில் நாலாஞ்சீர்களிலும், மூன்றாமடியில் முதலாம் இரண்டாஞ்சீர்களிலும் நாலாமைந்தாஞ் சீர்களிலும் பிரிந்துநின்றும் வந்தன. (சுரு)

மீமடுத் திலங்கு சோதி வெண்ணிலா மதிய வட்டம்
பூமடுத் துரிஞ்ச மெய்யிற் பொதுளிய மதுவை வண்டு
நாமடுத் தயிலுஞ் சோலை நாட்டணி யின்ன திப்பால்
யாமெடுத் துரைக்கப் பட்ட திலங்கெழி னகர மன்றே.

இ-ள். மீ மடுத்து இலங்கு சோதி வெண் நிலா மதியவட்டம் பூமடுத்து உரிஞ்ச - மேலே நிறைக்கப்பட்டு விளங்குகின்ற ஒளியையுடைய வெள்ளிய நிலாவைக்கொண்ட சந்திரமண்டலத்தைப் பூவானது தீண்டி உரோஞ்ச,— மெய்யில் பொதுளிய மதுவை வண்டு நா மடுத்து அயிலும் சோலை நாடு

அணி இன்னது - அம்மண்டலத்தினது வடிவத்திற்பொதிந்த தேனை வண்டுகள் நாவில் நிறைந்து உண்ணும் சோலையையுடைய நாட்டின் சிறப்பு இத்தன்மையது,—இப்பால் யாம் எடுத்து உரைக்கப்பட்டது இலங்கு எழில் நகரம் - இனி யாம் எடுத்துச் சொல்லும்படிபொருந்திநின்றது விளங்குகின்ற அழகையுடைய நகரச்சிறப்பேயாம். எ-று.

அயிலும் என்னும் பெயரெச்சம் சோலை என்னும் இடப்பெயர்கொண்டது. நாமடுத்து என்பதற்கு நாவைமடுத்து எனினுமாம். இப்பொருட்கு மடுத்தல் - முகஞ்செய்தல்=வைத்தல். (௬௪)

நாட்டுப்படல முற்றிற்று.

---

# நகரப்படலம்.



வேறு.

வியன்படப் படைத்தவை விதியன் றென்றுபின்
மயன்படைத் திடும்வகை வகுத்துக் காட்டுவான்
பயன்படப் பஃறொழிற் பதைப்பி லாதிருந்
தயன்படைத் துளநக ரயோத்தி யென்பவே.

இ-ள். வியன்படப் படைத்தவை விதி அன்று என்று - சிறப்புப்பொருந்தும்படி (முன்னரே) படைக்கப்பட்டனவாகிய நகரங்கள் (நூல்களிற் கூறிய) விதிக்கு அமைந்துள்ளனவல்லவென்று,—பின் - பின்னரே,—மயன் படைத்திடும் வகை வகுத்துக் காட்டுவான் - மயன் படைக்கும்படியாக (அவ்விதிகளை) வகுத்துக் காட்டும்படி,—பயன்பட பல்தொழில் பதைப்பிலாது இருந்து - பயன்படும்படி பலதொழில்களிலும் பதைப்பின்றி இருந்து,—அயன் படைத்துள நகர் அயோத்தி - பிரமன் படைத்த நகரம் அயோத்தியாகும். எ-று.

என்ப, ஏ - அசைகள். வகுத்துக்காட்டுவான் படைத்துளது, பதைப்பிலாதிருந்து படைத்துளது எனத் தனித்தனி முடிக்க. பயன்பட என்பதைப் பதைப்பிலாது என்பதன் எதிர்மறையோடு முடிக்க. தொழில் - சிற்பத்தொழில். (௧)

தற்பவா தாரமென் றறிந்த தம்பிரா
னற்பதா லமைத்தவிவ் வயோத்தி போலயன்
பற்பல்கா ணன்னகர் படைக்கு மேனுந்தன்
கற்பகா லத்தினுங் காட்டற் பாலனோ.

இ-ள். தன் பவ ஆதாரம் என்று அறிந்த தம்பிரான் - தன் பிறப்புக்கு இடமென்றறிந்த விட்டுணுவானவர்,—அன்பதால் அமைத்த இ அயோத்திபோல் - அன்போடு படைத்த இந்த அயோத்தியைப்போல,—அயன் பல்பல்கால் நல் நகர் படைக்குமேனும் - பிரமன் பற்பலதரம் நல்ல நகரத்தைப் படைப்பானாயினும்,—தன் கற்பகாலத்தினும் காட்டற்பாலனோ - தன் கற்பகாலம்வரையினும் படைத்துக்காட்டும் வல்லமையின்றன்மையை யுடையனோ. எ-று.

பாலன் குறிப்புவினைமுற்று. (உ)

மொய்த்தலிற் செறிவணன் பவத்தை முன்னுணர்
மெய்த்தலைத் தகையினிந் நகரை வேட்டராப்
பைத்தலைப் புறத்துத்தன் றொழில்செய் பண்பினால்
வைத்ததிற் பெற்றதிவ் வைய மாட்சியே.

இ-ள். மொய்த்த அலில் செறி வணன் பவத்தை முன் உணர் மெய் தலைத் தகையின் - பரந்த இருள்போற் செறிந்த நிறத்தையுடைய விட்டுணுவின் அவதாரத்தை முன்னரே அறிந்துகொண்ட உண்மையான மேலான உத்தமஞானத்தால்,—அரா இ நகரை வேட்டு - சேடன் இந்த நகரை விரும்பி,—தன் தொழில் செய் பண்பினால் பைத்தலைப்புறத்து வைத்ததில் - (சுமத்தலாகிய) தன் தொழிலைச்செய்யுமியல்போடு படம்பொருந்திய தலையினிடத்து வைத்ததினால்,—இவ்வையம் மாட்சி பெற்றது - இப்பூமி பெருமையைப் பெற்றது. எ-று.

அரா அயோத்தியைச் சுமத்தலினாலேதான் தன்னைச் சுமக்கின்றதென்னும் பெருமையைப் பூமி பெற்றுக்கொண்டதென்பதாம். (ந)

இகல்படப் பொலிந்தவிவ் விருக்கை தாரகை
நகல்படத் துளங்கொளி மணிக ணாறலா
லகல்படப் புதுமதி யலது மஞ்சுடர்ப்
பகல்படப் பகலையும் படைக்கப் பட்டதே.

இ-ள். இகல்பட பொலிந்த இ இருக்கை - மாறான (மற்றைய) நகரங்கள் அழிவுறும்படி விளங்குகின்ற இந்த நகரமானது,—தாரகை நகல்பட துளங்கு ஒளி மணிகள் நாறலால் - நட்சத்திரங்களது ஒளி கெடும்படி விளங்குகின்ற ஒளியையுடைய மணிகள் பிரகாசித்தலால்,—புதுமதி அகல்பட - புதியசந்திரன் (ஒளி) நீங்க,—அலதும் அம் சுடர்ப் பகல்பட - இராவும் அழகிய ஒளியையுடைய பகலாக,—பகலையும் படைக்கப்பட்டது - வேறொரு சூரியனையும் உண்டாக்கியது. எ-று.

இருக்கை படைக்கப்பட்டது என முடிக்க. (ச)

ஆதியந் தம்பட வனைத்துங் காட்டிய
வேதியன் படைப்பினின் மிகைபி ரண்டுள
யாதெனி னொன்றுபொன் னிலங்கு மேருவா
மோதிம மற்றதிவ் வுறையு ளென்பவே.

இ-ள். ஆதி அந்தம் பட அனைத்தும் காட்டிய வேதியன் படைப்பினில் - இது முதல் இது கடை என்னுந் தன்மைபொருந்தச் சகல பொருட்களையுந் தோற்றுவித்த பிரமனது சிருட்டியிலுள்ள பொருள்களுள்,— மிகை இரண்டுள - மேலாகச் சிருட்டிக்கப்பட்ட பொருள்கள் இரண்டுள்ளன,—யாதெனின் - அவை யாவையெனின்,—ஒன்று பொன் இலங்கு மேருவாம் ஓதிமம் - ஒன்று பொன்மயமாக விளங்குகின்ற மேருவாகிய மலை,—மற்றது இ உறையுள் - மற்றது இந்த நகரம். எ-று.

என்ப, ஏ - அசைகள். காட்டுதல் - தோற்றுவித்தல். அது "நாட்டுநர் காட்டுநர் வீட்டுநர் வந்தபோதும்" என்பதனாலுமறியப்படும். ஆதி அந்தம் என்பதற்கு முதலும் முடிவும் என்பாருமுளர். இது இருபொருள்வேற்றுமைச்சமம் என்னுமணி. (ரு)

பொன்கணித் திலங்குரப் புனிதன் றன்பவ
முன்கணித் தொருசுரர் முதல்வ ரிந்நகர்
நன்கணித் தாகநண் ணிடாதற் கன்றிவே
றென்கணித் தெண்டிசை யெண்மர் காப்பதே.

இ-ள். பொன் கணித்து இலங்கு உரப் புனிதன் தன்பவம் முன்கணித்து - இலக்குமி (நானிருத்தற்குச் சிறந்தது இதுவே என்று) நன்குமதித்து (ச்சென்றிருந்து) விளங்குகின்ற மார்பினையுடைய விட்டுணுவினது பிறப்பை முன்னரே கருதி,—ஒரு சுரர்முதல்வர் இ நகர் அணித்தாக நன்கு நண்ணிடாததற்கு அன்றி - ஒரு தேவத்தலைவராதல் இந்நகருக்குச் சமீபமாக மிகவும் அடையாதிருத்தற்காகவேயன்றி,—எண்திசை எண்மர் காப்பது வேறு என் கணித்து - எட்டுத்திக்கையும் திக்குபாலகர்கள் காப்பது வேறென்கருதி? எ-று.

நண்ணிடாதது என்பது விகாரமாயிற்று. இது தற்குறிப்பேற்றம்.

செம்பொனா லிலங்குபு திகழ யோத்தியங்
கொம்பனாள் விளங்கிய கோலங் கூறுமேற்
கம்பினா னறுந்துழாய் மார்பங் கைக்கொளற்
கம்பொனாண் மணவினை யணிகொண் டன்னதே.

இ-ள். செம்பொனால் இலங்குபு திகழ் அயோத்தி அம் கொம்பனாள் - செவ்விய பொன்னால் (செய்யப்பட்டு) விளங்கித் திகழுகின்ற அயோத்தியாகிய பெண்,—விளங்கிய கோலம் கூறுமேல் - விளங்கிய அழகைச் சொல்லு

வேமாயின்,—கம்பினுன் நறும் துழாய் மார்பம் கைக்கொளற்கு - விட்டுணுவி னது நறிய துழாய்மாலையையணிந்த மார்பினைத் தழுவுதற்கு,—அம் பொன் னுள் மணவினை அணிகொண்டன்னது - அழகிய இலக்குமி மணக்கோ லத்தைக் கொண்டாற்போலும். எ-று.

கூறுமேல் கொண்டன்னது என இயைக்க. கம்பினுன் - சங்கினையு டையவன். மணவினை அணி - மணத்தொழிற்குரிய அணி. (எ)

வாமமார் நகர்நிகர் கிளக்கின் மற்றைவா
னேமநா டேயர சிருக்கை யீர்நிதித்
தாமவா ருறையுளே தண்டந் தார்ப்படைக்
காமனூர் புரம்விலைக் காமர் வீதியே.

இ-ள். வாமம் ஆர் நகர் நிகர்கிளக்கின் - அழகுநிறைந்த நகருக்கு உவமை கூறுகில்,—வான் ஏமநாடே அரசிருக்கை - வானிலுள்ள பொன்னகரமே (அதன்) அரசிருக்கையாகும்,—ஈர் நிதித் தாமவார் உறையுளே தண்டம் - அளகாபுரியே திரவியசாலையாகும்,—தார்ப்படைக் காமனூர்புரமே விலைக் காமர் வீதி - புஷ்பபாணங்களையுடைய மன்மதனது நகரமே வேசியரது வீதியாகும். எ-று.

ஈர்நிதித் தாம வார் உறையுள் - இருநிதிகளையுடைய ஒளியைக்கொ ண்ட நீண்டவீடு - அளகாபுரி. விலைக்காமர் - விலைக்குவிற்கும் காமத்தை யுடையோர். (அ)

வெல்கலா விஞ்சையர் நகரம் விஞ்சையோர்
பல்கலா விதிக்களம் பரிதிப் பானுவுஞ்
செல்கலாச் சைத்திர விரதந் தேங்கொளு
மல்கலார் நந்தன வனம தென்பவே.

இ-ள். வெல்கலா விஞ்சையர் நகரம் விஞ்சையோர் பல் கலா விதிக் களம் - வெல்லக்கூடாத விஞ்சையர்களது நகரமே பண்டிதர்களது பலகலை களின் முறையையுடைய இடமாகும்,—பரிதிப் பானுவும் செல்கலாச் சைத் திரவிரதம் - சூரியனுஞ் செல்லுதல் கூடாத சைத்திரவிரதமென்னுஞ் சோ லையே,—தேம் கொளும் மல்கல் ஆர் நந்தனவனம் - தேனைக்கொண்ட பொலிவார்ந்த பூஞ்சோலையாகும். எ-று.

என்ப, ஏ - அசைகள். சைத்திரவிரதம் குபேரனது பூஞ்சோலை. (கூ)

உருக்கினு கவற்றுசந் தருவ ரூர்மதிப்
பெருக்கினர் யாழ்த்தொழிற் றூனம் பெண்ணலத்
தருக்கினுன் முகங்கொடு தங்குந் தாமரை
யிருக்கினுன் பதமதே யாக சாலையே.

இ-ள். உருக்கின் நா கவற்று கந்தருவர் ஊர் - உருக்குதலோடு நாவை வருத்திப் பாடுகின்ற கந்தருவரூரே,—மதிப் பெருக்கினர் யாழ்த்தொழிற்றானம் - அறிவின் பெருக்கத்தையுடையவர்களாகிய பாணர்களது யாழ்வாசிக்கின்ற இடமாகும்.—பெண் நலத் தருக்கின் நான்முகம் கொடு தங்கும் தாமரை இருக்கினன்பதமதே - திலோத்தமை என்னும் பெண்ணினது அழகிற்கொண்ட களிப்பினால் நான்குமுகத்தைக்கொண்டு இருக்கும் தாமரை ஆசனனாகிய பிரமனது உலகமே.—யாகசாலை - யாக்சாலையாகும். எ-று.

தருக்கின் கொடு தங்கும் தாமரையிருக்கினன் என்க. இருக்கை இருக்கு என விகரமாய்நின்றது. (௧௦)

ஈண்டமெய்த் திருவொடெப் பதமு மோர்வயிற்
கூண்டவே நிகருமன் றெனினென் கூறுகேன்
காண்டகு மிமைப்பில ராகிக் காட்சியா
லாண்டையார் திரிகுவார்க் ககற்று மையமே.

இ-ள். ஈண்டு அ மெய்த் திருவொடு எப்பதமும் ஓர் வயின் கூட நிகரும் - இங்கு அந்த உண்மையான செல்வத்தோடு மேலேகூறிய சுவர்க்க முதலிய நகரம்யாவும் ஓரிடத்திற் கூடினால் நிகராகும்,—அன்று எனின் என் கூறுகேன் - அல்லதாயின் வேறு எவற்றைச் சொல்வேன்,—காண்தகும் இமைப்பு இலராகி காட்சியால் ஆண்டையார் திரிகுவார்க்கு - காணப்படுகின்ற இமைத்தற்றொழிலில்லாதவராகி (இதனை) க் காணுதற்பொருட்டு அவ்விடத்தவர்களாய்த் திரிகின்றவர்களுக்கு,—ஐயம் அகற்றும் - (இதன்) சந்தேகத்தை நீக்கும். எ-று.

ஈண்ட என்பதற்கு செறிவுற எனப் பொருள்கூறினுமமையும். கூட என்பது கூண்ட என விகாரமாய்நின்றது. (௧௧)

வேறு.

உறுமை நிறத்தது செறுநர் புரத்துயி ருண்ணுமே
வறுமை தரித்தக டுடைய வொலிப்பது வன்னீரார்
முறமை கரப்பது வளைதிகி ரிப்புற முந்நீர்மேற்
சிறுமை விளைப்பது சிறையை வளைத்திடு தெண்ணீரே.

இ-ள். சிறையை வளைத்திடு தெண்ணீர் - மதிலைச்சூழ்ந்த தெளிந்த நீரையுடைய அகழானது,—உறு மை நிறத்தது - மிகுந்த கருநிறத்தையுடையது,—செறுநர் புரத்து உயிர் உண்ணுமே வறுமைதரித்து அகடுடைய ஒலிப்பது - பகைவருடைய உடம்பிலுள்ள உயிரை உண்ணுகையால் வறுமையைத் தாங்கி வயிறுடையும்படி ஒலிப்பது,—வன்னீரார் முறைமை கரப்பது - கொடியோரது நெறியை மறைத்துவைத்திருப்பது,—வளைதிகிரிப்புற முந்நீர்மேல் சிறுமை விளைப்பது - சக்கரவாளகிரியின் புறத்தேசூழ்ந்த புறக்கடலின்மீது சிறுமையையுண்டாக்குவது. எ-று.

பசியுடையாரது வயிறு உள்ளே வாயுக்கொண்டு தளர்ச்சியுறுமாறு ஒலிப்பது வழக்காதலின் உண்ணுமே வறுமைதரித்தகடுடைய ஒலிப்பது என்ருர். கொடியோர் புறத்தே தம்மை நல்லவராகக் காண்பித்து உள்ளே வஞ்சனையை மறைத்துவைத்துக்கொண்டிருப்பதுபோல இதுவும் புறத்தே நல்லதாகக் காண்பித்து உள்ளே முதலைமுதலியவற்றை மறைத்துவைத்திருந்ததென்பார் வன்னீரார்முறைமைகரப்பது என்ருர். (கஉ)

பகரம ரர்க்கிறை முனிய வெருக்கொடு பல்கேள்சூழ்
சகரர்தொ டத்தியி னிடைபுதை வெற்பது தளவானுச்
சிகரவி னப்படை கொடுசெரு வைப்பயில் செய்மாபோன்
மகரவி னத்தொடு சமரம் விளைப்பன வன்மீனே.

இ-ள். பகர் அமரர்க்கு இறை முனிய - சொல்லப்படும் தேவர்க்கரசனாகிய இந்திரன் கோபிக்க,—வெருக்கொடு பல் கேள் சூழ் சகரர் தொடு அத்தியின் இடை புதை வெற்பது - அச்சங்கொண்டு பல சுற்றமாகச் சூழ்ந்த சகரராலே தோண்டப்பட்ட கடலின் மறைந்த மைநாகமானது,—தளவானுச் சிசரவினப்படைகொடு செருவைப்பயில் செய்மாபோல் - (தானே) தளபதியாகத் தனது சிகரங்களாகிய கூட்டமான சேனைகளைக் கொண்டு போரை அப்பியாசம் செய்யுமாறுபோல,—வன்மீன் மகரவினத்தொடு சமரம் விளைப்பன - முதலைகள் மகரக்கூட்டத்தோடு போர்செய்வன. எ-று.

தளபதி முதலையும் படை மகரவினமுமென்க. "செண்டையஞ்சினை ............முதலைமா - வண்டல்வார்கரைமாமகரக்குழாங் - கண்டுநின்றுகணலுங்கழியெலாம்" என்று பிறரும் இவ்வாறு கூறுதல் காண்க. (சூள-நாடு-உஉ) (கங)

வாவி யிடிப்பொரு யோசனை யுய்த்திடு மன்னோதெம்
மேவி முடித்தற லாரு மதக்கொலை வெம்மாவி
ஞவி குடித்திடு மீன மகட்டிரை யைதாய்மென்
காவி யொடித்துழை பாய வெடித்தெறி கல்லோலம்.

இ-ள். தெம் மேவி முடித்து அறல் ஆரும் மதக் கொலை வெம் மாவின் ஆவி குடித்திடும் மீனம் - பகையோடு எதிர்த்துக் கொன்று நீரையுண்ணும் மதத்தைக்கொண்ட கொலையையுடைய கொடிய யானையின் உயிரை உண்ணுகின்ற மீனுனது,—அகட்டு இரை ஐதாய் மென் காவி ஒடித்து உழை பாய - வயிற்றில் இரை நிரம்பப்பெருமையினுலே மெல்லிய கருங்குவளை மலர்களை ஒடித்துப் பக்கத்திலே பாய,—வெடித்து எறி கல்லோலம் - அதனுல் முழங்கி வீசிய திரைகள்,—வாவி இடிப்பு ஒரு யோசனை உய்த்திடும் - பாய்ந்து இடித்தலாலாகிய ஒலியை ஒரு யோசனைதூரம் செலுத்தும். எ-று.

கல்லோலம் உய்த்திடும் என இயைக்க. இடித்தல் - பக்கத்திற்சென்று உதைத்தல். (௧௪)

நெடுவிசை யிற்பில முடிவு கணித்திடு நீரூடே
வடுவது றப்பொரு சுறவெறி தற்குடை வன்சேடன்
கடுவுமி ழப்பெரி ததுவிரு ளைத்தலை கவ்வாநீர்
நடுவுகு மிழ்த்தென நனைகண் முகிழ்ப்பன நன்னீலம்.

இ-ள். நெடுவிசையில் பிலமுடிவு கணித்திடும் நீரூடு - மிக்க விசையோடு பிலத்தின்முடிவை அளக்கின்ற நீரின்கண்,—வடுவது உறப் பொரு சுறவு எறிதற்கு உடை வன் சேடன் - வடு உறும்படி பொருகின்ற சுறு எறிதலாலே அழிந்த வலியையுடைய சேடன்,—கடு உமிழ - நஞ்சைக்கால,—அது இருளைத் தலை பெரிது கவ்வா நீர் நடுவுகுமிழ்த்தென - அது இருளைத் தலையில் மிகவும் கவ்விக்கொண்டு நீரின்நடுவே குமிழ்த்தாற்போல,—நல் நீலம் நனைகள் முகிழ்ப்பன - நல்ல நீலங்கள் அரும்புகளை முகிழ்ப்பன. எ-று.

குமிழ்த்தென முகிழ்ப்பன என இயையும். முகிழ்த்தல் - அரும்புதல். எறிதற்கு என்பது உருபுமயக்கம். (௧௫)

தழைவு படக்கொலை வினையினை யுட்கொடு தாமேமெய்
குழைவு படத்திகழ் முகமலர் பெட்பினர் கோளாமான்
முழவு படக்குமி றிடுமுத லைக்குல மொய்ந்நீர்மேல்
விழைவு படப்பொதி விரிசத பத்திர வீயாலோ.

இ-ள். முழவு படக் குமிறிடு முதலைக்குலம் மொய் நீர் - முழவோசையை ஒக்க ஒலிக்கின்ற முதலைக்கூட்டத்தையுடைய மொய்த்த நீர்,—மேல் விழைவுபடப் பொதிவிரி சதபத்திர வீயால் - மேற்புறத்தில் (கண்டார்) விரும்பும்படி அலர்ந்த தாமரைப்பூக்களால்,—தழைவு படக் கொலைவினையினை உட்கொடு - மிகுதியாகக் கொலைத்தொழிலை மனத்தேகொண்டு,—தாமே மெய் குழைவுபடத் திகழ் முகமலர் பெட்பினர் கோளாம் - தாமே உடம்பு குழைவுற முகத்தை மலர்ந்துகாட்டுகின்ற இயல்பினையுடையவர்களது கொள்கையையுடையதாகும். எ-று.

வீயால் ஆம் என இயையும். (௧௬)

பித்திகை யிற்றிகழ் செக்கர் மணிச்சுடர் பெய்சோதி
கத்து புனற்க ணெழக்களி யுட்கொடு கட்காணு
மெத்து நறைப்பொலி பத்ம மெனக்கொடு வீழாவெண்
பொய்த்த வெமக்கென வெட்கி யரற்றுவ புட்சாலம்.

இ-ள். பித்திகையில் திகழ் செக்கர் மணிச் சுடர் பெய் சோதி கத்து புனற்கண் எழ - சுவரினிடத்து விளங்குகின்ற மாணிக்கமணியின் கிரணம்

வீசுகின்ற ஒளி ஒலிக்கின்ற நீரின்கண்ணே தோன்ற,—கண் காணு மெத்து நறை பொலி பத்மம் எனக் கொடு புள் சாலம் களி உட்கொடு வீழா - கண்ணுற்கண்டு மிக்க தேனுற்பொலிந்த தாமரைமலர் என்று கருதி வண்டுக்கூட்டம் களிப்பை உட்கொண்டு வந்து வீழ்ந்து,—எமக்கு எண் பொய்த்த என வெட்கி அரற்றுவ - எமக்கு எண்ணம் பொய்த்தன என்று நாணிப் புலம்புவன. எ-று.

காணு கொடு வீழா அரற்றுவ என முடிக்க. இது மயக்க அணி. ()

ஊனை யுருக்குயி ராய தனிப்பெடை யூடாநீ
டீன முறப்பெரு மால்கொடு புட்குல மேபாரா
மான மதிற்பொறி யாய சுகத்தினை மாநீரூ
டான நவத்தள காகு மெனக்கரை யாறுவே.

இ-ள். ஊனை உருக்கு உயிராய தனிப்பெடை ஊடா நீடு ஈனம் உற - தன் உடம்பை உருக்குகின்ற உயிர்போன்ற ஒப்பற்றபெடை வெறுத்து மிகவும் மெலிவைப்பொருந்த,—புள்குலம் மானமதிற் பொறியாய சகத்தினை பெரு மால் கொடு பாரா மா நீரூடு ஆன நவத்து அளகு ஆகும் என - பறவையினங்கள் விமானத்திற்செய்த பொறியாகிய பறவையின்நிழலைப் மிக்க மயக்கத்தைக்கொண்டு பார்த்துப் பெரிய நீரின்கண்ணே பொருந்திய புதிய பெடையாகுமென்று கருதி,—கரை ஆறு - கரையைவிட்டு நீங்கா. எ-று.

இதுவு மேலையணி. (கஅ)

இனநிலை பெற்றுள வகழியி னைப்பெரி தெம்மாலே
தனிபுக றற்கரி திதனை வளைத்துள தண்ணார்தே
னனையளி மொய்த்தொலி கெழுமு மலர்த்தலை நன்காவாங்
கனைகட லைப்பெரி தளவு கணிப்பவர் கல்லாரே.

இ-ள். இனநிலைபெற்றுள அகழியினைப் பெரிது எம்மால் தனிபுகறற்கு அரிது - இவ்வாறான நிலையைக்கொண்ட அகழியை மிகவும் எம்மால் தனியே சொல்லுதற்கரிதாகும்,—இதனை வளைத்துள தண் ஆர் தேன் நனை அளி மொய்த்து ஒலி கெழுமு மலர் தலை நன் காவாம் கனைகடலை - இதனைச் சூழ்ந்த குளிர்ச்சியார்ந்த தேன்பொருந்திய அரும்புகளில் வண்டுகள் மொய்த்தலால் ஒலிபொருந்திய மலரையுடைய தலையைக்கொண்ட நல்ல சோலையாகிய நெருங்கிய கடலை,—அளவுகணிப்பவர் பெரிது கல்லார் - அளவு செய்பவர்கள் பெரிதும் கல்லாதவரேயாம். எ-று.

இன்ன என்பது இன எனத் தொக்குநின்றது. (கசு)

வேறு.

பொருவோர்பொரு ளுளவோபிற புகழும்சுடர் பொதியுங்
கருவோடிவ ரடிமாமுடி காணுமையின் மதிசூ
டொருவோர்நிகர் தருமாரைவ லுளியோடன வுருவா
மிருவோரையு நிகராகுவ ரிவண்மேயின ரெல்லாம்.

இ-ள். புகல் தாழ் சுடர் பொதியும் கருவோடு இவர் அடி மாமுடி காணுமையின் - சொல்லுகின்ற தாழ்ந்த ஒளிசெறிந்த அத்திவாரத்தோடு பொருந்திய அடியையும் பெரிய முடியையும் காணுமையினல்.—ஆரை மதி சூடு ஒருவோர் நிகர்தரும் - மதிலானது மதியைச்சூடிய ஏகராகிய சிவபிரானை ஒக்கும்,—இவண்மேயினரெல்லாம் வல் உளியோடு அன உருவாம் இருவோரையும் நிகராகுவர் - இந்நகரத்தின்கண்ணே பொருந்தியவர்களெல்லாம் வலியபன்றிவடிவும் அன்னவடிவுமான இருவரையும் ஒப்பார்கள்,—பொருவு ஓர் பொருள் பிற உளவோ - (இவ்வுவமைப்பொருள்களேயன்றி) உவமையாகும் ஒப்பற்ற பொருள்கள் பிறவும் உண்டோ. எ-று.

ஓ எதிர்மறை. பொருவோர்பொருளுளவோபிற என்பதை முன்வைத்துச் சிவனையன்றிப் பொருவும் ஒப்பற்ற பொருள் பிற உண்டோ எனப் பொருள்கோடல் இத்துணைச் சிறப்பின்று. ((உ0)

மொய்த்துன்னிய மும்மைப்படு தட்டாக வியன்கொண்
டுய்த்தெண்ணில வறையுட்பட வொன்றிற் றனிகடையா
வைத்தன்னது நாகத்தொடு வளரிந்நகர் வளைமீ
மொய்த்தும்பரி னகரத்தையு முறைசுற்றிய மதிலே.

இ-ள். நாகத்தொடு வளர் இ நகர் வளை மீ மொய்த்து உம்பரின் நகரத்தையும் முறைசுற்றிய மதில் - பாதலத்தோடு உயர்ந்த இந்த நகரத்தையும் சூழ்ந்து மேலே செறிந்து சுவர்க்கத்தையும் முறையே சூழ்ந்த மதில்,—ஒன்றில் மெய்த்துன்னிய மும்மைப்படு தட்டாக வியன்கொண்டு - ஒருமரத்திலேயே உண்மையாகிய மூன்றுதட்டாகச் சிறப்போடுகொண்டு,— எண் இல அறை உள் பட உய்த்துத் தனி கடையா வைத்தன்னது - அளவில்லாத அறைகளை உள்ளே பொருந்தும்படி போக்கித் தனியே கடைந்து வைத்தாற்போலும். எ-று.

மதில் வைத்தன்னது என இயையும். மெய் வடிவுமாம். (உக)

மறநண்ணின நடுநண்ணின வுயிர்வாயிலி னுலீர்
திறநண்ணின கீழ்மேலுல கெங்குந்தெரி யகமே
யுறநண்ணின புறநண்ணில வுயர்மா ள்லிதனீமதி
புறநண்ணின வகநண்ணில பிறிதென்புகல் வதுவே.

இ-ள். மறம் நண்ணின நடு நண்ணின உயிர் வாயிலினுல் ஈர் திறம் நண்ணின கீழ்மேல் உலகெங்கும் - அநீதியைப் பொருந்தினவும் நீதியைப்

பொருந்தினவுமாகிய உயிர்களைப் பொருந்துங் காரணத்தினால் இரண்டு பகுதியாகப்பொருந்திய கீழுலகும் மேலுலகுமாகிய எவ்விடத்திலும்,— உயர் மா மதிலிதன் அகம் உறநண்ணின புறம் நண்ணில - உயர்ந்த மதிலாகிய இதனுடைய அகத்தே பொருந்தியவைகள் புறத்தே அடைந்தில,— நீள் புறம் நண்ணின அகம் நண்ணில - நீண்ட புறத்தேபொருந்தியவைகள் அகத்தே அடைந்தில (எனின்).—பிறிது புகல்வது என்?—அதன் தாழ்வுயர்வுகளைப்பற்றி வேறு சொல்வதென்னை? எ-று.

பாதலத்தும் சுவர்க்கத்தும் இம்மதிலின் உள்ளே இருந்தன உள்ளே தானிருந்தன: புறத்திருந்தன புறத்தேதானிருந்தன; அன்றி உள்ளிருந்தன புறத்தும் புறத்திருந்தன அகத்தும் வந்திலவென்பது இதன்கருத்து. எனவே கீழேதாழ்ந்தும் மேலே உயர்ந்துமிருந்தது என்பதாம். இக்கருத்தமையவே முன்னரும் "நாகத்தொடுவளரிந்நகர்வளைமீ - மொய்த்தும்பரினகரத்தையுமுறைசுற்றியமதிலே" என்றும், பின்னரும் "குலவியவடிமாநாகர்—தூநகர்வளைப்பவானித்துளங்கொளியுச்சிவான-மாநகர்வளைக்கும்வேலிவிளநகர்நீங்கினானே" என்றுங் கூறுதல் காண்க. (உஉ)

சூழிக்கன கனகச்சுடர் சுடர்மாமதி லோடே
பேழிற்படு சயிலத்தொகை களினன்னர் பிடித்தே
யாழிக்கிரி யிருபாலினு மொருபாலிரு ளலதேற்
பாழிற்புகு மோநாவலர் நிகரென்று சொல்பயனே.

இ-ள். ஆழிக்கிரி இருபாலினும் ஒருபால் இருள் அலதேல் - சக்கரவாளகிரியின் இருபக்கத்தினுள்ளும் ஒரு பக்கத்திலே இருள் (உளது) அல்லாதொழியின்,—பேழிற்படு சயிலத் தொகைகளில் நன்னர் பிடித்து - விரிவாகப்பொருந்திய மலைகளுள்ளே இதுவே நல்லதென்று பிடித்து,—சூழிகன கனகச்சுடர் சுடர் மா மதிலோடு நாவலர் நிகர் என்று சொல் பயன் - சிகரத்தையுடைய மேன்மைபொருந்திய பொன்னினொளிவிளங்குகின்ற பெரிய மதிலோடு புலவர்கள் நிகராகும் என்று சொல்லுகின்ற பயன்,—பாழில் புகுமோ - வீணிற்புகுமோ. எ-று.

வீணிற்புகுமோ என்பது பயனற்றதாகுமோ என்றபடி. சக்கரவாளகிரியின் இருபுறத்திலும் ஒளியிருக்குமாயின் மதிலோடொக்கும் என்பது கருத்து. (உங)

ஆயுங்கதிர் வானந்தர ராகாவுடல் வேகா
வோயும்படி போயங்கழ லூறக்கதி பாற
வேயுந்தனு வொருநூறடி யிட்டாருயி ரொட்டார்
மாயும்படி பாயும்புகை வாணங்கொடு பாணம்.

இ-ள். ஆயும் கதிர் வான் அந்தரர் ஆகா உடல் வேகா ஓயும்படி போய் அங்கு அழல் ஊற - (மேலோர்களால்) ஆராயப்படும் சூரியனும்

ஆகாயத்திலுள்ள தேவர்களும் கந்தருவர்களும் தேகம் வெந்து ஓயும்படி சென்று வெப்பம் ஊறுதலால்,—கதி பாற - செல்லுங் கதிகளினின்றும் (அவர்கள்) தவற,—எயும் ஒரு நூறு தனு அடி இட்டார் ஒட்டார் உயிர் மாயும்படி - பொருந்திய ஒரு நூறுவிற்கிடை தூரத்தில் அடிவைத்துவந்தவர்களாகிய பகைவர்கள் உயிர் அழியும்படி,—புகை வார்ணம் கொடு பாணம் பாயும் -புகையையும் ஒளியையுங்கொண்டு பாணங்கள் பாயும். எ-று.

ஆய்ந்து இருளைக் கெடுக்கும் கதிர் எனினுமாம். பாற என்னுஞ் செயவெனெச்சம் நிகழ்காலப்பொருட்டு. அது பாயும் என்பதனோடு முடியும். கொட்டாளென்னும் பாடத்திற்கு நீக்கி எனப் பொருள்கொள்க. (உச)

பங்கங்கொடு நுங்குந்தகை படினன்றி மெய்படினோ
வெங்குங்கொலை முங்குங்கன லிடுமாலுயி ரடுமாற்
றுங்கங்கொடு தங்குங்கதிர் தொகுவானவ னககான்
மங்கும்படி பொங்குங்கருள் வஞ்சம்பொதி நஞ்சம்.

இ-ள். துங்கம்கொடு தங்கும் கதிர் தொகு வானவன் நகுகால் - உயர்ச்சியைக்கொண்டிருக்கும் கிரணங்கள் தொக்குள்ள தேவனாகிய சூரியன் விளங்கும்பொழுது,—மங்கும்படி பொங்கும் கருள் வஞ்சம் பொதி நஞ்சம் - (அவ்விளக்கம்) மங்கும்படி கிளருகின்ற இருளையுடைய வஞ்சனைபொருந்திய நஞ்சானது,—பங்கம் கொடு நுங்கும் தகை படினன்றி மெய்படின் - சேற்றாற் கொள்ளப்பட்டு உள்ளடக்கப்படுந் தகைமையைப்பொருந்தாமல் மெய்யிற் படுமாயின்,—எங்கும் கொலை முங்கும் கனல் இடும் உயிர் அடும் - பொருள்கள் யாவற்றையுங் கொலைசெய்கின்ற அக்கினியையிட்டு உயிரைக் கொல்லும். எ-று.

பொங்கும் என்பதை முற்றாக்கினுமமையும். (உரு)

பேரும்பொருண் மேனின்றிமை பிந்தும்படி முந்தும்
வாரும்பொறி யோடங்கடல் வாதங்கொடு காது
மோரும்பய நேரும்பொழு துந்தும்வினை சிந்து
மாருங்கடி தீருங்கொடி தாலம்பொதி பாலம்.

இ-ள். ஆலம் பொதி பாலம் - நஞ்சுபொதிந்த பிண்டிபாலம்,—பேரும் பொருள்மேல் நின்று இமை பிந்தும்படி முந்தும் - செல்லுகின்ற பொருள் கண்மீது எதிர்த்துநின்று இமையும் பிந்தும்படி முந்திச்செல்லும்,—வாரும் பொறியோடு அங்கு அடல் வாதம்கொடு காதும் - நீண்ட பொறிகளோடு அங்கு வலிய வாதத்தைச் செய்துகொண்டு (பகைவரைக்) கொல்லும்,—பயம் ஓரும் - (அவர்கள்) பயத்தை அறியும்,—நேரும்பொழுது உந்தும் - எதிர்க்கும்பொழுது எதிர்த்துத் தள்ளும்,—வினை சிந்தும் - (அவர்களது) போர்த்தொழிலை அழிக்கும்,—ஆரும் - (அவர்களை) உண்ணும்,—கடிது ஈரும் - விரைவில் அரியும்,—கொடிது - (இவ்வாறான) கொடுமையையுடையது. எ-று.

இமை பிந்தும்படி என்பது இமைமூடமுன் என்னும் பொருளைத் தந்து நின்றது. (உசு)

கதமிக்குர கனுநெட்டுடல் கம்பித்திட வெம்புற்
றிதமிற்றிட நிலனிற்பெரி தெழுமான்முனம் விழுமாற்
பதகத்துட் றொடிலிற்றெரி பாடாயினும் வீடா
வுதகத்தினி னுருகித்தழ லொழுகுங்கனன் மெழுகே.

இ-ள். பதகத்து உடல் தொடில் இற்று எரி பாடாயினும் விடா - பறவையினது உடம்பு தீண்டின் அது இறந்து எரிந்து அழிந்துபோன காலத்தும் அதனைவிடாத,—உதகத்தினின் உருகித் தழல் ஒழுகும் கனல் மெழுகு - நீர்போலுருகி அக்கினிச்சுடர் ஒழுகுகின்ற அக்கினிமெழுகானது;—கதம் மிக்க உரகனும் நெடு உடல் கம்பித்திட - வேகம்மிக்க சேடனும் நெடிய உடல் நடுங்க,—வெம்புற்று இதம் இற்றிட நிலனில் பெரிது எழும் முனம் விழும் - வெம்பி ஈரங்கெடும்படி பூமியிலே மிகவும் மேலே துள்ளி முன்னரே விழும். எ-று.

உடல் தொடில் விடா மெழுகு என இயையும். வீடா நீட்டல்விகாரம்.

புட்டேறிய கட்டார்பொறி புல்லின்விழி கல்லும்
தெட்டேறுயி ரட்டாறுமெய் சேதந்தரு பூத
முட்டேறரு மூட்டாள்கொலு முறவொண்புய மறவே
விட்டேறடு நெட்டாழிய வெள்ளந்தலை தள்ளும்.

இ-ள். புள் தேறிய கட்டு ஆர் பொறி புல்லின்விழி கல்லும் - புள்ளாகிய தெளிந்த காவல்பொருந்திய பொறி தன்னைச் சமீபித்து எதிர்த்தால் அவர்விழியைத் தோண்டும்,—மெய் சேதம் தரு பூதம் தெட்டு எறு உயிர் அட்டு ஆறும் - உடம்பை அழிக்கின்ற பூதம் வஞ்சித்து எதிர்ந்த உயிரைக்கொன்று கோபந்தணியும்,—முள் தேறு அரு முட்டு ஆள் கொலும் - முட்பொறி தெளிதலில்லாத எதிர்த்த ஆளைக் கொல்லும்,—விட்டேறு ஒண்புயம் அற அடும் - விட்டேறு ஒள்ளிய புயம் அறும்படி வெட்டும்,—நெடு ஆழி அ வெள்ளம் தலை தள்ளும் - நெடிய சக்கரம் அந்த (அகழி) வெள்ளத்திலே தலையை (வெட்டித்) தள்ளும். எ-று.

புள்ளாகிய பொறி என இயைக்க. கட்டார்ப்பொறி எனப் பாடங்கொண்டு தேன்பொருந்திய மாலையையணிந்த பொறி எனினுமாம். (உஅ)

கனமேவுமிவ் வினையேபுரி கதமேபல பொருள்சூழ்
சனமேயது தகைசால்வது தனமேதன துருவா
மனமேருவை விரிவாயிலெ ஞகாச மெடாநின்
றெனமேனுயர் தருகோபுர வெயினீணிலை யினதே.

இ-ள். கனம் மேவும் இ வினை புரிதகதம் மே பல பொருள் சூழ் சனம் மேயது - மிகுதியைக்கொண்ட இத்தொழில்களையே செய்கின்ற வேகம் பொருந்திய (அம்புமுதலிய) பொருள்கள் சூழ்ந்துள்ள (பொறிகளாகிய) சனங்களையுடையது,—தகைசால்வது - தகைமை மிக்கது,—தனமே தனது உருவாம் அன மேருவை விரி வாயிலென் ஆகாசம் எடா நின்றென - பொன்னே தனது வடிவாகிய அந்த மேருமலையை அகன்ற வாயிலென்கின்ற ஆகாயம் சுமந்து நின்றாற்போல,—மேல் உயர்தரு கோபுர எயில் நீள்நிலை இனது - (வாயிலின்) மேலே உயர்ந்து நிற்கின்ற கோபுரத்தையுடைய மதிலின் மிகுந்த நிலைமை இத்தன்மையது. எ-று.

வாயிலின்மேல் உயர்ந்து கோபுரம்நிற்றல் ஆகாசம் எடுத்துநிற்றல் போலிருந்ததென்பதாம். (உகூ)

துதியால்வளர் பணிமாமுடி சுடருஞ்சுட ருச்சி
மிதியாலடி சிவவாவெதிர் விரியுங்கரு மேகக்
கதியாலிடை கருகாவுயர் ககனத்தெழு கலைதோய்
மதியான்முடி வெளிறுநிறன் மலிகிற்பன மாடம்.

இ-ள். மாடம் - மாடங்கள்,—துதியால் வளர் பணி மாமுடி சுடரும் சுடர் உச்சி மிதியால் அடி சிவவா - புகழான்மிக்க சேடன் என்னும் பாம்பின் பெரிய பணமுடியில் விளங்கும் ஒளிபொருந்திய உச்சியில் மிதித்தலால் அடிசிவந்து,—எதிர் விரியும் கருமேகக் கதியால் இடைகருகா - எதிராகப் பரக்கின்ற கரிய மேகத்தின் செலவினால் இடைகருகி,—ககனத்து எழு கலைதோய் மதியால் முடி வெளிறு - ஆகாயத்திலே தோற்றுகின்ற கலைகள்பொருந்திய சந்திரனால் முடி வெளுத்து,—நிறம் மலிகிற்பன - (இவ்வாறு ஒன்றுக்கொன்று மாறான) நிறங்கள் பொலியப்பெறுவன. எ-று.

மிதி முதனிலைத்தொழிற்பெயர். துதி துத்தியுமாம். (௩0)

செவ்விப்பொலி மாடத்தலை திகழ்பைம்மணி யொளிபோய்
வவ்விப்புது நிலவைப்பெரு மதியின்புற மலிவ
வவ்விற்பயி னகரத்திரு வவளம்மதி யகடார்
நவ்விக்கினி தறுகுக்கொடி நல்குந்தகை போலும்.

இ-ள். செவ்விப் பொலி மாடத்தலை திகழ் பை மணி ஒளி போய் - அழகாற்பொலிந்த மாடத்தினுச்சியில் விளங்குகின்ற மரகதமணியின் ஒளி சென்று,—புது நிலவை வவ்வி மதியின்புறம் மலிவ - புதிய நிலவைக் கவர்ந்து சந்திரனின் புறத்தே பொருந்திப் பொலிதல்,—அ வில் பயில் நகரத் திருவவள் - அந்த ஒளிபொருந்திய நகரமாகிய பெண்ணானவள்,—அ மதி அகடு ஆர் நவ்விக்கு அறுகுக்கொடி இனிது நல்கும் தகைபோலும் - அந்தச் சந்திரனது நடுவேபொருந்திய மானுக்கு அறுகுக்கொடியை இனிதாகக் கொடுத்தல்போலும். எ-று.

மதி என்றது ஈண்டு அதன் மண்டலத்தை. மலிவபோலும் எனமுடிக்க.

துப்போடிமிர் விதியின்படி துவர்கொண்டொளிர் சுடரின்
றப்போவில மணியின்வெயி றடைசெய்தன விலையேன்
மைப்போதுயர் மாடத்திசை தரளம்வரு கதிரோன்
கைப்போது முகிழ்ப்பச்சுடர் காலாதொழி யாவே.

இ-ள். துப்போடு - பவளத்தோடு,—இமிர் விதியின்படி துவர்கொண்டு ஒளிர் சுடரின் தப்பு இல மணியின் வெயில் தடைசெய்தன - விளங்குகின்ற (பரீட்சா) விதியின்படி செந்நிறத்தைக்கொண்டு விளங்குகின்ற ஒளியையுடைய குற்றமில்லாத மாணிக்கத்தினது வெய்யில் தடைசெய்தன,—இலையேல் - (அவ்வாறு) தடைசெய்யாதொழியுமேல்,—மை போது உயர் மாடத்து இசை தரளம் - மேகங்கள் (படிந்து) செல்லுகின்ற உயர்ந்த மாடங்களிற்பொருந்திய முத்துக்கள்,—வரு கதிரோன் கைப்போது முகிழ்ப்பச் சுடர் காலாது ஒழியா - தோன்றுகின்ற சூரியனது கையிலுள்ள தாமரைமலர்கள் குவியும்படி ஒளியைக் காலாதுவிடா. (எனவே காலும் என்றபடி.) எ-று.

இலையேல் ஒழியா என முடிக்க. (௩உ)

நலியத்தகு மிகைகொண்டெதிர் நாணாதொளி நல்கப்
பொலியத்தகு பொருளென்பன புறமுண்டுகொல் பகலு
மெலியத்தகு திசையெங்கணும் விளைகின்றன விருளே
மலியத்தகு மணியுந்தெரி தரினன்னது மாதோ.

இ-ள். நலியத்தகும் மிகை கொண்டு எதிர் நாணாது ஒளி நல்கப் பொலியத்தகு பொருள் என்பன புறம் உண்டுகொல் - கெடுக்கத்தக்க மேன்மையைக்கொண்டு எதிரே நாணங்கொள்ளாது ஒளியைக் காலும்படி பொலியத்தக்க பொருள் வேறும் உண்டோ,—பகலும் மெலிய தகு திசை எங்கணும் இருள் விளைகின்றன - சூரியனும் மெலியும்படி தகைமைபொருந்திய திக்குகள் எவ்விடத்தும் இருள் உண்டாகின்றன,—மலியத்தகு மணியும் தெரிதரின் அன்னது - (அவ்விருளைப்) பொலிவுறக் காலத்தக்க மணியும் ஆராயுமிடத்து அவ்விருண்மணியேயாம். எ-று.

இருண்மணி - நீலமணி. (௩௩)

செல்லார்மணி மாடத்திடு மகிலின்புகை திரளா
மல்லார்கொடி வனமெங்கணு மறிவுற்றிடை திரிய
நில்லாதகல் பெடையென்றுற நினையாவுள மறுகிப்
புல்லார்வ மறுதேகொடு போகும்புடை புறவம்.

இ-ள். செல் ஆர் மணி மாடத்து இடும் அகிலின் புகை திரளா - மேகங்கள்படிந்த அழகிய மாடத்தின்கண் (பெண்கள் தம் கூந்தலுக்கு) இட்ட

அகிற்புகை திரண்டு,—மல் ஆர் கொடி வனம் எங்கணும் மறிவுற்று இடை திரிய - பொலிவுபொருந்திய கொடிக்காடெங்கும் தடைப்பட்டு இடையே திரிய,—புறவம் நில்லாது அகல் பெடை என்று உற நினையா - புறுக்கள் (தம்மோடு) நில்லாது செல்லுகின்ற பெடைகள் என்று நன்கு நினைத்து,— உளம் மறுகிப் புல் ஆர்வம் அறாது கொடு புடை போகும் - மனம் சுழன்று (அதனைத்) தழுவுகின்ற விருப்பத்தை (தன் மனத்தே) நீங்காதுகொண்டு (அதன்) பக்கத்தே செல்லும். எ-று.

வடிவும் நிறமும்பற்றிவந்த மயக்கம். திரிய நினையா மறுகிச் செல்லும் என முடிக்க. இது மயக்க அணி. (௩௪)

மேலாயிர முளசாளர விழிவானி வியன்கை
நாலாயிர முளமாமுடி நவிலாயிர வரையே
காலாயிர முளகாணுநர் கண்ணுயிர ரல்லா
லேலாவியன் மணிமாடநல் லியல்காணிய வம்மா.

இ-ள். மேல் சாளர விழி ஆயிரம் (வரை) உள - (அம்மாடங்களின்) மேலே சாளரமாகிய கண்களும் ஆயிரம் வரையில் உள்ளன,—வானி வியன்கை நாலாயிரம் (வரை) உள - கொடியாகிய பெரிய கைகளும் நாலாயிரம்வரையில் உள்ளன,—மா முடி நவில் ஆயிரம் வரை (உள) - பெரிய முடிகளும் சொல்லப்படுகின்ற ஆயிரம்வரையிலுள்ளன,—கால் ஆயிரம் (வரை) உள - கால்களும் ஆயிரம்வரையிலுள்ளன,—காணுநர் கண் ஆயிரர் அல்லால் இயல் மணி மாட நல் இயல்காணிய ஏலா - பார்ப்போர் ஆயிரங்கண்களையுடையராயிருந்தாலன்றிச் சிறந்த மணிகளையுடைய மாடங்களின் அழகைப் பார்த்தற்கு முடியாது. எ-று.

முடி சிகரமும், தலையும். ஏலாது என்பது துவ்விகுதி கெட்டுநின்றது. உள என்பதை வரை என்பதனோடும் வரை என்பதைச் சாளரமுதலியவற்றின்றொகையோடுங் கூட்டுக. (௩௫)

பொன்றுஞ்சுவ மணிதுஞ்சுவ புயறுஞ்சுவ புயலின்
மின்றுஞ்சுவ விதிதுஞ்சுவ வெயிறுஞ்சுவ வெயிலின்
மன்றுஞ்சுவ வான்மீனொடு மதிதுஞ்சுவ வென்றா
லென்றுஞ்சுவ புலவோர்புக ழெழின்மேருவின் மாதோ.

இ-ள். பொன் துஞ்சுவ - (இம்மாடங்களிலே) பொன்னுங் கிடக்கின்றன,—மணி துஞ்சுவ - மணிகளுங் கிடக்கின்றன,—புயல் துஞ்சுவ - மேகங்களுங்கிடக்கின்றன,—புயலின் மின் துஞ்சுவ - மேகங்களிலுள்ள மின்னல்களுங்கிடக்கின்றன,—விதி துஞ்சுவ - சிருட்டியுங் கிடக்கின்றது,—வெயில் துஞ்சுவ - வெய்யிலுங் கிடக்கின்றது,—வெயிலின்மன் துஞ்சுவ - அவ்வெய்யிலைச்செய்கின்ற சூரியனுங் கிடக்கின்றது,—வான்மீனொடு மதி துஞ்சுவ என்றால் - நட்சத்திரங்களுஞ் சந்திரனுங் கிடக்கின்றன என்றால்,—புலவோர்

புகழ் எழில் மேருவின் என் துஞ்சுவ - புலவர்களாற் புகழப்படுகின்ற அழகிய மேருமலையில் (இவற்றிலும் விசேடமாக) என்ன கிடக்கின்றன. எ-று.

என் என்பது ஈண்டு இன்மை குறித்துநின்றது. எல்லாப்பொருளு மிங்கேயே கிடக்கின்றன என்றால் இவற்றிலும் விசேடமாக மேருவிலே என்ன கிடக்கின்றது என்பது கருத்து. சிருட்டி - சித்திரமுதலிய படைப்பு. துஞ்சுவ என்பதற்கு மாடங்களை எழுவாயாக்கல் இத்துணைச் சிறப்பின்று.

சந்தனத் தேய்வை பூசிக் குங்குமந் தெளித்துத் தாதுக்
கொந்தலர்க் குப்பை வித்திக் குருமணிக் கோதை நாற்றி
யந்தரத் தமரர்க் கேனு மடியிடற் கரிய வாகி
யிந்திரற் கிருக்கை யாக வகமெலா மியன்ற வன்றே.

இ-ள். அகமெலாம் - (அம்மாடங்களின்) உள்ளிடமெல்லாம்,—சந்தனத் தேய்வை பூசி - சந்தனக்குழம்பான் மெழுகி,—குங்குமம் தெளித்து - (அழகின்பொருட்டுக்) குங்குமநீர் தெளித்து,—தாதுக் கொந்து அலர்க் குப்பை வித்தி - மகரந்தத்தையுடைய கொத்தின்கண் அலராநின்ற பூத்திரள்களைப் பரப்பி,—குரு மணிக் கோதை நாற்றி - ஒளிபொருந்திய மணிமாலைகளைத் தூக்கி,—அந்தரத்து அமரர்க்கேனும் அடியிடற்கு அரியவாகி இந்திரற்கு இருக்கை ஆக இயன்ற - வானிலுள்ள தேவர்களுக்காயினும் மிதித்தற்குக் கூடாதனவாகி இந்திரனுக்கு இருப்பிடமாகச் செய்யப்பட்டன. எ-று.

பூசி, தெளித்து, வித்தி, நாற்றி, இயன்ற எனவும், ஆகி இயன்ற எனவும் தனித்தனி முடிக்க. (கூஎ)

நாவியு மகிலு நாறு நறுங்குழற் றேவர் கோமான்
றேவியுந் திருவும் வேட்கும் பளிக்கர மியமுஞ் செங்கண்
காவியுங் கயலு மன்னார் காற்றடஞ் சுவடுங் கஞ்ச
வாவியு மலரு மாகத் துஞ்சுவ வனங்க ளெல்லாம்.

இ-ள். வனங்கள் எல்லாம் - (அந்நகரின்) இடங்கள் எல்லாம்,—நாவியும் அகிலும் நாறும் நறும் குழல் தேவர்கோமான் தேவியும் திருவும் வேட்கும் பளிக்கு அரமியமும் - நாவிப்புழுகும் அகிற்குழம்பும் நாறுகின்ற நல்ல கூந்தலையுடைய இந்திரன்மனைவியாகிய இந்திராணியும் இலக்குமியும் விரும்புகின்ற பளிங்காலாகிய நிலாமுற்றமும்,—செங்கண் காவியும் கயலும் அன்னார் கால் தடம் சுவடும் - (அம்முற்றங்களிலே) சிவந்த கண்கள் காவியையும் கயலையும் ஒத்தவர்களாகிய மகளிர்களது காலினது பெரிய சுவடுகளும்,—கஞ்சவாவியும் மலரும் ஆகத் துஞ்சுவ - தாமரைவாவியும் (அதிலே) தாமரைமலர்களுமாகக் கிடக்கின்றன. எ-று.

பளிக்கரமியமும் அதிற்பொருந்திய சுவடும், வாவியும் அதிற்பொருந்திய தாமரைமலர்களும் வேறுபாடு தெரியாது தம்முளொத்துக் கிடக்கின்றனவாதலின் இங்ஙனங்கூறினார். நிரனிறை. (கூஅ)

வெயிலல வறியா மாட விளங்கொளி யடியி னூடு
மயிலல வனங்க ணப்பண் வான்வழி வருவா ராறுந்
துயிலல வியக்கர் சேக்கை யுச்சியிற் சூழ்ந்த மேக
வெயிலல வான்யா றோடு மீர்ங்கிடங் கிடங்க ளெல்லாம்.

இ-ள். இடங்கள் எல்லாம் - (அந்நகரின்) இடங்களெல்லாம்,—வெயில் அல அறியா மாட விளங்கு ஒளி அடியில் - இருள் பயின்றறியாத மாடங்களினது விளங்குகின்ற ஒளியையுடைய அடியில் இருப்பன,—ஆடும் மயில் அல அனங்கள் - ஆடுகின்ற மயில்கள்; அல்லாதன அன்னங்கள்,—நாப்பண் வான்வழி வருவார் ஆறும் துயில் அல இயக்கர் சேக்கை - நடுவே (உள்ளன) ஆகாயவழியில் வருகின்றவர்களாகிய தேவர்கள் இளைப்பாறுகின்ற துயிலிடம்; அல்லாதன இயக்கர்களது துயிலிடம்,—உச்சியில் சூழ்ந்த மேக எயில் அல வான்யாறு ஓடும் ஈர் கிடங்கு - உச்சியிலே (பொருந்துவன) சூழ்ந்துள்ள மேகங்களாலாகிய மதில்; அல்லாதன ஆகாயகங்கை ஓடுகின்ற குளிர்ந்த கிடங்கு. எ-று.

வெயிலல்லாதன - இருள். (ஙக)

நீணிலை நிரந்த செவ்வி நிறைமரைப் பொகுட்டு வைகும்
பேணிய லரச வன்னப் பொலிவினிற் பிறங்கு மென்ப
சேணொளி ருடுக்கள் சூழச் செம்மணித் திரளிற் செய்த
மாணெழின் மாடத் துச்சி வதிந்தவெண் மதிய மாதோ.

இ-ள். சேண் ஒளிர் உடுக்கள் சூழ - ஆகாயத்தில் விளங்குகின்ற நட்சத்திரங்கள் சூழ,—செம்மணித் திரளின் செய்த மாண் எழில் மாடத்து உச்சி வதிந்த வெண்மதியம் - மாணிக்கமணித்தொகுதியாற்செய்த மாட்சிமைபொருந்திய அழகினையுடைய மாடங்களின் உச்சியிற்பொருந்திய வெள்ளிய சந்திரன்,—நீள் நிலை நிரந்த செவ்வி நிறை மரைப் பொகுட்டு வைகும் - உயர்ந்த அரசிருக்கையாகப் பரந்துள்ள அழகுநிறைந்த தாமரைப்பொகுட்டிலிருக்கும்,—பேணு இயல் அரச அன்னப் பொலிவினின் பிறங்கும் - மதிக்கப்படும் இயல்பையுடைய (அன்னங்களாற் சூழப்பட்ட) அரச அன்னத்தின் பொலிவைப்போல விளங்கும். எ-று.

சூழ வதிந்த வெண்மதியம் பிறங்கும் என முடிக்க. உடு சூழ்ந்த அன்னங்கள்போல் இருந்தன என்க. உடுக்கள் சூழ என்றதனானும், அரசவன்னமென்றதனானும் அன்னங்களாற் சூழப்பட்டமை பெற்றாம். இனிப் பேணு இயல் அரச அன்னமென்பதற்கு அன்னங்களாற் பேணப்படுமியல்புடைய அரச அன்னமெனப் பொருள்கொண்டு அதனானே அன்னங்களின் சூழ்வைப்பெறுதலுமாம். (சo)

உரங்கொடு தோன்றும் பானு வும்பரா யிரத்து வெய்ய
கரங்கொடு தடுக்கு மேனுங் காத்திட லாவ துண்டோ

திரங்கொடு மாடத் திட்ட வகிற்புகை விசும்பிற் றேடிப்
பரங்கொடு போகிச் சேப்ப மண்டலம் பரக்கு மன்றே.

இ-ள். உரம் கொடு தோன்றும் பானு - வலிமையைக்கொண்டு தோன்றுகின்ற சூரியன்,—உம்பர் ஆயிரத்து வெய்ய கரம் கொடு தடுக்குமேனும் காத்திடல் ஆவதுண்டோ - ஆகாயத்திலே ஆயிரமான கொடிய கைகளைக்கொண்டு தடுப்பானாயினும் (பரக்காதபடி) காக்குந்தன்மைகூடுமோ,—திரம் கொடு மாடத்து இட்ட அகிற்புகை - வலிதாக மாடத்தில் இடப்பட்ட அகிற்புகையானது,—விசும்பில் தேடி பரம் கொடு போகி சேப்ப மண்டலம் பரக்கும் - ஆகாயத்திலே தேடி மிகுதிகொண்டு சென்று சிவக்கும்படி சூரிய மண்டலத்திற் பரக்கும். எ-று.

ஒ - எதிர்மறை. சேப்பப் பரக்கும் என இயையும். இங்ஙனமே, "திருந்துசாறடுவுழிப்பரந்ததீம்புகை - பரந்துவிண்புகுதலிற்பரிதிசேந்ததே" என்றார் பிறரும். (சக)

நீலுறு மணிசெய் மாட நிரந்தசெந் துகிற் பதாகை
யோலுறு பெருக்கி னண்ட மொறுக்குநீ டுததி யூடே [வே
மாலுறக் கொழுந்து கொண்டங் கெழுந்துவிண் வாவிச் செவ்
காலுற நிமிர்ந்த வூழிக் கனலினிற் கவினு மாதோ.

இ-ள். நீலுறு மணி செய் மாடம் நிரந்த செம் துகிற் பதாகை - நீலமணிகளாற் செய்யப்பட்ட மாடங்களின்மீது நிறைந்துள்ள செந்நிறமான துகிற்கொடிகள்,—ஓலுறு பெருக்கின் அண்டம் ஒறுக்கும் நீடு உததியூடு - ஒலிபொருந்திய பெருக்கினாலே அண்டத்தை அழிக்கின்ற நெடிய கடலினிடத்தே,—மாலுறக் கொழுந்துகொண்டு எழுந்து - பெரிதாகக் கொழுந்துவிட்டெழுந்து,—விண் வாவி செவ்வே காலுற நிமிர்ந்த ஊழிக் கனலின் கவினும் - ஆகாயத்திலே தாவி நன்கு அடிபொருந்தக் கிளர்ந்த ஊழித்தீயைப்போல விளங்கும். எ-று.

ஊடு நிமிர்ந்த ஊழிக்கனல் என இயையும். பதாகை கவினும் என முடிக்க. நீலமணிமாடம் கடல்போலவும், செந்துகிற்பதாகை ஊழிக்கனல் போலவும் இருந்தன என்க. (சஉ)

திருவளங் குலவு பொன்றோய் துகிற்கொடி யும்பர் சேண்போ
யுருவிகந் தொளிர்தன் மேலங் கதனுதி யுறுத்த லாலே
பொருவரும் வயிறு போழ்ந்து புட்கலா வத்தம் பொன்னங்
கருவழிந் தொழுகல் போலுங் காட்டுவ காட்சித் தம்மா.

இ-ள். திரு வளம் குலவு பொன் தோய் துகிற்கொடி உம்பர் சேண் போய் உரு இகந்து ஒளிர்தல் - அழகினது வளம்விளங்குகின்ற பொன்னிறந் தோயப்பெற்ற துகில்களையுடைய கொடிகள் ஆகாயத்தில் உயரச்

சென்று தன்வடிவு தோன்றுமல் விளங்குதல்,—மேல் அதன் நுதி உறுத்தலால் - மேலே அதனுடைய நுதி உறுத்திவிடுதலால்,—புட்கலாவத்தம் பொருவு அரும் வயிறு போழ்ந்து பொன்னம் கரு அழிந்து - புட்கலாவத்தமென்னுமேகம் ஒப்பில்லாத வயிறு பிளந்து பொற்கரு அழிந்து,—ஒழுகல் காட்டுவ காட்சித்து - ஒழுகுதலைக் காட்டுவனவாகிய காட்சியை உடையது. எ-று.

ஒளிர்தல் காட்சித்து என முடிக்க. போலும் - அசைநிலை. (சாரு)

என்றன மாடந் தோறு மினங்கொள் வெண்கொடிகள் வான
மீன்றகு பதத்தி னீடி மேதக விளங்குந் தோற்றம்
வான்றகு கருணைத் தெய்வ மாநதி வளங்கொள் வாரி
யான்றபன் முகங்கொ டிம்ப ரணைவது போன்ற தன்றே.

இ-ள். என்றன மாடம் தோறும் இனம்கொள் வெண்கொடிகள் - உயர்ந்த மாடங்கடோறும் உள்ள கூட்டமான வெண்கொடிகள்,—வானமீன் தகுபதத்தில் நீடி மேதக விளங்கும் தோற்றம் - நடசத்திரபதவியின்கணுயர்ந்து மேன்மையுற விளங்குகின்ற தோற்றம்,—வான் தகு கருணைத் தெய்வ மாநதி வளம்கொள் வாரி - வானிலுள்ள மேலான அருளையுடைய தெய்வத்தன்மைபொருந்திய பெரிய (கங்கா) நதியின் வளத்தைக்கொண்ட நீர்,—ஆன்ற பல் முகங் கொடு இம்பர் அணைவது போன்றது - அகன்ற பல முகங்களைக்கொண்டு இப்பூமியில் வருவதை ஒத்தது. எ-று.

தோற்றம் போன்றது என முடிக்க. ஈண்டுக் கங்கை நிறமுந் தொழிலும்பற்றிய உவமை. (சாச)

கார்க்குல மழுந்து மாடங் கணிப்பில வனந்த மோர்காற்
றேர்க்கதி தடுக்குஞ் சாலை தெளிக்கலை செவ்வி சேரு
நீர்க்கதிர் படுக்குங் கோயி லுலப்பில கோடி நீண்ட
பார்க்கமை தரிக்கு நாகஞ் சுமக்கலாப் பவன மாதோ.

இ-ள். கார்க்குலம் அழுந்தும் மாடம் கணிப்பு இல - முகிற்கூட்டங்கள் படிகின்ற மாடங்களும் அளவில்லாதன,—ஓர் கால் தேர் கதி தடுக்கும் சாலை அனந்தம் - ஒருருளையுடைய தேரின்கதியைத் தடுக்கின்ற சாலைகளும் அளவில்லாதன,—தெளி கலைச் செவ்வி சேரும் நீர்க்கதிர் படுக்கும் கோயில் உலப்பு இல - தெளிந்த கலைகளையுடைய அழகுபொருந்திய சந்திரன் துயிலுகின்ற கோயில்களும் அளவில்லாதன,—நீண்ட பார் கமை தரிக்கும் நாகம் சுமக்கலாப் பவனம் கோடி - நெடிய பூமியின் பாரத்தைத் தாங்கும் (சேடனாகிய) பாம்பு சுமக்கக்கூடாத பவனங்களும் கோடியாகும். எ-று.

சந்திரனுக்குத் தண்கதிர் எனவு மொருபெயராதலின், அதனை நீர்க்கதிர் என்றார். பவனம் - பாகசாலை. (சரு)

கணிக்குல மலர்ந்த வன்ன கதிர்க்குல மனந்தஞ் சேய
மணிக்குல மனந்த நீல வனக்குல மனந்த மோவப்
பணிக்குல மனந்தந் தாரப் பாற்குல மனந்த மார
வணிக்குல மனந்த மோரைந் தணைக்குல மனந்தமன்றே.

இ-ள். கணிக்குலம் மலர்ந்த அன்ன கதிர்க்குலம் அனந்தம் - வேங்கைமரக்கூட்டங்கள் மலர்ந்தாற்போன்ற ஒளியையுடைய (பொற்) கோயில்களும் அளவில்லாதன,—சேயமணிக்குலம் அனந்தம் - மாணிக்கமணிகளாலாய கோயில்களும் அளவில்லாதன,—நீலவனக் குலம் அனந்தம் - நீலநிறத்தையுடைய கோயில்களும் அளவில்லாதன,—ஓவப் பணிக் குலம் அனந்தம் - சித்திரத்தொழில்களையுடைய கோயில்களும் அளவில்லாதன,—தாரப் பால் குலம் அனந்தம் - வெள்ளியாலாகிய வெண்ணிறக்கோயில்களும் அளவில்லாதன,—ஆர அணிக் குலம் அனந்தம் - முத்துக்களாலாய அழகிய கோயில்களும் அளவில்லாதன,—ஓர் ஐந்து அணைக்குலம் அனந்தம் - பஞ்சசயனங்களையுடைய கோயில்களும் அளவில்லாதன. எ-று. (௬௬)

ஆர்ப்பன திசைக ளெல்லா நாடக வரங்க மல்லை
யீர்ப்பன மகரி காநற் றோரண மிகலி வானைத்
தூர்ப்பன கடாத்த வேழச் சேவகஞ் சுற்று முற்றும்
பார்ப்பன திசைக ளெல்லாம் பாய்பரிப் பந்தி மாதோ.

இ-ள். திசைகளெல்லாம் ஆர்ப்பன நாடக அரங்கம் - திக்குகளெல்லாம் ஆரவாரிப்பன நாடகசாலைகள்,—அல்லை ஈர்ப்பன நல் மகரிகாதோரணம் - இருளைக்கெடுப்பன நல்ல மகரதோரணங்கள்,—இகலி வானைத் தூர்ப்பன கடாத்த வேழச் சேவகம் - மாறுபட்டு ஆகாயத்தை நிறைப்பன மதத்தையுடைய யானைகளது துயிலிடங்கள்,—சுற்று முற்றும் பார்ப்பன திசைகளெல்லாம் பாய் பரிப் பந்தி - சுற்றுப்பக்கமுழுதும் பார்க்கப்படுகின்றன திக்குகளிலெல்லாம் பாய்கின்ற குதிரைகளையுடைய பந்திகள். எ-று.

சேவகம் - யானைத்துயிலிடம். அது; "சேவகஞ்செல்வனகரிகள்" என்பதனுமறியப்படும். (௬௭)

வேறு.

மாறின் மாமலர்ப் பீடமும் வாசமே
யூறு நீரபி டேகமு மொண்டளச்
சேறு மேகொடு செல்வியர் வெம்முலை
வீறு தாழ விளங்குவ வீதியே.

இ-ள். மாறு இல் மா மலர்ப் பீடமும் - ஒப்பில்லாத பெரிய மலர்ப்பீடத்தையும்,—வாசமே ஊறு நீர் அபிடேகமும் - வாசனைப்பொருள்களோடு சேர்ந்து ஊறிய பனிநீரபிடேகத்தையும்,—ஒண் தளச் சேறும் கொடு - ஒள்

ளிய சந்தனச்சேற்றையுங்கொண்டு,—செல்வியர் வெம் முலை வீறு தாழ-மகளிர்களது விரும்பப்படும் முலைகள் பெருமைகுன்றும்படி,—வீதி விளங்குவ - வீதிகள் விளங்குவன. எ-று.

மலர்ப்பீடம் - மலராசனம். அது கால்மிதித்தற்காக வைக்கப்பட்டுள்ளது. மலர்முதலிய மூன்றையும் முலைகளுமுடைமையின் வீறுதாழ என்றார்.

மன்றன் மாதர் தனமு மராட்டமு
மொன்றி னொன்றிகல் போல வுகுத்தன
துன்று குங்குமத் தொய்யினு மாலையு
மன்றி யெங்கணு மந்நெறி யின்றரோ.

இ-ள். மன்றல் மாதர் தனமும் மராட்டமும் - மணமகளிரது தனங்களும் கூந்தலும்,—ஒன்றின் ஒன்று இகல் போல உகுத்தன - ஒன்றோடொன்று பகைத்தல்போலச் சொரிந்தனவாகிய,—துன்று குங்குமத் தொய்யிலும் மாலையும் அன்றி - நெருங்கிய குங்குமச்சேறும் மாலைகளுமேயன்றி,—அ நெறி எங்கணும் இன்று - அவ்வழிகள் எவ்விடத்தும் (பிறிதொன்று) இல்லை. எ-று.

நிரனிறை. இகல் - முதனிலைத்தொழிற்பெயர். (சக)

கான ருழ்முடித் தேர்செல் கடத்துடற்
கூன றுமதிக் கோட்டச லம்பொழி
வான றுமத முண்டு மயக்கறுத்
தேன றுதன சென்னெறி யெங்குமே.

இ-ள். கானல் முடி தாழ் தேர் செல் கடத்து - கானலாகிய முடி பொருந்திய தேர் செல்லுகின்ற காட்டிற் பிறந்த,—உடல் கூன் அறு மதிக் கோட்டு அசலம் பொழி - உடல் வளைவுநீங்காத பிறைபோலும் கோட்டினையுடைய யானைகள் சொரிகின்ற,—வான் அறு மதம் உண்டு மயக்கு அறு தேன் - மழைபோல் நீங்காத மதத்தை உண்டு மயக்கம்நீங்காத வண்டுகள்,—செல் நெறி எங்கும் அறுதன - செல்லுகின்ற வழி எங்கும் நீங்காதுள்ளன. எ-று.

கூன் - வளைவு. வான் - ஆகுபெயர். (ரு0)

பன்னி வார்குழற் பைந்தொடி யார்முலைத்
துன்னி வீழ்சுணந் தூர்த்தன வில்லையே
லுன்னி வாய்ப்பொன் கறித்திட வூறிவீழ்
கன்னி யாறு கடக்கரி தாமரோ.

இ-ள். பன்னி வார் குழல் பைம் தொடியார் முலைத் துன்னி வீழ் சுணம் - குளிர்ச்சிபொருந்திய நீண்ட கூந்தலையும் பசிய வளையலையுமுடை

யவர்களாகிய மகளிர்களது முலையிற்பொருந்தி வீழாநின்ற சுண்ணங்கள்.—தூர்த்தன இல்லையேல் - தூர்க்காதொழிந்தனவாயின்,—உன்னி வாய்ப் பொன் கறித்திட ஊறி வீழ் கன்னியாறு - குதிரைகள் கடிவாளத்தைக் கடிப்ப ஊறிச் சொரியாநின்ற அழிவில்லாததாகிய விலாழியாறு,—கடக்க அரிதாம் - கடத்தற்குக் கூடாததாகும். எ-று.

பன்னி - விகாரம். உன்னி - குதிரை. தூர்த்தன என்பதை முற்றுக் கிப் பொருள்கூறினுமமையும். (௩௧)

கள்ளி யிட்ட வகிற்குழற் கன்னியர்
தள்ளி யிட்ட கலன்பல தங்குவ
தெள்ளி யிட்ட வளகைத் திருவெலா
மள்ளி யிட்டன வன்ன தகைத்தரோ.

இ-ள். கள்ளி இட்ட அகில் குழல் கன்னியர் தள்ளியிட்ட கலன் பல தங்குவ - கள்ளிகள்சொரிந்த அகிலாலுண்டாக்கிய புகையூட்டப்பெற்ற கேசத்தைக்கொண்ட மகளிர் அணிந்து நீக்கிய ஆபரணங்கள் பல தங்குதல்,—தெள்ளி இட்ட அளகைத் திரு எலாம் - தெளிந்து (விசேடமுடையதாக) வைக்கப்பட்ட அளகாபுரியிலுள்ளசெல்வங்களையெல்லாம்,—அள்ளி இட்டன அன்ன தகைத்து - அள்ளிவைத்தாற்போன்ற தகைமையையுடைத்து. எ-று.

"கள்ளிவயிற்றினகில்பிறக்கும்" என்பதுபற்றிக் கள்ளியிட்டவகில் என்றார். "பேய்பிளந்தொக்கநின்றுலர்பெருங்கள்ளியின்—றுய்பிளந்துக்க காரகில்களும்" என்றார் கம்பரும். மிகுதிபற்றி இங்ஙனங் கூறினார். (௩௨)

மாறின் மாமுடி மன்னவர் வையமீ
தேறு பேரணி மின்ன வியங்கலாற்
கூறு வீதிக டோறுங் கதிர்குழீஇச்
சேற லென்ன விளங்குந் தெருவெலாம்.

இ-ள். மாறு இல் மாமுடி மன்னவர் வையம் மீது ஏறு பேர் அணி மின்ன இயங்கலால் - ஒப்பில்லாத பெரியமுடியையுடைய அரசர்கள் தேரின் மீதாக உயர்ந்த பெரிய ஆபரணங்கள் பிரகாசிக்கச் செல்லுதலால்,—தெரு எலாம் - வீதிகளெல்லாம்,—கூறு வீதிகள் தோறும் கதிர் குழீஇ சேறல் என்ன விளங்கும் - சொல்லப்பட்ட வீதிகடோறும் சூரியர்கள் கூடிச்செல்லுதல்போல விளங்கும். எ-று.

வீதி என்றது மேடமுதலிய பன்னிருவீதிகளை. அதுவே ஆசிரியர்கருத்தாதல் "மாந்தளிர்மேனிநல்லாள்.........திங்கள்—காந்தொருவீதிதன்னைக் கடந்தொருவீதிதன்னிற்—போந்தென" என்பதனறியப்படும். அவ்வீதிகடோறும் எனச் சுட்டிப் பொருள்கோடல் இத்துணைச் சிறப்பின்று. ஏறுபேரணி என்பதை ஏறுபு ஏர் அணி எனக் கண்ணழித்துப் பொருள் கூறுவாருமுளர். (௩௩)

தொடைகு றிக்கொடு தூதுசெல் பாணர்கைக்
கிடைகி டப்பினு மெங்கணு மேகுமா
னடைய ருக்கி நடக்கு மின்னார்நிலைப்
படவு ருக்கிய தந்திரிப் பாணியே.

இ-ள். தொடை குறிக்கொடு தூது செல் பாணர் கைக்கு இடை கிடப்பினும் - மாலையை அடையாளமாகக்கொண்டு தூதாகச் செல்லுகின்ற பாணரது கையினிடத்தே கிடந்தாலும்,—நடை அருக்கி நடக்கும் மின்னார் நிலைப்பட உருக்கிய தந்திரிப் பாணி - நடையை ஒடுக்கி நடக்கின்ற பெண்கள் தங்கிநிற்கும்படி (அவர் மனத்தை) உருக்கிய யாழினது பாடல்,—எங்கணும் ஏகும் - எங்கும் செல்லும். எ-று.

யாழ் கையின்கட்கிடந்தாலும் பாணி எங்கும் செல்லும் என்றபடி. நிலைப்பட என்பதற்குக் காமத்தில் நிலைப்பட என்பாருமுளர். (கச)

புக்கு டன்வல னேர்ந்திளை யோர்புகழ்ந்
தக்கு டங்கை யறைந்திடு மார்ப்புடன்
மிக்கு டம்பை வெறுத்தென வெம்பிநீள்
குக்குடம் பொரக் கூவொலி யோங்குமே.

இ-ள். மிக்கு உடம்பை வெறுத்தென வெம்பி நீள் குக்குடம் பொர - மிகவும் உடம்பை வெறுத்தாற்போலக் கோபித்து நெடிய கோழிகள் போர் செய்ய,—இளையோர் புக்கு உடன் வலன் நேர்ந்து புகழ்ந்து - காளையர்கள் வந்துகூடி உடனே வெற்றியைப்பேசி (த் தத்தங் கோழிகளை) ப் புகழ்ந்து,—அ குடங்கை அறைந்திடும் ஆர்ப்புடன் - அந்த உள்ளங்கைகளை ஒன்றோடொன்று அடிக்கின்ற ஆரவாரத்தோடு,—கூவு ஒலி ஓங்கும் - (அவைகள்) கூவுகின்ற ஓசையும் மிகும். எ-று.

வெறுத்தெனப் பொர என இயையும். இது கோழிவென்றி. (தொல்-பொரு-எடு-சூ.) (கரு)

வெங்கை வேழத் தெதிரெதிர் வீரர்பொற்
கொங்கை வேழ மெதிரக் குலைவரால்
வங்க வேழம் பரப்புவி மேன்மதன்
செங்கை வேழச் செயலல தில்லையே.

இ-ள். வெம் கை வேழத்து எதிர் எதிர் வீரர் - கொடிய துதிக்கையையுடைய யானைக்கு எதிரே எதிர்த்துப் போராடும் வீரர்கள்,—பொன் கொங்கை வேழம் எதிரக் குலைவர் - பெண்களது அழகிய முலைகளாகிய யானைகள் எதிர்வர நிலையழிந்து தோல்வியடைவார்கள்,—வங்க எழ் அம் பரப் புவிமேல் - தோணிகள்செல்லுகின்ற எழுகடல்களாற் சூழப்பட்ட பூமி

யின்மேல்,—மதன் செங்கை வேழச் செயல் அலது இல்லை - மன்மதனது சிவந்த கையிலுள்ள கருப்புவில்லின் செயலேயன்றி (மேற்பட்ட) வேறு செயல் இல்லை. எ-று.

அம்பரம் - கடல். இது அதிகோத்தி என்னுமணி. (ருசு)

முட்டி வான்மறைத் துக்கதிர் மூடிமே
லெட்டி நாக ரிமைத்திட வேறுமான்
மட்டி லாகுதி யாவி வளர்ந்தெழ
வட்டி லாவியொ டாரகி லாவியே.

இ-ள். மட்டு இல் ஆகுதி ஆவி வளர்ந்து எழ - அளவற்ற ஓமாக்கினியின் புகையானது வளர்ந்து மேலெழ,— அட்டில் ஆவி ஒடு ஆர் அகில் ஆவி -(அதனோடு) அட்டிற்புகையும் நிறைந்த அகிற்புகையும்(கலந்து),—வான் முட்டி மறைத்துக் கதிர் மூடி - ஆகாயத்தை அளாவி மறைத்துச் சூரியனையும் மூடி,—மேல் எட்டி நாகர் இமைத்திட ஏறும் - மேலே சென்று தேவர்கள் இமைக்கும்படி உயரும். எ-று.

ஆகுதி - ஆகுபெயர். அட்டில் - மடைப்பள்ளி. (ருஎ)

நெரிநி ரம்பு நெருக்கினின் மைந்தர்தோட்
கிரிநி ரம்பிய மல்லிகை கீழ்விழ
வரிநி ரம்புகண் மங்கையர் கொங்கையாற்
சரிநி ரம்புவ சண்பக மாலையே.

இ-ள். நெரி நிரம்பு நெருக்கினின் - நெரித்தல் மிக்க (சன) நெருக்கத்தினாலே,—மைந்தர் தோள் கிரி நிரம்பிய மல்லிகை கீழ் விழ - ஆடவர்களது புயமலைகளில் நிறைந்துள்ள மல்லிகைமாலைகள் கீழே (நழுவி) விழ,—வரி நிரம்பு கண் மங்கையர் கொங்கையால் சண்பகமாலை சரி நிரம்புவ - செவ்வரிநிறைந்த கண்களையுடைய மகளிரது முலைகளினின்றுஞ் சண்பகமாலைகளுஞ் சரிந்து வீழ்வன. எ-று.

நெருக்கினின் விழச் சரிநிரம்புவ என்க. நெருக்கினாலே புயத்திலுள்ள மல்லிகைமாலைகளும் விழ முலையிலுள்ள சண்பகமாலைகளும் விழும் என்பதாம். (ருஅ)

தைக்கு நீண்மருப் புக்கரி தார்மலை
யொக்க நிற்பன வோர்புடை யோர்புடை
யிக்கு வேட னிகறருஞ் சேனைய
மிக்கு வார்புனை வெம்முலை வேழமே.

இ-ள். தைக்கும் நீள் மருப்புக் கரி தார் மலை ஒக்க நிற்பன ஓர்புடை - தைக்கின்ற நீண்ட கோட்டினையுடைய யானைகள் நெடிய மலைகள்போல

நிற்பன ஒருபக்கத்தில்;—ஓர்புடை இக்கு வேள் தன் இகல் தரும் சேனைய மிக்கு வார்புனை வெம்முலை வேழம் (தார்மலை ஒக்க நிற்பன) - ஒருபக்கத்திற் கருப்பு வில்லையேந்திய மன்மதனது போரைச்செய்கின்ற சேனைகளிடத்துள்ள மீறுதலாலே கச்சைப்புனைந்த விரும்பப்படும் முலைகளாகிய யானைகள் நெடிய மலைகள்போல நிற்பன. எ-று.

தார்மலை ஒக்கநிற்பன என்பது பின்னுங் கூட்டப்பட்டது. மிக்குப் புனைந்த என்பதற்கு நன்குபுனைந்த எனினுமாம். கோட்டுவேழம் நிற்கும் ஒருபால்; ஒருபால் முலைவேழம்நிற்கும் என்பதாம். (௯௬)

எண்ணி லாமுடி மன்ன ரெழிற்குடை
யொண்ணி லாவொரு பாலொரு பாலெலாந்
தண்ணி லாவிய சாளர வாய்நகை
வெண்ணி லாமதி நின்றுவி ளங்குமே.

இ-ள். எண் இலா முடி மன்னர் எழில் குடை ஒண் நிலா (நின்று விளங்கும்) ஒருபால் - அளவிலலாத முடியையுடைய அரசர்களது அழகிய குடையின் ஒள்ளியநிலா நின்றுவிளங்கும் ஒருபக்கத்தில்,— ஒரு பால் எலாம் நகை வெண் நிலா மதி தண் நிலாவிய சாளர வாய் நின்று விளங்கும் - ஒரு பக்கத்திலெல்லாம் நகையாகிய வெள்ளிய நிலாவையுடைய சந்திரன் குளிர்ச்சிவிளங்கிய சாளரத்தினிடத்துநின்று விளங்கும். எ-று.

நின்று விளங்கும் என்பது முன்னுங் கூட்டப்பட்டது. நகைவெண்ணிலாமதி - முகம். குடைநிலாவிளங்கும் ஒருபால்; ஒருபால் மதிநிலாவிளங்கும் என்பதாம். (௯௦)

தாங்கு மன்னர் தருந்திறைப் பொன்வெயி
லோங்கு கின்றன வோரய லோரயல்
பாங்கி வர்ந்து பரப்பன பைம்பொனார்
தேங்கொள் குந்தள ராசித் திமிரமே.

இ-ள். தாங்கும் மன்னர் தரும் திறைப் பொன் வெயில் ஓங்குகின்றன ஓர் அயல் - (பூமியைத்) தாங்குகின்ற அரசர்கள் கொடுக்கின்ற திறைப் பொன்னினது வெய்யில்மிகுகின்றன ஒருபக்கத்தில்,—ஓர் அயல் பைம்பொனார் தேம் கொள் குந்தள ராசித் திமிரம் பாங்கு இவர்ந்து பரப்பன - ஒரு பக்கத்திலே பசிய பொன்னையொத்தவர்களாகிய மகளிரது வாசனையைக் கொண்ட குழற்கூட்டமாகிய இருள் பாங்கரிற் சென்று பரக்கின்றன. எ-று.

பொன்வெயில்மிகும் ஒருபால்; ஒருபாற் குழலிருள்மிகும் என்பதாம்.

மல்லன் மாருத வாதொடு வாம்பரி
யொல்லை போவன வோர்பருங் கோர்மருங்

கல்ல னுண்ணிடை யற்றிடு மென்றழீஇ
மெல்ல வேகுவ மெல்லிய ரீட்டமே.

இ-ள். மல்லல் மாருத வாதொடு வாம்பரி ஒல்லை போவன ஓர் மருங்கு - பொலிவுபொருந்திய காற்றிேனடுகொண்ட தருக்கத்தோடு பாய்கின்ற குதிரைகள் விரைவாகப் போகின்றன ஒருபக்கத்தில்,— ஓர் மருங்கு அல்லல் நுண் இடை அற்றிடும் என்று அழீஇ மெல்ல ஏகுவ மெல்லியர் ஈட்டம் - ஒருபக்கத்தில் வருந்துதலையுடைய நுண்ணிய இடையானது முரிந்துபோமென்று மனமழிந்து மெல்லச்செல்லுவன பெண்களுடைய கூட்டம். எ-று.

தருக்கம் நீயோ நானோ முந்திச் செல்வது என்னும் தருக்கம். பரி ஒல்லைபோவன ஒருபால்; ஒருபால் மெல்லியரீட்டம் மெல்லவேகுவ என்பதாம். (சுஉ)

களித ழைத்திடு வீரர்தங் கைப்படை
யொளித ழைப்பதொர் பாகமொர் பாகநீ
டளித ழைக்கு மரம்பைய ரன்னவர்
நளித ழைத்திடு நஞ்சுமி ழாட்டமே.

இ-ள். களி தழைத்திடு வீரர்தம் கைப்படை ஒளி தழைப்பது ஓர் பாகம் - களிப்புமிகப்பெற்ற வீரர்களது கையிலுள்ள படைகள் ஒளி தழைக்கின்றன ஒருபக்கத்தில்,—ஓர் பாகம் நீடு அளி தழைக்கும் அரம்பையர் அன்னவர் நளி தழைத்திடும் நஞ்சு உமிழ் நாட்டம் (ஒளிதழைப்பது) - ஒருபக்கத்தில் மிகுந்த அன்பு தழைக்கப்பெறுகின்ற அரம்பையரையொத்தவர்களாகிய மகளிரது செறிவுபொருந்திய நஞ்சினைக் காலுகின்ற கண்கள் ஒளி தழைக்கின்றன. எ-று.

தழைத்தல் - மேற்படுதல். ஒளிதழைப்பது என்பது பின்னுங் கூட்டப்பட்டது. படை ஒளிதழைப்பது ஒருபால்; ஒருபால் நாட்டம் ஒளிதழைப்பது என்பதாம். (சுஙு)

தெள்க லாமுனி சீற்றக் கனறரு
முள்ளரு சாபத் துரங்கெடு மிந்திரன்
வெள்க மேய விழுப்பொருள் யாவையுங்
கொள்ப யோததி யொத்தது கூலமே.

இ-ள். கூலம் - கடைவீதி,—தெள் கலா முனி சீற்றக் கனல் தரும் உள்ரு சாபத்து உரம் கெடும் இந்திரன் வெள்க - தெளிந்த கலைஞானத்தையுடைய துருவாசமுனிவரது கோபாக்கினி தரப்பெற்ற வருந்துகின்ற சாபத்தினால் வலிமைகெட்ட இந்திரன் வெட்கமுறும்படி,—மேய விழுப்

பொருள் யாவையும் கொள் பயோததி ஒத்தது - (அவனுலகிற்) பொருந்திய சிறந்த பொருள்களனைத்தையும் (தன்பால்) அடைந்துகொண்ட பாற்கடலை ஒத்தது. எ-று.

மேய என்பதற்கு (தன்னிடத்தில்) அடைந்த எனினுமாம். இதற்கியையக் கொள் என்பதற்கு ஏற்றுக்கொண்ட எனப் பொருள் கொள்க. விழுப்பொருள் கற்பகதரு காமதேனு சிந்தாமணி முதலாயின. (சுச)

பாரவே குங்கு மப்பொற்றை பற்றிமா
டார வேதண்ட மேறிய வச்சிறூர்
தீர வேயெறி சுட்டித் திருமணி
வார வேந்துவ பாளித வள்ளமே.

இ-ள். பார குங்குமப் பொற்றை பற்றி - பூமியிலுள்ள குங்குமத்தாலாகிய சிறுமலையைப் பிடித்து,—மாடு ஆர வேதண்டம் ஏறிய அ சிறூர் - பக்கத்திலுள்ள முத்துமலையின்மேலேறிய அவ்வணிகச் சிறுவர்கள்,—தீர எறி சுட்டித் திருமணி வர - அறுந்துபோக எறிந்த சுட்டியிலுள்ள மணிகள் வர,— பாளித வள்ளம் ஏந்துவ - (அவற்றைப்) பச்சைக்கருப்பூரவள்ளங்கள் ஏந்துவன. எ-று.

அ என்னுஞ்சுட்டு வணிகரைக் குறித்தது. சிறூர் எறிமணி எனவியையும். வார நீட்டல்விகாரம். (சுரு)

கற்கு மாமறை கன்னிதன் கேள்வனு
வொற்க மாகமா டேயி ருந்தென
வற்கு மாறுசெ யாரக் குவையருப்
பொற்கு வாலொரு பாலிற் பொலியுமே.

இ-ள். கற்கும் மா மறைக் கன்னி - கற்கப்படுகின்ற பெரிய வேதத்திற்கு முதல்வியாகிய நாமகள்,—தன் கேள்வன் நா ஒற்கமாக ஊடி மாடு இருந்தென - தனது நாயகராகிய பிரமதேவரது நா வெற்றிடமாகும்படி பிரிந்து (அவருடைய பக்கத்தே) இருந்தாற்போல,— அற்கு மாறுசெய் ஆரக் குவை - இருளுக்கு அழிவைச்செய்கின்ற முத்துக்குவியல்,—அரும் பொன் குவால் ஒரு பாலிற் பொலியும் - அரிய பொற்குவியலின் ஒருபக்கத்தில் விளங்கும். எ-று.

ஆரக்குவை நாமகளையும், பொற்குவை பிரமாவையும் ஒத்திருந்தது என்க. (சுசா)

தேங்கு கானற் கிளிச்சிறை சேர்த்திநே
ராங்கு மாறு மவரணி யங்கையின்
வாங்கு நீடுலை தேய்ந்திட மான்மத
மோங்கி மீறியொ ரோசனை வீசுமே.

இ-ள். தேங்கு கானல் கிளிச் சிறை சேர்த்தி - நிறைந்த ஒளியை யுடைய கிளிச்சிறையென்னும் பொன்னைச் சேர்த்தி,—நேர் ஆங்கு மாறும் அவர் - அதற்குச் சமமாக அங்கே விற்கின்ற அச்செட்டிகள்,—அணி அங்கையின் வாங்கு நீள் துலை தேய்ந்திட - அழகிய கையினால் எடுத்த நெடிய தராசிலே தேய்தலால்,—மான்மதம் ஓங்கி மீறி ஓர் ஓசனை வீசும் - மிருக மதம் மிகவும் மேற்பட்டு ஒருயோசனை தூரத்திற்குத் தன் மணத்தை வீசும். எ-று.

தேய்ந்திட ஓங்கி மீறி வீசும் என்க. சமமோ என்று பார்க்கும்படி அடிக்கடி தாழ்த்தலாற் றட்டிலே தேய்தலின் மான்மதம் ஒருயோசனை தூரத்துக்குத் தன்மணத்தை வீசும் என்பதாம். (கூஎ)

நிறைபு கழ்ப்பெரு நாய்கர்க்கு நீணிலத்
தறையி லற்பமு மின்றென லாயினு
முறையு மிற்றமொ ழுக்கம் விடாதபோ
லிறைப டைத்திறுக் குந்தொடை யீழமே.

இ-ள். நிறை புகழ்ப் பெரு நாய்கர்க்கு - நிறைந்த புகழையுடைய பெரிய வணிகருக்கு,—நீள் நிலத்து அறையில் அற்பமும் இன்றெனலாயினும்,—நெடிய நிலத்திலே அறைகளில் அற்பமேனும் வெற்றிடமில்லையாயினும்,—உறையும் இல் - அவர்களிருக்கின்ற வீடுகள்,—தம் ஒழுக்கம் விடாத போல் - தமது (வைத்திருத்தலாகிய) அநுசரிப்பை விடாதனபோல,—இறை படைத்து - இறைகளிலுள்ள சட்டங்களிலே பெற்றுக்கொள்ளுதலினால்,—ஈழத் தொடை இறுக்கும் - பொன்னரிமாலைகள் தங்கும். எ-று.

இல் என்பது பால்பகாவஃறிணைப்பெயராதலின் தம் எனப் பன்மையாற் கூறினார். இறை-இறப்பு. அது ஈண்டு ஆகுபெயராய்ச் சட்டத்தை உணர்த்தி நின்றது. வணிகர்கள் பொன்னரிமாலை முதலியவற்றைச் சட்டத்திலே தூங்க இட்டு விற்றல் வழக்காதலின் இங்ஙனங்கூறினார். இதனைக் "கரியகம்பலக்கிடுகின்மேற்கதிர்விடுபவளத் - தெரியல்பொன்னரிமாலிகைதெண்ணிலாச்சொரியும்-பரியநித்திலமணிவடமரகதப்பசுந்தார் - விரியவிட்டனவிந்திரவின்னிரையனைய" என்னுந் திருவிளையாடற்புராணச் செய்யுளானறிக. ()

வீடில் வானுல கத்தினை வென்றுபின்
பாடின் மாநகர் யாதெனப் பல்சனங்
கூடி யார்ப்பன கோதிலக் கோநகர்
நேடி யார்ப்பது போன்று நிரந்தவே.

இ-ள். பல் சனம் கூடி ஆர்ப்பன - (அக்கடைவீதியிற்) பல சனங்கள் கூடி ஆரவாரித்தல்,—கோதில் அ கோநகர் - குற்றமில்லாத அந்த அரச நகரமானது,—வீடில் வானுலகத்தினை வென்று - அழிவில்லாத விண்ணுலகத்தை வெற்றிகொண்டு,—பின் பாடு இல் மாநகர் யாதென நேடி ஆர்ப்

பது போன்று கிரந்த - பின்பு எனக்குத் தோலாத பெரிய நகரம் யாதென்று தேடி ஆரவாரிப்பது போன்று பரந்தன. எ-று.

ஆர்ப்பன - தொழிற்பெயர். (௬௯)

கான மும்மலை யுங்கட லும்பணைத்
தான மும்பொன் னகரமுந் தாழ்விலா
வான வெண்பெருந் தீபமு மற்றவு
மான வொண்பொரு ளாலவ் வணிக்கடை.

இ-ள். அ அணி கடை - அந்த அழகிய கடைவீதியானது,—ஒண் பொருளால் - ஒள்ளிய பொருள்களால்,—கானமும் - முல்லைநிலமும்,—மலையும் - குறிஞ்சிநிலமும்,—கடலும் - நெய்தனிலமும்,—பணைத்தானமும் - மருதநிலமும்,—பொன்னகரமும் - சுவர்க்கலோகமும்,—தாழ்விலாவான எண் பெருந் தீபமும் - குறைவில்லாதனவான எண்ணப்படுகின்ற பெரிய தீவுகளும்,—மற்றவும் ஆன - ஏனைய இடங்களுமாயிருந்தன. எ-று.

முல்லைமுதலிய இடங்களின் பொருள்களெல்லாம் அங்கே இருத்தலின் அவ்வவைகளாயிருந்தன என்றார். (எ0)

செம்பொ டேய்நிறச் சுண்ணஞ் செறித்திம
வம்பொ டேகளை பாதி யளாயணிக்
கொம்பொ டேயலை யும்மலர்க் குப்பையின்
வம்பொ டேவதி யுஞ்சில மன்றமே.

இ-ள். செம்பொடு ஏய் நிறச் சுண்ணம் செறித்து - செம்போடு ஒத்த நிறத்தினையுடைய சுண்ணங்கள் செறிக்கப்பெற்று,— இம அம்பொடு களபாதி அளாய் - பனிநீரோடு களபச்சாந்துமுதலியன அளாவப்பெற்று,—அணிக் கொம்பொடு அலையும் மலர்க் குப்பையின் வம்பொடு - அழகிய கொம்பர்களின்கண் கிடந்து அலைகின்ற மலர்க்கூட்டத்தின் மணத்தோடு,—சில மன்றம் வதியும் - சில மாளிகைகள் இருக்கும். எ-று.

சுண்ணம்முதலியன வைக்கப்பட்டிருக்கின்றன என்பது கருத்து. (எக)

அறைசெய் கன்ன னெரித்துற வட்டசாற்
றுறைசெய் முக்கனி யோடமு தூட்டலா
னிறைசெ யும்பிரி வுள்ளினர் நெஞ்சினைச்
சிறைசெ யுஞ்சில சித்திர கூடமே.

இ-ள். அறைசெய் கன்னல் நெரித்து உற அட்ட சாற்று உறைசெய் முக்கனியோடு - துண்டுசெய்யப்பட்ட கரும்புகளை நெரித்து (எடுத்து) நன்கு காய்ச்சிய சாற்றினோடு பொருந்தச்செய்த முக்கனிகளோடு,—அமுது ஊட்டலால் - அமுதையும் உண்பித்தலால்,—சில சித்திரகூடம் - சில சித்திரகூட

ங்கள்,—நிறைசெயும் பிரிவு உள்ளினர் நெஞ்சினைச் சிறை செயும் - நிறைவைச்செய்கின்ற பிரிவைக் கருதினோருடைய மனத்தைத் தடுக்கும். எ-று.

அறை - துண்டு. செக்கிலிடுதற்களவாகத் துணிக்கப்பட்டது. (எ௨)

கந்த மாமலர்க் கானமுங் காவியங்
கொந்த ளாவு மிலஞ்சியுங் குன்றிள
மந்த மாருத மன்பின் மரீஇவர
வந்த மாநக ரெங்கணு மானவே.

இ-ள். கந்த மாமலர்க் கானமும் - வாசனைபொருந்திய பெரிய பூஞ்சோலைகளிலும்,—காவி அம் கொந்து அளாவும் இலஞ்சியும் - கருங்குவளைப் பூங்கொத்துகள் சேர்ந்த வாவிகளிலும்,—குன்று இள மந்த மாருதம் அன்பின் மரீஇ வரவு - பொதியமலையிற் பிறந்துவரும் இளமையையும் மந்தமான செல்லுகையையுமுடைய தென்றற்காற்று விருப்பத்தோடு அளாவிவருதல்,—அந்த மாநகர் எங்கணும் ஆன - அந்தப் பெரிய நகரமெவ்விடத்தும் பொருந்தின. எ-று.

அம் - சாரியை. வருதலாற் கந்தம் ஆன என முடிப்பினுமமையும்.

பல்க திப்பவப் பற்றிலர் பற்றுறு
மெல்க திக்கு நகருழி யெய்தினோர்
மல்க திக்க வளம்பல துய்க்கையாற்
செல்க திக்கொரு சிந்தனை யில்லையே.

இ-ள். பல் கதிப் பவப் பற்றிலர் பற்றுறும் - பல கதிகளிலுஞ்சென்று பிறக்கின்ற பிறவிப்பற்றில்லாதவர்களாகிய ஞானிகளாலும் விரும்பப்படுகின்ற,—எல் கதிக்கும் நகருழி எய்தினோர் - ஒளி மிகும் அந்த நகரத்தின்கண் அடைந்தவர்கள்,—மல் கதிக்க வளம் பல துய்க்கையால் - நிறைவு மிக வளங்கள் பலவற்றையும் அநுபவித்தலால்,—செல் கதிக்கு ஒரு சிந்தனை இல்லை - சென்றடைதற்குரிய முத்தியின்பத்தைப் பெறுதலில் (அவர்களுக்கு) ஒரு எண்ணம் இல்லை. எ-று.

பல்கதி - எழுவகைப்பிறப்பு. முத்தியின்பத்தினும்பார்க்கப் பெரிய இன்பத்தை அனுபவித்தலால் அதிற் கருத்துச் சென்றிலதென்பதாம். (எச)

தூவுந் திப்பதி செல்வமுந் தொன்மறை
யாவுஞ் சொற்றமி ழுங்கொ டிருக்கையான்
மாவுஞ் சித்திர வாரிச மேலவ
ளாவுந் தக்கிண நாகமு மொக்குமே.

இ-ள். தூ உந்து இப்பதி - பரிசுத்தம் மிகுந்த இந்த நகரமானது,—செல்வமும் தொல் மறை யாவும் சொல் தமிழும் கொடு இருக்கையால் -

செல்வத்தையும் பழைய வேதங்களனைத்தையும் சொற்களையுடைய தமிழையும் கொண்டிருக்கையினால்;—மாவும் சித்திர வாரிசமேலவன் நாவும் தக்கிண நாகமும் ஒக்கும் - இலக்குமியையும் அழகிய தாமரைப்பூவின்மேலிருப்பவராகிய பிரமதேவரது நாவினையும் பொதியமலையையும் ஒக்கும். எ-று.

பிரணிறை. பதி ஒக்கும் என முடிக்க. இனித் தூவுந்திப்பதிச்செல்வமும் எனப் பாடங்கொண்டு சுத்தமாகிய உந்தியையுடைய விட்டுணுவினவதாரத்தனாகிய ஸ்ரீராமனது செல்வத்தையும் எனினுமாம். இப்பொருட்கு அந்நகரம் என எழுவாய் வருவித்து முடிக்க. (எரு)

நகரப்படல முற்றிற்று.

---

# அரசியற்படலம்.

இந்நகருக் கிறைவனிருங் கழற்பதும ராகமுமேர்
மின்னுகுட பத்திரநீன் மணியுமிள வெயிலுமிராத்
துன்னிருளு மிகலேறிப் பொருவனபோற் சுடர்தோற்ற
மன்னவர்பொன் முடிவருடச் சேந்தமது மலர்த்தாளான்.

இ-ள். இந்நகருக்கு இறைவன் - இந்த (அயோத்தியாகிய) நகரத்திற்கு அரசனாவான்,—இரும் கழல் பதுமராகமும் - பெரிய வீரக்கழலிலுள்ள பதுமராகமணியும்,—ஏர் மின்னு குட பத்திர நீல் மணியும் - அழகையுடைய பிரகாசிக்கின்ற முடியிலுள்ள நல்ல நீலமணியும்,— இள வெயிலும் இராதுன்னு இருளும் இகல் ஏறிப் பொருவன போல் சுடர் தோற்ற - இள வெய்யிலும் இராக்காலத்தில் நெருங்கியுள்ள இருளும் பகையில் மிக்கு ஒன்றோடொன்று பொருதல்போலத் தம்முள் எதிராக ஒளியைத் தோற்றுவிக்க,—மன்னவர் பொன் முடிவருடச் சேந்த மது மலர்த் தாளான் - அரசர்களுடைய பொன்னாலாகிய முடிகள் வருடுதலாற் சிவந்த தேன்பொருந்திய மலர்போன்ற பாதங்களையுடையவன். எ-று.

மகுடம் குடமென முதல் குறைந்துநின்றது. தோற்ற வருட என முடிக்க; காரியப்பொருட்டு. வணங்கும் அரசருடைய முடியிலுள்ள நீலமணி என்க. பதுமராகவொளிக்கு இளவெயிலும், நீலமணியொளிக்கு இருளும் உவமை. இதுமுதல் எ-செய்யுள்கள் ஒருதொடர். (க)

நன்றாய வுலகனைத்தும் வளம்பெருக வருணாறுங்
கன்றாத மாமேக நிலைபோலுங் கலிகிறும்

வன்றுரை கொடுமறையோர் தம்மாடே மாநீர்மை
குன்றாத சீர்பெருக நீர்பெருகுங் குடங்கையினான்.

இ-ள். நன்று ஆய உலகு அனைத்தும் வளம் பெருக - நன்மைபொருந்திய உலகம்முழுவதும் வளம்பெருகும்படி,—அருள் நாறும் கன்றாத மா மேக நிலை போலும் கலி கீறும் வன் தாரை கொடு - அருளைச்செய்யும் நலிவடையாத பெரிய மேகத்தின் நிலையையொத்த வறுமையைநீக்குகின்ற வலிய தாரையைக்கொண்டு,— மறையோர் தம்மாடே மா நீர்மை குன்றாத சீர் பெருக - அந்தணரிடத்தே பெருமையினியல்புகுறையாத செல்வம்பெருகும்படி,—நீர் பெருகும் குடங்கையினான் - நீர்பெருகுகின்ற உள்ளங்கையை யுடையவன். எ-று.

போலும் தாரை கொடு நீர் பெருகுங் குடங்கை என இயையும். தாரை ஒழுக்கு. கீறும் என்னும் வினைக்கியைய வாளையுங் குறிக்குமாறு தாரை யெனப் புணர்த்தினார் ஆசிரியர் என்க. நன்றாயவளம்பெருக எனினுமாம்.()

ஓதாடன் மயினிலமின் றிருவென்னு மிவரோகை
வாதாடு மனத்தேனம் பெடையோடு மரீஇமடவார்
காதாடு கட்பேடை கவன்றூடச் செந்தேனந்
தாதாடுங் கருந்தேன்க டனியாடு நறுந்தாரான்.

இ-ள். ஓது ஆடன் மயில் நிலமின் திரு என்னும் இவர் ஓகை வாது ஆடு மனப் பெடைத் தேனொடு - சொல்லப்படுகின்ற வீரலக்குமியும் பூமிதேவியும் இலக்குமியும் என்னும் இவரது மகிழ்ச்சியையுடைய வாதாடுகின்ற மனமாகிய பெடைவண்டுகளோடு,—மடவார் காது ஆடும் கண் பேடை மரீஇ கவன்று ஊட - பெண்களது காதோடுசென்று அசைகின்ற கண்களாகிய பெடைவண்டுகள் பொருந்திக் கவலையுற்று வெறுப்ப,—செம் தேன் அம் தாது ஆடும் கரும் தேன்கள் தனி ஆடும் நறும் தாரான் - சிவந்த தேன்களிலும் அழகிய தாதுகளிலும் படிகின்ற கரிய பெடைவண்டுகள் தனியே விளையாடுகின்ற நறிய மாலையை அணிந்தவன். எ-று.

கட்பேடை மரீஇ கவன்று ஊட என இயைக்க. மனத்தேனம்பெடையுங் கட்பெடையும் தாரைவிரும்பிக் கிடையாமையாற் கவன்று ஊட என்க. வெற்றியும், பூமியை நன்காத்தலும், செல்வமும், அழகும் உடையவன் என்பது கருத்து. (ரு)

எணுமிக் குயர்நேமி வரையேறி யெறிகடல்வாய்க்
கோணுமெய்க் கலிவீழ நோக்கிமகிழ் குறியோடே
சேணுமுற் பனவேதத் திருப்பொருளைத் தினமுளத்தே
காணுவற் புதஞானக் களியூறிக் கனிகருத்தான்.

இ-ள். மெய்க் கலி கோணு - உண்மையாகிய வறுமையானது கோட்டமுற்று, — எண் ஆம் மிக்கு உயர் நேமிவரை ஏறி எறி கடல்வாய் வீழ

நோக்கி மகிழ் குறியோடு - நிமிர்ச்சியைக்கொண்ட மிக்கு உயர்ந்த சக்கரவாள கிரியில் ஏறித் திரையெறிகின்ற கடலின்கண்விழ நோக்கி மகிழுகின்ற குறிப்போடு,—சேணும் உற்பன வேதத் திருப் பொருளைத் தினம் உளத்தே காணு - வாக்குமனாதீதமான தோற்றத்தையுடைய வேதத்திற்சொல்லிய அழகிய பிரமப்பொருளை நாடோறும் மனத்தே (சிந்தனையினால்) கண்டு,—அற்புத ஞானக் களி ஊறிக் கனி கருத்தான் - அற்புதமாகிய ஞானத்தாலடையும் ஆனந்தம் ஊறிக் கனிந்த மனத்தையுடையவன். எ-று.

குறிப்போடு என்பதில் ஒடு உருபு கருத்தையுடையான் என்பதில் உடையான் என்பதோடு முடிந்தது. மிகுந்த செல்வக்களிப்புடையனாயினும் அதனுளமிழ்ந்தாது கடவுளைத் தியானித்து அதனால் வரும் ஆனந்தத்தையுமடையுந்தன்மையுடையவன் என்பார் இங்ஙனங் கூறினார். (ச)

நீட்டுவிசும் பளாய்வலய நேமிவரைக் குடுமிகொளீஇப்
பூட்டுகதிர்க் குடைநீழறொறும் விளங்கும் புகழ்நிலவா
னீட்டுமிகற் பரநிருப விரசனியுய்த் திடுமாடற்
றோட்டுசமர்த் தமமுருக்கித் தருக்குகுரூஉச் சுடர்வேலான்.

இ-ள். நீட்டு விசும்பு அளாய் - நெடிய ஆகாயத்தை அளாவி,—வலய நேமி வரைக் குடுமி கொளீஇப் பூட்டு - வளைவையுடைய சக்கரவாளகிரியின் சிகரத்திற்கொளுவிப் பூட்டிய,—கதிர்க் குடை நீழல் தொறும் விளங்கும் - கிரணங்களையுடைய குடையின் நீழல்தோறும் விளங்குகின்ற,—புகழ் நிலவான் - புகழாகிய நிலவையுடையவன்,—ஈட்டும் இகல் பரநிருப இரசனி உய்த்திடும் ஆடல் தோட்டு சமர்த் தமம் உருக்கி - ஈட்டிய பகையையுடைய பிற அரசர்களாகிய இராக்காலம் பரப்பிய வலிய கூட்டமான போராகிய இருளைக் கெடுத்து,—தருக்கு குரூஉச் சுடர் வேலான் - களிக்கின்ற ஒளி பொருந்திய வேற்படையையுடையவன். எ-று.

ஆடற்றோட்டு இருள் என இயைக்க. (ரு)

தருக்குதனி யிகலாழி யமைச்சொனநற் றவநேசம்
பெருக்குநிலை கூர்தரும முடிசூடிப் பெரிதாய
விருக்கருகு நெறிகாட்ட வெழில்வான முகடேறிச்
செருக்குபுகழ் பூண்டரசின் றிசையேகுஞ் செங்கோலான்.

இ-ள். தருக்கு தனி இகல் ஆழி அமைச்சு என - களிப்பினையுடைய ஒப்பற்ற வலிய ஆஞ்ஞாசக்கரம் அமைச்சனாக,—நல் தவ நேசம் பெருக்கு நிலை கூர் தரும முடி சூடி - நல்லதவத்தில் அன்பைப்பெருக்குகின்ற நிலைமையின்மிகுந்துள்ள தருமமாகிய முடியைச்சூடி,—எழில் வான முகடு ஏறி - அழகிய அண்டமுகடாகிய ஆசனத்தில் ஏறி,—செருக்கு புகழ் பூண்டு - களிப்பைத்தருகின்ற புகழாகிய மாலையைச்சூடி,—இருக்கு அருகு நெறிகாட்ட அரசின் திசை ஏகும் செங்கோலான் - வேதம் அருகே அரசியற்குரிய

வழியைக்காட்டத் தானுமோரரசன்போல (இருந்து) திசைகடோறுஞ் செல்லுகின்ற செங்கோலையுடையவன். எ-று.

ஆஞ்ஞாசக்கரம் அமைச்சனாகத் தான் ஒரு அரசனைப்போல இருந்து திசையேகும் செங்கோல் என்க. இருந்து சொல்லெச்சம். (சு)

மண்ணீர்மை தகவிளங்கு மனுகுலத்து நனிதோற்றி
யெண்ணீர்மை யுலகனைத்து மிகலாழி செலநின்றான்
வெண்ணீர்மை வீங்கொலிப்பால் விரிகடலின் வந்துதித்த
தெண்ணீர்மை மதியனையான் றிலீபனெனுந் தேர்வேந்தன்.

இ-ள். மண் நீர்மை தக விளங்கும் மனு குலத்து நனி தோற்றி - பூமியின்கண்ணே நீதிதகும்படி விளங்கிய மனுவினது வம்மிசத்திலே நன்கு தோன்றி,—எண் நீர்மை உலகனைத்தும் இகல் ஆழி செல நின்றான் - எண்ணப்படுமியல்பினையுடைய உலகமெல்லாம் வலிய ஆஞ்ஞாசக்கரம் செல்லும்படி நின்றவன்,—வெண் நீர்மை வீங்கு ஒலிப்பால் விரி கடலின் வந்து உதித்த - வெண்ணிறத்தையும் பேரொலியையுமுடைய பரந்த பாற்கடலில்வந்து தோன்றிய.—தெண்ணீர்மை மதி அனையான் - தெளிந்தவியல்பையுடைய சந்திரனையொத்தவன்,—திலீபனெனும் தேர் வேந்தன் - திலீபனென்று உயர்த்துச்சொல்லப்படுந் தேரையுடையவரசன். எ-று.

இந்நகருக்கிறைவன் தாளான்; குடநகையினான்; தாரான்; கருத்தான்; வேலான்; செங்கோலான்; நின்றான்; அனையான்; (அவன் யாவனெனின்) திலீபனென்னுந் தேர்வேந்தன் என்க. எண்ணும்மை கொடுத்துமுடிப்பினுமமையும். (எ)

மறுக்குமே யிவன்கடைக்கண் மலர்சேக்க மன்னர்வயி
னிறுக்குமே யிகலிருள்வல் லிகற்போரி னெதிரேறிச்
செறுக்குமே யிவன்கருணைச் சிந்தைசிறி தேவேறிற்
கறுக்குமேற் சிவக்குமன்னர் மலையேறுங் கழலிணையே.

இ-ள். இவன் மறுக்குமே கடைக்கண் மலர் சேக்க இகல் இருள் மன்னர் வயின் இறுக்கும் - இவன் மறுத்துரையாவோனோ? மறுத்துரையாடான். இவன் கடைக்கண்ணாகிய மலர் சிவக்கவே வலிய மயக்கமாகிய இருளானது அரசரிடத்தில் தங்கும்,— இவன் கருணைச் சிந்தை சிறிது வேறில் கறுக்குமேல் - இவனது கருணையையுடைய மனம் சிறிது வேறுவிடயத்திற் கறுக்குமாயின்,—மன்னர் மலை ஏறும் கழலிணை சிவக்கும் - அரசர்களது (ஒளிக்கும்படி) மலையிலேறுகின்ற கால்களிரண்டுஞ் சிவக்கும்.—வல் இகல் போரில் எதிரேறிச் செறுக்குமே - (இங்ஙனமாதலினாலே) வலிய பகையையுடைய போரில் எதிர்சென்று பகைவரோடு பொருவானோ? (பொருதலிலன் என்றபடி.) எ-று.

இகலிருள் என்பதற்குப் பகையாகிய இருள் எனப் பொருள்கொண்டு அதற்கேற்ப இறுக்குமே என்பதற்குத் தங்குமா? தங்காது எனப் பொருள் கொள்வாருமுளர். (அ)

முறைபோது மரசர்திருக் குறைமதிபோன் முழுதுமிறுங்
குறைபோலுங் காண்பனமெய்க் குறிகொடே யிவன்கூறு
நிறைபோகந் தருங்கருணை மாரியினு னீடேனைப்
பிறைபோலுய்ந் திடும்வேத முனிவோர்தம் பெருந்தவமே.

இ-ள். முறைபோதும் அரசர் திருக் குறைமதிபோல் முழுதும் இறும் - முறைநீங்கிய அரசர்களது செல்வங் குறைமதிபோல முழுவதுந் தேய்ந்து ஒழியும்,—குறை காண்பன மெய் குறிகொடு இவன்கூறும் - (அவற்றுட்) குறையாகக் காணப்படுவன இலாஞ்சினையைக்கொண்டு இவன்பகுதியவாகும்,—நிறை போகந் தருங் கருணை மாரியினுல் - நிறைந்த போகத்தைத்தருகின்ற கிருபாமழையினுல்,—முனிவர்தம் பெரும் தவம் - முனிவர்களுடைய பெரிய தவமானது,—நீடு ஏனைப் பிறைபோல் உய்ந்திடும் - அழிவில்லாத ஏனைய பிறையைப்போல வளரும். எ-று.

போலும் அசை. குறைமதி தேய்பிறை; வினைத்தொகை. ஏனைய பிறை - வளர்பிறை. முறைநீங்கிய அரசர்க்குப் போராற் செல்வங் குறையும். குறையாயுள்ளன அவரைக் கொன்று இலாஞ்சினை வைத்தலால் இவன் பகுதியவாம் என்க. முனிவர்க்கு வேண்டிய உண்டி மருந்து உறையுண் முதலியவற்றையெல்லாங் கொடுத்தலினுல் நிறைபோகந்தருங்கருணைமாரியினுல் என்ருர். (க)

வன்னவெழிற் கொத்தபெரு மாண்புடையா னம்மாண்பி
னுன்னுதகைக் கொத்தகலை யுணர்வுடையா னவ்வுணர்விற்
சொன்னநெறிக் கொத்தபடி தொடங்குதலான் றொடங்குவன
வன்னதொழிற் கொத்தபெற லரும்பலத்தின் பேறுடையான்.

இ-ள். வன்ன எழிற்கு ஒத்த பெரு மாண்பு உடையான் - (அவன்) நிறம்பொருந்திய அழகிற்கேற்ற பெரிய குணங்களையுடையவன்,—அம்மாண்பின் உன்னு தகைக்கு ஒத்த கலை உணர்வு உடையான் - அக்குணங்களது கருதப்படுந் தகைமைக்கேற்ற நூலறிவையுடையவன்,—அவ்வுணர்விற் சொன்ன நெறிக்கு ஒத்தபடி தொடங்குதலான் - அந்நூலறிவிலே சொன்னவழிக்கியைந்தபடி (ஒரு கருமத்தைத்) தொடங்குதலுடையவன்,—தொடங்குவன அன்ன தொழிற்கு ஒத்த பெறல் அரும் பலத்தின் பேறு உடையான் - தொடங்குவனவாகிய அத்தொழிற்கேற்ற பெறுதற்கரிய பயனினது பேற்றையுடையவன். எ-று.

இது "ஆகாரஸத்ருஸப்ரஜ்ஞ" என்னுஞ் சுலோகக் கருத்திற்கியையப் பாடப்பட்டது. வடிவிற்கியைந்த குணமும், குணத்திற்கியைந்த

கல்வியும், கல்விக்கியைந்த முயற்சியும், முயற்சிக்கியைந்த பலமுமுடைய வன் என்பது கருத்து. (கo)

புரைசெறியும் பெருஞ்சீலப் பொலிவினக லவுந்திறலா
னுரைசெறிய வணுகவுமோ படாஞகி யுடைமையினுற்
றரைசெறியு மவர்காணற் கெம்மருங்குந் தயங்குமணிக்
கரைசெறியும் பெருவேலைக் கடுமகரக் கடல்போன்ருன்.

இ-ள். புரை செறியும் பெரும் சீலப் பொலிவின் அகலவும் - உயர்வு செறிந்த பெரிய நல்லொழுக்கப்பொலிவினுலே பிரியவும், — திறலால் உரை செறிய அணுகவும்படாஞகி உடைமையினுல், — இராசபலத்தினுற் சொல்லின்கலப்புண்டாக நெருங்கவும்படாஞகியிருத்தலினுல், —தரை செறியுமவர் காணற்கு - பூமியிலுள்ள சனங்கள் சென்று காணுதற்கு,— எ மருங்கும் தயங்கும் மணி கரை செறியும் பெரு வேலை - எப்பக்கத்திலும் விளங்குகின்ற மணிகளையுடைய கரையோடு நெருங்குகின்ற பெரிய திரைகளையுடைய,—கடு மகரக் கடல் போன்ருன் - கொடிய மகரமற்சங்களைக் கொண்ட கடலையொத்தான். எ-று.

உடைமையினுற் போன்ருன் என்க. மணியால் நீங்கவும், மகரத்தால் அணுகவும்படாத கடல் என்பார் எம்மருங்குந்........................கடல் என்ருர். (கக)

தயங்கார மணித்திகிரி தனிப்பாக னடவமுத
லியங்காழி வரையிறவா திணையாழி யியங்கியென
வுயங்காவிங் கிவன்கீழ்ப்பட் டுளசனங்கண் மனுத்தொடங்கி
வயங்காட லிவன்காறும் வரம்பிகந்த விலையன்றே.

இ-ள். தயங்கு ஆர மணித் திகிரி - விளங்குகின்ற முத்துமணிகளாற் செய்த தேரானது,—தனிப் பாகன் நடவ - ஒப்பற்ற பாகன் செலுத்த,— முதல் இயங்கு ஆழி வரை இறவாது இணை ஆழி இயங்கி என - முன்னே செல்லுகின்ற சில்லின் கீற்றை விலகாது ஒத்ததாகிய (பிற்) சில்லும் சென்ருற்போல,—உயங்கா இங்கிவன் கீழ்ப்பட்டுள சனங்கள் - வருந்தாமல் இவன்கீழ்ப்பட்டிருக்கின்ற சனங்கள்,—மனுத் தொடங்கி வயங்கு ஆடல் இவன்காறும் வரம்பு இகந்த இலை - மனுச்சக்கிரவர்த்திதொடங்கி விளங்குகின்ற வெற்றியையுடைய இத்திலீபமகாராசன்வரைக்கும் தம்நெறி கடந்து ஒழுகிற்றில. எ-று.

இவனுல் ஆளப்பட்ட சனங்களும் மனுவின்கீழ்ப்பட்டிருந்த சனங்களினுடைய வரம்பைக் கடந்து ஒழுகிற்றில என்பதாம். இவன் பாகனுகவும், மனுவின்கீழுள்ள சனங்கள் முற்சில்லாகவும், இவன்கீழுள்ள சனங்கள் பிற்சில்லாகவும் கொள்க. (கஉ)

விடுப்பதுகொண் டாயிரமா மடங்குநிலன் விழுப்புனலை
யெடுப்பதுகொண் டுளசோதி யிருங்கதிரோ னியற்கையெனக்
கெடுப்பதுகொண் டறியாத கிளர்சனங்கட் கம்முறையே
கொடுப்பதுகொண் டிறைவிதியாற் கொள்ளுவது முளன்மாதோ.

இ-ள். விடுப்பது கொண்டு நிலன் விழுப்புனலை ஆயிர மா மடங்கு எடுப்பதுகொண்டுளை - பெய்தலைக்கருதிப் பூமியிலுள்ள சிறந்த நீரை ஆயிரம்மடங்காக எடுத்தலைக்கொண்ட,—சோதி இருங் கதிரோன் இயற்கை என - ஒளிபொருந்திய பெரிய கிரணங்களையுடையனாகிய சூரியனுடைய இயல்பைப்போல,—கெடுப்பது கொண்டு அறியாத கிளர் சனங்கட்கு - கெடுத்தற்குணத்தைத் தாங்கொண்டறியாத விளங்குகின்ற சனங்களுக்கு,—அம்முறையே கொடுப்பது கொண்டு இறைவிதியாற் கொள்ளுவதும் உளன் - அந்த முறைப்படியே இவனும் பின் கொடுத்தலைக் கருதி இறையை விதிப்படி எடுத்தலும் உளன். எ-று.

எடுத்தல்-கவர்தல். இது "ப்ரஜா நாமேவ பூத்யர்த்தம்" என்னுஞ் சுலோகக்கருத்தின்படி பாடப்பட்டது. (கரு)

நேருமிக லற்றானை நெடுங்கவரி கவிகையெனச்
சாருமிவற் கலங்காரத் தகைசாரச் சாராவோர்
பேருதவி செயுமன்றோ வெனினிவற்குப் பேருதவி
சேருமனு நெறிசேர்வுஞ் சிலைபூண்ட நாணியுமே.

இ-ள். நால் தானை நெடும் கவரி கவிகை என இவற்கு அலங்காரத் தகை சாரச் சாரும் - கரி, பரி, தேர், காலாள் என்னும் நால்வகைச் சேனைகளும் நெடிய சாமரையையும் குடையையும்போல இவனுக்கு அலங்காரத்தின் றகைமைபொருந்த அடைந்திருக்கும்;—நேரும் இகல் சாரா ஓர் பேருதவி செயும் அன்றோ எனின் - நேரும் போரிலேசென்று ஒரு பேருதவியைச் செய்யுமல்லவா? எனின் செய்வனவல்ல,—மனுநெறி சேர்வுஞ் சிலை பூண்ட நாணியும் இவற்குப் பேருதவி சேரும் - மனுநெறியிற்சேர்ந்திருக்கும் புத்தியும் வில்லிற்பூட்டப்பட்ட நாணியும் ஆகிய இரண்டுமே இவனுக்குப் பேருதவியாகப் பொருந்துவனவாகும். எ-று.

சாமரையும் குடையும்போலச் சதுரங்கசேனையும் அலங்காரத்தின் பொருட்டிருக்கின்றனவன்றிப் போரின்பொருட்டிருக்கவில்லை என்பதாம்.

ஒடுங்குவன விலகலையி னுளபலங்கண் முன்னையிற்செய்
தடங்குவன வவ்வியலை யறிவிப்ப போலிவற்கு
நடுங்குவன னுதநெறிப்பு மின்மையினு னனியாவை
தொடங்குவன பலத்தல்லாற் பிறிதொன்றாற் றோன்றாவே.

இ-ள். முன்னையிற் செய்து அடங்குவன ஒடுங்குவனவில சலையினுள பலங்கள் - பூருவசென்மத்திற்செய்யப்பட்டு அமைந்துள்ளனவாகிய பரந்த நூல்களால்வந்த பயன்கண்முதலியன,—அவ்வியலை அறிவிப்பபோல் - அந்தப் பூருவசென்மவாசனையினியல்பை அறிவித்தல்போல, — நனி யாவை தொடங்குவன பலத்தல்லால்-(இத்திலீபனால்) மிகவும் எவைகள் தொடங்கப் படுகின்றனவோ அவைகள் (செய்து முற்றியபின்நிகழும்) பிரயோசனங்களாலே (வெளிப்படுவன) அல்லாமல்,—இவற்கு நடுங்குவன நுதல் நெறிப்பும் இன்மையினால் பிறிதொன்றால் தோன்றா - இவனுக்குத் துடிப்பனவாகிய நெற்றி நெறிப்பாகியதொழிலும் இல்லாமையினால், வேறொன்றால் அக்கருமங்கள் வெளிப்படா. எ-று.

பிராரத்தவினையால் இம்மையில்வந்த சாஸ்திர அறிவு முதலியனவற்றாற் பூருவசென்மவாசனையை அறிதல்போல இவன் தொடங்கிச் செய்வனவும் பலத்தாலேயே தெரியப்படும் என்பதாம். "கடைக்கொட்கச்செய் தக்கதாண்மையிடைக்கொட்கி — னெற்றாவிழுமந்தரும்" என உணர்ந்து கருமங்களைச்செய்வான் என்றபடி. உம்மையினால் மந்திராலோசனை மனவிகாரம் முதலியனவுங் கொள்ளப்படும். இதுவே முதனூற்கருத்து. (கரு)

அறிவின்மவு னமும்வலியிற் பொறையுமிலங் கருங்கொடையி
னெறிபகர்த லின்மையுமோர் நிலைப்படா நிலையாய
பிறிவினித விரோதகுண மென்பவிவை பிறியாது
செறிவினிவ னுடன்றோற்றி யெழுந்தன்ன திறனுமால்.

இ-ள். அறிவில் மவுனமும் - அறிவின்கண் மௌனமாயிருத்தலும்,— வலியிற் பொறையும் - வலிமையின்கண் பொறுமையும்,—இலங்கு அருங் கொடையில் நெறிபகர்தல் இன்மையும் - விளங்குகின்ற அரிய கொடையில் முறையே ஒருவருக்குஞ் சொல்லாமையும் ஆகிய இவைகளை,—ஓர் நிலைப்படா நிலையாய பிறிவின் நித விரோத குணம் என்ப - ஒருநிலைப்படாத நிலையாய பிரிவினாலே நித்தியவிரோதகுணங்கள் என்று சொல்வர்,— இவை பிறியாது செறிவின் இவனுடன் தோற்றி எழுந்தன்ன திறனும் - இவை விரோதமின்றிச் சேர்ந்திருத்தலினால் இவனுடன் கூடப்பிறந்து எழுந்தாலன்ன தன்மையவாம். எ-று.

அறிவு முதலிய குணங்களுள்ளபொழுது அவற்றிற்கு விரோதமாகிய மௌனமுதலிய குணங்கள் அமைந்திருத்தல் ஒருவரிடத்திலரிது; இவனிடத்தில் அறிவுமுதலிய குணங்களுள்ளபொழுதே மௌனமுதலிய குணங்களும் விரோதமின்றி இயற்கையாகவே அமைந்திருந்தன என்பதாம். (கசு)

மருளினிலை யரையுலகு நிலைக்கவருத் துதலானு
மருளுமருஞ் சந்ததிக்கா யில்லடையு மதனானுந்
தெருளுமற முதன்மூன்றிற் றேடாது பின்னிரண்டு [ன்றே.
பொருளுமுதற் பொருளொன்றின் பொருட்டடைந்தவிவற்க

இ-ள். மருளின் நிலையரை உலகு நிலைக்க வருத்துதலானும் - அறிவில்லாத தன்மையையுடைய கீழோர்களை உலகம் நிலைபெறும்படி வருத்துதலானும்,—அருளும் அருஞ் சந்ததிக்காய் இல் அடையும் அதனானும் - (பிதிர்கடனை ஒழித்து நற்கதியைத்) தருகின்ற அரிய சந்ததியின்பொருட்டாக இல்லாச்சிரமத்தை அடைந்த அதனாலும்,—தெருளும் அறம் முதல் மூன்றில் - தெளியப்படும் அறமுதலிய மூன்றனுள்ளே,—பின் இரண்டு பொருளும் முதற்பொருள் ஒன்றின் பொருட்டு தேடாது இவற்கு அடைந்த - பின்னுள்ள பொருளுமின்பமுமாகிய இரண்டுபொருளும் முதலிலுள்ள அறமாகிய பொருளொன்றின்பொருட்டாக (விரும்பிச்) சம்பாதியாமலே இவனுக்கு அடைந்தன. எ-று.

இன் சாரியை. வருத்துதலானும், அடையுமதனானும் அடைந்த என்க. உலகமாகியபொருளும் இல்லால்வரும் இன்பமும் இவனால் விரும்பப்படாது அறத்தின்பொருட்டாக அடைந்துள்ளன என்பதாம். “பொருளுமின்பமுமறத்துவழிப்படூஉந்தோற்றம்போல” என்றார் பிறரும். (கஎ)

ஈறின்மகப் பொருட்டரசர் திறைகொண்டா னிவன்மகவா
னுறுபயிர்ப் பொருட்டுலகின் மழைநன்னர் நல்கினனாற்
கூறுமினை யனதகைகொள் கொடையினா லவர்தம்மின்
மாறியிரண் டுலகினையு மலிவித்தார் பெரிதன்றே.

இ-ள். இவன் ஈறு இல் மகப் பொருட்டு அரசர் திறைகொண்டான் - இத்திலீபன் அளவில்லாத யாகத்தின்பொருட்டாக அரசர்களுடைய திறைப்பொருளைக் கவர்ந்தான்,—மகவான் நாறு பயிர்ப் பொருட்டு உலகில் மழை நன்னர் நல்கினன் - இந்திரன் தோன்றும் பயிரின்பொருட்டு உலகிலே மழையை மிகவும் பெய்வித்தான்,—கூறும் இனையன தகைகொள் கொடையினால் - சொல்லப்படும் இந்தத்தகைமையைக்கொண்ட கொடையினால்,—அவர் தம்மில் மாறி இரண்டு உலகினையும் பெரிது மலிவித்தார் - அவ்விருவரும் தம்முள்ளே மாறி (ப் பூமி சுவர்க்கமாகிய) இரண்டுலகத்தையும் மிகவும் வளத்தால் மலியச்செய்தார்கள். எ-று.

திறைகவர்ந்து யாகஞ்செய்தான் என்பார் மகப்பொருட்டுத் திறைகவர்ந்தான் என்றார். மாறுதல் கொடுக்கல் வாங்கல் செய்தல். (கஅ)

மற்றாழ்ந்த பகைவனே யெனினுநெறி மாண்புளனே
லுற்றாழ்ந்த பிணியானுண் மருந்தினுளங் கொள்வானாற்
சொற்றாழ்ந்த நட்பினனே னுந்தீமை தோன்றினராப்
பற்றாழ்ந்த விரல்போலப் பதைப்பினொடு நீக்குவனால்.

இ-ள். ஆழ்ந்த பகைவனே எனினும் நெறி மாண்பு உளனேல் - வயிரித்த பகைவனேயெனினும் நல்லொழுக்கமும் நற்குணமும் உள்ளவனாயின்,—உற்று ஆழ்ந்த பிணியான் உண் மருந்தின் உளம் கொள்வான் - அடைந்து

முதிர்ந்த நோயையுடையவன் உண்ணுகின்ற மருந்தை (விரும்பி உண்ணுதல்) போல (அவனை) விரும்புவான்,—சொல் தாழ்ந்த நட்பினனேனும் தீமை தோன்றின் - சொல்லாற் பணிந்த நட்பினனாயிருந்தாலும் (அவனிடத்துத்) தீமைகள் காணப்படுமாயின்,—அராப் பல் தாழ்ந்த விரல்போலப் பதைப்பினொடும் நீக்குவன் - பாம்பின் பல் அழுந்திய விரலைப் (பதைப்போடு வெட்டி நீக்குதல்) போலப் பதைப்போடு நீக்குவான். எ-று.

தீயதாயினும் நற்குணங்கருதி மருந்தைக் கொள்ளுவார்கள்; நல்லதாயினுந் தீக்குணங்கருதி விரலை நீக்குவார்கள். அதுபோலச் சத்துருவாயினுஞ் சிட்டனை நற்குணங்கருதிப் பந்துவாகக் கொள்வான்; நட்பினனாயினுந் துட்டனைத் தீக்குணங்கருதிச் சத்துருவாகக்கொண்டு நீக்குவான் என்பது இதன் கருத்து. (கக)

போற்றுறு தக்கணையாக பாரியெனப் புகுந்தமைபோன்
மாற்றரிய மகதர்குலத் துதித்திவற்கு மனையாளுள்
சாற்றரிய விபுதர்குலந் தழைக்கவிரி தடங்கடல்வாய்த்
தோற்றுமருந் தனநீர்மைத் தோகைசுதக் கணையென்பாள்.

இ-ள். போற்றுறு தக்கணை யாகபாரி எனப் புகுந்தமைபோல் - போற்றப்படுந் தக்கணையானது யாகபாரியென்று புகுந்தவாறுபோல,—மாற்று அரிய மகதர் குலத்து உதித்து இவற்கு மனையாளுள் - ஒப்பில்லாத மகதவம்மிசத்திற்பிறந்து இவனுக்கு மனைவியானவள்,—சாற்று அரிய விபுதர் குலம் தழைக்க விரி தடம் கடல்வாய்த் தோற்றும் மருந்து அன நீர்மைத் தோகை - சொல்லுதற்கரிய (உயர்ச்சியைக்கொண்ட) தேவர்குலந் தழைக்கும்படி பரந்த பெரிய கடலினிடத்துத்தோற்றிய அமுதையொத்த இயல்பையுடைய பெண்,—சுதக்கணை என்பாள் - சுதக்கணை என்று பெயர் கூறப்படுவாள். எ-று.

தோகை உவமையாகுபெயர். (உ0)

மலிவாய பேருததி யகழாக மதில்வட்டம்
பொலிவாய பெருந்திகிரி வளைவாகப் புவியாவு
மொலிவாய வொருநகர்போ லுலவுதன தாணைசெலக்
கலிவாய களிற்றரசர் பொதுநீக்கிக் காக்குநாள்.

இ-ள். மலிவு ஆய பேர் உததி அகழாக - நிறைவைக்கொண்ட பெரிய புறவாழி கிடங்காக,—பொலிவு ஆய பெரும் திகிரி வளைவு மதில் வட்டம் ஆக - பொலிவுபொருந்திய பெரிய சக்கரவாளகிரியின்வளைவு மதிலின் வளைவாக,—புவி யாவும் - பூமிமுழுதையும்,—ஒலி வாய ஒரு நகர்போல் - (செல்வத்தின்) வளர்வைத் தன்னிடத்தேகொண்ட ஒருநகரத்தைப்போல,—உலவு தனது ஆணைசெல - விளங்குகின்ற தனது ஆணைசெல்லும்படி,—கலி வாய களிற்று அரசர் பொதுநீக்கிக் காக்குநாள் - பிளிற்றொலிபொருந்திய

வாயையுடைய யானைப்படையைக்கொண்ட அரசர்களது பொதுவைக்கடிந்து காக்கின்றநாளில். எ-று.

யாவும் காக்குநாள், போலக் காக்குநாள், செலக் காக்குநாள், நீக்கிக் காக்குநாள் எனத் தனித்தனி முடிக்க. நகர்போல இலகுவாகக் காக்குநாளில் என்க. (உக)

நறைகொண்ட மலர்ப்பொகுட்டு நங்கையென நலந்திகழ்நன்
னிறைகொண்ட மயில்வயிற்சே யுறலின்மை நினைந்துநினைந்
துறைகொண்ட பேராசை யொருங்குபரந் துளமுழுதுஞ்
சிறைகொண்டு மீதூரச் சில்பகல்போக் கினனன்றே.

இ-ள். நறைகொண்ட மலர்ப்பொகுட்டு நங்கை என நலம் திகழ் - வாசனையைக்கொண்ட தாமரைப்பொகுட்டிலிருக்கின்ற இலக்குமியைப் போல அழகுவிளங்குகின்ற,—நல் நிறைகொண்ட மயில் வயின் - நல்ல நிறையைக்கொண்ட மயில்போல்வாளாகிய சுதக்கிணையிடத்து,—சேய் உறல் இன்மை நினைந்து நினைந்து உறைகொண்ட பேராசை - ஒரு புதல்வன்றோன்றாமையை நினைத்து நினைத்து அடிப்பட்ட பேராசையானது,—ஒருங்கு பரந்து உளம் முழுதும் சிறைகொண்டு மீதூர - ஒருங்கே பரந்து மனமுழுவதையும் கவர்ந்து மேற்பட,—சில்பகல் போக்கினன் - சிலநாளைக் கழித்தான். எ-று.

நினைந்து நினைந்து என்னுமடுக்கு ஒருதொழில் பலகானிகழ்தற்பொருட்டு; அஃது ஈண்டு எதுப்பொருட்டாய்நின்றது. உறைகொண்ட - ஒரு சொல். (உஉ)

அரசியற்படல முற்றிற்று.

---

## குறைகூறுபடலம்.

ஆயவ னெதிர்வ நல்ல வல்லவை யடாது சென்ற
தீயவை படாது தன்மச் செம்மையிற் செல்லு மோர்நாட்
பாய்கதிர்ப் படலை வட்டப் பரிதியஞ் செல்வன் பௌவந்
தூய்துறத் தோற்றிக் கீழ்பாற் றிசைமுகந் துளக்கு காலை.

இ-ள். ஆயவன் - அவ்வியல்பினையுடையோனாகிய திலீபன்,—எதிர்வ நல்ல அல்லவை அடாது - எதிர்காலத்து வருவனவாகிய வினைகளிலே தீமையானவைகள் பொருந்தாமலும்,—சென்ற தீயவை படாது - செய்து முடிந்தவைகளிலே தீமையானவைகள் பொருந்தாமலும்,—தன்மச் செம்

மையில் செல்லும் ஓர்நாள் - தருமநீதியோடுசெல்லுகின்ற ஓர்நாளில்;—பாய் கதிர்ப்படலை வட்டப் பரிதியஞ்செல்வன் - பரந்த கிரணப்பரப்பையுடைய வட்டமான சூரியன்,—பௌவம் தூய்து உறத் தோற்றிக் கீழ்பால் திசை முகம் துளக்கு காலை - சமுத்திரம் தூய்மையுறத்தோன்றிக் கிழக்குத்திசை யில் முகத்தை விளக்கும்பொழுது. எ-று.

எதிர்வ - எதிர்காலத்துச் செய்யும்படிவரும்வினைகள். சென்ற - இற ந்தகாலத்துச் செய்து கழிந்தவினைகள். செய்வன செய்தவாகிய வினைக ளிலே தீமை வாராதபடி காத்துச் செல்லுகின்ற நாளில் என்பதாம். விளக்கல் - விளங்கச்செய்தல். (௧)

திருக்குன்ற விளங்கு செவ்விச் செம்பொனங் கொடியை யுள்ளத்
திருக்கின்ற தின்னு வென்னு வாவியுள் ளிருத்தல் செய்யாப்
பெருக்கின்ற மார்பிற் கொங்கை யிணைத்தலைச் சுவடு பின்ன
மருக்குன்ற லில்ல போதுச் சேக்கைநின் றெழுந்தான் மன்னோ.

இ-ள். திரு குன்ற விளங்கு செவ்விச் செம்பொனங்கொடியை - இலக் குமியின் அழகுகுன்ற விளங்குகின்ற அழகையுடைய சிவந்த பொற்கொடி போல்வாளை,—உள்ளத்து இருக்கின்றது இன்னு என்னு ஆவியுள் இருத் தல் செய்யா - மனத்தில் (இருத்தி) இருக்கின்றது தீமை என்று உயிரினு ள்ளே இருத்தி,—பெருக்கின்ற மார்பில் கொங்கை இணைத் தலைச் சுவடு பின்ன - தனது பெருமைபொருந்துகின்ற மார்பிலே (அவளின்) தனங்க ளிரண்டின் தலைச்சுவடானது பதிய,—மருக் குன்றல் இல்ல போதுச் சேக் கை நின்று எழுந்தான் - வாசனைகுறையாத புட்பசயனத்தினின்றும் எழுந் தான். எ-று.

கொடியை இருத்தல்செய்யா எழுந்தான், பின்ன எழுந்தான் எனத் தனித்தனி முடிக்க. மனத்துள் இருத்தியதையொழித்து உயிரினுளிருத்தினு னெனவே உயிர்போல விரும்பினுனென்பதாம். "பெருக்குன்றமார்பில்" என்னும் பாடத்திற்குப் பெரிய குன்றம்போலும் மார்பில் எனப் பொருள் கொள்க. (௨)

அம்மலர்த் தாது மூழ்கி யாரகி லாவி யுண்டு
செம்மையிற் பளிதம் வேய்ந்து மான்மதந் திளைத்த தெண்ணீர்
கொய்ம்மலர்க் கோதை நல்லார் குலமணிக் கடிப்பத் தங்கட்
கைமலர் கவின வேந்தக் கண்மலர் கழீஇயி னுனே.

இ-ள். அம் மலர்த் தாது மூழ்கி - அழகிய பூந்தாது மூழ்கப்பெ ற்று;—ஆர் அகில் ஆவி உண்டு - அரிய அகிற்புகையை உண்டு,—செம்மை யில் பளிதம் வேய்ந்து - செவ்விதாகப் பச்சைக்கருப்பூரம் அளாவப்பெற்று,— மான்மதம் திளைத்த தெண்ணீர் - மிருகமதம் கலக்கப்பெற்ற தெளிந்தநீரை,— குலமணிக் கடிப்பத்து - உயர்ந்த மணிகள்பதித்த கரகத்தின்கண்,—கொய்

மலர்க் கோதை நல்லார் - கொய்யப்படும் மலரையணிந்த கூந்தலேயுடைய மகளிர்,—கைமலர் கவின அங்கண் ஏந்த - கைமலர் அழகுறும்படி அங்கே ஏந்திநிற்ப,—கண்மலர் கழீஇயினன் - அந்நீரினுற் (றனது) கண்ணுகிய மலரைக் கழுவினன். எ-று.

நீரை கரகத்து ஏந்த (அதனுற்) கழீஇயினன் என்க. (ங)

தவிர்வில தகைய பற்ப றண்ணதிக் கொணர்ந்த தெண்ணீர்
நவிரெறி நலத்தி னுடி நன்னிலே நயத்த னுகிக்
கவிர்புரை செக்கர்ச் சீதக் கான்றவழ் புறத்த தன்றி
யவிர்மணி யகத்த தாய வம்பொன்மண் டபத்த னுனன்.

இ-ள். தவிர்வு இல தகைய பல்பல் தண் நதி கொணர்ந்த தெண்ணீர் - நீங்காத தகைமையையுடைய பற்பல தண்ணிய நதிகளினின்றும் கொணர்ந்த தெளிந்த நீரில்,—நவிர் எறி நலத்தின் ஆடி - குற்றத்தை ஒழிக்கின்ற பிரகாசத்தோடும் ஸ்நானஞ்செய்து,—நன்னிலே நயத்தன் ஆகி - நன்னிலேயைத்தரும் நித்தியகருமத்தை விரும்பிச் செய்துமுடித்தவனுகி,—கவிர் புரை செக்கர் சீதக் கான் தவழ் புறத்தது அன்றி - முருக்கலரையொத்த செந்நிறத்தைக்கொண்ட (மாணிக்கங்களின்) குளிர்ச்சிபொருந்திய ஒளி தவழுகின்ற புறத்தையுடையதன்றி,—அவிர் மணி அகத்தது ஆய - விளங்குகின்ற மணிகளேக்கொண்ட அகத்தையுடையதுமாய,— அம் பொன் மண்டபத்தன் ஆனன் - அழகிய பொன்னுலாகிய மண்டபத்தின்கண்ணே அடைந்து வீற்றிருந்தான். எ-று.

நன்னிலே - உபசாரம். (ச)

நென்மணி நீட்டு வாரு நெடிதைந்து நிகழ்த்து வாருஞ்
சொன்முறை துதிக்கு வாருந் தருப்பைநீர் தூற்று வாரும்
பொன் மழை யேற்குவாரும் புராதன புனித வேத
மென்மையின் மிழற்று வாரும் வேதிய ராயி னுரே.

இ-ள். வேதியர் - பிராமணர்கள்,—நெல்மணி நீட்டுவாரும் - (அரசனுக்கு) அக்கதைகளேக் கொடுப்பவரும்,—நெடிது ஐந்து நிகழ்த்துவாரும் - விரிவாகப் பஞ்சாங்கத்தைச் சொல்பவரும்,—சொல்முறை துதிக்குவாரும் - சொற்களால் முறைப்படி துதிப்பவரும்,—தருப்பை நீர் தூற்றுவாரும் - தருப்பையினுல் நீரைப் புரோட்சிப்பவரும்,—பொன்மழை ஏற்குவாரும் - பொன்மழைகளேத் (தியாகமாக) ஏற்பவரும்,—புராதன புனித வேதம் மென்மையின் மிழற்றுவாரும் ஆயினர் - பழைய பரிசுத்தமான வேதங்களே மெல்லோசையோடு பாராயணஞ்செய்பவருமாயினர். எ-று. (ரு)

கோட்டுகிர்ப் பதுமச் செங்கைக் கொடியனர் குழங்கன் மாலே
நீட்டுகிற் பதும்வெண் கற்றைச் சாமரை யிரட்டி நேச

நீட்டுகிற் பதும்பல் லாண்டங் கிசைக்குகிற் பதுமா லத்தி
காட்டுகிற் பதும்வேந் தற்கே கடனதா யிற்று மாதோ.

இ-ள். கோடு உகிர்ப் பதுமச் செங்கைக் கொடியனார் - வளைவையுடைய நகத்தைக்கொண்ட தாமரைமலர்போலும் சிவந்தகைகளையுடைய கொடிபோலும் மகளிர்,—குழங்கன்மாலை நீட்டுகிற்பதும் - குழங்கன்மாலையை நீட்டுவதும்,—வெண் கற்றைச் சாமரை இரட்டி நேசம் ஈட்டுகிற்பதும் - வெள்ளிய கற்றையாகிய சாமரைகளை இரட்டி அன்புமிகுவதும்,—பல்லாண்டு இசைக்குகிற்பதும் - பல்லாண்டைக் கூறுவதும்,—ஆலத்தி காட்டுகிற்பதும் - ஆலத்தி காட்டுவதும்,—வேந்தற்கே கடனது ஆயிற்று - அரசனுக்கே உரிமையாயிற்று. எ-று.

ஏ - பிரிநிலை. வேந்தற்கே கடனதாயிற்று என்பதற்கு அரசனுக்கே செய்யப்படும் கடப்பாடாயிற்று எனினுமாம். (கூ)

வாய்ந்துகொண் டடையார் வைவே லணங்கினர்பிணங்கன் மா
வேய்ந்துகொண் டுவப்ப நாளுந் திகழ்வுறு வீங்குதோளார்[லை
காய்ந்துகொண் டுடைய தானை யாயிரர் காவல் சூழ்ந்தா
ராய்ந்துகொண் டுடைய வீர ரயுதரி லொருவ ரம்மா.

இ-ள். அடையார் வை வேல் வாய்ந்து கொண்டு - பகைவரது கூரிய வேலை வென்று கவர்ந்து,—அணங்கினர் பிணங்கல் மாலை வேய்ந்து கொண்டு - பெண்களது பிணையன்மாலையைச் சூட்டிக்கொண்டு,—உவப்ப - அவருவக்கும்படி,—நாளும் திகழ்வுறு வீங்கு தோளார் - நாடோறும் திகழ்வுற்றுப் பூரிக்கின்ற புயங்களையுடையவர்களாகிய,—அயுதரில் ஒருவர் ஆய்ந்து கொண்டுள்ள வீரர் - பதினாயிரவரிலொருவராக வைத்து ஆராய்ந்துகொள்ளப்பட்டவீரர்கள்,—காய்ந்து கொண்டு உடைய தானை ஆயிரர் காவல் சூழ்ந்தார் - கோபித்தலைக்கொண்டுள்ள படைகளையுடைய ஆயிரவர் காவலாகச் சூழ்ந்தார்கள். எ-று.

கொண்டு திகழ்வுறு வீங்கு தோளார், வேய்ந்துகொண்டு திகழ்வுறு வீங்குதோளார் எனத் தனித்தனி முடிக்க. வேல் -புண்ணுமாம்; ஆகுபெயர். இப்பொருட்கு வாய்ந்துகொண்டு என்பதற்குச் சிறப்புறக்கொண்டு எனப் பொருள்கொள்க. (எ)

முடிப்பிணை யலங்க றாழ முதிர்தர முழங்கும் வெவ்வாய்
நொடிப்பிணை யிலாது விம்ம விசைத்தெறி நோன்கைச் சூரற்
றுடிப்பிணைத் திசைதூ ஙாவச் செம்முகந் துளக்கிக் கன்னக்
கடிப்பிணை கவினச் சூழ்ந்தார் கஞ்சுகி மிலேச்ச ரெல்லாம்.

இ-ள். கஞ்சுகி மிலேச்சரெல்லாம் - குப்பாயத்தையணிந்தவர்களாகிய மிலேச்சர்களெல்லாம்,—முடிப் பிணை அலங்கல் தாழ - முடியிலுள்ள பிணை

யன்மாலை தாழவும்,—மூதிர்தர முழங்கும் வெவ்வாய் நொடிப்பு இணையிலாது விம்ம-முதிரமுழங்குகின்ற கொடிய வாயினின்றுமுண்டாகின்ற கடுஞ்சொல் ஒப்பின்றி ஒலிக்கவும்.—விசைத்து எறி நோன் கைச் சூரல் துடிப்பு இணைத் திசை துழாவ-விசைகொண்டு வீசுகின்ற வலிய கையிலுள்ள பிரம்பின் வீச்சு இரண்டுதிசையையும் அளாவ,—செம் முகம் துளக்கி-செவ்விய முகத்தை அசைத்து,—கன்னக் கடிப்பிணை கவினச் சூழ்ந்தார்-காதிலணிந்த கடிப்பிணையானது அழகுசெய்யச் சூழ்ந்தார்கள். எ-று.

தாழவும், விம்மவும் எறி சூரல் என்க. வடதிசையைநோக்கி வீசினால் அவ்வீச்சுத் தென்றிசையையும், தென்றிசையைநோக்கி வீசினால் அவ்வீச்சு வடதிசையையும் இவ்வாறே ஏனைத்திசைகளையும் அளாவும் என்பார், சூரற்றுடிப்பிணைத்திசைதுழாவ என்றார். கடிப்பிணை-குண்டலம். கஞ்சுகிமிலேச்சர் ஒருமைப்பன்மைமயக்கம். (அ)

கிளைக்கடல் வளைவு மாலோன் கிளருடு வளைவு நீதி
திளைக்குநர்வளைவுந் தன்மச்செழுங்கலை வளைவுஞ் செஞ்சொல்
விளைக்குநர் வளைவுந் தேனு வேட்டவர் வளைவு மேரு
வளைக்கடல் வளைவு மற்றை மாகதர் வளைவு மொக்கும்.

இ-ள். கிளைக்கடல் வளைவும் ஆலோன் கிளர் உடு வளைவும் ஒக்கும்-(அரசனை) சுற்றமாகிய கடல் வளைந்துநிற்றலும் சந்திரனை விளங்குகின்ற நட்சத்திரங்கள் வளைந்துநிற்றலும் (தம்முள்) ஒக்கும்,—நீதி திளைக்குநர் வளைவும் தன்மச் செழும் கலை வளைவும் ஒக்கும்-அமைச்சர் வளைந்துநிற்றலும் தருமத்தையுணர்த்தும் செழிய நூல்கள் வளைந்துநிற்றலும்(தம்முள்)ஒக்கும்,—செஞ்சொல் விளைக்குநர் வளைவும் தேனு வேட்டவர் வளைவும் ஒக்கும்-செஞ்சொற்களாலாகிய கவிகளைப்பாடுவோர் வளைந்துநிற்றலும் தேனுவைவிரும்பினோர்வளைந்துநிற்றலும் (தம்முள்) ஒக்கும்,—மற்றை மாகதர் வளைவும் மேரு வளைக்கடல் வளைவும் ஒக்கும்-மற்றைய மாகதர் வளைந்துநிற்றலும் மேருவைச் சங்கையுடைய கடல் வளைந்துநிற்றலும் (தம்முள்) ஒக்கும். எ-று.

கொடைக்குத் தேனுவும் ஒலிக்குக் கடலும் உவமை என்க. வளைவு-சூழ்ந்துநிற்றல். நீதிதிளைக்குநர்-நீதியில் அமிழ்ந்தினோர்; எனவே மந்திரிகள் என்பது பெற்றாம். அமிழ்ந்தல் ஈண்டுப் பலகாற்பயிறல். மாகதர்-வம்மிசபரம்பரையைப் புகழ்ந்துபாடுவோர். இது கடைநிலைத்தீபகமென்னு மலங்காரம். (கூ)

நகல்கடிந் தெவையுந் தன்ன நன்கரத் தடக்கும் வெய்ய
பகல்கடிந் தொளிருஞ் சோதிப் பன்மணிப் பீடத் தங்கண்
மிகல்கடிந் துலக மெல்லாம் வெண்குடை நிழற்றும் வேந்த
னிகல்கடிந் திலங்கும் வேலா னின்னண மிருந்த காலை.

இ-ள். இன்னணம் - இவ்வாறு,—அங்கண் - அவ்விடத்து,—நகல் கடிந்து எவையும் தன்ன நன் கரத்து அடக்கும் வெய்ய பகல் கடிந்து ஒளிரும் சோதி - பிரகாசத்தைக்கெடுத்து எப்பொருளையும் தனது நல்ல கிரணத்தினுள்ளே அடக்குகின்ற வெப்பத்தையுடைய சூரியனை வென்று விளங்குகின்ற ஒளியையுடைய,—பல் மணிப் பீடத்து - பல மணிகள்பதித்த பீடத்தின்கண்,—மிகல் கடிந்து உலகமெல்லாம் வெண்குடை நிழற்றும் - அடங்காமையை ஒழித்து உலகம்முழுவதும் வெண்கொற்றக்குடையை நிழலச்செய்யும்,—வேந்தர் இகல் கடிந்து இலங்கும் வேலான் - அரசர்களது பகையை நீக்கி விளங்குகின்ற வேற்படையையுடையவனாகிய திலீபமகாராசன்,—இருந்தகாலை - இருந்தபொழுதில். எ-று.

நகல் இகழ்வுமாம். இகல் போருமாம். பீடத்து இருந்தகாலை எனவும், நிழற்றும் வேலான் எனவும் இயைக்க. (கo)

இடைந்ததொன் றிலநன் னீதி யிருங்கலை யுணர்வி னென்று
நடந்ததொன் றுடையீர் கேண்மி னற்கலை யேனு மீறிக்
கடந்ததொன் றில்லை யெங்குங் கலந்தெழீக் கடந்துமுள்ளங்
கிடந்ததொன் றென்னப் பேசு கிற்கிய தொடங்கி னானே.

இ-ள். இடைந்தது ஒன்று இல நன்னீதி இருங்கலை உணர்வின் என்று நடந்த தொன்று உடையீர் - தீங்கு சிறிதுமில்லாத நல்ல நீதிநூலறிவிலே மிக்குச் சென்ற பழமையையுடையீர்,—கேண்மின் - கேளுங்கள்,—நல் கலையேனும் மீறிக் கடந்தது ஒன்று இல்லை - நல்ல நூல்களாயிருந்தாலும் (என் உள்ளத்தை) வென்று கடந்தது ஒன்றேனுமில்லை,—எங்கும் கலந்து எழீஇக் கடந்தும் உள்ளம் ஒன்று கிடந்தது என்ன - எக்கருமங்களிலும் கலந்து (அவற்றிலே) மேற்பட்டு முற்றுவித்தும் மனத்திலே ஓர்கருமம் (கடத்தற்கரிதாகக்) கிடந்ததென்று,—பேசுகிற்கிய தொடங்கினான் - சொல்லும்படி தொடங்கினான். எ-று.

கில் இடைநிலை ஆற்றலுணர்நின்றது. (கக)

தன்மையி னமைந்து முன்னர்த் தவத்திடைத் தலைநின் றின்மை
புன்மையி னடாது நாளும் பெறத்தகும் புரவிற் றாகிப்
பன்மையி னடைந்த பேற்றிற் பகர்வரு மைந்தற் பேறொன்
றின்மையி னுயங்குகின்றே னிதுவென்ன துளத்த தன்றே.

இ-ள். தன்மையின் அமைந்து - (தவத்திற்குரிய) தன்மைகளோடுபொருந்தி,—முன்னர்த் தவத்திடைத் தலைநின்று - முன்னரே தவத்திலே மேற்பட்டுநின்றும்,—இன்மை புன்மையின் அடாது - வறுமையைக் கீழ்மையோடு பொருந்தாது,— நாளும் பெறத்தகும் புரவு ஆகி - நாடோறும் (யாரும்) பெறத்தக்க கொடையைப் பொருந்தியும்,—பன்மையின் அடைந்த பேற்றில் - பலவாக (யான்) அடைந்த பேறுகளுள்ளே,—பகர்வு அரும்

மைந்தற்பேறு ஒன்று இன்மையின் உயங்குகின்றேன் - சொல்லற்கரிய புதல்வற்பேறு ஒன்று இல்லாமையினாலே வருந்துகின்றேன் - இது என்னது உளத்தது - இதுவே எனது உளத்தின்கட்கிடந்தது. எ-று.

இற்று - சாரியை. தவமும் தானமுமாகிய இரண்டனையுஞ் செய்து யானடைந்தபேற்றில் என்க. தவத்திற்குத் தன்மையினமைதலும் தானத்திற்கு இன்மையடையாமையும் இன்றியமையாமையின் இங்ஙனங்கூறினார்.

கரமலர் பற்றற் காய பற்றொடுங் கரையுங் காணா
துரமல ரின்ன லாழி யுட்புதை யூறு தீரச்
சுரமலர் சுருதி வாய்மைத் தொல்லைநங் குரவன் பாத
வரமலர் புணைக்கோ ணேரின் வலித்தது முண்டு மாதோ.

இ-ள். கரமலர் பற்றற்கு ஆய பற்றொடும் கரையும் காணாது - கைமலரால் பற்றற்குரிய பற்றுக்கோட்டோடும் கரையையுங் காணாமல்,—உர மலர் இன்னல் ஆழி உள் புதை ஊறு தீர - மனமாகியமலர் துன்பக்கடலின்கண் அமிழ்ந்திய இடையூறுநீங்க,—சுரம் மலர் சுருதி வாய்மைத் தொல்லை நம் குரவன் பாத வரமலர் புணைக்கொள் நேரில் - சுரங்கள்பரந்த வேதத்தின் மெய்ப்பொருளை அறிந்த பழைய நமது குருவின்பாதமாகிய மேலாகிய மலரைப் புணையாகக்கொள்ளுதலைப் பொருந்தினால், — வலித்ததும் உண்டு - (யான்) கருதியதாகிய புத்திரப்பேறும் உண்டு. எ-று.

காணாது புதைத்த ஊறு தீர கொள்நேரின் உண்டு என இயைக்க. கோள் நீட்டல்விகாரம். (கங)

பொய்விடா திருந்த வெய்ய புன்பவக் கடலை நீக்கு
மெய்விடா தியைந்த வன்ன விழுத்துணைப் புணையை யானே
நைவிடா விரிந்த வாழி நற்கரை காணுங் காறுங்
கைவிடா தமைந்தேன் வையங் காக்குமி னீர்க ளென்றான்.

இ-ள். பொய் விடாது இருந்த வெய்ய புன் பவக் கடலை நீக்கும் மெய் விடாது இயைந்த - அறியாமை நீங்காதிருந்த கொடிய எளிய பிறவியாகிய கடலைக் கடக்கின்ற உண்மை நீங்காது இயைந்துள்ள,—அன்ன விழுத்துணைப் புணையை - அந்தச் சிறந்த துணையாயுள்ள (குருவின் பாதமாகிய) தெப்பத்தை,—நைவு இடா விரிந்த ஆழி நல்கரை காணும் காறும் - (புத்திரப்பேறின்மையாலாகிய) வருத்தத்தைக்கொடுத்துப் பரந்த கடலின் நல்ல கரையைக்காணும்வரைக்கும்,—யான் கைவிடாது அமைந்தேன் - யான் பற்றிக்கொண்டேன்,—நீர்கள் வையம் காக்குமின் என்றான் - நீங்கள் பூமியைக் காத்துக்கொள்ளுங்கள் என்றான். எ-று.

இயைந்தபுணையைக் கைவிடாது அமைந்தேன் என இயைக்க. பொய் நிலையாமையுமாம். நைவிடாவிரிந்தஆழி எனவே துன்பக்கடல் என்பது பெறப்படும். (கச)

என்றலு மதிமிக் காரு மெறுழிலா விளைய னேமைக் [றி
குன்றென வுரைத்தற் கென்னே குணஞ்செய்தே மென்னக்கூ
யின்றுணை முனிவற் சேரி னிரும்பலன் றருநாள் வீணிற்
பின்றலின் றென்னு மாற்ற னம்முறை பெரிதி னேர்ந்தார்.

இ-ள். என்றலும் - என்று அரசன் கூறுதலும்,—மதிமிக்காரும் - மந்திரிமாரும்,—எறுழ் இலா இளையனேமைக் குன்றென உரைத்தற்கு - வலியில்லாத இளையேங்களை வலியுடைய மலைபோன்றேமென்று சொல்லுதற்கு,—என் குணம் செய்தேம் என்னக் கூறி - என்ன குணஞ்செய்தோமென்று சொல்லி,—இன் துணை முனிவற் சேரின் - இனிய துணையாகிய முனிவனை அடையின்,—இரும்பலன் தரு நாள் வீணில் பின்றல் இன்று என்னும் ஆற்றல் - பெரியபயனைத்தருகின்றநாள் வீணுகத் தாமதித்தலில்லையென்னுந் தன்மையினுல்,—அ முறை பெரிதின் நேர்ந்தார் - அக்கடமைக்கு மிகவும் உடன்பட்டார். எ-று.

மலை கலங்காநிலைக்கு உவமை. அன் - சாரியை. (கடு)

மோடுடைக் கடாத்த வெற்பு மத்தக முன்ற ளூன்றுஞ்
சேடுடைச் சீய வேற்றுச் செம்பொ னாசனத்தை நீங்கிக்
கோடுடைக் களிநல் யானைக் கோமகன் விதியிற் கூறும்
பீடுடைப் பெரிய பூசை பிதாமகற் கருளி னானே.

இ-ள். கோடு உடைக் களி நல் யானைக் கோமகன் - (அப்பொழுது) கோட்டினையுடைய களிப்பைக்கொண்ட நல்ல யானைப்படையையுடைய அரசன்,—மோடு உடைக் கடாத்த வெற்பு மத்தகம் முன் தாள் ஊன்றும் - பெருமையினையுடைய யானையின் மத்தகத்தில் முன்காலையூன்றிய,—சேடு உடைச் சீய ஏற்றுச் செம் பொன் ஆசனத்தை நீங்கி - பெருமையினையுடைய சிங்கேற்றினாற்சுமக்கப்படும் சிவந்த பொன்னாற்செய்த ஆசனத்தை நீங்கி,—விதியில் கூறும் பீடு உடைப் பெரிய பூசை பிதாமகற்கு அருளினான் - விதிப்படி சொல்லப்பட்ட பெருமைபொருந்திய முதற்பூசையைப் பிரமாவுக்குச்செய்தான். எ-று.

ஊன்றுஞ் சீய எறு என்க. கூறல் நூல்களிற்சொல்லுதல். (கசு)

ஒதுக்கற வரசர் தாழ்போ தொன்றொடொன் றுரிஞ்சி யோங் [கும்
புதுக்கதிர் மகுடகோடி யுக்கன பொற்றா ளெல்லாம்
விதுக்கொழுந் தனைய வெண்சா மரைவிசைக் காலின் வீழ்தார்
மதுக்கலந் தசும்ப தாக மாமணி வாயில் புக்கான்.

இ-ள். ஒதுக்கு அற அரசர் தாழ் போது ஒன்றொடு ஒன்று உரிஞ்சி ஓங்கும் - விலகுதலின்றி (வாயிலில்நிற்கும்) அரசர்கள் வணங்கும்பொழுது ஒன்றோடொன்று உரோஞ்சுற்று விளங்கும்,—புதுக் கதிர் மகுடகோடி

உக்கன பொன் தூளெல்லாம் - புதிய கிரணங்களை வீசுகின்ற மகுடகோடிகள் சொரிந்தனவாகிய பொற்றூள்களெல்லாம்,—விதுக்கொழுந்து அனைய வெண்சாமரை விசைக் காலின் வீழ் தார் மதுக் கலந்து அசும்பது ஆக - சந்திரனது இளங்கிரணத்தை ஒத்த வெள்ளிய சாமரைகளின் விசைக்காற்றினால் விழுகின்ற மாலையிலுள்ள தேனோடுகலந்து வழுக்குநிலமாகும்படி,—மாமணி வாயில் புக்கான் - மாணிக்கமணிகள்பதித்த கோபுரவாயிலை அடைந்தான். எ-று.

பொற்றூளெல்லாம் கலந்து அசும்பதாகப் புக்கான் என இயையும். உரிஞ்சி...........பொற்றூளெல்லாம் என்பதற்கு உரோஞ்சுதால் உக்கனவாகிய பொற்றூளெல்லாம் என முடித்துப் பொருள்கோடலுமொன்று. இப்பொருட்கு மகுடகோடியுக்கன என்பது நீக்கப்பொருளில்வந்த ஐந்தாம் வேற்றுமைத்தொகை. (கஎ)

அரம்புதை யயில்வேன் மன்ன ராகவொண் களபத் தங்கண்
குரம்புதை தரவே வாளி பாய்தருங் கொற்ற மாவோன்
பரம்புதை முலைக்கொல் யானை யவளொடும் பணியி னுச்சி
யுரம்புதை பரிதி நோன்றா ளொண்மணித் தேர னானான்.

இ-ள். அரம் புதை அயில் வேல் மன்னர் ஆக ஒண் களபத்தங்கண் குரம் புதைதர - அரம் அராவிய கூரிய வேற்படையையுடைய அரசரது மார்பிலணிந்த ஒள்ளிய களபச்சாந்தின்கண் குளம்புபுதையும்படி,—வாளி பாய்தரும் கொற்றமாவோன் - மண்டலமாயோடுகின்ற குதிரையையுடையவனாகிய திலீபனானவன்,—பரம் புதை முலைக் கொல் யானை அவளொடும் - பாரஞ்செறிந்த முலையாகிய கொல்லுகின்ற யானையையுடைய அச்சுதக்கிணையோடும்,—பணியின் உச்சி உரம் புதை பரிதி நோன் தாள் ஒண் மணித் தேரன் ஆனான் - (சேடனாகிய) பாம்பின் உச்சியிலே வலிதாக அழுந்துகின்ற வட்டமாகிய வலிய உருளையைக்கொண்ட ஒள்ளிய மணிகளையுடைய தேரினிடத்தனானான். எ-று.

குதிரையையுடையோன் யானையையுடையவளோடு தேரனானான் என்பதுந்தோன்றவைத்தார் என்க. (கஅ)

மின்னொன்று பிறையும் வில்லு முகங்கொண்டு மேகந் தாங்கிப்
பின்னின்று விளங்கச் செய்ய சுடரொன்று பெரிய தேரி
னென்னின்றகரங்கண்மாறித்தண்ணின்றங்கிலங்கவிம்பர்ச்[ன்
சொன்னின்றநெறிச்சென்றாங்குப்போயினன்றாய்மையுள்ளோ

இ-ள். மின் ஒன்று பிறையும் வில்லும் முகம் கொண்டு மேகம் தாங்கிப் பின் நின்று விளங்க - மின்னலொன்று பிறையையும் வில்லையும் முகத்தேகொண்டு மேகத்தைச் சுமந்து பின்னே நின்று விளங்க,—செய்ய சுடர் ஒன்று - செஞ்ஞாயிறொன்று,—எல் நின்ற கரங்கள் மாறித் தண் நின்று

இலங்க - ஒளிநிலைபெற்ற கிரணங்கள் (வெப்பம்) நீங்கிக் குளிர்ச்சி நிலைபெற்று விளங்கும்படி,—பெரிய தேரில் இம்பர் சொல்நின்ற நெறிச் சென்றுங்கு - பெரிய தேரிலே இப்பூமியிற் சொல்லப்பட்டவழியிற் சென்றாற் போல,—தூய்மையுள்ளோன் போயினன் - சுத்தமுள்ளோனுகிய திலீபன் சென்றான். எ-று.

விளங்கச்சென்றுங்கு இலங்கச்சென்றுங்கு எனத் தனித்தனி முடிக்க. இல்பொருளுவமை. அருளுடைமைபற்றித் தண்ணின்றிலங்க என்றார். மின் - சுதக்கிணை. (கக)

மேனகு வென்றித் தானை யதனெடுந் தொடரு மிக்க
கோநகர் நிறுவி யேகிக் குலவிய வடிமா நாகர்
தூநகர் வளைப்ப வானித் துளங்கொளி யுச்சி வான
மாநகர் வளைக்கும் வேலி வளநகர் நீங்கினனே.

இ-ள். மேல் நகு வென்றித் தானையதனெடும் தொடரும் மிக்க கோ நகர் நிறுவி ஏகி - மேலாக விளங்குகின்ற வெற்றியையுடைய சேனைகளோடும் பின்றொடர்ந்து வருகின்ற அரசர்களை நகரத்தில் (நிற்குமாறு) நிறுவிச் சென்று,—குலவிய அடி மா நாகர் தூநகர் வளைப்ப - விளங்கிய அடியானது பெரிய நாகரது சுத்தமாகிய நகரை (ச்சென்று) சூழ,—வானித் துளங்கு ஒளி உச்சி வான மாநகர் வளைக்கும் வேலி - கொடியையுடைய விளங்குகின்ற ஒளிபொருந்திய உச்சியானது விண்ணுலகத்தைச் சென்றுசூழ்ந்த மதிலையுடைய,—வள நகர் நீங்கினன் - வளம்பொருந்திய அந்தநகரத்தை விட்டுநீங்கினன். எ-று.

கோ சாதியொருமை. எகி நீங்கினன் எனவும், வளைப்ப வளைக்கும் வேலி எனவும் இயைக்க. (உ0)

வேறு.

சுரிக்கடை வளைநிலாக் குவளைத் தூமடற்
பரிக்கடை திறத்தலும் பதுமந் தாழ்ந்துசெல்
சரிக்கடை மீண்டிரா வுணவெற் றூழுண
வரிக்கடை பாண்செயு மருத மெய்தினன்.

இ-ள். சுரிக்கடை வளை நிலா - சுரித்தலைத் தன்னிடத்தேகொண்ட சங்குகளின் நிலாவானது,—குவளைத் தூமடல் பரிக்கடை திறத்தலும் - குவளையினது சுத்தமாகிய இதழாகிய அடைத்தவாயிலைத் திறந்தவளவில்,— பதுமம் தாழ்ந்து செல் சரிக்கடை வரிக்கடை மீண்டு - தாமரைமலர்கள் குவிதலால் சென்றவழியே வண்டுகள் மீண்டு,—இரா உணவு எல் தாம் உண பாண் செயும் - இராக்காலத்துக்குரிய உணவைப் பகற்காலத்திலே தாமுண்ணும்படி பாடுகின்ற,—மருதம் எய்தினன் - மருதநிலத்தை அடைந்தான். எ-று.

வளை ஆகுபெயர். தாழ்ந்து என்னும் எச்சம் ஏதுப்பொருட்டு. (உக)

வரிப்படு கரமலர் மன்னற் காறெலாம்
விரிப்பதுங் குயில்களான் மெல்லி தேமொழி
தெரிப்பதும் பிரமரத் திரளிற் பண்ணிசை
பரிப்பது மந்நிலப் பணியிற் றுயதே.

இ-ள். மன்னற்கு ஆறெலாம் வரிப்படு கரமலர் விரிப்பதும் - திலீப மகாராசனுக்கு வழிகளிலெல்லாம் இரேகைகள்பொருந்திய கைமலர்களை விரிப்பதும்,—குயில்களான் மெல்லி தேமொழி தெரிப்பதும் - குயில்களினோசையால் சுதக்கிணையின் இனியமொழியைத் தெரிவிப்பதும்,— பிரமரத் திரளில் பண் இசை பரிப்பதும் - வண்டுக்கூட்டங்களாற் பண்ணமைந்த இசையைப்பாடுவதும்,—அ நிலப் பணி ஆயது - அந்தநிலத்தின்தொழிலாயது. எ-று.

இற்று சாரியை. விரிப்பதும், தெரிப்பதும், பரிப்பதும் அந்நிலப்பணி ஆயது என்க. அரசனைக்கண்டோர் உபசாரங்கூறுமிடத்துக் கையைவிரித்துக்கூறுவது வழக்காதலின் கரமலர்விரிப்பதும் என்றார். கரம் என்பதற்கியைய வரிப்படும் என்னும் அடை புணர்க்கப்பட்டது. குயில்கள் - ஆகுபெயர். (உஉ)

ஒளித்தரு வேலற்கண் டுற்ப லத்தகண்
களித்தலு மரைமுக மலர்ந்து கட்டுளி
துளித்தலு மடியுறை யாகத் தூயமுத்
தளித்தலு மல்லதை யறிகி லாததே.

இ-ள். ஒளித்தரு வேலற் கண்டு - ஒளியாற்றக்க வேலையுடையவனாகிய திலீபமகாராசனைக் கண்டு,—உற்பலத்த கண் களித்தலும் - நீலோற்பலமாகிய கண்கள் களிப்புறுதலும்,—மரைமுகம் மலர்ந்து கட்டுளி துளித்தலும் - தாமரையாகிய முகமலர்ந்து கண்ணீர்த்துளி துளித்தலும்,—அடி உறையாகத் தூயமுத்து அளித்தலும் அல்லது - பாதகாணிக்கையாகச் சுத்தமாகிய முத்தைக் கொடுத்தலுமன்றி,—அறிகிலாதது - வேறொன்றையும் (அம்மருதம்) அறியாததன்மையையுடையது. எ-று.

அத்து, அ, ஐ சாரியைகள். மருதம் தோன்று எழுவாய்; பின்வருவனவுமன்ன. கட்டுளி - கண்ணீர்த்துளியும் தேன்றுளியுமாம். (உங)

அரும்பிய முளைக்கொள்பா லிகைசெய் யாகவான்
சுருங்கைநீ ரொலிமுழ வொலியிற் றுண்ணெனக்
கரும்பொடு கதலிபூ கதமுங் காண்வர
விரும்புற வெங்கணும் விழவுஞ் செய்ததே.

இ-ள். செய் அரும்பிய முளைக்கொள் பாலிகையாக - (நெல்முதலிய பயிர்களையுடைய) வயல் அரும்பிய முளையைக்கொண்ட பாலிகையாக,— வான் சுருங்கை நீர் ஒலி முழவு ஒலியில் துண்ணென - பெரிய மதகுகளாற்பாயும் நீரொலி முழவினொலியைப்போலத் துண்ணென்றொலிக்க,— கரும்பொடு கதலி பூகதமும் காண்வர - கரும்போடு வாழைகளும் கமுகுகளும் காணப்படலால்,—விரும்புற எங்கணும் விழவும் செய்தது - (அரசன் விரும்பும்படி) எவ்விடத்தும் விழவையும் (அம்மருதம்) செய்தது. எ-று.

விழா - கொண்டாட்டம். (உச)

புள்ளுலாந் தொடையினு னெறிசெல் புன்கணெஞ்
சுள்ளுகா தற்பரி வுடனின் றூட்டுதேன்
விள்ளுபாற் றகட்டிதழ் வனச வெள்ளியம்
வள்ளமேற் கொடுதக வேந்தி மன்னுமே.

இ-ள். புள் உலாம் தொடையினுன் நெறி செல் புன்கண் - வண்டுகள் படிகின்ற மாலையையுடையவனுகிய திலீபன் வழிவருகின்ற வருத்தத்தை,— நெஞ்சு உள்ளு காதல் பரிவுடன் நின்று - மனத்தில் நினைக்கின்ற அன்பாலாகிய வருத்தத்தோடும் நின்று,—ஊட்டு தேன் - (அதுநீர) உண்பிக்கின்ற தேனை,—விள்ளு பால் தகட்டு இதழ் வனச வெள்ளி வள்ளம் மேல்கொடு - (அம்மருதம்) விரிந்த பால்போலும் பரந்த இதழ்களையுடைய தாமரைமலராகிய வெள்ளிக்கிண்ணங்களின்மீதுகொண்டு,—தக ஏந்தி மன்னும் - தகைமைபொருந்த ஏந்திநிற்கும். எ-று.

அரசனுக்கு வழிவந்த வருத்தத்திற்குத் தேனை மருதம் வெள்ளிவள்ளத்தில் மரியாதையாக ஏந்திநிற்கும் என்பதாம். மரியாதை வெள்ளிக்கிண்ணத் தேந்தல். (உரு)

செய்யதா மரையனஞ் சிறிய பார்ப்பினை
மெய்யதாஞ் சிறைகொடங் கெதிர்வி ளங்கலா
னெய்யதாம் வேலற்கு நினைந்த வப்பலங்
கையதா நிமித்தமுங் காட்டு கின்றதே.

இ-ள். செய்ய தாமரை அனம் - செந்தாமரைமலரின்மேல் இருக்கும் அன்னம்,—சிறிய பார்ப்பினை மெய்யதாம் சிறைகொடு அங்கு எதிர் விளங்கலால் - சிறிய குஞ்சினை மெய்யின்கணுள்ளதாகிய சிறைகளால் அடக்கிக்கொண்டு அங்கே முன்னிலையில் விளங்குதலால்,—நெய்யது ஆம் வேலற்கு - நெய்பூசிய வேற்படையையுடையவனுகிய திலீபமகாராசனுக்கு,— நினைந்த அப்பலம் கையது ஆம் நிமித்தமும் காட்டுகின்றது - (அவன்) கருதிய அப் (புத்திரப்) பேறு நிச்சயமாகக் கிடைக்கும் (என்னுமொரு) நிமித்தத்தையும் (அம்மருதம்) காட்டுகின்றது. எ-று.

தாமரையில் அன்னம் விளங்கலால் எனினுமாம். (உசு)

கிரிநில மேலெழு பரிதிக் கேழ்கதிர்
விரிநில மெங்கணும் விளங்கு மாழியான்
றெரிநில நான்கினுட் சிறந்த வின்னணம்
புரிநில மிறந்துபோய்ப் புறவ மெய்தினன்.

இ-ள். கிரி நிலம் மேல் எழு பரிதிக் கேழ் கதிர் விரிநிலமெங்கணும் விளங்கும் ஆழியான் - மலையிடத்தினின்றும் மேலெழுகின்ற சூரியனது நிறம் பொருந்திய கிரணங்கள் பரக்கின்ற பூமிமுழுவதுஞ் (சென்று) விளங்குகின்ற ஆஞ்ஞாசக்கரத்தையுடையவனாகிய திலீபன்,—தெரிநிலம் நான்கினுள் சிறந்த இன்னணம் புரிநிலம் இறந்துபோய் - (நூல்களால்) தெரிக்கப்பட்ட நிலங்கள் நான்கினுள்ளும் மேலானதாகிய இவ்வாறு (அரசனுக்கு உபசாரங்களைச்) செய்கின்ற மருதநிலத்தைக் கடந்துசென்று,—புறவம் எய்தினன் - முல்லைநிலத்தை அடைந்தான். எ-று.

சிறந்த நிலம், புரிநிலம் எனத் தனித்தனி முடிக்க. (உஎ)

ஐவரு குங்குமத் தாத ளாயகா
றைவரு சீதளச் சரிநெ ருக்குமாற்
பொய்வரு நுண்ணிடை சாயற் பொற்பினைக்
கைவரு மினமெனக் கலந்த மஞ்ஞையே.

இ-ள். பொய்வரு நுண் இடை சாயல் பொற்பினை - பொய்யாந்தன்மை வளரப்பெற்ற நுண்ணிய இடையையுடையவளாகிய சுதக்கிணையினது சாயலின்பொலிவை,—கைவரும் இனமெனக் கலந்த மஞ்ஞை - பழகிய (தம்) இனமென்று கருதி அடைந்த மயில்கள்,—ஐவரு குங்குமத் தாது அளாய கால் தைவரு - அழகுபொருந்திய குங்குமப்பூந்தாதை அளாவிய (தென்றற்) காற்றுவந்து பரிசிக்கின்ற,—சீதளச் சரி நெருக்கும் - குளிர்ச்சிபொருந்திய வழியை நெருக்கும். எ-று.

மஞ்ஞைநெருக்கும் என்க. செல்லவிடாது நெருக்கிக்கொள்ளும் என்றபடி. கைவரும் என்பதற்குத் தம்மிடத்தேவந்த எனினுமாம். (உஅ)

அச்சுநாட் டுருளொலி யகற்ற வஞ்சிநின்
றெச்சுநாட் டங்கொடு சூழ வெய்துமாற்
கச்சுநாட் டுந்தடங் கொங்கை கைகொளா
நச்சுநாட் டம்பெறு மருண்ட நவ்வியே.

இ-ள். கச்சு நாட்டும் தடம் கொங்கை கைகொளா நச்சு நாட்டம் பெறு - கச்சு அணியப்பெற்ற பெரிய முலைகளையுடையவளாகிய சுதக்கிணையினது உள்ளங்கையுளடங்காத நஞ்சுபோன்ற கட்பார்வையைப்பெற்று,—மருண்ட நவ்வி - (தம் இனமென்று) மயங்கிய மான்கள்,—அச்சு நாட்டு

உருள் ஒலி அகற்ற அஞ்சி நின்று - அச்சிலே நாட்டிய உருளையின் ஒலி தூரத்த அச்சமுற்று நின்று,—எச்சு நாட்டம் கொடு சூழ எய்தும் - குறைந்த பார்வையைக்கொண்டு சூழவந்தடையும். எ-று.

அச்சமுறுதலால் தூரத்துநின்றே சூழவந்தடையும் என்க. கைகொளா எச்சுநாட்டம் என்பது குடங்கையினகன்றவிழி என்பதுபோல நின்றது.

உருப்புவண் புகையெழு முருட்டு ளைப்புற
நெருப்பினின் வீழ்வபோ னெறியி னேருமாற்
கருப்புமென் மொழிசெழுங் களபச் செந்தனப்
பொருப்பினை நோக்கிய நேமிப் புட்களே.

இ-ள். கரும்பு மென்மொழி செழும் களபச் செம் தனப் பொருப்பினை நோக்கிய நேமிப் புட்கள் - கரும்புபோலும் மெல்லிய மொழியினையுடையவளாகிய சுதக்கிணையினது செழிய களபச்சாந்தையணிந்த செம்மையாகிய தனமலையைநோக்கிய சக்கரவாகப்பறவைகள்,—உருப்பு வண் புகை எழும் உருள் துளைப்புற நெருப்பினில் வீழ்வபோல் - வெப்பமான மிக்க புகை எழாநின்ற உருளையின் துளைப்புறத்தில் எழுகின்ற நெருப்பின்கண் வீழ்வனபோல,—நெறியில் நேரும் - வழியில் (வந்து) எதிரும். எ-று.

நோக்கிய நேமிப்புட்கள் (இனமென்று) வந்துநேரும், (தோற்றமையால்) வீழ்வபோல் வந்துநேரும் எனத் தனித்தனி முடிக்க. (௩0)

செஞ்சுடர்க் காசினைக் கனியிற் றீண்டுபு
சஞ்சடர்த் திடமணித் தேரிற் சாயுமால்
விஞ்செழிற் கனங்குழை மென்சொற் றேனினைத்
தஞ்செவிப் படுத்திய கிள்ளைச் சாதமே.

இ-ள். விஞ்சு எழில் கனம் குழை மென் சொல் தேனினைத் தம் செவிப் படுத்திய - மிகுந்த அழகுபொருந்திய கனத்த குழையையுடையாளாகிய சுதக்கிணையின் மெல்லிய சொல்லாகிய தேனைத் தமது செவியிலே பெற்றுக்கொண்ட,—கிள்ளைச் சாதம் - இளங்கிளிகள்,--செஞ்சுடர்க் காசினை கனியில் தீண்டுபு - செவ்வொளியையுடைய இரத்தினங்களைக் (கொவ்வைக்) கனியென்று கருதுதலினாலே கவ்வி,—சஞ்சு அடர்த்திட மணித் தேரில் சாயும் - (அவைகள் தம்) அலகை உறுத்துதலினால் அழகிய தேரில்விழும். எ-று.

தீண்டுபு சாயும் என வினைமுடிபுசெய்க. இது மயக்கவணி. (௩க)

அந்தரச் சிற்றிடை பொருட்டி லாங்கிவை
வந்திரைத் தருநெறி தோறு மண்டலாற்
றந்திரத் தமர்புரி சமர வேலுடை
வெந்திறற் குரிசிலுன் விரும்பி நோக்கியே.

இ-ள். அந்தரச் சிற்றிடை பொருட்டில் ஆங்கு இவை வந்து இசைத்து - ஆகாயத்தை ஒத்த சிறிய இடையையுடையவளாகிய சுதக்கிணையின் பொருட்டாக அங்கே இவைகள் வந்து ஒலித்து,—அரு நெறிதோறும் மண்டலால் - அரிய வழிகள்தோறும் நெருங்கலால்,—தந்திரத்து அமர்புரி சமர வேல் உடை வெம் திறல் குரிசில் - சேனைகளோடு போரைச்செய்கின்ற வேற்படையை ஏந்திய கொடிய வலியையுடையவனாகிய திலீபன்,— விரும்பி நோக்கி - அவற்றை விரும்பிப் பார்த்து. எ-று.

புரிகுரிசில் என இயைக்க. சமரம் - போர்; வேலுக்கு அடை. தான் - அசை. இது குளகம். (௩௨)

பைந்தொடி சாயலை நோக்கும் பார்வையைச்
சிந்தையி லிருத்திடுஞ் செவியிற் செஞ்சொலை
முந்துற வைத்திடு மூரிக் கைகளாற்
சந்தணி கொங்கையைத் தழுவி நிற்குமே.

இ-ள். பைந் தொடி சாயலை நோக்கும் - பசிய வளையலையணிந்த சுதக்கிணையின் சாயலைப் பார்ப்பான்,—பார்வையைச் சிந்தையில் இருத்திடும் - அவளது பார்வையை மனத்தில் இருத்துவான்,—செஞ்சொலை செவியில் முந்துற வைத்திடும் - செவ்விய சொல்லைச் செவியின்கண் முன்னரே வைப்பான்,—மூரிக் கைகளால் சந்து அணி கொங்கையைத் தழுவி நிற்கும் - வலிய கைகளால் சந்தனத்தை அணிந்த தனங்களைத் தழுவிநிற்பான். எ-று.

உவமைப்பொருள்களைநோக்கி அவற்றின் உவமேயப்பொருள்கள் சிறத்தலால் அவற்றை விரும்புவான் என்க. (௩௩)

இன்னண முவகைகொண் டிதய வாரிச
மன்னிய களிபுறம் வளர்ந்து வாடிய
பொன்னிவர் வதனவம் புயம லர்த்திட
நன்னெறி கடந்தன னாம வேலினன்.

இ-ள். நாம வேலினன் - அச்சத்தைச்செய்கின்ற வேற்படையையுடையவனாகிய திலீபன்,—இன்னணம் உவகை கொண்டு - இவ்வாறு மகிழ்ச்சி கொண்டு,—இதய வாரிசம் மன்னிய களி புறம் வளர்ந்து வாடிய பொன் இவர் வதன அம்புயம் மலர்த்திட - இதயகமலத்தில் நிலைபெற்ற களிப்பானது புறத்தேவளர்ந்து வாட்டமுற்ற அழகுபொருந்திய முகத்தாமரையை மலர்த்த,—நல் நெறி கடந்தனன் - நல்லவழியைக் கடந்தான். எ-று.

கொண்டு கடந்தனன் என இயைக்க. (௩௪)

கூர்ந்தொளிர் நளினவான் கொட்டைக் கட்டினை
யிர்ந்திண ரேந்திவந் திறைக்குந் தென்றல்பி

னூர்ந்தநு கூலமே செய்ய வோகையாற்
சேர்ந்தன னம்முனி தில்லத் தெல்லையே.

இ-ள். கூர்ந்து ஒளிர் நளின வான் கொட்டைக் கட்டினை ஈர்ந்து - மிக்கு விளங்குகின்ற தாமரையின் பெரிய பொகுட்டின் திரட்சியை அரிந்து,—இணர் ஏந்தி வந்து இறைக்கும் தென்றல் - மகரந்தங்களைத் தாங்கி வந்துசொரியுந் தென்றலானது,—பின் ஊர்ந்து அநுகூலம் செய்ய - பின்னுறச்சென்று புத்திராநுகூலத்தைக் காட்ட,—ஓகையால் அம்முனி தில்லத்து எல்லை சேர்ந்தனன் - மகிழ்ச்சியோடு அம்முனிவரது காட்டினெல்லையை அடைந்தான். எ-று.

தென்றல் பின்னாகவருதல் அநுகூலமாதல்பற்றி இங்ஙனங்கூறினார்.()

சேல்வரை கரியகட் டிருவ னாளொடு
நூல்வரை விளங்குதேர் நொய்தி னீங்கினான்
சால்வரை யிரும்பிடி யோடுந் தாழ்விலா
மால்வரை யிழிந்ததோர் களிற்றின் மாட்சியான்.

இ-ள். சால் வரை இரும்பிடியோடும் தாழ்வு இலா மால்வரை இழிந்ததோர் களிற்றின் மாட்சியான் - மேன்மைபொருந்திய பெரிய பிடியோடும் குற்றமில்லாத பெரிய மலையினின்றும் இறங்கிய ஒரு களிற்றுயானையின் றன்மையையுடையவனாய்,—சேல்வரை கரிய கண் திரு அன்னாளொடும் - சேலைநிகர்த்த கரிய கண்களையுடைய இலக்குமியை ஒத்தவளாகிய சுதக்கிணையோடும்,—நூல்வரை விளங்கு தேர் நொய்தின் நீங்கினான் - நூல் விதிப்படி (செய்து) விளங்குகின்ற தேரை விரைவாக நீங்கினான். எ-று.

நீங்கினவன் களிற்றின்மாட்சியை ஒத்தான் என முடித்துப் பொருள் கோடலுமாம். (நகு)

பொருள்பட யாவையும் புரக்கு வானிடை
யருள்பட மறைபுக லறிஞர் தம்முளே
தெருள்பட வொருதனிச் சிறுமை யாருளத்
திருள்பட வந்திவந் திறுத்த தென்பவே.

இ-ள். பொருள்பட யாவையும் புரக்குவானிடை அருள்பட - பயன் படும்படி எவற்றையுங் காக்கின்றவனாகிய திலீபனிடத்தில் (முனிவனுடைய) அருளுண்டாகவும்,—மறை புகல் அறிஞர் தம் உள்ளே தெருள்பட - வேதத்தை அத்தியயனஞ்செய்யும் முனிவர்களுடைய உள்ளத்தே தெளிவு பொருந்தவும்,—ஒரு தனிச் சிறுமையார் உளத்து இருள்பட - ஒப்பற்ற பிரிவாகிய சிறுமையையுடையாரது மனத்தில் மயக்கமுண்டாகவும்,—அந்தி வந்து இறுத்தது - அந்திக்காலம் வந்துசேர்ந்தது. எ-று.

தெளிவு - தியானம்; உபசாரம். அருள்படவும், தெருள்படவும், மருள் படவும் வந்திறுத்தது என்க. (நஎ)

நிறைமுழக் கெழுமிகு புணரி நீடொலி
யிறைமுழக் கெனநிரந் தியங்கு தேன்முரன்
முறைமுழக் குடையவம் முளரி யெங்கணு
மறைமுழக் கல்லது மற்றொன் றில்லையே.

இ-ள். நிறை முழக்கு எழு மிகு புணரி நீடு ஒலி இறை முழக்கு என - நிறைந்த ஒலி எழுகின்ற மிக்க கடலின் நெடிய ஒலியும் அற்பமான ஒலி என்று சொல்லும்படி,—நிரந்து இயங்கு தேன் முரல் முறை முழக்கு உடைய அ முளரி எங்கணும் - பரந்துசெல்லும் வண்டுகள் ஒலிக்கின்ற முறையான முழக்கையுடைய அந்தக் காடெங்கும்,—மறை முழக்கு அல்லது மற்று ஒன்று இல்லை - வேதமுழக்கமேயன்றி வேறொரொலி அங்கே இல்லை. எ-று.

முழக்கென முரல் முழக்கு என இயையும். (ருஅ)

சீருடைச் சராசர மெவைக்குஞ் சேர்வரு
மூருடைப் பரம்பொரு ளுளத்த தாகவே
நேருடைப் பெருநிலை நியதி யாற்றினன்
போருடைப் பொருந்திறற் புலவு வேலினன்.

இ-ள். போர் உடைப் பொரும் திறல் புலவு வேலினன் - போரையுடைய பொருதற்குரிய வலிமையைக்கொண்ட புலான்மணம்பொருந்திய வேற்படையைத் தாங்கியவனாகிய திலீபன்,—சீர் உடைச் சரம் அசரம் எவைக்கும் சேர்வு அரும் ஊர் உடைப் பரம்பொருள் - சிறப்பினையுடைய சராசரமாகிய உயிர்களுக்கெல்லாம் சேர்தற்கரிய பதத்தையுடைய பரம்பொருளானது,—உளத்தது ஆக - தன்மனத்தின்கண்ணதாக,—நேர் உடைப் பெருநிலை நியதி ஆற்றினன் - அடைதலையுடைய வீட்டைத் தருவதாகிய நித்தியகன்மத்தைச் செய்தான். எ-று.

போருடை என்பதை வேலோடும், பொருந்திறல் என்பதை அரசனோடும் முடிக்க. பெருந்திறல் எனவும் பாடம். பெருநிலை - தியானமுமாம். (ருக)

மின்குலா மொளிறுவேல் வேந்தன் சார்தலாற்
பொன்குலாந் தவவனம் புதுமை பூணலு
நன்குலா மிதுபிற நனிந டந்தவா
றென்கொலா மெனமுனி யிதயத் தெண்ணினன்.

இ-ள். மின் குலாம் ஒளிறு வேல் வேந்தன் சார்தலால் - மின்னொளி விளங்குகின்ற பிரகாசிக்கும் வேலையுடைய அரசன் அடைதலால்,—பொன் குலாம் தவவனம் புதுமை பூணலும் - அழகுவிளங்குகின்ற தபோவனமானது புதிதாகியவொருதன்மையைப் பொருந்துதலும்,—நன்குலாம் இது நனி நடந்தவாறு என்கொல் என - நன்மைவிளங்குகின்ற இப்புதுத்

தன்மை மிகவும் நிகழ்ந்தவாறு என்னையோ என்று, — முனி இதயத்து எண்ணினன் - வசிட்டமுனிவர் தம்மனத்துக் கருதினர். எ-று.

பிற, ஆம் அசைகள். இனிப், பிற என்பதை அசையாக்காது இது பிறதன்மையையுடையதாயிருக்கின்றது எனினுமாம். (சO)

பற்றுள வாமக விருப்பிற் பார்த்திவ
னுற்றுள னீங்கென வுணர்ச்சி யூறினன்
பெற்றுள காலமூன் றுணரும் பேரறி
வொற்றுள தாகில்வே றுரைப்ப தென்கொலோ.

இ-ள். பற்று உள ஆம் மக விருப்பில் பார்த்திவன் ஈங்கு உற்றுளன் என உணர்ச்சி ஊறினன் - (அவ்வாறுசிந்தித்தமுனிவர்) விரும்பப்படுவதாகிய புத்திரப்பேற்றினசையினல் அரசன் இங்கே வந்துளன் என்று அறிந்தார், — பெற்றுள காலம் மூன்று உணரும் பேரறிவு ஒற்று உளதாகில் - (அங்ஙனமறிதற்குப்) பெற்றுக்கொண்ட திரிகாலங்களையும் அறியும் பேரறிவாகிய தூது உள்ளதாயபொழுது,—வேறு உரைப்பதென் - வேறோர் (தூது வேண்டுமென்று) சொல்வதென்னை?. எ-று.

திரிகாலத்தையும் உணரும் பேரறிவாகிய தூது இருக்கும்பொழுது அவரறிதற்கென்னை? என்பதாம். அறிதற்குப் பேரறிவாகிய தூது உள தாயபொழுது (இவர் எப்படி அறிந்தார் என்று அதிசயமாக) நாம் வேறு வார்த்தைகளை விதந்து சொல்வதென்னை? எனினுமாம். (சக)

சொற்படை யுழவராற் றுதிக்கப் பட்டுள
பொற்படை மாமறை யுழவன் பொய்மைதீ
ரற்படை பெருந்தவத் தவரை யாடன்மா
விற்படை யுழவன்முன் விடுத்திட் டானரோ.

இ-ள். சொல் படை உழவரால் துதிக்கப்பட்டுள பொற்பு அடை மாமறை உழவன் - சொல்லாகிய ஏரானுழுதலைச் செய்வோராகிய அறிஞர்களாலே துதிக்கப்பட்டுள்ள அழகினையுடைய பெரிய வேதமாகிய ஏரான் உழுதலையுடையவராகிய வசிட்டமுனிவர்,—பொய்மை தீர் அற்பு அடை பெருந்தவத்தவரை - உண்மையான அன்பினைப்பொருந்திய பெரிய தபோதனர்களை,—ஆடல் மா விற்படை உழவன்முன் விடுத்திட்டான் - போரையுடைய குதிரையைக்கொண்ட விற்படையாகிய ஏராலே (பகைவருடலாகிய நிலத்தை) உழுதலைச்செய்வோனாகிய திலீபனுக்குமுன்னே (எதிர்கொள்ளுமாறு) விடுத்தார். எ-று.

சொற்படையுழவர், மறையுழவன், விற்படையுழவன் என்பனவற்றிற்கு "சொல்லேருழவர்" "வில்லேருழவர்" என்பவற்றிற்குப் பரிமேலழகருரைத்தாங்குரைப்பினுமமையும். (அஎ௨-ம் குறள்.) விற்படை என்பதற்கு வில்லாகிய படையால் எனினுமாம். படை - ஏர். (ச௨)

பிறிதலை சலனமுந் தீயும் பேருல
கெறிதரு வேகமு மின்றி யோர்கட
னெறியுட னுளதெனி னிகர்க்கும் பல்குழாத்
தறிஞரு மெதிர்செலீஇ யாசி கூறினர்.

இ-ள். அலை சலனமும் - அலைகின்ற அசைவும்,—தீயும் - அக்கினியும்,—பேர் உலகு எறிதரு வேகமும் இன்றி - பெரிய உலகை அழிக்கின்ற வேகமுமில்லாமல்,—நெறியுடன் பிறிது ஓர் கடல் உளதெனின் நிகர்க்கும் - (அடக்கமாகிய) நெறியோடு பிறிதோர் கடலுளதேயாயின் (அதனை) ஒக்கின்ற,—பல் குழாத்து அறிஞரும் - பல கூட்டமான முனிவர்களும்,—எதிர்செலீஇ ஆசி கூறினர் - (அரசனுக்கு) எதிர்சென்று ஆசிகூறினர்கள். எ-று.

தீ - வடவாமுகாக்கினி. இது அபூதவுவமை. (சங)

புரைபடு முதுமறைப் பொலிவிற் பொங்கிய
நிரைபடு மவரொடு நிரந்து போயினன்
கரைபடு வலம்புரி கடலின் வெளவிய
திரையொடும் புகுந்தெனச் சிறந்த செய்கையான்.

இ-ள். சிறந்த செய்கையான் - சிறந்த ஒழுக்கத்தையுடையவனாகிய திலீபன்,—கரைபடு வலம்புரி வெளவிய திரையொடும் கடலின் புகுந்தென - கரையிற்பொருந்திய வலம்புரிச்சங்கானது (தன்னைக்) கவர்ந்த திரையோடுங் கடலினுள்ளே புகுந்தாற்போல,—புரைபடு முதுமறைப் பொலிவின் பொங்கிய நிரைபடும் அவரொடும் - உயர்ச்சிபொருந்திய பழைய வேதத்தின் பொலிவோடு கிளர்ந்த நிரையான அம்முனிவர்களோடும்,—நிரந்து போயினன் - கலந்து சென்றான். எ-று.

புகுந்தெனப் போயினன் என முடிக்க. கரை காட்டினெல்லைக்கும், வலம்புரி அரசனுக்கும், திரை முனிவர்களுக்கும், கடல் காட்டிற்கும் உவமை என்க. (சச)

மறுத்தவிர் மதியயல் வயங்கத் தண்ணென
விறுத்தொரு பகலிருந் தென்ன மாதவம்
பொறுத்துயர் பன்னியோ டிருந்த பூசுரன்
சிறுத்தில மலரடி சென்னி சேர்த்தினன்.

இ-ள். மறுத் தவிர் மதி அயல் வயங்க - மறுவைநீங்கிய ஒரு சந்திரன் தன்பக்கத்தே விளங்க,—தண்ணெனவு இறுத்து ஒருபகல் இருந்தென்ன - குளிர்ச்சியைக்கொண்டு ஒரு சூரியன் இருந்தாற்போல,—மாதவம் பொறுத்து உயர் பன்னியோடு இருந்த - பெரிய தவத்தைத்தாங்கி (க் கற்பால்) உயர்ந்த மனைவியோடும் இருந்த,—பூசுரன் சிறுத்தில மலர் அடி சென்னி சேர்த்தினன் - வசிட்டமுனிவரது பெருமைபொருந்திய மலர்போலும் பாதங்களைச் சிரசிற்சூடினன். எ-று.

சந்திரன் அருந்ததிக்கும், சூரியன் முனிவனுக்குமுவமை என்க. தண்ணெனவிறுத்து என்றதனாலும், தவம்பொறுத்து என்றதனாலும் அருளுடைமை கூறிற்று. இருந்தென்ன இருந்த பூசுரன் என இயையும். (௬௫)

புணையுடைத் தடங்கடற் புவியி னல்லறத்
துணையுடைப் பெருநிறைத் துப்பிற் றோன்றிய
கணையுடைக் கூர்விழிக் கற்பின் சாலித
னிணையடிப் போதினை யிருகை கூப்பினான்.

இ-ள். புணை உடை தட கடல் புவியில் - புணைகளையுடைய விசாலமாகிய கடலாற்சூழப்பட்ட பூமியின்கண்,—நல் அறத் துணை உடைப் பெருநிறைத் துப்பில் தோன்றிய - நல்ல இல்லறத்திற்குத் துணையாந்தன்மையையுடைய பெரிய நிறையின்வலியோடு பிறந்த,—கணை உடைக் கூர் விழிக் கற்பின் சாலிதன் இணை அடிப் போதினை - அம்பின் றன்மையையுடைய கூரிய விழியையும் கற்பினையுங்கொண்ட அருந்ததியினது இரண்டாகிய திருவடிப்போதை,—இருகை கூப்பினான் - இரண்டுகைகளையும் குவித்து அஞ்சலிசெய்தான். எ-று.

புவியில் தோன்றிய சாலி என இயையும். கற்பினையுடையவளும், குருமனைவியுமாதலின் அடிப்போதினைக் கைகூப்பினான் என்க. (௬௬)

தேசிவர் கரத்தவன் சென்னி யேந்துபு
காசிலா சனமுறை நல்கிக் காவல
மாசினின் றிகிரிநேர் வலிய தோவெனு
வாசிகூ றியகடை யருளிற் கூறினான்.

இ-ள். தேசு இவர் கரத்து அவன் சென்னி எந்துபு - (அப்பொழுது வசிட்டமுனிவர்) ஒளிபொருந்திய கைகளால் அவ்வரசனுடைய சிரசைத் தாங்கி, — காசில் ஆசனம் முறை நல்கி - குற்றமில்லாத ஆசனத்தை முறைப்படி கொடுத்து,—காவல மாசில் நின் திகிரி நேர் வலியதோ எனு - அரசனே குற்றமில்லாத உனது ஆஞ்ஞாசக்கரத்தின் ஒழுக்கம் வலியுடைத்தா என்று,—ஆசி கூறிய கடை அருளிற் கூறினான் - ஆசிகூறிய ஈற்றில் அருளோடு வினவினர். எ-று.

எந்துபு நல்கிக் கூறினான், எனுக் கூறினான் எனத் தனித்தனி முடிக்க. வலியதோ என்றது குசலமோ என்றமையை. (௬௭)

வேறு.

கொற்றமழ்வை வேனிருபர் முரணெறுத்திட் டுலகினிலை கொடுக்கும் வெம்போர், சுற்றுடனேமியுமொன் றுளதோநல் மனக்கோடுதுவன்றிச் சூழப், பற்றுய கலைத்திரைமீப் பரப்பிமறைக் கூலத்துட் பட்டு நாளும், வற்றாத வருளாழி மாதவநீ தருவிஞ்சை வலிதே யென்றான்.

இ-ள். கொல் தாழ் வை வேல் நிருபர் முரண் ஒறுத்திட்டு உலகின் நிலை கொடுக்கும் வெம்போர் - கொற்றொழிலமைந்த கூர்மைபொருந்திய வேற்படையையுடைய அரசர்களது பகையைக்கடிந்து உலகத்திற்கு அழிவின்மையைக்கொடுக்கும் வெவ்விய போரையுடைய,—சுற்று ஆடல் நேமியும் ஒன்று உளதோ - சூழுகின்ற வெற்றியைக்கொண்ட சக்கரமும் ஒன்று உண்டோ,—நம் மனக் கோடு துவன்றி - நம் மனமாகிய கரைக்குள் நிறைந்து,—சூழப் பற்று ஆய கலைத் திரைமீப் பரப்பி - சூழும்படி விரும்பப்படுகின்ற கலைஞானங்களாகிய திரைகளை மேலே பரப்பி,—மறைக் கூலத்து உள் பட்டு - வேதங்களாகிய பலபண்டங்களை உள்ளே பொருந்தி,—நாளும் வற்றாத அருள் ஆழி மாதவ - நாடோறும் வற்றாத அருளாகிய கடலையுடைய முனிவரே!—நீ தரு விஞ்சை வலிது என்றான் - நீர் தரப்பெற்ற வித்தை வலியுடைத்தென்றான். எ-று.

கூலத்து என்புழி அத்துச்சாரியை உருபுதொக்குநிற்ப வந்தது. ஏ அசை. வித்தையோடுகூட்டித் தேற்றமாகக்கொள்ளினுமமையும். முனிவரே உலகைநடத்தும் நேமியென ஒன்று இன்று; பின்நேமியாக நின்று உலகைநடாத்துவது நீர் தந்த வித்தையே; அது வலியுடைத்து என்றான் என்பது கருத்து. நேமியுமொன்றுளதோ விஞ்சைவலிதே என்றான் என்க.

அரிவருசெவ்வெயில்காட்டவரவிந்தம்விகசிதஞ்செய்வதுவேபோல
வெரிவருநல் லாகுதிநீ செயமாரி வான்றரலா லிமைப்பி லாதார்
பரிவருகற் பகநறிய மலர்க்குளிர்நீ ழலிற்சிறந்த பதியே போலத்
தெரிவருநின் றிருவருளா லரசுசெய நிலமேழுஞ் சிறந்த வன்றே.

இ-ள். அரி வரு செம் வெயில் காட்ட அரவிந்தம் விகசிதம் செய்வது போல - சூரியன் (தன்னிடத்துத்) தோன்றுகின்ற சிவந்த வெய்யிலைக்காட்டத் தாமரை அலர்வதுபோல,—நீ எரி வரு நல் ஆகுதி செய மாரி வான் தரலால் - நீர் அக்கினியின்கண் வளருதற்குரிய நல்ல ஆகுதியைச்செய்ய மழையை மேகந்தருதலால்,—இமைப்பிலாதார் பரிவு அரு கற்பக நறிய மலர்க் குளிர் நீழலில் சிறந்த பதிபோல - தேவர்களது துன்பமில்லாத கற்பகத்தின் நல்ல மலர்களையுடைய குளிர்ந்த நிழலாற்சிறந்துள்ள சுவர்க்கம்போல,—தெரிவு அரு நின் திரு அருளால் அரசுசெய நிலம் ஏழும் சிறந்தது - அறிதற்கரிய உம்முடைய திருவருளால் யான் அரசுசெய்யும்படி எழ்வகைநிலங்களும் சிறந்துள்ளன. எ-று.

போலத் தரலால் சிறந்த எனவும், போலச் சிறந்த எனவும், செயச் சிறந்த எனவும் தனித்தனி முடிக்க. பயிர்வளத்தாற் சிறந்தன என்பதாம்.

வடுவின்மறைப் பெருந்தவநின் னருடினமு மறையோர்க்கு வளங்கொள் சோதி, படுகனக கிரியதனி னுதவுகினுங் குறையாத படியே யாக, நெடுநிலவைப் பினினரசு நெறிவாரி யிடையறு நேரி

லேற, விடுநெதியப் பெருக்கதண்டக் காப்பினேன் வயின்றுய
ரொன் றிறுத்த தன்றே.

இ-ள். வடு இல் மறைப் பெருந்தவ - குற்றமில்லாத வேதத்தையறிந்த பெரிய தவத்தையுடையவரே!,—நின் அருள் தினமும் மறையோர்க்கு வளம்கொள் சோதி படு கனககிரியதனின் உதவுகினும் குறையாதபடியே ஆக - உமது அருளானது நாடோறும் முனிவர்களுக்கு வளத்தைக்கொண்ட ஒளி உண்டாகின்ற மேருமலையிலும்பார்க்க (அதிகமாகக்) கொடுப்பினும் (நம்மிடத்துங்) குறையாததன்மையையுடையதேயாக.— நெடுநில வைப்பினில் அரசுநெறி வாரி இடையறு நேரில் ஏற இடும் நெதியப் பெருக்கது அண்ட - நெடிய பூமியின்கண் அரசின்முறையானது சமுத்திரத்தினிடையே இடையீடின்றி நேராகச் செல்லுதலால் இடுகின்ற செல்வப்பெருக்கானது பொருந்தவும்,—காப்பினேன் வயின் துயர் ஒன்று இறுத்தது - காவலையுடையேனிடத்துத் துயரமொன்று அடைந்துள்ளது. எ-று.

ஆக ஏற அண்ட இறுத்தது என இயைக்க. ஆக ஏற என்பன எதுப்பொருளன. வளங்கள் சோதி எனப் பாடமாக்கி. வளங்களையுதவுகினுங் குறையாதபடியாக, அந்நிதிப்பெருக்கு அண்ட எனப் பொருள்கூறுவாருமுளர். இப்பொருட்கு அருளால் என்புழி ஆலுருபு விகாரத்தாற்றொக்கது. ஆக என்பதற்குப் போல என்றும், வாரி என்பதற்கு வருவாய் என்றும் கூறுதல் இத்துணைச்சிறப்பின்று. (௯௦)

சமைவிலவெம் மிடற்றுனை மகதர்கோன் றருமிந்தத் தையலாள்பா, லெமைநிகர வருமகவொன் றின்மையினு னகப்பெரிய வேழ்தீ பத்தின், சமையுலவம் புவிமடந்தை நவமணியீன் றளிப்பவுமுட் கரந்துவீடா, வமைவிலணன் மகவாசைப் பெருக்கருத் துயர்மீக் கொண் டழிகின் றேனே.

இ-ள். சமைவு இல வெம்மிடல் தானை மகதர்கோன் தரும் இந்தத் தையலாள்பால் - அழிவில்லாத விரும்பப்படுகின்ற வலிமையைக்கொண்ட சேனைகளையுடையவனுகிய மகதராசன்றந்த இந்தச் சுதக்கணையிடத்து,— எமை நிகர வரும் மகவு ஒன்று இன்மையினல் - எம்மை ஒப்பாகத் தோன்றும் புத்திரப்பேறு ஒன்று இல்லாமையினுல்,—அகப் பெரிய எழ்தீபத்தின் சமை உலவு அம் புவிமடந்தை - அகத்தே பெரிய ஏழுதீவுகளின் பொறை விளங்குகின்ற பூமியாகிய பெண்,—நவமணி ஈன்று அளிப்பவும் உள் கரந்து வீடா அமைவு இலள் - நவமணிகளையீன்று (தான்) பாதுகாப்பவும் மனம்மழுங்கி அழிந்து அமைவுற்றிலள், — நன் மகவு ஆசைப் பெருக்கு அருத் துயர் மீ கொண்டு அழிகின்றேன் - (அதனுல்) நல்ல புத்திரனைப் பெறவேண்டுமென்னும் ஆசைப்பெருக்கத்தினுல் நீங்காத துயரத்தைமேற்கொண்டு வருந்துகின்றேன். எ-று.

இன்மையினல் அமைவிலள் என்க. அளிப்பவும் நக அதனல் அழி கின்றேன் எனினுமாம். இப்பொருட்கு அமைவிலநன்மகவாசை எனப் பாடங்கொள்க. (ருக)

செருகுமுவ கையவாழ்த்து வாய்மைதரு தென்புலத்தார் சிறி யே னுள்ள, முருகுதகை யொடும்புனித நிலைகூடித் தருப்பிக்கு முதக மேற்றுப், பருகுதொறு மெதிர்கால நிலையுள்ளு நினைப்பெ னுந்தீப் பறற வெய்தாய்ப், பெருகுநெடி துயிர்ப்பதனல் வெய்துறி னிங் கென்யான்செய் பெற்றி தானே.

இ-ள். செருகும் உவகைய வாழ்த்து வாய்மை தரு தென்புலத்தார் - அடைந்த மகிழ்ச்சியையுடைய வாழ்த்தாகிய சொற்களைத்தருகின்ற பிதி ரர்,—சிறியேன் உள்ளம் உருகு தகையொடும் புனித நிலைகூடித் தருப் பிக்கும் உதகம் ஏற்றுப் பருகுதொறும் - சிறியேன் மனம் உருகுகின்ற தகைமையோடும் பரிசுத்தமான நிலையை அடைந்து தருப்பணஞ்செய்யும் நீரை ஏற்றுப் பருகுந்தோறும்,—எதிர்கால நிலை உள்ளும் நினைப்பு எனும் தீப்பற்ற வெய்தாய்ப் பெருகு நெடிது உயிர்ப்பதனல் வெய்துறின் - எதிர் காலத்துநிலையை நினைக்கின்ற நினைப்பாகிய அக்கினிபற்றுதலினலே வெப்ப முடையதாய் மேற்பட்டுவருகின்ற நெட்டுயிர்ப்பினல் (அவ்வுதகம்) வெப்ப மடையுமாயின்,—இங்கு யான் செய் பெற்றி என் - இங்கே யான்செய்யுந் தன்மையாது! எ-று.

எதிர்காலநிலை சந்ததியில்லாமையினலே தருப்பணநீர் பின் தமக்குக் கிடையாதநிலை. பருகுதொறும் வெய்துறின் செய்பெற்றி என் என இயைக்க. (ருஉ)

விண்ணடும் விதிநாடு மேனடு மெந்நாடும் வேண்டி னல்குந்
தண்ணடு முனதருளின் பெருமையினைச் சிறிதேனுந் தமது ளுடி
யெண்ணுதன் ேனர்தமியே னிடும்பலியை யகடுநிறைந் திடவேவாரி
யுண்ணுதுவருநாட்கும்வைப்பரெனிற்கொடியேனுமுதித்துளேனே.

இ-ள். அன்னேர் - (இன்னும்) அப்பிதிரர்கள்,—வேண்டின் விண்ண டும் விதிநாடும் மேல்நாடும் எந்நாடும் நல்கும் - விரும்பினல் (விரும்பினர் க்கு) விண்ணுலகத்தையும் பிரமலோகத்தையும் அதற்குமேலுள்ள (விஷ்ணு) லோகத்தையும் எந்த உலகத்தையும் கொடுக்கின்ற,—தண் நாடும் உனது அருளின் பெருமையினைச் சிறிதேனும் தமது உள்நாடி எண்ணுது - சாந்த குணம்பொருந்திய உனது அருளின்பெருமையினைச் சிறிதாயினும் தமது மனத்துள் ஆராய்ந்து சிந்தியாது,—தமியேன் இடும் பலியை அகடு நிறைந் திட வாரி உண்ணுது வருநாட்கும் வைப்பரெனில் - தமியேனிடுகின்ற பிண்டமாகிய உணவை வயிறுநிறைய அள்ளி உண்ணமல் எதிர்காலத்துக் கும் வைப்பரேயென்றல்,—கொடியேனும் உதித்துளேனே - பாவியேனும் பிறந்துள்ளேனே. எ-று.

ஓகாரம் எதிர்மறை. எண்ணாது உண்ணாது வைப்பரெனில் உதித்து ளேனே என இயையும். கொடுமை - பிதிரர் வருநாட்கும் வையாதளிக்கும் நன்மையில்லாமை. (௫௩)

பெறத்தகுமைந் தரையிலவாம் பெற்றியினுன் மாசடைந்தேன் பெரிய யாகத், திறத்தமல மாயினே னாதலின்மின் னுக்குழுவிற் சேண்போய்ச் சுற்று, முறத்தகைய பெருஞ்சுடரை யுட்படைத் திட் டுணர்வதனுக் குலப்பி லாத, புறத்திருளைத் தரித்துடைய பொன்னேமி வரையினையும் போன்று ளேனே.

இ-ள். பெரிய யாகத் திறத்து அமலம் ஆயினேன் - பெரிய யாகத்தின் பகுதிகளைச்செய்தலினுற் பரிசுத்தமடைந்தேனாகிய யான், — பெறத்தகு மைந்தரை இல ஆம் பெற்றியினுல் மாசு அடைந்தேன் - பெறுதற்குரிய புதல்வரைப் பெற்றுக்கொள்ளாததன்மையினுல் அழுக்கடைந்தேன்,—ஆத லின் - ஆதலினுல்,— மின்னுக் குழுவில் சேண் போய்ச் சுற்றும் உறத் தகைய பெரும் சுடரை உள் படைத்திட்டு - மின்னுத்திரளைப்போலத் தூரத் திற்போய்ச் சுற்றுகின்ற மிகத் தகைமைபடைத்த பெரிய ஒளியை உள்ளே கொண்டு,—புறத்து உணர்வதனுக்கு உலப்பு இல்லாத இருளைத் தரித்து உடைய - புறத்தே அறிவிற்குமுடிவுபடாத இருளைக்கொண்டுள்ள,—பொன் நேமிவரையினையும் போன்றுளேன் - அழகிய சக்கரவாளகிரியையும் போன் றுள்ளேன். எ-று.

அகத்தே ஒளியுடைத்தாயும் புறத்தே பிரகாசமில்லாத நேமிவரையைப் போல, யாகத்தினுலே அகத்தே பரிசுத்தமுடையனாயும் புத்திரப்பேறின் மையினுற் புறத்தே பிரகாசமில்லாதவனாயினேனென்பதாம். (௫௪)

கோளான வயக்கரடக் கலுழிமத விருகோட்டுக் குன்றங் கன்றி, யாளான மதிற்பிணிப்புண் டருஞ்சிறைப்பட் டதுபோல வஞ்சா ரஞ்சுந், தாளாண்மை வலியுடையேன் றனயரையின் மையி னெமது தலையாய் முன்னை, நாளான வவர்க்குதவு கடன்பிணிப்ப வதனுலுண் ணலிகின் றேனே.

இ-ள். கோள் ஆன வயக் கலுழி மதக் கரட இரு கோட்டுக் குன்றம் - கொலைத்தொழிலையுடையவான வலிமையையுடைய கான்யாறுபோன்ற மதத்தைச்சொரியும் சுவட்டையும் இரண்டுகோட்டினையுமுடைய யானை,— கன்றி ஆளானம் அதில் பிணிப்புண்டு அரும் சிறைப்பட்டது போல - வருத்த முற்றுத் தாணிற்பிணிப்புண்டு விடுதற்கரிய சிறையிலகப்பட்டதுபோல,— அஞ்சார் அஞ்சும் தாளாண்மை வலியுடையேன் - பகைவர்களஞ்சத்தக்க முய ற்சியின்வலியுடையேனாகிய யான்,—தனயரை இன்மையின் எமது தலை யாய் முன்னைநாளான அவர்க்கு உதவு கடன் பிணிப்ப - புதல்வரை இல் லாமையினாலே எமது முன்னோராய் முன்னாளிற் பிறந்திறந்தவர்களாகிய

அப்பிதிரர்க்குக் கொடுக்குங் கடனானது பந்திப்ப,—அதனால் உள் நலிகின்றேன் - அதனால் மனம் வருந்துகின்றேன். எ-று.

கன்றி அருஞ்சிறைப்பட்டதுபோல என்பதை அரும் சிறைப்பட்டுக் கன்றியதுபோல என மாற்றிப் பொருள்கொள்க. கடன் - பிண்டமிடுதல், தர்ப்பணஞ்செய்தன் முதலிய கடன்கள். பிணிப்ப என்றது அவற்றைச் செய்துகழித்தற்குப் புதல்வரில்லாமையினாலே அவைகள் பந்தித்துக்கொள்ள என்றபடி. (௫௫)

தேக்குபுகழ்த் திறலிக்கு வாகுமர பினர்நினைவிற் றிருவையெ
ல்லா, மாக்குவதும்பெறற்கரிய தளிப்பதுநீ யன்றோவென் னகத்து
ளாரப், பூக்குமரும் பெருந்துயர வன்னோயை நின்கருணைப் பொலி
வா னெய்தி, னீக்குதியென் றடல்வேந்த னிரப்ப முனிதனி யோக
நிலையிற் சேர்ந்தான்.

இ-ள். தேங்கு புகழ்த் திறல் இக்குவாகு மரபினர் நினைவில் - நிறைந்த புகழையும் வலிமையையுமுடைய இக்குவாகுவின் வம்மிசத்திற் பிறந்தவர்களது நினைவின்படி,—திருவையெல்லாம் ஆக்குவதும் பெறற்கு அரியது அளிப்பதும் நீ அன்றோ - (அவர்களுக்குச்) செல்வத்தையெல்லாம் உண்டாக்குவதும் பெறுதற்கரியவற்றையெல்லாம் கொடுப்பதும் நீரல்லவா,—என் அகத்துள் ஆரப் பூக்கும் அரும் பெரும் துயர வல் நோயை நின் கருணைப்பொலிவால் நொய்தில் நீக்குதி என்று - (ஆதலால் சந்ததியில்லாமை காரணமாக) என்மனத்துள் மிகப் பொலிந்த அரிய பெரிய துயரமாகிய வலிய நோயை நீரே உமது கருணையின்பொலிவினால் விரைந்து நீக்குதிர் என்று,—அடல் வேந்தன் இரப்ப - வலிமையையுடைய அரசன் வேண்ட,—முனி தனி யோகநிலையிற் சார்ந்தான் - வசிட்டமுனிவர் ஒப்பற்ற யோக நிலையிற் பொருந்தினர்.

தேக்கு வலித்தல்விகாரம். இரப்பச் சார்ந்தான் என முடிக்க. என் மரபினரை அளிப்பது நீரே; ஆதலின் என்னை அளித்தலும் உமதுகடனாகும்; அம்முறைப்படி என் துயரை நீக்குதிர் என்றான் என்க. (௫௬)

வேறு.

ஆரண முதலின் மூலத் தறிபெரு ஞானத் தந்தக்
காரண மதனை முற்றுங் கணித்துறக் கருத்திற் காணா
வேரண வமுத மாரி யெரிபயிர்க் கிறுக்கு மாபோல்
வாரண வனிகத் தாற்கு மகிழ்வினின் வருக்க லுற்றான்.

இ-ள். ஆரண முதலின் மூலத்து அறி பெரு ஞானத்து - வேதமுதலாகிய முதற்பொருளோடு கூடி அதன்வழியாக அறிகின்ற பெரிய ஞானத்தினால்,—அந்தக் காரணம் அதனை முற்றும் கணித்து உறக் கருத்திற் காணா - (சந்ததிக்குத் தடையாயுள்ள) அந்தக் காரணத்தை முழுவதும் சிந்

டுத்துப் பொருந்த மனத்திற் கண்டு,—ஏர் அணவு அமுத மாரி எரி பயிர்க்கு இறுக்குமாபோல் - அழகுபொருந்திய அமுதமழையை எரிந்த பயிர்க்குச் சொரியுமாறுபோல,—வாரண அனிகத்தாற்கு மகிழ்வினின் வகுக்கலுற்ருன் - யானைப்படையையுடையவனுகிய திலீபமகாராசனுக்கு மகிழ்வோடு கூறலாயினர். எ-று.

இன் - சாரியை. அமுதமாரி - அமுதமாந்தன்மையையுடையமாரி. உவமையால் அரசன்மனந் தழைக்குமாறு கூறலாயினர் என்பது பெறப்பட்டது.

முற்பக லொன்றின் மன்ன முகிற்கிறை பாற்போய்த் தேவ
ருற்பவ நகரினின்று முவந்துவள் பூப்பை யுன்னு
வற்பொடு விரைவின் மீளு மங்நெறிக் காம தேனுக்
கற்பக தருவி னீழற் கவினுறக் கிடந்த தன்றே.

இ-ள். மன்ன - அரசனே!,—முற்பகல் ஒன்றில் முகிற்கு இறை பால் போய் - நீ முன்னுளொன்றிலே இந்திரனிடத்திற்போய்(அவனைக்கண்டு),—உவள் பூப்பை உன்னு உவந்து அற்பொடு விரைவில் தேவர் உற்பவ நகரினின்றும் மீளும் அ நெறி - உவளது பூப்பைக்கருதி மகிழ்ந்து அன்போடு விரைவாகச் சுவர்க்கலோகத்தினின்றுந் திரும்பிவரும் அவ்வழியில்,—காமதேனு கற்பக தருவின் நீழல் கவின் உறக் கிடந்தது - காமதேனுவானது கற்பகதருவின்நீழலில் அழகுறக் கிடந்தது. எ-று.

கருத்தங்குங் காலமாதலாலே பூப்புவந்தநாண்முதற் பன்னிருநாளிலும் பெண்களைப் பிரிதலாகாது என்னும் விதியை அறிந்தவனுதலாற், சுவர்க்கத்துக்குப்போயிருந்த திலீபமகாராசனும் தன்மனைவியின் பூப்புக்காலத்தை அறிந்தவுடன் அந்நகரினின்றும் மீண்டு விரைந்துவந்தானுகலின், தேவருற்பவநகரினின்றும்...........விரைவில்மீளுமங்நெறி என்ருர். நகரினின்றும் மீளும் அந்நெறி என இயைக்க. (௩௮)

சந்ததித் தரும நோக்கித் தரிப்பிலா ததனைப் போற்றும்
வந்தனைத் தொழில்செய் யாது மறப்பொடு வழிப்பட் டாயாற்
சிந்தையிற் கனன்றத் தேனுச் சேயினு லன்ருே வெம்மை
நிந்தனைப் படுத்தா னென்னு நெஞ்சுற நினைந்த தன்றே.

இ-ள். சந்ததித் தருமம் நோக்கித் தரிப்பிலாது - சந்ததிவிருத்தியாகிய தருமத்தைக் கருதித் தாமதித்து நில்லாது,—அதனைப் போற்றும் வந்தனைத் தொழில் செய்யாது மறப்பொடு வழிப்பட்டாய் - அதனைத் துதிக்கும் வழிபாடாகிய தொழிலைச்செய்யாது மறதியோடு வந்துவிட்டாய்,—அத் தேனு சிந்தையில் கனன்று சேயினுல் அன்ருே எம்மை நிந்தனைப் படுத்தான் என்னு நெஞ்சு உற நினைந்தது - (அப்பொழுது) அக்காமதேனு மனத்திற்கோபித்துச் சந்ததிப்பொருட்டாகவன்ருே(இவ்வரசன்) நம்மை இகழ்ச்சி செய்தான் என்று தன்மனத்தில் மிகவுஞ் சிந்தித்தது. எ-று.

தரிப்பிலாது வழிப்பட்டாய், செய்யாது வழிப்பட்டாய் எனத் தனித் தனி முடிக்க. (கூ)

ஆதலின் மகப்பே றின்மை யானதிங் கதுவு முள்ளக்
காதலின் வருணன் வேள்வி கலந்ததவ் வேள்வி காணிற்
பாதலத் துளதங் கேகிற் பஃறலைப் பாந்தட் காப்பிற்
போதலுக் கரிது வேறோர் பொருளுள புகறு மன்னே.

இ-ள். ஆதலின் மகப் பேறு இன்மையானது - அந்தக் காரணத்தினாலே புத்திரப்பேறு இன்றாயது,—அதுவும் உள்ளக் காதலின் வருணன் வேள்வி கலந்தது - அக்காமதேனுவும் மனத்திற்பொருந்தியவிருப்பத்தினால் வருணனாற்செய்யப்பட்ட யாகத்தை அடைந்தது,—அவ்வேள்வி காணில் பாதலத்து உளது - அவ்வேள்வியைப் பார்க்கவேண்டுமாகில் (இங்கு உள்ளதன்று அது) பாதலத்தில் உள்ளது (அங்குப்போய்ப் பார்க்கவேண்டும்,)— அங்கு ஏகில் பஃறலைப் பாந்தள் காப்பில் போதலுக்கரிது - அங்குச்செல்லில், பலதலைகளையுடைய பாம்புகளது காவலிருத்தலாற் செல்லுதல் கூடாது,—வேறு ஓர் பொருள் உள புகறும் - வேறோருபாயமுண்டு சொல்லுதும். எ-று.

ஏகில் அரிது என முடிக்க. (சுo)

உகந்தவத் தேனுத் தந்த வுயர்பெருஞ் சுரபி யிங்கெம்
மகந்தழைத் திடநின் றுள்ள திதனைநீ மகிழ்வின் வல்லே
யிகந்தவக் கொடிய தீய வின்னலை யிட்ட பொல்லா
வகந்தப வுரிமை யோடு மாதரித் திடுதி யென்றான்.

இ-ள். உகந்த அத் தேனுத் தந்த உயர் பெரும் சுரபி - விரும்பப்பட்ட அக்காமதேனு ஈன்ற உயர்ச்சிபொருந்திய பெரிய பசுவானது,—இங்கு எம் மகம் தழைத்திட நின்றுள்ளது - இங்கே எமது யாகம் தழைக்கும்படி நின்றுள்ளது,—இதனை - இப்பசுவை,—இகந்த அக் கொடிய தீய இன்னலை இட்ட பொல்லா அகம் தப - மேற்பட்ட அந்தக் கொடிய தீதாகிய துயரைத்தந்த பொல்லாத பாபம்நீங்க,—மகிழ்வின் உரிமையோடும் வல்லே ஆதரித்திடுதி என்றான் - மகிழ்ச்சியோடும் மனைவியுடன் விரைவிற் பூசனை செய்குதி என்றார். எ-று.

இதனை ஆதரித்திடுதி என இயையும். கொடிய அகம், தீய அகம் பொல்லா அகம் எனத் தனித்தனி முடிக்க. (சுக)

என்றினி துரைக்கும் வேலை யெறிபுனற் கரசன் யாக
நின்றுள சுரபி தேவ நிலையினு லுணர்ந்து பாச
வன்றுயர்ப் பகைஞன் சிந்தை செய்தலின் வந்திட் டாங்கு
துன்றுசெஞ் சுடர்சேண் சுற்றச் சூழுறத் தோன்றிற் றன்றே.

இ-ள். என்று இனிது உரைக்கும் வேலை - என்று இதனை இனிதாகக் கூறியபொழுது,—எறி புனற்குஅரசன் யாகம் நின்றுள சுரபி - திரைவீசுகின்ற கடற்கரசனுகிய வருணனது யாகத்தில்நின்ற தேனுவானது,—பாசவன் துயர்ப் பகைஞன் சிந்தை செய்தலின் தேவநிலையினுல் உணர்ந்து வந்திட்டாங்கு - பாசமாகிய வலிய துயருக்குப் பகைவராகிய வசிட்டமுனிவர் நினைத்தலால் (அதனைத்) தெய்வத்தன்மையினுலறிந்து வந்தாற்போல,—துன்று செஞ்சுடர் சேண் சுற்றச் சூழுறத்தோன்றிற்று - (உடம்பிற்) செறிந்துள்ள செவ்வொளி தூரத்திலே சூழ (வசிட்டாதியோர்) சிந்திக்குமாறு (காட்டினின்றும் அக்கன்றுனது அங்கேவந்து) தோன்றிற்று. எ-று.

பாசவன்றுயர் உபசாரம். யாகத்தினின்றும் தேனுவந்தாற்போல அதன்கன்று வனத்தினின்றும் அங்கேவந்து தோன்றிற்று என்க. தேனுவன்று; அதன்கன்றே தோன்றியதென்பது, பின்வரும் சுஙு-ம் செய்யுண்முதலியவற்றுனறியப்படும். (சுஉ)

புனைந்தன தொடையற் கங்கைப் புரவலன் றளைச் சென்னி
வனைந்தவம் முயற்சி யேவ மருதுநல் வினைகொண் டார
வினைந்தெதி ரிரப்ப மன்ன ரிதயவா ரிசத்தி னேன்று
நினைந்தவப் பலன்முன் னுக நின்றதும் போன்ற தன்றே.

இ-ள். மன்னர் இனைந்து எதிர் இரப்ப - (அப்பசுவந்துதோன்றியது;) அரசர்கள் வருந்தி எதிரே இரந்துகேட்ப,—புனைந்தன தொடையல் கங்கைப் புரவலன் தாளைச் சென்னி வனைந்த அ முயற்சி ஏவ - அணிந்த மாலையையுடைய கங்கைநாட்டரசனுகிய பரராசசேகரனது பாதங்களைச் சிரசிற்சூடிய அந்த முயற்சியானது செலுத்த,—மருது நல்வினைகொண்டு ஆர - அதனை மருது நல்வினைகொண்டுவந்து நிறைவிக்க,—இதயவாரிசத்தின் என்று நினைந்த அப்பலன் - (அவ்வரசர்கள்) இதயகமலத்தில் முயன்று நினைத்த அப்பலன்,—முன்னுக வந்து நின்றதும் போன்றது - அவர்கள் முன்னுக வந்து நின்றதையும் போன்றது. எ-று.

வணங்கிய ஊக்கமே நல்வினையாக அதனுல் அவர் நினைந்தபலன் சித்தியுறும் என்பார் இங்ஙனங் கூறினுர். ஆர என்பதில் விவ்விகுதிதொக்குநின்றது. தோன்றியதுபோன்றது என்க. எழுவாய் வருவிக்கப்பட்டது.

மிக்கவற் புதத்து நாளும் விளங்குநந் தினிப்பேர் மேன்மை
தொக்கவச் செய்ய சோதிச் சுந்தரத் தோற்றத் தேனு
தக்கநெற் றியின்மீக் கோட்டந் தருதடஞ் சுவேத ரோமஞ்
செக்கரிற் றிகழும் பிள்ளைத் திங்களிற் செவ்வி செய்ய.

இ-ள். மிக்க அற்புதத்து நாளும் விளங்கும் - மிக்க அதிசயத்தோடு நாடோறும் விளங்குகின்ற,—நந்தினிப்பேர் மேன்மை தொக்க அ செய்ய சோதிச் சுந்தரத் தோற்றத் தேனு - நந்தினி என்னும் பெயரையுடைய

மேன்மைபொருந்திய அந்தச் சிவந்த ஒளியைக்கொண்ட அழகிய வடிவத்தையுடைய தேனுவானது,—தக்க நெற்றியின்மீக் கோட்டம் தரு தடம் சுவேத ரோமம் - (தனது) தகைமைபொருந்திய நெற்றியின்மீது வளைந்துள்ள பெரிய வெண்ணிறரோமம்,—செக்கரில் திகழும் பிள்ளைத் திங்களில் செவ்வி செய்ய - செவ்வானத்தில்விளங்கும் பிறைத்திங்களைப்போல அழகுசெய்யவும். எ-று.

விளங்கும்தேனு, பேர்த்தேனு, தொக்கதேனு, அத்தேனு, தோற்றத்தேனு எனத் தனித்தனிகூட்டிமுடிக்க. வடிவம் செவ்வானத்தையும் நெற்றியின்மீதுவளைந்தரோமம் பிறையையும் ஒத்ததென்க. (சுச)

பானல வினிய வின்பப் பற்றருப் பான்மைத் தூய
கானல மாமைச் செவ்வாய்க் கன்றுளிச் சொரிபாற் றாரை
தூநில வெழுபொன் மேனித் தொடுகட லாடைத் துப்பின்
மாநில மகளை முந்நீ ராட்டுவ வகையின் மான.

இ-ள். பால் நல இனிய இன்பப் பற்று அருப் பான்மை - பாலின் நலத்தினாலே இனிய இன்பத்தைத்தருகின்ற பற்றுநீங்காத தன்மையையுடைய,—தூய கானல மாமைச் செவ்வாய்க் கன்று உள்ளிச் சொரி பால் தாரை - சுத்தமாகிய ஒளிபொருந்திய மாமைநிறத்தைக்கொண்ட சிவந்த வாயையுடைய கன்றைநினைத்துச் சொரிகின்ற பாலின் ஒழுக்கு,—தூநிலவு எழு பொன் மேனித் தொடுகடல் ஆடைத் துப்பின் மா நிலமகளை - சுத்தமாகிய ஒளிகிளருகின்ற பொன்போலும் மேனியையும் தோண்டப்பட்ட கடலாகிய ஆடையையுமுடைய நன்மையைக்கொண்ட பெரிய பூமிதேவியை,—முந்நீர் ஆட்டுவ வகையின் மான - கடனீரால் முழுக்காட்டுதலாகியதன்மையை ஒப்பவும். எ-று.

தாரை மான என இயையும். (சுரு)

தீதினு ரிட்ட தீமைப் பரங்கிழித் தெடுக்குஞ் சீரிற்
காதிமா நிலனிற் றாக்குங் கனகுரத் தெழுந்த தூளி
நீதியால் யாகாந் தத்தி லாட்டிய நீரின் வென்றிச்
சோதிவே லரசன் செம்பொன் மேனியிற் சூழ்ந்து சுற்ற.

இ-ள். தீதினர் இட்ட தீமைப் பரம் கிழித்து எடுக்கும் சீரின் காதி மா நிலனில் தாக்கும் - தீயோர்களிட்ட தீமையாகிய பாரத்தைக் கிழித்து எடுக்குந்தன்மைபோல அகழ்ந்து பெரிய பூமியில் தாக்குகின்ற,—கன குரத்து எழுந்த தூளி - பெரிய குளம்பினின்றுமெழுந்த தூளியானது,—நீதியால் யாக அந்தத்தில் ஆட்டிய நீரில் - விதிப்படி யாகமுடிவில் அபிடேகித்த நீரைப்போல,—வென்றிச் சோதி வேல் அரசன் செம்பொன் மேனியில் சூழ்ந்து சுற்ற - வெற்றியையுடைய ஒளிபொருந்திய வேலையேந்திய திலீபமகாராசனது சிவந்த பொன்போன்ற மேனியின்மீது சூழ்ந்து சுற்றிக்கொள்ளவும். எ-று.

சீரின் காதித் தாக்கும் சுரம் எனவும், தூளி நீரில் சூழ்ந்து சுற்ற எனவும் இயைக்க. யாகாந்தத்திலாட்டியநீர் என்றது ஈண்டு வாயவ்வியஸ்நானத்தையுணர்த்திநின்றது. (கூசு)

நோக்கருஞ் சாலை போக நுனித்தக நெக்க வோகை
யாக்கருந் தகைய கன்றை யழைத்துள வந்த வோதை
தேக்கரும் பலத்த மேன்மைத் தீர்த்தவான் புனலுந் தீர
நீக்கரும் வினைக டீர்க்கு நீண்மறைத் தொனியி னிற்க.

இ-ள். நோக்கு அரும் சாலை போக நுனித்து - அழகையுடைய அரிய யாகசாலையிற்போகக்கருதி,—அகம் நெக்க ஓகை ஆக்கு அரும் தகைய கன்றை அழைத்துள அந்த ஓதை - (தன்னிடத்தே) மனமுருகிய மகிழ்ச்சியைச் செய்கின்ற அரிய தகைமையினையுடைய கன்றை அழைத்த அந்த ஒலியானது,—தேக்கு அரும் பலத்த மேன்மைத் தீர்த்த வான் புனலும் தீர நீக்க அரும் வினைகள் - நிறைந்த அரிய பயனைத்தருகின்ற மேன்மையையுடைய தீர்த்தமாகிய பெரிய நீருந் தீர்த்தற்கரியவினைகளை,—தீர்க்கும் நீள் மறைத் தொனியின் நிற்க - நீக்குகின்ற நெடிய வேத ஒலியைப்போல நிலையுறவும். எ-று.

புனலும் உம்மை சிறப்பு. நுனித்து அழைத்துள ஓதை நிற்க என இயைக்க. அகம் நெக்க என்பதற்கு அகம் நெக்கவாய் எனப் பொருள் கூறினுமமையும். (கூஎ)

எஞ்சலின் றொளிரும் பாத விருஞ்சுவ டரவச் சென்னி
துஞ்சுமின் னுதலிற் றீட்டுந் திலகத்திற் சுடரச் சூறை
மஞ்சலங் கியகைச் செவ்வேன் மன்னவிந் நிலையின் மாழ்கி
யஞ்சலென் றருளு மாபோ லருகுற வணைந்த தன்றே.

இ-ள். எஞ்சல் இன்று ஒளிரும் பாத இரும் சுவடு - குறைவின்றி விளங்குகின்ற பாதத்தின் பெரிய சுவடானது,—அரவம் சென்னி துலங்கும் மின் நுதலில் தீட்டும் திலகத்தில் சுடர - சேடனென்னும் பாம்பின் றலையிற் கிடக்கின்ற பூமிதேவியினது நுதலிலிட்ட திலகத்தைப்போல விளங்கவும்,—சூறை மஞ்சு அலங்கிய - சுழல்காற்றுட்பட்ட மேகம்போல வருந்திய,—கைச் செவ்வேல் மன்ன - கையிற் சிவந்த வேலை ஏந்திய அரசனே!,—இந்நிலையின் மாழ்கி அஞ்சல் என்று அருளுமாபோல் அருகு உற அணைந்தது - நீ இத்தன்மையாக வருந்தி அஞ்சாதே என்று அருள் செய்யுந்தன்மைபோல (அவனுக்குப்) பக்கமாக வந்தது. எ-று.

அலங்கிய மன்ன என இயையும். தேனு செய்ய, மான, சுற்ற, நிற்க, சுடர அணைந்தது என முடிக்க. (கூஅ)

ஆங்கினி ததனை நோக்கா வருண்முனி யரச நீயுட்
டாங்கிய துயர மெல்லாந் தபுதனிச் சயமிவ் வேலை

யீங்கிது வரலா லென்னு விரந்தத னுள்ளத் தேற
வோங்கருள் பெறுமா றெல்லா முவந்தினி துரைக்கு மன்றே.

இ-ள். ஆங்கு அதனை இனிது நோக்கா - அவ்விடத்து அதனை இனிது பார்த்து, — அருள் முனி - அருளையுடைய வசிட்டமுனிவர்,—அரச இவேலை ஈங்கு இது வரலால் - அரசனே! இந்தச் சமயத்தில் இவ்விடத்து இப்பசு வரலால்,—நீ உள் தாங்கிய துயரம் எல்லாம் தபுதல் நிச்சயம் என்னு - நீ மனத்துட்கொண்ட துன்பமெல்லாம் நீங்குதல் நிச்சயம் என்று,— அதன் உள்ளத்து ஏற இரந்து ஓங்கு அருள் பெறும் ஆறெல்லாம் - அதன் மனத்திலே பதியும்படி (ஏவல்களைச்செய்து) யாசித்து மிகுந்த அருளைப் பெறும் வழியையெல்லாம்,—உவந்து இனிது உரைக்கும் - மகிழ்ந்து இனிது கூறுவார். எ-று.

என்னுக் கூறும் என முடிக்க. ஏற என்றதனால் அதன்காரணம் வருவிக்கப்பட்டது. (சுகு)

தலாதிப தகுமெய்ஞ் ஞானத் தன்மையிற் றழுவி வெம்மைக்
கலாதியி னமைதி காமங் கைக்குதி சாக மூல
பலாதிக டுய்த்தி மாசில் பவித்திரத் தாதி பாசப்
புலாதிகள் காத்தி யாவைப் பூசனை புரிதி பின்னர்.

இ-ள். தல அதிப - அரசனே!—தகு மெய் ஞானத் தன்மையில் தழுவி - தகைமைபொருந்திய உண்மைஞானத்தினியல்போடுகூடி, — வெம்மைக் கலாதியின் அமைதி - விரும்பப்படுகின்ற (அப்பியசித்தலாலே பயன்தரும்) கலைமுதலியவற்றைப்போல (ப் பயன்தரும்படி அதன் சேவையிலே) அமைந்து ஒழுகுதி,—காமம் கைக்குதி - காமத்தை வெறுக்குதி,—சாக மூல பல ஆதிகள் துய்த்தி - இலையும் கிழங்கும் பழமுமாதியவற்றை உண்குதி,— மாசு இல் பவித்திரத்து ஆதி - குற்றமில்லாத பரிசுத்தத்திலே பொருந்துதி,—பாசப் புல ஆதிகள் காத்தி - பாசமாகிய புலன்முதலியவைகளைக் காக்குதி,—ஆவைப் பூசனை புரிதி - இவ்வாறு பசுவைப் பூசனைசெய்குதி,— பின்னர் - பின்பு. எ-று.

புலன் - பஞ்சவிடயம். ஆதி என்றதனால் அந்தக்கரணம் முதலியனவுங் கொள்ளப்படும். "விஜ்யாமிவாப்யஸநேந" என முதனூற் சுலோகத்திற் கூறியதற்கியைய "வெம்மைக்கலாதியினமைதி" என்பதற்கு இவ்வாறு பொருள்கூறப்பட்டது. (எ0)

நிற்றியா னிற்கிற் செல்லிற் சேறிநீர் துற்றினீயுந்
துற்றியா கிடக்கி னங்கு னிருத்திநேர் துணிந்த நேசப்
பெற்றியா லூறென் றெய்தா வகையினிற் பெரிது காத்தி
மற்றிலா யாதி யானும் மகிழ்ந்திடுங் காறு மன்றே.

இ-ள். ஆன் நிற்கில் நிற்றி - பசுநின்றால் நீயும் நிற்குதி,—செல்லில் சேறி - அதுசென்றால் நீயும் செல்லுதி,—நீர் துற்றின் நீயும் துற்றி - அது நீரை உண்ணுகில் நீயும் உண்குதி,—கிடக்கில் அங்ஙன் இருத்தி - அது கிடந்தால் நீயும் அங்கே இருக்குதி,—துணிந்த நேசப் பெற்றியால் நேர் ஊறு ஒன்று எய்தாவகையினில் பெரிது காத்தி - (இவ்வாறே அதனைத்) துணிந்த அன்பின் றன்மையினால் எதிரே இடையூறொன்றும் அடையாதபடி மிகவும் காக்குதி,—ஆன் உண் மகிழ்ந்திடுகாறும் மற்று இலாய் ஆதி - அப்பசு மனம்மகிழும்வரைக்கும் வேறொருதொழிலும் இல்லாதவனாய் இருக்குதி. எ-று.

நிற்றியால் எனக் கண்ணழித்து ஆலை அசையாக்கினுமமையும். (எக)

நின்பெருந் தேவி தானு மருச்சனை நெறியிற் செய்திங்
கென்பெருந் தானத் தெல்லை யேகிமீண் டந்த வெல்லை
மன்பெருந் தேனு மீளி னெதிர்செலீஇ மலரிட் டேத்திப்
பின்படர்ந் தொழுக றானே கடனெனப் பெரிது சொன்னான்.

இ-ள். இங்கு நின் பெரும் தேவிதானும் அருச்சனை நெறியிற் செய்து - இங்கே உன்னுடைய பெரிய மனைவியும் அருச்சனையை முறைப்படி செய்து—என் பெரும் தானத்து எல்லை ஏகி மீண்டு - எனது பெரிய ஆச்சிரமத்தினெல்லைவரைக்கும் (அதனோடு) போய்த் திரும்பி,—அந்த எல்லை மன் பெரும் தேனு மீளின் எதிர்செலீஇ மலர் இட்டு ஏத்தி - பின் அந்த எல்லையின்கண் மிக்க பெருமையையுடைய தேனு மீண்டுவந்தால் எதிரே சென்று மலர்களையிட்டுப் பூசித்து,—பின் படர்ந்து ஒழுகலே கடன் எனப் பெரிது சொன்னான் - பின்சென்று ஒழுகுதலே அவட்குக் கடனாகும் என்று மிகவும் கூறினான். எ-று.

உம்மை எச்சம். தான் அசைநிலை; தேற்றப்பொருளில் வந்ததெனினு மமையும். (எஉ)

இறையுறு திருவு முற்றி லெண்ணமு மீறு மாகிக்
குறையுறு யுவும்பெ றாது வாழ்கென வாசி கூறிக்
கறையறு பன்ன சாலை காட்டிடக் காவ லானம்
மறையவ னருள்கைக் கொள்ளா மாதோடு வணங்கிப்புக்கான்.

இ-ள். இறை உறு திருவும் முற்றில் எண்ணமும் ஈறும் ஆகிக் குறையுறு ஆயுவும் பெறாது வாழ்க என - அற்பமான செல்வத்தையும் முற்றாத எண்ணத்தையும் அழிவுடையதாய்க் குறைவைப்பொருந்திய ஆயுளையும் அடையாது வாழுக என்று,—ஆசி கூறி - ஆசீர்வாதம் சொல்லி,— கறை அறு பன்னசாலை காட்டிட - குற்றமில்லாத பன்னசாலையைக் காண்பிக்க,—காவலான் அ மறையவன் அருள் கைக்கொள்ளா மாதொடு வணங்கிப் புக்கான் - அரசன் அம்முனிவருடைய கட்டளையை ஏற்று மனைவியோடும் (அவரை) வணங்கிப் (பன்னசாலையிற்) புகுந்தான். எ-று.

வாழ்க என்னும் வியங்கோளீறு விகாரத்தாற்றொக்கது. ஈறும் என்பதிலுள்ள உம்மை அசைநிலை. காட்டிடப் புக்கான் என இயையும். (எங)

மாகுவா னிலவ ருவேன் மன்னனங் குலத்தா னுள்ளந்
தீகுவா னருள்செய் வாய்நீ யென்றருட் டெய்வச் செவ்வி
யாகுவான் சுரபிக் கன்பா லறைந்திட நாக லோகத்
தேகுவான் போல வெய்யோ னெறிதிரை யுவரி சேர்ந்தான்.

இ-ள். மா குவால் நிலவு அரு வேல் மன்னன் நம் குலத்தான் - பெரிய கூட்டமான ஒளிசெறிந்த வேலையுடைய அரசனே நம்குலத்தவன்,— உள்ளம் தீகுவான் - (சந்ததியில்லாமையினான்) மனம் வருந்துகின்றான்,— நீ அருள்செய்வாய் என்று -(ஆதலால் அவனுக்கு) நீ அருள்செய்குதிஎன்று,— அருள் தெய்வச் செவ்வி ஆகு வான் சுரபிக்கு - அருளையும் தெய்வத்தன்மையையுமுடைய அழகுபொருந்திய பெருமையைக்கொண்ட தேனுவுக்கு,— அன்பால் அறைந்திட நாகலோகத்து ஏகுவான் போல - அன்போடுகூறும்படி பாதலத்திற்குச் செல்லுபவனைப்போல,—வெய்யோன் எறி திரை உவரி சேர்ந்தான் - சூரியன் எறிகின்ற திரையையுடைய கடலை அடைந்தான். எ-று.

என்று அறைந்திட ஏகுவான்போலச் சேர்ந்தான் என இயைக்க. இது தற்குறிப்பேற்றமென்னுமலங்காரம். (எச)

குறைகூறுபடல முற்றிற்று.

---

# தேனுவந்தனப்படலம்.

ஈரிரு மறைத்தொனி செவித்துளை யிறுத்தே
தாருர வுரக்குரிசி றன்றுயி லெழுப்ப
பூருவ திசைப்புண ரியிற்கதிர்கள் பூவா
வாரிருள் குடித்தொளி ரருக்கனு முதித்தான்.

இ-ள். ஈரிரு மறைத் தொனி செவித்துளை இறுத்து - (வசிட்டமுனிவருடைய மாணாக்கர்களால் அத்தியயனஞ்செய்யப்படுகின்ற) நான்குவேதங்களினொலியும் செவித்துவாரத்திற் (புகுந்து) தங்கி,— தார் உர உரக் குரிசில் தன் துயில் எழுப்ப - மாலையையணிந்த வலிய மார்பினையுடைய திலீபமகாராசனுடைய நித்திரையை எழுப்ப,—ஒளிர் அருக்கனும் - விளங்குகின்ற சூரியனும்,—பூருவ திசைப் புணரியில் கதிர்கள் பூவா - கீழ்த்திசைக்கடலிலே கிரணங்களைப் பரப்பி,—ஆர் இருள் குடித்து உதித்தான் - நிறைந்த இருளையழித்துத் தோன்றினான். எ-று.

எழுப்ப நிகழ்வுப்பொருட்டு. இதனை உதித்தான் என்பதனோடு முடிக்க. புணரியில் உதித்தான் என இயையும். இனிக் குடித்து என்பதை ஒளிர் என்பதனோடு முடித்து விசேடணமாக்கி. பூவாக் குடித்து ஒளிர் அருக்கனும் உதித்தான் என இயைத்துப் பொருள்கூறினுமமையும். பிராமியமுகூர்த்தத்திலேசெய்யும் அத்தியயனமுழக்கம் திலீபனைத் துயிலெழுப்பச் சூரியனும் உதித்தான் என்பது கருத்து. உம்மை சிறப்பு. (க)

பிறந்தகட லுட்பிரதி மண்டலம் பிறங்க
விறந்தபுன றொட்டுமிசை நின்றொளிரு மெல்லை
நிறந்தகு விளிம்பொரு தலைத்தொட நிரந்தே
திறந்தவரு ணன்றனது செப்பினை நிகர்க்கும்.

இ-ள். பிறந்த கடலுள் பிரதி மண்டலம் பிறங்க - தோன்றிய கடலினுள்ளே பிரதிமண்டலம் விளங்க,—இறந்த புனல் தொட்டு மிசை நின்று ஒளிரும் எல்லை - மிகுந்த நீரைத்தொட்டு மேலாகநின்று விளங்குகின்ற சூரியன்,—நிறம் தகு விளிம்பு ஒருதலைத் தொட - நிறம்மிக்க விளிம்பு ஒரு தலையிலே தொட்டுநிற்ப,—நிரந்து திறந்த வருணன் தனது செப்பினை நிகர்க்கும் - முற்றத்திறந்த வருணனுடைய ஒரு செப்பை ஒக்கும். எ-று.

எல்லை நிகர்க்கும் என இயைக்க. பிரதிமண்டலம் சமமாகத்தோற்றும் வட்டமாகிய விம்பம். பிரதிமண்டலம் அடிச்சிமிழ்போலவும், தொட்டுமேலே நின்ற சூரியன் திறந்த மேற்சிமிழ்போலவும் இருந்தனவென்க. விறந்த புனல் எனக் கண்ணழித்துச் செறிந்த புனல் எனப் பொருள்கூறினுமமையும். "விறப்புமுறப்பும்வெறிப்புஞ்செறிவே" என்பது சூத்திரம். (தொல்-சொல்-கூசஎ.) (உ)

அங்குமுத முட்சில வரிக்குல மடக்கித்
தங்கிய வரிக்குல மெழுந்துதனி போகப்
பங்கய மலர்த்திரவி பந்தினை யொளித்தோர்
செங்கையை விரித்தவொரு சித்தனையு மொக்கும்.

இ-ள். அம் குமுதம் உள் சில அரிக் குலம் அடக்கி - அழகிய குமுத மலர்களினுள்ளே சில வண்டுக்கூட்டங்களை அடக்கி,—தங்கிய அரிக்குலம் எழுந்து தனிபோக - (தேனுண்ணும்பொருட்டுச்சென்று முதனுண் மாலையிற் குவிதலாலே) தங்கிய வண்டுக்கூட்டங்கள் எழுந்து தனியேபோகும்படி,—பங்கயம் மலர்த்து இரவி - தாமரைமலர்களையலர்த்திய சூரியன்,—பந்தினை ஒளித்து ஓர் செங்கையை விரித்த ஒரு சித்தனையும் ஒக்கும் - பந்தினை (ஒரு கையில்வைத்து மூடி) ஒளித்துவிட்டு அப்பந்தை மற்றைக்கையில் விரித்துக் காட்டிய ஒரு சித்தனையும் ஒக்கும். எ-று.

இரவி சித்தனையும் ஒக்கும் என இயையும். குமுதம் பங்கயம் என்பன ஆகுபெயர். உம்மை இறந்ததுதழீஇயது. குமுதத்துள் என்பது குமுதமுள் என விகாரமாயிற்று. சித்தன் - சித்துக்களை இயற்றுவோன்.

நெருங்குசுடர் மண்டல நெடுங்கதிர் புறம்போ
யொருங்குற நிமிர்ந்துததி யுள்ளுற வயங்கல்
வருங்கடை யுகந்தனை வலித்துவட வைத்தீ
கருங்கடல் வயின்புடை கனன்றெரிதல் போலும்.

இ-ள். நெருங்கு சுடர் மண்டல நெடுங் கதிர் - நெருங்கிய சூரியமண்டலத்தின் நெடிய கிரணங்கள்,—புறம்போய் ஒருங்குற நிமிர்ந்து உததி உள்ளுற வயங்கல் - புறத்தேசென்று ஒருசேரக்கிளர்ந்து கடலினுள்ளாக விளங்கல்,—வடவைத்தீ - வடவாமுகாக்கினி,—வரும் கடையுகம்தனை வலித்து - மேல்வருகின்ற கடையுகத்தை நினைத்து,—கருங்கடல் வயின் புடை கனன்று எரிதல் போலும் - கரிய கடலினிடத்தே பக்கத்தில் உக்கிரங்கொண்டு எரிதலைப்போலும். எ-று.

நெருங்கு கதிர் என இயைக்க. வயங்கல் எரிதல்போலும் என்க. வயங்கல் - பிரதிவிம்பித்தல். மண்டலத்தை எழுவாயாக்குதல் இத்துணைச் சிறப்பின்று. (ச)

மறுத்தவிர் மலர்க்கதிர் வரச்சுட ருதிப்பக்
கறுத்தியல் கடற்கிடை கதிர்த்தொகை கிடப்ப
நிறுத்திய நலத்தொடு நிரைத்திறுக வச்சி
லுறுத்தியன பொற்கயி றொழுக்கியன போலும்.

இ-ள். மறுத் தவிர் மலர்க் கர வரச் சுடர் உதிப்ப - குற்றம்நீங்கிய தாமரைமலரையேந்திய கையையுடைய மேன்மையைக்கொண்ட சூரியன் உதிப்ப,—கறுத்தியல் கடற்கு இடை கதிர்த்தொகை கிடப்ப - கறுத்துத்தோன்றுகின்ற கடற்கிடையே அதன் கதிர்க்கூட்டங்கள் கிடத்தல்,—நிறுத்திய நலத்தொடு நிரைத்து இறுக அச்சில் உறுத்தியன கயிறு - நிறுத்திய அழகோடு நிரைத்து இறுகுற அச்சினிடத்தே கோத்த பொற்கம்பிகளை,—ஒழுக்கியன போலும் - இழுத்தலைப்போலும். எ-று.

உதிப்பக் கிடப்ப ஒழுக்கியனபோலும் என இயையும். கிடப்ப-தொழிற்பெயர். இறுக என்பதை உறுத்தியன என்பதோடு முடித்தலேயன்றி ஒழுக்கியன என்பதோடு முடிக்கினுமமையும். (ரு)

உட்டெளி வுணர்ச்சிதவ ரோதவுணர் வில்லார்
தெட்டவ ரெனக்கதிர் திறக்குமது போதின்
மட்டிதழ் விரித்தவில மாலைமலர் மைதீர்
கட்டிதழ் விரித்தவிரி காலைமல ரெல்லாம்.

இ-ள். கதிர் திறக்கும் அதுபோதின் - சூரியன்மலர்த்தும் அப்பொழுதில்,—மாலை மலர் - மாலைக்காலத்தே மலருமியல்பையுடைய (குமுத முதலிய) மலர்கள்,—தவர் உள் தெளிவு உணர்ச்சி ஓத - தவத்தான் மனந்தூய

ராயினூர் மனந்தெளிதற்குக் காரணமாய நல்லறிவை உபதேசிக்க,—உணர்வு இல்லார் என மட்டு இதழ் விரித்த இல - அதனை உணராதார்போலத் தேன்பொருந்திய இதழை விரித்தில,—காலைமலர் எல்லாம் தெட்டவர் என மைதீர் கட்டு இதழ் விரித்த - உதயகாலத்து மலருமியல்பையுடைய (தாமரைமுதலிய) மலர்களெல்லாம் அதனைக்கேட்டு மனந்தெளிந்தவர்போலக் குற்றந்தீர்ந்த முறுக்கமைந்த இதழ்களை விரித்தன. எ-று.

தெட்டவர் என்புழித் தெள் பகுதி. "அறவுரைகேட்டவிடத்துமலரார் - திறவுரைகேளாதவர்" என்றார் பிறரும். (சு)

காதிநிலை யிற்படு மளிக்கலது காலைப்
போதுபுகு மத்தகை புறத்துமுள வாமே
சீதுபரு கிக்கடி சிறைக்கொடு குறுந்தா
டாதுதழு விக்கொடு திரிந்ததகை சால.

இ-ள். காதி நிலையில் படும் அளிக்கு அலது - குடைந்து நிலையாகப் பொருந்துகின்ற வண்டுகளுக்கேயன்றி,—காலைப் போது புகும் அத்தகை - உதயகாலத்துமலருகின்ற பூக்களிற் பிரவேசிக்கின்ற அத்தகுதி,—புறத்தும் உள ஆமோ - ஏனையவற்றிற்குமுளவாகுமோ,—சீது பருகி - (அவ்வண்டுகள்) அப்பூக்களிலுள்ள தேனையுண்டு,—கடி சிறைக்கொடு - விரைவைச் சிறையிற் கொண்டும்,—குறும் தாள் தாது தழுவிக் கொடு - குறுமையாகிய காலாற் பூந்தாதைத் தழுவிக்கொண்டும்,—தகை சாலத் திரிந்த - தகுதி பொருந்தத் திரிந்தன. எ-று.

காலைப்போது தாமரைமுதலியன. புறம் ஆகுபெயர். (எ)

அடைச்சிறிய கட்சிய வகத்திலணை காமப்
பெடைப்புறம் விரித்தசிறை பெட்பொடு சுருக்காக்
கிடைத்தலை யெடுத்தயல் கெமித்தடியி னோடும்
புடைச்சிறை நிமிர்த்துடல் விதிர்த்தசில புட்கள்.

இ-ள். சில புட்கள் - சில (ஆண்) பறவைகள்,—அடைச் சிறிய கட்சிய அகத்தில் - இலைகளாலாய சிறிய கூட்டினது அகத்திலே,—அணை காமப் பெடைப் புறம் விரித்த சிறை - அணைத்த விருப்பமைந்த (தத்தம்) பெடைப் பறவைகளின் முதுகிலே விரித்த சிறகுகளை,—பெட்பொடு சுருக்கா - விருப்பத்தோடு சுருக்கி,—கிடைத் தலை எடுத்து - கிடத்தலையுடைய தலைகளை எடுத்து,—அயல் கெமித்து - அயலிற்போய்,—அடியினோடும் புடைச் சிறை நிமிர்த்து - அடித்தலோடும் பக்கத்திலுள்ள சிறகுகளை உயர்த்தி,—உடல் விதிர்த்த - உடல்களை உதறின. எ-று.

அணை பெடை என இயையும். கெமித்தல் 'கம்' என்னும் வடசொல்லடியாகப் பிறந்த வினை. இது சாதித்தொழிற்றன்மையணி. (அ)

திணிப்புற வரற்றின சினைக்கரிய மாரி
கணிப்புற வரற்றின கதித்திரைய வேலை
பணிப்புற வரற்றின பலப்பல பதங்கந்
தணிப்புற வரற்றின சிலச்சில சகுந்தம்.

இ-ள். திணிப்பு உற அரற்றின சினைக் கரிய மாரி - உரமாக ஒலித்தன கருவையுடைய கரிய மேகங்கள்,—கணிப்பு உற அரற்றின கதித் திரைய வேலை - (அம்மேகங்கள்) மதிக்கும்படி ஒலித்தன விரைவையுடைய திரைகளைக்கொண்டகடல்,—பணிப்பு உற அரற்றின பல பல பதங்கம் -(அவ்வொலி) தாழும்படி ஒலித்தன பற்பல பறவைகள்,—தணிப்பு உற அரற்றின சில சில சகுந்தம் - அவ்வொலி குறையும்படி ஒலித்தன சிற்சில பறவைகள். எ-று.

பணிப்புற தணிப்புற என்பனவற்றை ஒரு சொன்னீர்மையவாக்கிப் பிறவினையாகக் கொள்ளுதலுமாம். இதற்கு நிரனிறையாகப்பொருள்கொள்ளினுமமையும். (கூ)

பெருக்கிய குருத்துதி பிறங்கு கலைநாத
மருக்கிய வறற்றமர மாடுபுன லோதை
சுருக்கிழுது துய்த்தெழு சுடர்க்கடவுள் சும்மை
யிருக்கியன் மறைத்தொனி யெழுந்தவன மெங்கும்.

இ-ள். வனம் எங்கும் - (வசிட்டமுனிவருடைய) ஆச்சிரமமெவ்விடத்திலும்,—பெருக்கிய குருத்துதி - மிகுத்துக்கூறிய குருத்தோத்திரஒலியும்,—பிறங்கு கலை நாதம் - விளங்குகின்ற கலைகளை அப்பியாசஞ்செய்தற்கண் உண்டான ஒலியும்,—அருக்கிய அறல் தமரம் - அருக்கியங்கொடுக்குங் நீராலாய ஒலியும்,—ஆடு புனல் ஓதை - ஸ்நானஞ்செய்கின்ற நீராலாயஒலியும்,—சுருக்கு இழுது துய்த்து எழு சுடர்க்கடவுள் சும்மை - சுருக்கினால்விடப்பட்ட நெய்யை உண்டு (சுவாலித்து) எழுகின்ற அக்கினிதேவனுடைய ஒலியும்,—இருக்கு இயல் மறைத் தொனி - இருக்குக்களானியன்ற வேதங்களின் ஒலியும்,—எழுந்த - எழுந்துள்ளன. எ-று.

வனம், துதி என்பன ஆகுபெயர். சுருக்கு அக்கினியின்கண் நெய் சொரியுங் கருவி. (கம)

பாசவினை யைக்கடி தறுத்துநெறி பற்றா
வீசனை யுளத்தினி லிருத்திய தவத்தோர்
பூசனை களிற்றரு பயத்தையறல் போக்கி
யாசையுள நிற்பநனி துய்ப்பகளி யன்னம்.

இ-ள். பாச வினையைக் கடிது அறுத்து நெறி பற்றா - (தம்மைப்பற்றிய) பாசமாகிய இருவினைகளையும் விரைந்து அறுத்து வீட்டுநெறியைப்

யற்றி,—ஈசனை உளத்தினில் இருத்திய தவத்தோர் - சிவபெருமானைத்(தம்) மனத்திலிருத்திய தபோதனர்கள்,—பூசனைகளில் தருபயத்தை - (தாம்செய்யும்) பூசனைகளிலே கொடுவந்து அபிடேகித்த பாலை,—அறல் போக்கி - (அதனோடுகலந்த) நீரை (ப்பிரித்து) நீக்கிவிட்டு,—களி அன்னம் - களிப்பையுடைய அன்னங்கள்,—ஆசை உளம் நிற்ப நனி துய்ப்ப - ஆசை தம் மனத்தில் நிலையுற மிகவுமுண்பன. எ-று.

வீட்டுநெறி வினைகளை அறுத்தவழியன்றிப் பற்றப்படாமையின் அறுத்துநெறிபற்று என்றும், பற்றியவழியும் ஐம்புலநுகர்வோர் தவத்தராகாமையின் ஈசனையுளத்தினிலிருத்தியதவத்தோர் என்றுங் கூறினர். (கக)

உய்வவவ் வனத்துறை யனத்தொகைக ளொன்றோ
நொய்வுதரு மற்பொடு நுகர்ந்தவை பிரித்த
நைவிடு மகத்தொகை நலிந்துகதி நல்குந்
தெய்வவற றுய்ப்பவரு செவ்வியிள நவ்வி.

இ-ள். உய்வ அ வனத்து உறை அனத் தொகைகள் ஒன்றோ - (அப்பாலை உண்டு) உய்வன அந்த ஆச்சிரமத்திலிருக்கின்ற அன்னத்தொகைகள்மாத்திரமா?,—அவை நொய்வுதரும் அற்பொடு நுகர்ந்து பிரித்த - அவைகள் நெகிழ்ச்சியைத்தருகின்ற அன்போடு உண்டு பிரித்துவிட்ட,—நைவு இடும் அகத் தொகை நலிந்து கதி நல்கும் தெய்வ அறல் - வருத்தத்தைச் செய்கின்ற பாவத்தொகைகளைக்கெடுத்து நற்கதியைக்கொடுக்கின்ற தெய்வத்தன்மைபொருந்திய நீரை,—வரு இளம் செவ்வி நவ்வி துய்ப்ப - வருகின்ற இளமைப்பருவத்தையுடைய மான்களும் உண்டு உய்வனவாயின். எ-று.

உய்தல் ஆன்ம ஈடேற்றம். உய்வ வினைப்பெயர். அ பண்டறிசுட்டு. ஒகாரம் வினாவோடொழியிசை. தெய்வத்தன்மை பாவத்தைநீக்கிக் கதியைக் கொடுத்தல். (கஉ)

கறுத்துள வயப்புலி கலங்குயிர் கதத்தா
லொறுத்துள நினைப்பினை யொழிந்தரு குலாவ
நிறுத்துள களிப்பினொ டருந்தியளி நேரா
வெறுத்துள பலத்துள மிசைந்துள விகங்கம்.

இ-ள். கறுத்து உள வயப் புலி - கோபித்துள்ள வலிய புலியானது,—கலங்கு உயிர் கதத்தால் ஒறுத்துள நினைப்பினை ஒழித்து அருகு உலாவ - (தன்னைக்கண்டு) கலங்குகின்ற உயிர்களை வேகத்தோடும் கொல்லுகின்ற அந்த நினைப்பையொழிந்து (அம்முனிவர்) பக்கத்தே உலாவ,—விகங்கம் - பறவைகள்,—அருந்தி அளிநேரா வெறுத்துள பலத்துள் அம் - அம்முனிவர் உண்டு (தம்மீதே) அன்புற்று வெறுத்துவிட்ட பழத்திலுள்ள நீரை,—நிறுத்துள களிப்பினொடு மிசைந்துள - மனத்தில் நிலையுறவைத்த களிப்போடு முண்டன. எ-று.

கொலைத்தொழிலையுடைய விலங்கும் அருளோடு முனிவர்பக்கலில் உலாவிற்று. பறவைகளும் அவர்கள் உண்ணமுன் உண்ணுது, உண்டபின் வெறுத்துவிட்டவற்றையே உண்டன. எனவே அவர்களிடத்தில் விலஙகு களும் பறவைகளும் அன்புடையனவாய் ஒழுகின என்பது கருத்து. (கங)

பேசுவன மாகலை முனித்தொகை பெருக்குந்
தேசுவன மாமறைகள் செப்பவரு கிள்ளை
வீசுவன தேனுததி மீதுஞிமி றூதா
மூசுவன சோலைதொறு முங்கியெழு மெங்கும்.

இ-ள். எங்கும் - அவ்வாச்சிரமமெங்கும்,— பேசுவன மா கலை முனித் தொகை பெருக்கும் - படிக்கப்படுகின்ற பெரிய கலைகளையறிந்த முனிவர் கூட்டங்களால் விரிக்கப்பட்ட, — தேசு வன மா மறைகள் செப்ப வரு கிள்ளை - ஒளியையும் அழகையுங்கொண்ட பெரிய வேதங்களை (த் தாமுங் கேட்டுச்) சொல்லவருகின்ற கிளிகள்,—வீசுவன தேன் உததி மீது - சொரி கின்ற தேன்கடலின்மீதே,—ஞிமிறு ஊதா மூசுவன சோலைதொறும் - வண்டுகள் ஊதி மொய்க்கின்ற சோலைதோறும்,—முங்கி எழும் - முழுகி எழும். எ-று.

உததி மீது எழும், சோலை தோறும் எழும் எனத் தனித்தனி முடிக்க. முங்கி-இடைப்பிறவரல். வேதங்களை அத்தியயனஞ்செய்வோர் ஸ்நானஞ் செய்யவேண்டுதலின் முங்கியெழும் என்ருர். முங்கல் - மூழ்கல். (கச)

வைகறையி னித்தகை வனத்தினி லெழுந்தா
னுய்கறை யடிப்படை யொறுத்தரச ராகம்
பெய்கறை நிரப்பிய நிணத்தசை பிடித்தே
மொய்கறை பரித்துமுரண் முற்றுகதிர் வேலான்.

இ-ள். உய் கறையடிப் படை ஒறுத்து - (தன்கட்) செலுத்திய யானைப் படையைக் கொன்று,—அரசர் ஆகம் பெய் கறை நிரப்பிய நிணத் தசை பிடித்து - அரசருடைய மார்பின்கண்ணே சொரிகின்ற இரத்தத்தை நிரப்பியுள்ள நிணத்தோடுகூடிய தசையைப்பற்றி,—மொய் கறை பரித்து - (அதனுற்) செறிந்த கறையைத்தாங்கி,—முரண் முற்று கதிர் வேலான் - போரைமுடிக் கின்ற ஒளிபொருந்திய வேலையுடையவனுகிய திலீபன்,—வைகறையின் இத்தகை வனத்தினில் எழுந்தான் - புலரிக்காலத்திலே இத்தன்மையான தபோவனத்திலே எழுந்தான். எ-று.

ஆகம் நிரப்பியதசை என இயைக்க. ஒறுத்துப் பிடித்துப் பரித்து முற்று வேலான் என வினைமுடிவு செய்க. (கரு)

மெத்திய பவக்கொடு வினைத்தொகை யறுத்தே
முத்தியை யளிக்குநதி மூழ்கியளி மூழ்க

நித்திய நடத்துநிய மத்திறன் முடித்தே
சித்திய வருட்கடவுள் சேவடி நினைந்தான்.

இ-ள். மெத்திய பவக் கொடு வினைத்தொகை அறுத்து - (அத்திலீபன்) மிகுந்த பிறவிக்குக் காரணமாகிய கொடிய வினைக்கூட்டங்களை முற்றவொழித்து, — முத்தியை அளிக்கும் நதி மூழ்கி - முத்தியைக் கொடுக்கின்ற (புண்ணிய) நதியிலே முழுகி,—அளி மூழ்க நித்திய நடத்து நியமத்திறன் முடித்து - அன்பிலே (மனம்) அமிழ்ந்த நித்தியமுஞ்செய்கின்ற நியமப்பகுதிகளை முடித்து,—சித்திய அருள் கடவுள் சேவடி நினைந்தான் - இட்டசித்தியைத்தருகின்ற அருளைக்கொண்ட கடவுளுடைய செம்மையாகிய திருவடிகளைத் தியானித்தான். எ-று.

நித்தியநடத்துநியமம் - நித்தியகருமம். புதல்வற்பேறுவேண்டித் தொழுதான் என்பார் சித்தியவருட்கடவுள்சேவடிநினைந்தான் என்றார். திலீபன் ஸ்நானநியமங்களை முடித்து அருட்கடவுளைத் தொழுதான் என்பதாம்.

ஏயதன மெய்ப்பொலி யிலங்கொளி யிராமந்
தூயநிழ லெற்றையி னிரட்டிகொடு தோன்ற
மேயதரு வுக்கிடை விழுந்துதிகழ் வெய்யோன்
சேயவொளி சுற்றவுயர் தேனுவை யடைந்தான்.

இ-ள். ஏய தன மெய் பொலி இலங்கு ஒளி இராமம் - இயைந்த தனது மெய்யிற்பொலிகின்ற விளங்குகின்ற ஒளியும் அழகும்,—தூயநிழல் எற்றையின் இரட்டிகொடு தோன்ற - சுத்தமாகிய சாயையினிடத்து எந்நாளினும்பார்க்க இருமடங்காகத் தோன்றவும்,—மேய தருவுக்கு இடை விழுந்து திகழ் வெய்யோன் சேய ஒளி சுற்ற - அங்கேபொருந்திய மரங்களுக்கிடையேவிழுந்து விளங்குகின்ற சூரியனுடைய ஒளியானது சூழவும்,—உயர் தேனுவை அடைந்தான் - உயர்ந்த தேனுவை அடைந்தான். எ-று.

தன் என்றது தேனுவை. தோன்ற சுற்ற அடைந்தான் என இயைக்க. இவை நிகழ்வுப்பொருட்டு. திலீபனுக்காக்கல் சிறப்பின்று. இனி முன்னிரண்டடிக்கும் பொலிநிழலானது ஒளியையும் அழகையும் இரட்டிகொடு தோன்ற என மாற்றிப் பொருள்கூறினும் பொருந்தும். (கஎ)

கொங்கைமலை வம்பொடு குலுங்கியணி கொண்டே
பொங்கமிகு பங்கமொடு பொய்யவிடை நையச்
செங்கைமல ரிற்புதிய செவ்விமலர் செவ்வே
துங்கபல மின்பொடு தரும்படி துலங்க.

இ-ள். கொங்கை மலை - தனமாகிய மலையானது,—வம்பொடு குலுங்கி அணிகொண்டு பொங்க - கச்சோடுகுலுங்கி அழகைக்கொண்டு கிளரவும்,— மிகு பங்கமொடு பொய்ய இடை நைய - (அதனால்)மிக்க பங்கத்தோடு பொய்

யாகிய இடை மெலியவும்,—புதிய செவ்வி மலர் - புதிய அழகிய மலர்கள்,—செங்கை மலரில் - சிவந்த கையாகிய மலரிலே,—துங்கபலம் இன்பொடு தரும்படி செவ்வே துலங்க - உயர்ந்த (புதல்வற்பேருகிய) பலத்தை இன்பத்தோடு தரும்படி செவ்விதாக விளங்கவும். எ-று.

கொங்கைமலே, செங்கைமலர் என்பன தொகையுருவகம். பொங்க முதலிய செயவெனெச்சங்கள் மேலைச்செய்யுளில் உற்ருள் என்பதனேடு முடியும். பங்கம் - கேடு. (கஅ)

அனங்கசர வென்றியி னழித்தழகை யெல்லாந்
தினங்கவர் கவின்கொள்வன தெய்வதமி தென்ன
வினங்கொண்மணி யின்கன விளங்கதி ரெறிக்கும்
பொனங்குழையு மன்பினெடு பொற்கொடியி னுற்ருள்.

இ-ள். அனங்க சர வென்றியின் அழித்து - மன்மதபாணத்தின் வென்றியினல் அழிவுசெய்து,—அழகையெல்லாம் தினம் கவர் - (ஆடவர்களுடைய) அழகையெல்லாம் (திறையாக) நாடோறும் கவரத்தக்க,—கவின்கொள் வனதெய்வதம் இது என்ன - அழகைக்கொண்ட ஒரு வனதெய்வம் இது என்று சொல்லும்படி,—இனம் கொள் மணியின் கன இளம் கதிர் எறிக்கும் பொனம் குழையும் - கூட்டமாகிய இரத்தினங்களையுடைமையினல் மிக்க இளமையான கிரணங்களை வீசுகின்ற பொன்னலாகிய குழையினையுடையளாகிய சுதக்கிணேயும்,—அன்பினெடு பொற்கொடியின் உற்ருள் - அன்போடு ஒரு பொற்கொடிபோலத் (தேனுவை) அடைந்தாள். எ-று.

பொனங்குழை - அன்மொழித்தொகை. உம்மை - எச்சம். இளமை - ஈண்டு மழுங்காமை. வென்றவர் தோற்றவர் வளத்தைக் கவர்தல் வழக்காதலின் கவர் என்றும், வனத்திற்சேறலின் வனதெய்வதமிதென்ன என்றுங் கூறினர். (கக)

உத்தம மறைச்சுருப மொத்தசுரை யைத்தான்
சித்தமகிழ் விற்றிரி வலஞ்செய்தத னின்சீர்
மத்தக மிசைப்பணை மருப்பினடு வட்டே
மத்தமல ரிட்டுற வருச்சனை புரிந்தாள்.

இ-ள். உத்தம மறைச் சுருபம் ஒத்த சுரையை - மேலான வேதத்தினது வடிவையொத்த காமதேனுவை,—தான் சித்தமகிழ்வில் திரி வலஞ் செய்து - அந்தச் சுதக்கிணை மனமகிழ்ச்சியோடு மும்முறை வலம்வந்து,—அதனின் சீர் மத்தகமிசை பணை மருப்பின் நடுவண் - அதனுடைய சிறந்த மத்தகத்தின்மீது பருத்த இருகோட்டுக்கும் நடுவே,—அத்த தேம் மலர் இட்டு - கையிலுள்ள தேன்பொருந்திய மலரை இட்டு,—உற அருச்சனை புரிந்தாள் - மிகவும் பூசனைசெய்தாள். எ-று.

நடுவண் என்புழி அண் பிரத்தியயம். ஆங்கண் என்பதுபோல. "மீதானசிரத்தமலன்" என்று கூறியவாறே சிவபிரானிருக்கும் அவ்விடமே பூசைக்குகந்ததாகலின் சிரசிலுள்ள மத்தகத்திலிட்டுப் பூசைசெய்தாள் என்க. (உ0)

சொற்சதுர் மறைப்படி யளித்ததொரு தூய்தா
மற்சனை தனைத்தன தகத்தினிது கொள்ளா
வெற்செரு கலர்க்குவை சுமந்துநெறி யெய்தா
நற்சுரபி முற்செல நயந்துபி னடந்தார்.

இ-ள். சொல் சதுர் மறைப்படி - சொல்லையுடைய நான்குவேதங்களின் விதிப்படி,—அளித்தது ஒரு தூய்து ஆம் அற்சனைதனை - செய்ததாகிய ஒப்பற்ற பரிசுத்தமான பூசனையை,—தனது அகத்து இனிது கொள்ளா - தன்மனத்திலே இனிதாக ஏற்று,—எல் செருகு அலர்க்குவை சுமந்து - ஒளிபொருந்திய மலர்க்கூட்டங்களைச் சுமந்து,—நெறி எய்தா - வழியை அடைந்து,—நல் சுரபி முன்செல - நல்ல காமதேனுவானது முன்னே செல்ல,—நயந்து பின் நடந்தார் - (திலீபனும் சுதக்கிணையுமாகிய இருவரும்) விரும்பி (அதன்) பின்னே சென்றார்கள். எ-று.

அர்ச்சனை என்பது எதுகைநோக்கி அற்சனை என்றாயிற்று. மனத்தினிதுகொள்ளா என்றமையாற் காயத்தால் வெறுத்ததுபோன்று காட்டிற்று என்பது பெறுதும். (உக)

மையல்வினை பற்பல வளைத்துவரு மேனு
முய்யல்விதி யார்க்குநடு வோர்தடையு முண்டோ
பையலர் மதுக்கட லிகந்தழி பலத்தின்
செய்யலி னடந்துவழி தேனதி கடந்தார்.

இ-ள். மையல் வினை பற்பல வளைத்து வருமேனும் - மயக்கத்தைத் தரும் தீவினைகள் பற்பலவாகச் சூழ்ந்துவருமாயினும்,—உய்யல் விதியார்க்கு - உய்தற்குக் காரணமாகிய ஊழையுடையவர்களுக்கு,—நடு ஓர் தடையும் உண்டோ - நடுவே யாதானுமோர் தடையுமுளதாமோ (இல்லை),—பை அலர் மதுக்கடல் இகந்து - (அவ்விருவரும்) பசிய பூவினின்றும் வழிந்த தேனாகிய கடலைக் கடந்து,—அழி பலத்தின் செய்யலின் நடந்து - பதனழிந்துவீழ்ந்த பழங்களாலாய சேற்றினிடையே நடந்து,—வழி தேன் நதி கடந்தார் - அவற்றினின்றும் வழிந்து செல்கின்ற தேனாகிய நதியையுங் கடந்தார்கள். எ-று.

திலீபனும் சுதக்கிணையும் நல்விதியையுடையவரானபடியால் இத்தடைகளைக் கடந்தார் என்பார் உய்யல்விதியார்க்குநடுவோர்தடையுமுண்டோ என்றார். உய்யல்விதி - ஆகூழ்; நல்விதி. வினைபற்பல கடல், சேறு, நதி என்பன. தடையும் என்புழி உம்மை சிறப்பு. நதியும் என்புழி எச்ச உம்மை விகாரத்தாற்றொக்கது. இது வேற்றுப்பொருள்வைப்பு என்னும் அலங்காரம். (உஉ)

பரத்தொடு வினைத்தொகை யடர்த்தவர் பயன்றேர்
சுரத்தொடு தொனிக்குமறை யாகவுழை தோறுந்
திரத்தொடு சயத்துநிமிர் தம்பமிகை சிங்கா
வரத்தொடு நிறுத்தியன யூபநிலை கண்டார்.

இ-ள். பரத்தொடு வினைத்தொகை அடர்த்தவர் பயன் தேர் சுரத்தொடு தொனிக்கும் மறை யாக உழை தோறும் - பாரத்தோடு வினைக் கூட்டங்களை வென்றவர்களாகிய முனிவர்களது பொருளை ஆராய்கின்ற சுரத்தோடு ஒலிக்கின்ற யாகசாலைகடோறும்,—திரத்தொடு நிமிர் சயத்துத் தம்பம் - உறுதியோடு நிமிர்ந்த வெற்றித்தம்பத்தை,—மிகை சிங்கா உரத்தொடு நிறுத்தி அன்ன - மேன்மைகுறையாத வலியோடும் நிறுத்தினாற்போன்ற,—யூபநிலை கண்டார் - யாகதம்பங்களின்நிலையைக் கண்டார்கள். எ-று.

நிறுத்தினால் என்பது நிறுத்தி எனத் திரிந்துநின்றது. ஒடு உருபுகள் வேறுவினையுடனிகழ்ச்சிப்பொருட்கண் வந்தன. (உ௩)

ஞானநெறி யிற்றழுவு நற்றவர் மகஞ்செ
யூனமில் பதத்தையுண ராவொருமை யுந்த
வீனமில் வனச்சமிதை கொண்டினிதி னெய்துங்
கானவுளி யத்தினிலை கண்டுவகை கொண்டார்.

இ-ள். ஞான நெறியில் தழுவும் நல் தவர் - ஞானமார்க்கத்திலே தழுவிய நல்ல தபோதனர்கள்,—மகம் செய் ஊனம் இல் பதத்தை உணரா - யாகத்தைச்செய்கின்ற குற்றமில்லாத காலத்தை உணர்ந்து,—ஒருமை உந்த - மன ஒருப்பாடு செலுத்த,—ஈனம் இல் வனச் சமிதை கொண்டு இனிதின் எய்தும் - குற்றமில்லாத காட்டிலுள்ள சமிதைகளைக்கொண்டு இனிதாகவரும்,—கான உளியத்து நிலைகண்டு உவகை கொண்டார் - காட்டிலுள்ள கரடிகளினிலையைக்கண்டு மகிழ்ந்தார்கள். எ-று.

தவர் செய் பதம் என இயைக்க. ஒருமை - தனக்குப் பயன் உண்டென்னும் ஒருப்பாடு. இங்ஙனமே இராமாவதாரத்துச் சித்திரகூடப் படலத்திலே உகூ-ம் செய்யுண்முதல் ௩௫-ம் செய்யுள்வரையுமுள்ள செய்யுட்களால் விலங்கு முதலியன முனிவருக் கேவல்செய்வதாகக் கம்பருங் கூறுதல் காண்க. (உ௪)

குச்சரி குறுங்கலிசொல் கொல்லியது பாடா
நச்சரி யரற்றுவன நன்கனி கொணர்ந்தே
வைச்சரி தவத்தரை வழுத்துவன காணு
வச்சரிதை யற்புத மகத்தினி லமைத்தார்.

இ-ள். குச்சரி குறுங்கலி சொல் கொல்லியது பாடா - குச்சரியும் குறுங்கலியும் சொல்லப்படுகின்ற கொல்லியும் ஆகிய இப்பண்களைப்

பாடி,—நச்சு அரி அரற்றுவன நன் கனி கொணர்ந்து வைச்சு - விரும்புகின்ற வண்டுகள் ஒலிக்கப்படுவனவாகிய நல்ல பழங்களைக் கொண்டுவந்து வைத்து,—அரி தவத்தரை வழுத்துவன காணு - குரங்குகள் தவத்தர்களைத் துதித்தலைக் கண்டு,—அச் சரிதை அற்புதம் அகத்தினில் அமைத்தார் - அந்த ஒழுக்கத்தை அதிசயத்தோடு மனத்தில் அமைத்தார்கள். எ-று.

நல்ல பழங்களில் வண்டுகள் வீழ்தலியல்பாதலின் அரி அரற்றுவன நன்கனி என்றார். குச்சரி - குறிஞ்சியாழ்த்திறவகையுளொன்று. குறுங்கலி - பாலையாழ்த்திறவகையுளொன்று. கொல்லி - மருதயாழ்த்திறவகையுளொன்று. இங்ஙனமே, "தெரிவைமார்க்கொருகட்டளையெனச்செய்ததிருவே - பெரியமாக்களிற்பலாக்களிற்பிறங்கியவாழை - அரியமாக்கனிகடுவன்களன்புகொண்டளிப்ப" என்று கம்பருங் கூறுதல் காண்க. (உ௫)

குறைத்தக வினைத்தொகை குலைக்குமறை கூறு
வுறத்தக வினிற்சுக முருக்கிய வுளத்தே
யறத்திற னுரைக்குமுயர் சாரிகையி னன்பா
மறைத்தொனி யினைச்செவி மடுத்தளி வளர்த்தார்.

இ-ள். அக வினைத்தொகை குறைத்து குலைக்கும் மறை கூறு - பாவமாகிய வினைக்கூட்டங்களைக் குறைத்து நிலைகெடச்செய்கின்ற வேதத்தைச் சொல்லி,—உறத் தகவினில் சுகம் உருக்கிய உளத்தே - மிகவுந் தகுதியோடு கிளிகளா லுருக்கப்பட்ட மனத்திலே,— அறத் திறன் உரைக்கும் உயர் சாரிகையின் அன்பு ஆம் மறைத் தொனியினை - தருமங்களின்பகுதிகளை எடுத்துக் கூறுகின்ற உயர்ந்த நாகணவாய்களின் அன்பமைந்த (அத்தருமவிஷயங்களையே பொருளாகக்கொண்ட) வேத ஒலியை,—செவி மடுத்து அளிவளர்த்தார் - கேட்டு அன்புமிக்கார்கள். எ-று.

குறைத்தக எனக் கண்ணழித்து குறைய எனப் பொருள்கோடலுமொன்று. தருமவிஷயங்களை எடுத்து வேத இருக்குக்களாற் சாரிகைகள் கூறலின், அறத்திறனுரைக்கும்......மறைத்தொனியினை என்றார். இனி உரைக்கும் என்பதை மறையோடு முடித்து, தருமப்பகுதியைக் கூறுகின்ற வேத இருக்குக்களினொலியை எனினுமாம். (உசு)

ஆளிதம மிக்கமெ யுரிஞ்சவடி வீழுந்
தூளிதழு வக்களி சுமந்துடைய ரேனு
நீளிதநல் வற்கலை யெடுத்தவழி நீர்சோர்
பாளித தருக்களயல் கண்டுபரி வுற்றார்.

இ-ள். ஆளி தம மிக்க மெய் உரிஞ்ச அடி வீழும் தூளி தழுவ - சிங்கங்கள் தம்முடைய (சொறி) மிக்குள்ள சரீரத்தை உரோஞ்ச (அதனால்) அடிமரத்தினின்றும் விழுகின்ற துகள் (தம் மெய்யிலே) தீண்டுதலால்,—

களி சுமந்துடையரேனும் - களிப்பைத் தாங்கினார்களாயினும்,—நீள் இத நல் வற்கலே எடுத்தவழி நீர்சோர் - நீண்ட இனிய நல்ல தோலை எடுத்த விடத்து நீரைச்சொரிகின்ற,—பாளித தருக்கள் அயல்கண்டு பரிவுற்றார் - பச்சைக்கருப்பூரமரங்களைப் பக்கத்தேகண்டு வருந்தினார்கள். எ-று.

பெருங்களிப்புற்றவழியும், அதனான்மயங்காது பிறர்துயர்க்கிரங்கும் பேரருளுடையாரென்பார் களிசுமந்துடையரேனும்.........நீர்சோர்பாளித தருக்களயல்கண்டுபரிவுற்றார் என்றார். வற்கலே - மரவுரி. அஃது ஈண்டுத் தோல் என்னும் பொருட்டாய் நின்றது. (உஎ)

துங்கமதன் மங்கல சுகத்திகிரி வீசப்
பொங்கியெழு சம்பக மலர்த்துகள் புரத்தே
தங்கலி னெடுஞ்சுடர் தரித்துடைய செந்தா
தங்கியினை யங்குமெ யணிந்தவரு மானார்.

இ-ள். துங்க மதன் மங்கல சுகத் திகிரி வீச - உயர்ச்சிபொருந்திய மன்மதனுடைய நன்மை அமைந்த சுகத்தைத் தருகின்ற தேராகிய தென்றல் வீசுதலால்,—பொங்கி எழு சம்பக மலர்த்துகள் புரத்துத் தங்கலின் - கிளர்ந்து எழுகின்ற சம்பகப்பூந்தாதுக்கள் தேகத்திலே படிதலால்,—நெடும் சுடர் தரித்து உடைய செந்தாது அங்கியினை - மிக்க ஒளியைக்கொண்ட பொற்சட்டையை,—அங்கு மெய் அணிந்தவரும் ஆனார் - அங்கே உடம்பிற்றரித்தவரையும் ஒத்தார்கள். எ-று.

தங்கலின் ஆனார் என இயைக்க. சம்பகப்பூந்தாது பொன்னிறமுடையதாதலின் செந்தாதங்கியினையங்குமெய்யணிந்தவருமானார் என்றார். செந்தாது - பொன். (உஅ)

ஏமமிகு மாமுனிவர் யாகவன லூறுந்
தூமமிக நீளிடை யிடைச்சுலவ லாலே
வாமமுகி லூடுற மறைந்தெதிர் வயங்குந்
தாமமிகு மோரிரு தடஞ்சுடரு மொத்தார்.

இ-ள். ஏமம் மிகு மாமுனிவர் யாக அனல் ஊறும் தூமம் - மகிழ்ச்சி மிக்க பெரிய முனிவர்களுடைய யாகாக்கினியிலே தோன்றிய புகையானது,—மிக நீள் இடை இடைச் சுலவலால் - மிகத்தூரமான இடத்திற்கு நடுவே சுற்றுதலால்,—வாமமுகில் ஊடுற - அழகிய முகில் இடையேபொருந்த,—மறைந்து எதிர் வயங்கும் -அதனுண்மறைந்து எதிரே விளங்குகின்ற,—தாமம் மிகும் ஓரிரு தடம் சுடரும் ஒத்தார் - ஒளிமிக்க இரண்டாகிய பெரிய சுடர்களையும் ஒத்தார்கள். எ-று.

முகில் ஊடுற என்பதற்கு முகிலினிடையாக எனினுமாம். உம்மை எச்சத்தோடு சிறப்பு. இருசுடர் - சூரியசந்திரர். இருசுடரும் ஒருகால

த்தே ஓரிடத்தேநின்று ஒன்றுக்கொன்று ஒளியிற் குறைவின்றிப் பிரகா சித்தால் அவற்றை ஒப்பார் என்பார் எதிர்வயங்கும் தாமமிகுமோரிருதட ஞ்சுடருமொத்தார் என்றார். சுலவலால் ஒத்தார் என இயைக்க. (உகூ)

தயங்குவன விப்பல பொருட்களிடை சார
நயங்கொடம தன்பெனு நவப்பெரிய பாசம்
வியன்கொள்பத நன்கொடு மலைத்திடலின் மெல்ல
வியங்குபசு வின்பின ரியன்றினிது போனார்.

இ-ள். தயங்குவன இப்பல பொருட்கள் இடைசார - விளங்குவனவா கிய இத்தன்மையையுடைய பல பொருள்களெல்லாம் இடையே எதிர்ப் பட - நயம் கொள் தமது அன்பெனும் நவப் பெரிய பாசம் - நன்மையைக் கொண்ட தமது அன்பென்றுசொல்லும் புதிய பெரிய கயிறு,—வியன் கொள் பதம் நன்கொடு மலைத்திடலின் - பெருமையைக்கொண்ட பாதங் களை நன்றாகக் கட்டுதலினால்,—மெல்ல இயங்கு பசுவின்பின்னர் இயன்று இனிது போனார் - மெல்லச்செல்லும் பசுவின்பின்னே பொருந்தி இனிதா கப் போனார்கள். எ-று.

சாரப்போனார் எனவும், பாசம் மலைத்திடலின் மெல்ல இயங்கு பசு எனவும் இயைக்க. புத்திரப்பேறாகிய பயனைத்தரும் அன்பென்பார் நயங் கொள் என்றும், இது ஏனைக் கயிறுபோல ஒருவாற்றானும் அறுக்கப்படாத கயிறு என்பார் நவப்பெரியபாசம் என்றுங் கூறினார். (ங0)

மெய்திக ழிருஞ்சுருதி யின்வழி விடாதே
மைதவி ரருந்தரும நூலவை மலிந்தே
நைதலது வின்றிநனி சென்றென நடந்தே
யெய்தின ரருந்தவ வனப்பெரிய வெல்லை.

இ-ள். மை தவிர் அரும் தருமநூலவை - குற்றமில்லாத அரிய தரும நூல்களானவை,—மெய் திகழ் இரும் சுருதியின் வழி விடாது - மெய்ப் பொருள்விளங்குகின்ற பெரிய வேதம்சென்ற வழியைவிடாது,—மலிந்து- நிறைந்து,—நைதலது இன்றி நனி சென்றென - கெடுதலின்றி மிகவும் சென்றாற்போல, — நடந்து - (திலீபனும் சுதக்கிணையுமாகிய இருவரும் தேனுசென்றவழியை விடாது) சென்று,—அரும் தவவனப் பெரிய எல்லை எய்தினர் - அரிய தபோவனத்தின் பெரிய எல்லையை அடைந்தார்கள். எ-று.

விடாது சென்றென நடந்து எய்தினர் என இயைக்க. தருமநூல் - மிருதி. சுருதி கூறியனவன்றி மிருதி பிறிதொன்று கூறா என்பார் விடாது மலிந்தென்றார். (ஙக)

செம்மலை வணங்கியுயர் தேனுவை வணங்கா
மைம்மலை பெருந்துயர் மறுக்கமொடு மாறா

விம்மலி னொடுந்துணை யொடுந்துணிவின் மீண்டாள்
கைம்மலை பிரிந்திடு கவின்கொள்பிடி யன்னாள்.

இ-ள். செம்மலை வணங்கி - நாயகனாகிய திலீபனை வணங்கி,—உயர் தேனுவை வணங்கா - (அதன்பின்னர்) உயர்ந்த தேனுவையும் வணங்கி,— மைமலை பெரும் துயர் மறுக்கமொடும் - மயக்கம்பொருந்திய பெரிய துன்பத்தாலாய சுழற்சியோடும்,—மாறா விம்மலினொடும் - நீங்காத மனப்பொருமலோடும், — துணையொடும் - விரைவோடும், — துணிவின் - (பயன்படும் என்பதனாலே) துணிவோடு,—கைமலை பிரிந்திடு கவின்கொள் பிடி அன்னாள் மீண்டாள் - களிற்றைப்பிரிந்த அழகினைக்கொண்ட பிடியை ஒத்தவளாய்த் திரும்பினாள். எ-று.

வணங்கா மீண்டாள் என இயைக்க. வணங்கா என்பது செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். துயர் பிரிவாலாய துயர். விம்மலும் அதுபற்றிவந்தது. கற்புடைமகளிர்க்குக் கொழுநனிற் சிறந்ததெய்வமின்றாதலின் முன் நாயகனை வணங்கினாள் என்க. "தெய்வந்தொழாஅள் கொழுநற்றொழுதெழுவாள்" என்றார் பிறரும். (ருஉ)

வேறு.

கடற்படு தரளக் கோவை கவிரின்மென் கவின்கொள் சோதி
மடற்கிடை வைத்த வன்ன நகைச்செவ்வாய் மஞ்ஞை மீள
மிடற்படு சமர வாகை மிலைச்சிய வீர வேற்கை
யடற்படை யரச னாஅ லவனொரு தமிய னானான்.

இ-ள். கடல்படு தரளக் கோவை - கடலிலுண்டான முத்தின்வரிசையை,—கவிரின் மென் கவின் கொள் சோதி மடற்கு இடை வைத்த அன்ன - முருக்கினது மெல்லிய அழகைக்கொண்ட ஒளிபொருந்திய பூவிதழின்நடுவே வைத்தாற்போன்ற,—நகைச் செவ்வாய் மஞ்ஞை மீள - தந்தவரிசையினைக்கொண்ட சிவந்த வாயையுடைய மயில்போல்வாளாகிய சுதக்கிணை திரும்பிவர,—மிடல்படு சமரவாகை மிலைச்சிய - வலிமைபொருந்திய போரையுடைய வெற்றிமாலையைச்சூடிய,—வீரவேற்கை - வீரம்பொருந்திய வேலையேந்திய கையையும்,—அடல் படை அரசன் - வலிமைபொருந்திய சேனையையும் உடைய அரசன்,—ஆனால் - பசுவினால்,—அவன் ஒரு தமியன் ஆனான் - (இப்பொழுது) அவன் மிகத் தனித்தவனாயினான். எ-று.

வைத்தால் என்பது வைத்த என விகாரமாயிற்று. வேலும் படையும் முதலிய துணைகளையுடைய அரசன் அவற்றைப் பிரிந்து மனைவியும் பிரிய இப்பொழுது ஒருபசுகாரணமாகத் தனித்தான் என ஆசிரியன் அரசன் மேல் இரங்கிக்கூறிற்று. ஆனால் என்பதை அரசனோடு கூட்டி அரசனே எனின் எனப் பொருள்கூறுவாருமுளர். இங்கே ஆனால் என்பது தேற்றப்பொருளில்வந்த இடைச்சொல். இஃது இப்பொருளில்வருதலை, சிவஞானசித்தியார் இரண்டாஞ்சூத்திரத்து கரு-ம் செய்யுளிற் காண்க. (ருரு)

உறத்தகுந் தூணி யார்த்திட் டுளைபசுங் கொடியின் வீக்கி
நிறத்திளங் கிளையிற் றோற்றுஞ் சுரபிபி னெடிது போந்தான்
மறத்தெதிர் மார்பத் தல்லால் வான்றடந் திகிரி மன்னர்
புறத்திடைப் புகாத வாகைப் போர்க்கணைச் சிலையி னானே.

இ-ள். வான் தடம் திகிரி மன்னர் மறத்து எதிர் மார்பத்து அல்லால் - மிகப் பெரிய ஆஞ்ஞாசக்கரத்தையுடைய அரசர்களது வீரத்தோடு எதிர்த்த மார்பிலேயன்றி,— புறத்திடை புகாத - (அவர்களுடைய அஞ்சிப் புறமிடும்) முதுகிற் புகாத,—வாகை போர் கணை சிலையினன் - வெற்றியைக்கொண்ட போரையுடைய அம்புபூட்டிய வில்லையேந்தியவனாகிய திலீபன்,—தகும் தூணி உற ஆர்த்திட்டு - தகைமைபொருந்திய அம்பறாத் தூணியை (முதுகிற்) பொருந்தக் கட்டி,—உளை பசும் கொடியின் வீக்கி - குடுமியைப் பசிய கொடியினாற் கட்டி,—நிறத்து இளம் கிளையின் தோற்றும் - நிறத்தினால் இளந்தளிர்போலத் தோற்றுகின்ற,—சுரபி பின் நெடிது போந்தான் - தேனுவின்பின்னே நெடுந்தூரம் போயினான். எ-று.

மறத்தெதிர்மார்பம் உபசாரம். மார்பினடைக்கியைய அஞ்சிப்புறமிடும் என்னும் முதுகிற்குரிய உபசாரஅடை வருவிக்கப்பட்டது. சிலையினான் போந்தான் என முடிக்க. அங்ஙனமாய அரசன் இங்ஙனமாயினான் என ஆசிரியன் இரங்கிற்று. (ருச)

கரியகட் பெரிய கொங்கைக் கன்னியர் கவரி வீச
வரியணைப் பொலிந்து தோன்றி நிதிபல வளிப்போ னானிற்
குரியபுற் கொடிகொ டாவீ யுலவையி னோப்பி யுள்ளந்
திரிவறச் சென்றான் யாரே யூழ்வினை தீர்க்க கிற்பார்.

இ-ள். கரிய கண் பெரிய கொங்கை கன்னியர் கவரி வீச - கரிய கண்ணையும் பெரிய முலையையுமுடைய பெண்கள் சாமரைகளை இரட்ட,—அரியணை பொலிந்து தோன்றி - சிங்காசனத்தில் வீற்றிருந்து,—பல நிதி அளிப்போன் - பல நிதிகளைக் கொடுப்பவனாகிய திலீபன்,—ஆனிற்கு உரிய புற்கொடி கொடா - (இப்பொழுது மக்கள் செல்லுதற்கரிய காட்டிலே சென்று) பசுவிற்கு உண்டற்குரிய (அறுகம்புற்கொடி முதலிய) புற்கொடிகளைக் கொடுத்து,—ஈ உலவையின் ஓச்சி - (அதன்மேனியில் விழுகின்ற) ஈகளைச் சிறிய குழைக்கொம்பர்களாற்றுரத்தி,— உள்ளம் திரிவு அறச் சென்றான் - மனந்திரியாது சென்றான்,—யாரே ஊழ்வினை தீர்க்ககிற்பார் - யார்தான் ஊழ்வினையை நீக்கவல்லவர். எ-று.

புற்கொடி கொடா என்பதற்குப் புல்லையுங் கொடியையுங் கொடுத்து எனப் பொருள்கூறினுமமையும். இதுவும் ஆசிரியனுடைய இரக்கம்.(ருரு)

பெருகுமா னேகி னேகாப் பேதுற நிற்கி னில்லா
முருகுநீ ராரி னாரத் துயின்றிடின் முயன்றி ராநெஞ்

சுருகுபே ரன்பி ஞலேன் றதனையே தொடரா வொன்றி
யருகுரு வினிது போனு னங்கத னிழலி னம்மா.

இ-ள். பெருகும் ஆன் ஏகின் ஏகா - (தன்மீதில் அன்புபெருகாநின்ற) பசுவானது போகுமானுற் றானும் போயும்,—பேதுற நிற்கின் நில்லா - வருத்தமுறுதலாலே நிற்குமாயிற் றானும் நின்றும்,—முருகு நீர் ஆரின் ஆரா - வாசனைபொருந்திய நீரை உண்ணுமாயிற் றானும் அதனை உண்டும்,—துயின்றிடின் முயன்று இரா - நித்திரைசெய்யுமாயிற் றான்றுயிலாதிருந்தும்,—நெஞ்சு உருகு பேர் அன்பினல் என்று அதனையே தொடரா - மனமுருகுகின்ற பேரன்போடும் தளராது அப்பசுவையே தொடர்ந்து,—ஒன்றி அருகு உறு அங்கதன் நிழலின் இனிது போனுன் - அணைந்து அதன்பக்கத்தேபொருந்தி அதன்நிழலைப்போல இனிது சென்றான். எ-று.

ஏகா, நில்லா, ஆரா, இரா, தொடரா, ஒன்றி, உறு போனுன் என முடிபுசெய்க. துட்டமிருகங்களால் அதற்குத் தீங்குவராதபடி காத்திருந்தான் என்பார் முயன்றிரா என்றார். வசிட்டமுனிவராணையால் இவ்வாறியற்றினன் என்க. (௩சு)

அடுதிற் னிருப வேழக் குழாமடு மரியே றிந்த
நடுவனம் புகுந்த தென்றே குறையினை நவில்வான் போலப்
படுமதக் குன்றக் கோடு படும்வழி பாய்பால் சோர்க்கு
நெடுநிலைச் சரளங் கண்ணீர் சொரிந்தென நின்ற தன்றே.

இ-ள். அடு திறல் நிருப வேழக் குழாம் அடும் அரியேறு - பகைவரைக் கொல்லுகின்ற வலிமையுடைய அரசர்களாகிய யானைக்கூட்டத்தைக் கொல்லுகின்ற திலீபனுகிய சிங்கேறு,—இந்த நடுவனம் புகுந்தது என்று - இந்தக் காட்டின்நடுவே புகுந்ததென்று,—குறையினை நவில்வான் போல - தன்குறையைச் சொல்வதுபோல,—படுமதக் குன்றம் கோடு படும் வழி பாய் பால் சோர்க்கும் - உண்டான மதத்தையுடைய யானையின் கோடு பட்டவிடம் பாய்கின்ற பாலைச் சொரியும்,—நெடுநிலைச் சரளம் கண்ணீர் சொரிந்தென நின்ற - நெடிய நிலையையுடைய சரளமரங்கள் கண்ணீர்சொரிந்தாற்போல நின்றன. எ-று.

நடுவனம் பின்முன்னுகத் தொக்க ஆறும்வேற்றுமைத்தொகை. போல என்பது சொரிந்தென என்பதில் சொரிதலோடு முடிந்தது. குறை - யானைக்கோட்டான் வருந்தினமை. சரளம் - தேவதாருவுமாம். (௩எ)

ஈட்டிய தவத்தி னுனைக் கண்டுள மிரங்கா வண்டு
பாட்டியல் களிப்ப வந்தோ படர்ந்தன பரியக் கொம்பர்
நீட்டிய தளிர்க்கை கொண்டு மறைத்தலை நினைந்து கண்ணுற்
காட்டிய குறியிற் பூத்த கருவிளை கான மெல்லாம்.

இ-ள். ஈட்டிய தவத்தினனைக் கண்டு உளம் இரங்கா வண்டு பாட்டியல் களிப்ப - சம்பாதித்த தவத்தினையுடையனாகிய திலீபனைக்கண்டு மனமிரங்காது வண்டுகள் பாட்டியலைக் களிப்போடு பாட,—அந்தோ பரிய படர்ந்தன கொம்பர் நீட்டிய தளிர் கை கொண்டு மறைத்தலை நினைந்து - ஐயோ (அரசன்) வருந்தும்படி (இவ்வண்டுகள்) வந்தன (என்று) கொம்பர்கள் நெடிய தளிராகிய கையைக்கொண்டு (அவற்றை) மறைத்துவிடுதலைக் கருதி,—கண்ணால் காட்டிய குறியில் கருவிளை கானமெல்லாம் பூத்த - கண்ணால் (அக்கொம்பர்களுக்குக்) காட்டிய குறிப்பைப்போலக் கருவிளைகள் காடெங்கும் பூத்தன. எ-று.

களிப்ப பூத்த என்க; நிகழ்காலம். இனிக் களிப்பனவாய்ப் படர்ந்தன என்று காட்டிய குறியிற் பூத்த என முடிக்கினுமமையும். “பரவைக் கொம்பர்” எனவும் பாடம். பாட்டியல் களிப்ப என்பதை ஒருசொன்னீர்மையதாகக்கொண்டு பாட எனப் பொருள்கூறினுமமையும். என்று என்பது அவாய்நிலையானே வருவிக்கப்பட்டது. (ருஅ)

வளியரிற் சேர்ந்து செம்பொ னேற்றுள வறுமைப் பால
வெளியரிற் பொலிந்த வோகோங் கல்லிநெல் மணிக ளேந்திக்
களியரிச் சுருதி யோடு நிற்றலாற் கடன்செய் வேத
வளியரிற் சிறந்த வேந்தற் கம்மலர்க் காந்த ளம்மா.

இ-ள். அம் மலர்க் காந்தள் - அழகிய மலரையுடைய காந்தள்கள்,—வள்ளியர் இல் சேர்ந்து செம்பொன் ஏற்றுள வறுமைப் பால எளியரின் பொலிந்தவோ - கொடையாளர்வீட்டிற்போய்ச் சிவந்த பொன்னை யாசித்த வறுமையின்பகுதியையுடைய எளியாரைப்போலப் பொலிவுற்று நின்றனவோ,—கோங்கு அல்லி நெல்மணிகள் ஏந்தி களி அரிச் சுருதியோடு நிற்றலால் - கோங்கரும்புகளாகிய அட்சதைகளைத் தாங்கிக் களிப்பைத்தருகின்ற வண்டுகளினிசையாகிய வேதமந்திரங்களோடு நிற்றலால்,—கடன் செய் வேத அளியரின் வேந்தற்கு சிறந்த - தமக்கேற்ற கடனைச்செய்கின்ற வேதங்களையறிந்த அந்தணர்களைப்போல அரசனுக்குச் சிறந்துள்ளன. எ-று.

வேந்தற்குச் சிறந்த என்க. கடன் மந்திரத்தோடு அட்சதைகொடுத்தல். (ருக)

இழைக்கம ரிடையி னார்த மிணைமுலை முகுள மேந்தித்
தழைப்புறங் கோங்கு காட்டத் தகாதெனத் தவத்தி னாற்குப்
பிழைத்தனகோங்கென்றெண்ணிப்பிறங்கிதழ்க்கனிகடம்மைக்
குழைக்கிடை கரந்து வைத்தகுறுந்தழைக்கோவை யெல்லாம்.

இ-ள். இழைக்கு அமர் இடையினார்தம் இணை முலை முகிளம் ஏந்தி - நூலையொத்த இடையினையுடையவர்களாகிய மகளிர்களது இரண்டாகிய

முலைபோன்ற வரும்புகளைத் தாங்கி,—தழை புறம் கோங்கு காட்ட - தழைகளின்புறத்தே கோங்குகள் காட்ட,— தகாது என் அத்தவத்தினுற்கு கோங்கு பிழைத்தன என்று எண்ணி - இது தகாது என்னை அத்தவத்தை யுடையனுகிய திலீபனுக்குக் கோங்குகள் பிழைசெய்தன என்று கருதி,— குறும் தழைக் கோவையெல்லாம் - சிறிய தழைகளையுடைய கொவ்வைகளெல்லாம்,—பிறங்கு இதழ்க் கனிகள் தம்மைக் குழைக்கு இடை கரந்து வைத்த - விளங்குகின்ற அதரம்போன்ற கனிகளைக் குழைகளுக்கிடையே மறைத்துவைத்தன. எ-று.

எண்ணிக் கரந்து வைத்த என முடிக்க. தகாதென எனக் கண்ணழித்து அதனைக் கரந்துவைத்த என்பதோடு முடிப்பினுமமையும். தவம் தேனுவந்தனம். (சO)

சொற்பிழை கிளிகள் கொள்ளத் துணைச்சிறைத் தும்பி பம்பி
யற்பிழை யலங்கற் கோதை கனிகளா லமைந்து காட்டும்
பிற்பிழை களவிற் காக வெண்ணகை பெரிது காட்டு
முற்பிழை முகைய கான முல்லைமேன் முடிந்த தன்றே.

இ-ள். சொல் பிழை கிளிகள் கொள்ள - சொல்லாலாகும் பிழைகளைக் கிளிகள் அடைய,—துணைச் சிறை தும்பி பம்பி அல் பிழை அலங்கல் கோதை கனிகளால் அமைந்து காட்டும் பிற்பிழை - இரண்டாகிய சிறைகளையுடைய வண்டுகள் ஒலிக்கப்பெற்று இருளைப் பிழைபடுத்திய மாலையையணிந்த கூந்தலைத் (தன்) பழங்களால் அமைந்து காட்டுகின்ற பிற்பிழை களாமரத்திற்காக,—வெண் நகை பெரிது காட்டும் முற்பிழை - வெண்மையாகிய பற்களை மிகவும் காட்டுகின்ற முற்பிழை,—முகைய கான முல்லைமேல் முடிந்தது - அரும்புகளையுடைய காட்டிலுள்ள முல்லையின்மீது முடிந்தது. எ-று.

களா என்பது குறியதன்கீழாக்குறுகி உகரமேற்றுக் களவு என நின்றது. கிளிகள் தஞ்சொல்லாலே மகளிர்சொல்லை நினைப்பித்துத் திலீபனது விரதத்திற்குக் கேடுசெய்தலால் சொற்பிழைகிளிகள்கொள்ள என்றும், களாமரமும் முல்லையும் முறையே பழத்தானும் முகையானும் மகளிரது பிற்பக்கத்துறுப்பாகிய கூந்தலையும் முற்பக்கத்துறுப்பாகிய நகையையுங் காட்டிக் கேடுசெய்தலால், அற்பிழையலங்கற்கோதைகனிகளாலமைந்து காட்டும் - பிற்பிழைகளவிற்காகவெண்ணகைபெரிதுகாட்டும் - முற்பிழைமுகையகானமுல்லைமேன்முடிந்ததன்றே என்றுங் கூறினர். முற்பிழை - முற்பக்கத்துறுப்பைக் காட்டியதனாலாய பிழை. பிற்பிழை - பிற்பக்கத்துறுப்பைக் காட்டியதனாலாய பிழை. இவை முற்பிழை பிற்பிழை என்பனவற்றையும் தொனியாலுணர்த்தி நின்றன. (சக)

வகைத்திறற் பகையென் றென்று முணர்ந்திடா வகைநன் னேர்செய்
தகைத்திறற் குரிசில் செல்லப் பிறிதொன் று சார்வ துண்டோ

மிகைத்திற மாறொன் றின்றித் திரிந்தன விலங்குந் தம்மிற்
பகைத்திற முணரா தோர்கொம் பிருந்தன பறவை தாமும்.

இ-ள். வகை திறல் பகை என்று ஒன்றும் உணர்த்திடாவகை நல் நேர் செய் - (தன் குடைக்கீழ்வாழுயிர்கள்) பலவகையான வலியையுடைய பகை என்று (ஒன்று உளதென்று) சிறிதும் உணராதபடி நல்ல நேர்மையைச் செய்கின்ற,—தகைத் திறல் குரிசில் செல்லப் பிறிது ஒன்று சார்வது உண்டோ - தகைமைபொருந்திய வலிமையையுடை திலீபமகாராசன் செல்ல (அந்நேர்மைக்கு) வேறாயதொன்று அங்கே அடைவதுண்டோ (இன்று)—மிகைத் திறம் மாறு ஒன்று இன்றி விலங்கும் திரிந்தன - குற்றத்தின்பகுதியான பகை சிறிதுமின்றி விலங்குகளும் உலாவின,—பகைத்திறம் உணராது பறவை தாமும் ஓர் கொம்பு இருந்தன - பகையின்பகுதியை அறியாது பறவைகளும் ஒருகொம்பிலே இருந்தன. எ-று.

ஓகாரம் எதிர்மறை. நேர்மை-கோடாமை. நேர்மையையுடையனாகிய திலீபனைக் கண்டவுடனே அவனது கடவுட்டன்மையால் விலங்கும் பறவைகளும் தம்முள்ளே பகையின்றி ஒற்றுமையுடையனவாயின என்பது இதன்கருத்து. இதனால் அவன் நீதியின்மேன்மை கூறப்பட்டது. இங்ஙனமே கம்பரும், "வெள்ளமும்பறவையும்விலங்கும்வேசிய - ருள்ளமுமொருவழியோடநின்றவன்" எனக் கூறுதல் காண்க. (சஉ)

நண்ணலாற் றமியோ னுற்ற நன்னெறி யுணரா வானி [னுக்
னெண்ணலாற் பிறிது முண்டோ யிரும்பினுங் கொடிய தென்
கண்ணலாற் கருங்கண் சேந்து கடுவனங் கடத்தற் காக
வண்ணலாற் களிய தாக வந்திவந் திறுத்த தன்றே.

இ-ள். தமியோன் நண்ணலால் உற்ற நல் நெறி உணரா ஆனின் எண் அலால் - (அரசன் காட்டின்கண்ணே) தனித்தவனாக வருதலால் அவனடைந்த நல்ல விரதநெறியை அறிந்துபகரித்த பசுவின் எண்ணமேயன்றி,— இரும்பினும் கொடியது பிறிதும் உண்டோ என்னக் கண்ணலால் கரும் கண் சேந்து - இரும்பினுங்கொடியது பிறிதுமுண்டோ என்று கருதலாற் கரிய கண்கள் சிவந்து,—கடுவனம் கடத்தற்காக அண்ணலாற்கு அளியதாக அந்தி வந்து இறுத்தது - கொடிய காட்டைக் கடக்கும்பொருட்டாக அரசனுக்கு அன்புடையதாக அந்திக்காலம் வந்து சேர்ந்தது. எ-று.

நண்ணலால் என்பது உணராத என்பதன் உடன்பாட்டோடு முடிந்தது. நண்ணலால் என்பதை நண்ண எனச் செயவெனெச்சமாகத் திரித்து இவைகள் நண்ண எனினுமாம். சேந்து வந்து இறுத்தது என்க. கரும் கண் - கரிய இடம்; ஆகாயம். இது தற்குறிப்பு. (சங)

கந்தர நிமிர்த்து வீடா கதறியங் காந்து பல்கான்
முந்துற மிதித்து மூரிச் சிறையினை நாற்றி முன்பே
டுந்திய பார்ப்பி னேடு வளைத்துற வுலாய மஞ்ஞை
பந்தியிற் பொலிந்த சேக்கைப் பழுமரப் பாங்க ரெல்லாம்.

இ-ள். கந்தரம் நிமிர்த்து - கழுத்தை உயர்த்தி,— அங்காந்து வீடா கதறி - வாயைத்திறந்து இடையறுது கத்தி,—பல்கால் முந்துற மிதித்து - பலமுறை முற்பட மிதித்து,—மூரிச் சிறையினை நாற்றி - வலிய சிறையைத் தூங்கச்செய்து,—முன் பேடு உந்திய பார்ப்பினேடு வளைத்துற - முன்னே பேடு தன்னுற் செலுத்தப்பட்ட குஞ்சுகளோடு சூழ,—உலாய மஞ்ஞை - உலாவிய மயில்களானவை,—சேக்கைப் பழுமரப் பாங்கரெல்லாம் பந்தியிற் பொலிந்த - சேக்கைகளையுடைய முதிய மரங்களின் கொம்பர்களிலெல்லாம் வரிசையாகப் பொலிந்திருந்தன. எ-று.

வீடா நீட்டல்விகாரம். சேக்கை - படுக்கை. பழுமரப்பாங்கரிலுள்ள சேக்கைகளிலெல்லாம் பந்தியிற்பொலிந்த எனினுமாம். பாங்கர் ஆகுபெயர். முதன்மூன்றடியுஞ் சாதித்தொழிற்றன்மையணி. (சச)

வெயிற்றரு முருப்ப நீங்கி மேயநீர்க் குழிநின் றேறிப்
பயிற்றிளங் குருளை வீழா வெழாநெறி பையப் பைய
வயிற்றுறப் பெட்டை பாத வைப்பிற மயங்கு மேன
மெயிற்றிள நிலவு மெய்யா லெல்லியுங் காட்டு மெங்கும்.

இ-ள். வெயில் தரும் உருப்பம் நீங்கி - (நீரில் அமிழ்ந்தி) வெய்யிலாலே தரப்பட்ட வெப்பத்தினின்றும் நீங்கி,—மேய நீர்க் குழிநின்று ஏறி - பொருந்திய நீர்க்குழியினின்றும் (மேல்) ஏறி,—பயிற்று இளம் குருளை நெறி வீழா எழா பையப் பைய வயிற்று உற - (நடையைப்) பழக்கப்படுகின்ற இளங்குட்டிகள் (வழியில்) வீழ்ந்தும் எழுந்தும் பையப்பைய வயிற்றேடு வரலால்,—பெட்டை பாதவைப்பு இற - பெட்டைகள் நடை தளர,—மயங்கும் ஏனம் - (அதனல்) அறிவுமயங்குகின்ற ஆண்பன்றிகள்,—எயிற்று இளநிலவும் மெய்யால் எல்லியும் எங்கும் காட்டும் - எயிற்றினல் இளநிலாவையும் மெய்யினல் இரவையும் எவ்விடத்துங் காண்பிக்கும். எ-று.

இற மயங்கும் ஏனம் என்க. அடுக்கு மென்மையின் மிகுதி தோன்ற நின்றது. (சரு)

பற்றுற வயின்கட் டோற்று மகவையாப் பறுத்துப் பாங்க
ருற்றுற வளத்து மந்தி யுடன்சினை முசுக்க ளொன்ற
விற்றிறற் குரிசில் செல்ல வடங்கிய வினைமாச் சோக
முற்றுறக் கூறு மாபோன் முழைதொறு முழங்கு மன்னே.

இ-ள். பற்றுற வயின்கண் தோற்றும் மகவை யாப்பு அறுத்து - சட்டு தல்பொருந்த வயிற்றின்கண்ணே தோன்றுகின்ற குட்டியை அக்கட்டி னின்றும் நீக்கி,—பாங்கர் உற்றுற வளத்தும் மந்தியுடன் சினை முசுக்கள் ஒன்ற - பக்கத்திலேபொருந்த வளத்திய மந்திகளோடு கொம்பர்களிலுள்ள முசுக்கள் வந்துசேர,—வில் திறல் குரிசில் செல்ல அடங்கிய வினைமா - வில்வலிமையையுடைய திலீபன்செல்ல (அவனைக்கண்டு அஞ்சி) அடங்கிய சிங்கங்களானவை, — சோகம் முற்றுறக் கூறுமாபோல் முழைதொறும் முழங்கும் - தம் சோகத்தை (அவற்றிற்கு) முற்றக்கூறுமாறுபோல முழை கடோறும் முழங்காநிற்கும். எ-று.

சோகம் அரசனுலாகிய சோகம். முசுக்கள்வர முழங்கல் கூறுமாறு போலிருந்ததென்பதாம். வினைமா என்பதற்குக் கொலைத்தொழிலையுடைய மிருகங்கள் எனப் பொதுவாகக் கூறினுமமையும். (சசு)

காய்ந்தெறி கொடுமைத் தீயோர் தம்மினெற் கதறிக் கங்கு
லாய்ந்தறி பெரியோர் சிந்தை யமைதியி னமரும் புட்கள்
வாய்ந்தெறி குடம்பைப் பார்ப்பை நோக்குபு மகிழா மாடே
யேய்ந்துறு பேடை யோடு மிருஞ்சினை யிருந்த மாதோ.

இ-ள். காய்ந்து எறி கொடுமைத் தீயோர் தம்மின் எல் கதறி - பகைத்து உயிர்களை வதைக்கின்ற கொடுமையையுடைய தீயோர்களைப்போல (அடங்காது) பகற்காலமுழுவதும் ஆரவாரித்து,—கங்குல் ஆய்ந்து அறி பெரியோர் சிந்தை அமைதியின் அமரும் புட்கள் - இராக்காலத்தே (நூல்களை) ஆராய்ந்து (மெய்ப்பொருளை) அறிந்த பெரியோர்களுடைய மன வமைதியைப்போல அமைந்த பறவைகள்,—வாய்ந்து எறி குடம்பைப் பார்ப்பை நோக்குபு மகிழா - (தம்மைக்கண்டு களிப்பிற்) சிறந்து (தஞ்சிறை களை) அடிக்கின்ற கூட்டிலுள்ள குஞ்சுகளைப் பார்த்து (அவைகளுக்கொரு கேடின்மையான்) மகிழ்ந்து,—மாடே ஏய்ந்துறு பேடையோடும் இரும் சினை இருந்த - பக்கத்தே தமக்கியைந்த பெடைகளோடும் பெரிய கொம்பர்களிலே இருந்தன. எ-று.

புட்கள் மகிழா மாடே இருந்த என இயைக்க. மாடே ஏய்ந்துறு என்பதற்குப் பக்கத்தேபொருந்திய எனினுமாம். (சஎ)

மாணிழைக் கொடிய ஞர்தம் வடிவென வயங்கு கானிற்
சேணினிற் றங்கு மேனுந் தெய்வவான் சிந்தை யோடிப்
பேணியற் கலைதேர் வேத முனிவரன் பெரிய யாக
நீணிலைச் செல்லத் தேனு நெறியிடை மீண்ட தன்றே.

இ-ள். மாண் இழைக் கொடியனார்தம் வடிவு என வயங்கு கானில் - சிறந்த ஆபரணங்களையணிந்த பெண்களது வடிவம்போல விளங்குகின்ற காட்டிலே,—சேணினில் தங்குமேனும் - தூரத்தே நிற்குமாயினும்,—தெய்வ

வான் சிந்தை ஓடி - தெய்வத்தன்மைபொருந்திய பெரிய மனஞ் செல்லுத லால்,—பேணு இயல் கலை தேர் வேத முனிவரன் பெரிய நீள் யாக நிலைச் செல்ல - பேணும் இயல்பமைந்த நூல்களை அறிந்த வேதமுனிவராகிய வசிட்டரது பெரிய விசாலித்த யாகசாலைக்குப் போகும்படி,—தேனு நெறி யிடை மீண்டது - காமதேனு வழியினிடத்தே திரும்பியது. எ-று.

மகளிரது பல்முதலிய உறுப்புப்போன்ற முல்லைமுதலியவற்றைக் காடு உடைமையின் அவர் வடிவு காட்டிற்குவமையாயிற்று. ஓடி என்னும் செய் தெனெச்சம் ஏதுப்பொருட்டு. தங்குமேனும் ஓடலால் மீண்டது என்க. தெய்வ ஆன் எனக் கண்ணழித்து ஆன் என்பதற்குப் பசு எனப் பொருள் கூறித் தேனுவைச்சுட்டிக் கோடலுமாம். (சஅ)

மையகட் கயல்கள் வேந்தன் மேனியின் வளத்தார் சிந்துந்
துய்யநற் றேனுந் தூளுந் துவன்றிய தொய்யற் றுஞ்சக்
கொய்யலர்க் குவையு மற்றுங் கோல்வளைக் காந்த ளேந்தித்
தையன்முற் றோற்ற வேள்வித் தவவனஞ் சார்ந்த தன்றே.

இ-ள். கொய் அலர்க் குவையும் மற்றும் கோல் வளைக் காந்தள் ஏந்தி - கொய்யப்பட்ட மலர்த்திரளையும் பிறவற்றையும் திரண்ட வளையலையணிந்த காந்தள்மலர்போன்ற கையிலேந்திக்கொண்டு,—மைய கண் கயல்கள் - (தீட்டிய) மையையுடைய (தன்) கண்ணாகிய கயல்கள்,—வேந்தன் மேனி யின் வளத் தார் சிந்தும் துய்ய நல் தேனும் தூளும் துவன்றிய தொய்யல் துஞ்ச - திலீபமகாராசனுடைய மார்பிலுள்ள வளம்பொருந்திய மாலை சிந்து கின்ற சுத்தமாகிய நல்ல தேனும் தாதுமாக நிறைந்துள்ள சேற்றிலே கிடப்ப,—தையல் முன் தோன்ற - சுதக்கிணைமுன்னே தோன்ற,—வேள் வித் தவ வனம் சார்ந்தது - (காமதேனு) யாகத்தையுடைய தபோவனத்தை அடைந்தது. எ-று.

சிறிதுநேரம் பிரிந்திருந்தமையின் அப்பிரிவின் ஆற்றாமைதீர நாயக னையே நோக்கிக்கொண்டு வந்தாள் என்பார் துஞ்ச என்றார். கயலென்ற தற்கேற்பத் தொய்யற்றுஞ்ச என்றார். தையல் ஏந்தித் தோன்ற எய்தி ற்று என்க. மேனி ஆகுபெயர். (சகூ)

புலம்படப் பெரிது போற்றி மும்முறை புரிவ ருது
வலம்படச் சூழ்ந்து பூசை மாட்சியின் வழங்கி மற்றோ
யுலம்படத் திரண்ட தோளான் றன்னைய லொல்கி நின்று
டிலம்படக் கவினுந் துண்டத் தரிவையர் திலக மன்னாள்.

இ-ள். திலம்படக் கவினும் துண்டத்து அரிவையர் திலகம் அன்னாள் - எட்பூவையொக்க விளங்குகின்ற மூக்கினையுடைய பெண்களுக்குத் திலகம் போன்றவளாகிய சுதக்கிணையானவள்,—புலம்படப் பெரிது போற்றி -

மனத்தோடுபொருந்த மிகவுந் துதித்து,—புரிவு அறாது மும்முறை வலம் படச் சூழ்ந்து - அன்புநீங்காது மூன்றுமுறை வலமாகச் சூழ்ந்து,—பூசை யாட்சியின் வழங்கி - பூசையைச் சிறப்போடுஞ் செய்து,—மல் தோய் உலம் படத் திரண்ட தோளான் தன் அயல் - மற்போரமைந்த உலம்போலத் திரண்ட புயங்களையுடையனாகிய திலீபனது பக்கத்தே,—ஒல்கி நின்றாள்- ஒடுங்கி நின்றாள். எ-று.

திலம், புலம் என்பன ஆகுபெயர். மனத்தோடு பொருந்தாதவழிக் காயத்தாற் செய்யப்படுவன பயனிலவாகலின் புலம்படப்பெரிதுபோற்றி என்றார். உலம்-திரண்டகல். உலம்பட என்பதற்குத் திரண்டகல்லின் றன்மையமைய எனினுமாம். (௫௦)

தடந்தரு சுரைக ளூறித் தரிப்பில்பாற் றாரை சிந்திக்
குடந்தகு மடிபூ ரிப்ப வல்லைபோங் குளிர்பொற் றேனுக்
கடந்தனி னின்று பூசை கொண்டது நோக்கிக் கன்றாத்
திடந்தன தகத்துக் கொண்டான்றீர்க்கருஞ் சிறுமைதீர்வான்.

இ-ள். தடம் தரு சுரைகள் ஊறி - (கன்றை நினைத்தலினாலே) விசாலம் பொருந்திய முலைகள் சுரத்தலால்,—தரிப்பில் பால் தாரை சிந்தி - தங்கியிருக்கமாட்டாத பாற்றாரையைச் சிந்தி,—குடம் தகு மடி பூரிப்ப - குடம் போன்ற மடிபூரிப்ப,—வல்லை போம் குளிர் பொன் தேனு - விரைந்துசெல்லுகின்ற குளிர்ச்சியையுடைய அழகிய காமதேனு,—கடந்தனில் நின்று - தபோவன எல்லையிலே தாமதித்துநின்று,—பூசை கொண்டது நோக்கி - பூசையை ஏற்ற குறிப்பினை நோக்கி,—தீர்க்க அரும் சிறுமை தீர்வான் - நீக்குதற்கரிய சிறுமையினின்றும் நீங்குபவனாகிய திலீபன்,—கன்றாத் திடம் தனது அகத்துக் கொண்டான் - வருந்தாத (பலன் எய்துமென்னுந்) திடத்தைத் தன்மனத்திலே கொண்டான். எ-று.

சுரைகளூறி என இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்தின்மேலேற்றிக் கூறப்பட்டது. தாரை - ஒழுக்கு. கன்றாத்திடம் - உபசாரம். கன்றாது என்பது கன்றா என்றாயிற்றெனினுமாம். சிறுமை என்றது புதல்வர்ப்பேறின்மையான்வருந்தென்புலத்தார்கடனை; உபசாரம். தீர்க்க என்பதன் அகரம் தொக்கது. சிந்த என்னும் பாடத்திற்கு சிந்தும்படி எனப் பொருள்கொள்க. (௫௧)

வான்றருஞ் சுரபி யாக நிலைபுக வரத்தின் மிக்காய்த்
தோன்றிய முனிவன் பாதஞ் சென்னிமீச் சூடித் தோமில்
கோன்றன பன்னசாலை கூடிநீ ணியதி முற்றி
யான்றன தருகு சார்ந்தா னருக்கனு மத்தம் புக்கான்.

இ-ள். வான் தரும் சுரபி யாகநிலை புக - பெருமைபொருந்திய தெய்வப்பசுவானது யாகசாலையிற் புக,—தோம் இல் கோன் - குற்றமில்லாத

அரசன்,—வரத்தின் மிக்காய் தோன்றிய முனிவன்பாதம் சென்னிமீச் சூடி - வரத்தினுலே மேற்பட்டுத்தோன்றிய வசிட்டமுனிவரது பாதங்களைச் சிரசின்மீது சூடி,—தன் பன்னசாலை கூடி - அதன்பின் தன்னுடைய பன்னசாலையை அடைந்து,—நீள் நியதி முற்றி - மிக்க கடன்களைச் செய்து,—ஆன் தனது அருகு சார்ந்தான் - அப்பசுவின் பக்கத்தைச் சார்ந்தான்,—அருக்கனும் அத்தம் புக்கான் - சூரியனும் அத்தகிரியையடைந்தான். எ-று.

உம்மை இறந்தது தழீஇயது. வான்தருசுரபி என்பதற்குத் தேவருலகத்தினின்று கொண்டுவந்த பசு எனினுமாம். கடன் - நித்தியகருமம்.

மருள்சுமந் தாலோன் வைக வதனவா ணிலவு போர்ப்பச்
சுருள்சுமந்தொளிருஞ்செவ்விச் சுரும்புசூழ்தொங்கற்கோதை
யிருள்சுமந் தெரிசெஞ் சோதி விளக்கம தேந்தி நெஞ்சிற்
றெருள்சுமந் தங்க ணுற்ருள் சேயரிக் கருங்க ணுளே.

இ-ள். ஆலோன் மருள் சுமந்து வைக வதன வாள் நிலவு போர்ப்ப - சந்திரன் மயக்கத்தைக்கொண்டு வைகும்படி முகத்திலுள்ள ஒளியாகிய நிலவு மூட,—சுருள் சுமந்து ஒளிரும் செவ்விச் சுரும்பு சூழ் தொங்கல் கோதை இருள் சுமந்து - சுருண்டு விளங்குகின்ற அழகிய வண்டுகள் சூழுகின்ற மாலையையணிந்த கூந்தலாகிய இருளைத் தலையிற் சுமந்து,—எரி செம் சோதி விளக்கமது எந்தி - எரிகின்ற செவ்வொளியையுடைய தீபத்தை (க் கையிலே) எந்தி,—நெஞ்சில் தெருள் சுமந்து - மனத்திலே தெளிவைப் பொருந்தி,—சேய் அரிக் கரும் கணுள் - செவ்வரிபரந்த கரிய கண்களையுடையவளாகிய சுதக்கிணை,—அங்கண் உற்ருள் - அங்கே போயினுள். எ-று.

சுருள் - முதனிலைத்தொழிற்பெயர்; கடைகுழலுதல். இது நச்சினுர்க்கினியர் கருத்து. மருள்சுமந்து தெருள்சுமந்து என்றும், இருள்சுமந்து விளக்கேந்தி என்றும் விரோதாபாசந் தோன்றுதல் காண்க. (ருடு)

அயனகு விளக்கம் வைத்திட் டம்மலர் தூய்நின் றேத்திப்
புயனவி றடக்கை யான்றன் பாங்கரிற் பொலிந்தா ளன்னுள்
கயினிடு நறிய வாசக் கட்டலைக் கமழ்தா தீன்ற
வியனறு மலரஞ் சேக்கைத் துயின்றதவ் வின்பத் தேனு.

இ-ள். அயல் நகு விளக்கம் வைத்திட்டு - (அதன்பக்கத்தே) பிரகாசிக்கின்ற விளக்கை வைத்து,—அம் மலர் தூய் நின்று எத்தி - அழகிய பூக்களைச் சொரிந்துநின்று துதித்து,—புயல் நவில் தடக்கையான்றன் பாங்கரில் பொலிந்தாள் - மேகத்தையொத்த பெருமைபொருந்திய கையையுடையவனுகிய திலீபனது பக்கத்திலே விளங்கினுள்,—அன்னுள் கயின் இடு - அச்சுதக்கிணை கையினுலிட்டுப் பூசித்த,—நறிய வாசக் கள் தலைக் கமழ் தாது ஈன்ற இயல் நறு மலர் அம் சேக்கை - நறுமணம்பொருந்திய

தேனைத் தன்னிடத்தேகொண்ட கமழுகின்ற மகரந்தங்களைச்சொரிகின்ற பூமியிற்பொருந்திய நல்ல மலராகிய சேக்கையிலே,— அ இன்பத் தேனு துயின்றது - அந்த மகிழ்ச்சியையுடைய தேனு நித்திரைசெய்தது. எ-று.

கையின் என்பது கயின் எனப் போலியாயிற்று. கயில் எனப் பாடங் கொண்டு பிடர் எனப் பொருள்கூறினு மமையும். தலை மேலிடமுமாம். இன்பத்தேனு என்பதற்குக் காமதேனு எனினுமாம். (௩௪)

இயன்றது துயில மாடே யிருநிலத் திறைவ னின்பாற்
றுயின்றன னவனி மாதைத் தோய்ந்தன னென்னத் தோகை
முயன்றுற வூடு மாபோற் றுயின்றன ளயலே மூடப்
பயின்றிடு மெல்லி நீக்கி யுதித்தது பரிதிப் பானு.

இ-ள். இயன்று அது துயில -(அந்த மலர்ச்சேக்கையைப்) பொருந்தி அந்தக் காமதேனு நித்திரைசெய்ய,—மாடே இரு நிலத்து இறைவன் இன்பால் துயின்றனன் - அதன் பக்கத்தே பெரிய பூமியிற் றிலீபமகா ராசன் இன்பத்தோடும் நித்திரைசெய்தான்,—அவனி மாதைத் தோய்ந்த னன் என்ன முயன்று உற ஊடுமாபோல் தோகை அயல் துயின்றனள் - (தன்னாயகன் தன்னைவிட்டுப்) பூமிதேவியைப் புணர்ந்தான் என்று முய ன்று மிகவும் பிணங்கியவாறுபோலச் சுதக்கிணை அவன் பக்கத்தே நித்தி ரைசெய்தாள்,— மூடப்பயின்றிடும் எல்லி நீக்கி பரிதிப் பானு உதித்தது - (அதன்பின் உலகத்தை) மூடிய இருளை நீக்கி வட்டமாகிய சூரியன் உதித்தது. எ-று.

தோகை உவமஆகுபெயர். மலரணையிலே மகிழ்வோடு துயில்பவன் ஈண்டு வெறுநிலத்தே துயின்றான் என்பதுதோன்ற இறைவன் என்றும், தூரத்தே துயின்றமைபற்றி ஊடுமாபோற் றுயின்றனள் என்றுங் கூறினார்.

நடைத்தின மாண்பி னேகி நயனத்தி னிமையிற் காத்திட்
டுடைத்தின மொன்று போல விம்முறை யொழுகு நாளி
னிடைத்தின மொன்று மேற்கொ ளிருபஃ தாண்டுச் சென்ற
கடைத்தின மரச னன்பு காணிய கருதிற் றன்றே.

இ-ள். நடைத்து இன மாண்பின் ஏகி - ஒழுகுதலையுடையதாகிய இத் தன்மையான இயல்போடு தொடர்ந்துசென்று,—நயனத்தின் இமையிற் காத்திட்டு - கண்ணினது இமை (அக்கண்ணைக் காத்தல்) போல (த் தேனு வை) க்காத்து,—உடைத் தினம் ஒன்றுபோல இம்முறை ஒழுகுநாளின் கடை - இச்செயல்களையுடைய நாளொன்றைப்போல மேற்கூறிய முறையி னால் (மற்றைத் தினங்களிலும்) ஒழுகுகின்ற நாளிலே,—ஒன்று மேற் கொள் இருபஃது தினம் ஆண்டுச் சென்ற கடைத்தினம் - இருபத்தொரு நாள் அங்கே கழிந்த இறுதிநாளில் (எனவே இருபத்திரண்டாநாளில் என்றபடி),—அரசன் அன்பு காணிய கருதிற்று - அரசனுடைய அன்பைச் சோதிக்கும்படி (அத்தேனு) நினைத்தது. எ-று.

கண் பசுவிற்கும் இமை திலீபனுக்கு முவமை. "கண்ணினைக்காக்கி ன்றவிமையிற்காத்தனர்" என்றார் பிறரும். உடைத்தினம் என்பதற்கு நியமிக்கப்பட்டுத் தமக்குடைய நாளை எனப் பொருள்கூறலும், அகன்று சென்ற என்பதற்கு நீங்கிவந்த எனப் பொருள்கூறலும், சென்ற என் பதை முற்றாக்கிப் பொருள்கோடலும் ஒன்று. இருபத்திரண்டாநாள் தேனுவந்தனமுடியுநாளாகலின் அது கடைத்தினமென்னப்பட்டது. (௬சு)

கண்ணிய பலத்த நெஞ்சங் கருதிய முடிப்ப தாக
நுண்ணிய வறிவுப் பால வடதிசை நோக்கிப் போகா
மன்னியல் வளாகங் காப்போன் மருங்கக லாது காப்பத்
திண்ணிய விமயச் சாரல் சேர்ந்தத் தெய்வத் தேனு.

இ-ள். அத் தெய்வத் தேனு - அந்தத் தெய்வத்தன்மையையுடைய காமதேனுவானது,—மண் இயல் வளாகம் காப்போன் மருங்கு அகலாது காப்ப - பூமியிற்பொருந்திய தேசங்களைக் காப்பவனாகிய திலீபன் தன்பக் கத்தை விட்டுநீங்காது காப்ப,—கண்ணிய பலத்த நெஞ்சம் கருதிய முடிப் பதாக - கருதிய பயனையுடையதாகிய மனம்நினைத்த அப்பயனை முடிக் கும்படியாக,—நுண்ணிய அறிவின் பால வடதிசை நோக்கிப் போகா - (அறிஞர்களாகிய அருந்தவத்தர்கள் வசித்தலின்) நுட்பமான அறிவின்பகு தியையுடைய வடதிசையை நோக்கிச்சென்று,—திண்ணிய இமயச் சாரல் சேர்ந்தது - திண்ணிய இமயமலைச்சாரலை அடைந்தது. எ-று.

இடத்துளாரறிவு இடத்தின்மேலேற்றப்பட்டது. பலத்த என்பதற் குத் திடத்தையுடைய எனப் பொருள்கூறுவாருமுளர். திடம் நின்று பூசையேற்றமையால் வந்த திடம். (௬எ)

வேறு.

சேடுபோ காமலர்த் தெய்வத் தாருநீ
ளேடுபோ தாதிழி நறவி றைக்குமான்
மாடுபோ முகிலுடுத் துயர்ந்து வானுல
கூடுபோ முயர்குவட் டுச்சி யெங்குமே.

இ-ள். மாடு போம் முகில் உடுத்து - பக்கத்திலே செல்லுகின்ற முகி லாகிய ஆடையை உடுத்து,—உயர்ந்து வானுலகு ஊடுபோம் உயர்குவட்டு உச்சியெங்கும் - உயர்ந்து விண்ணுலகத்திற்கு ஊடாகப்போகிய உயர்ந்த இமயமலையின் கொடுமுடியெங்கும்,—சேடு போகா மலர்த் தெய்வத் தாரு - பெருமைநீங்காத மலர்களையுடைய தேவதருக்கள்,—நீள் ஏடு போதாது இழி நறவு இறைக்கும் - நெடிய பூவிதழ்கள் (கொள்ளுதற்கு இடம்) போ தாமையினால் இழிகின்ற தேனைச் சொரியும். எ-று.

தாரு உச்சியெங்கும் நறவை இறைக்கும் என்க. இனி உச்சியானது இழிகின்ற தேனை எங்கும் இறைக்கும் என உச்சியை இறைத்தற்கு எழு

வாயாக்கிப் பொருள்கொள்வாருமுளர். இது தொடர்புயர்புநவிற்சி என்னு மலங்காரம். (ருஅ)

ஆரணத் தவர்புக ழலரி வேந்தனும்
பூரணப் பொன்னடி தாழ்ந்து போதலாற்
றாரணிக் கிரிக்கெலாந் தலைமை கொண்டது
காரணக் குறிகொடுங் காட்டு கின்றதே.

இ-ள். ஆரணத்தவர் புகழ் அலரி வேந்தனும் - வேதியர்களாற் றுதிக்கப்படுகின்ற சூரியனாகிய இறைவனும்,—பூரணப் பொன் அடி தாழ்ந்து போதலால் - நிறைந்த பொன்மயமான அடியிற்றாழ்ந்து செல்லுதலால்,—தாரணிக் கிரிக்கெலாம் தலைமை கொண்டது - பூமியிலுள்ள மலைக்கெல்லாந் தான் தலைமையாயிருக்குமியல்பினை,—காரணக் குறிகொடும் காட்டுகின்றது - (தாழ்ந்துபோதலாகிய) காரணத்தின் குறிப்பாலும் காட்டுகின்றது. எ-று.

காரணக்குறி - ஏதுக்குறிப்பு. சூரியன் அடியிற் றாழ்ந்துபோதலால் அதன் உயர்ச்சி காணப்படலின் தலைமைகொண்டது காரணக்குறிகொடுங் காட்டுகின்றது என்றார். அடியிற்றாழ்தல் வணங்குதலையுங் குறித்தது. மலைக்குஅடி - தாழ்வரை. காரணக்குறி என்பதற்குக் காரணப்பெயர் எனப் பொருள்கூறுவாருமுளர். அது சிறப்பின்று. (ருகூ)

செழுமிய சந்திவந் தனையுங் கீழ்விழுங்
கழுமிய வருவிமுந் நூலுங் கன்முழைக்
குழுமிய சுருதியுங் கொள்ள லான்மறை
விழுமியர் நிலைமையும் விளைக்கப் பட்டதே.

இ-ள். செழுமிய சந்தி வந்தனையும் - நெருங்கிய மூங்கில்களினது தாழ்வையும் (சந்தியாவந்தனத்தையும்),—கீழ் விழும் கழுமிய அருவி முந்நூலும் - கீழேவிழுகின்ற ஒன்றோடொன்றிணைந்த அருவியாகிய பூணூலையும்,—கல் முழைக் குழுமிய சுருதியும் கொள்ளலால் - மலைமுழைஞ்சிற் கூடிய (அருவி) ஒலியையும் (வேத ஒலியையுங்) கொண்டிருத்தலால்,—மறை விழுமியர் நிலைமையும் விளைக்கப்பட்டது - மறையாளரது நிலைமையையும் செய்து பொருந்திற்று. எ-று.

விளைக்கப்பட்டது என்பதற்கு விளைத்தது எனப் பொருள்கூறினும் பொருந்தும். சந்தி - மூங்கில். அது தாழ்ந்திருத்தல் வந்தனைசெய்தல்போலிருத்தலின் வந்தனை எனப்பட்டது. "விண்டுவந்தனைசெய்தெனத்தாழ்ந்தமேனிலத்தில்" என்றார் பிறரும். இது சிலேடை அலங்காரம். (சுο)

களிப்படு புல்லரிற் கனகந் தானென
வெளிப்படு மேருவின் வெளிறு செய்யுமோ

துளிப்படு பனிபுறஞ் சூழ்ந்திப் பொன்மலை
யளிப்படு பெரியரி னமைந்து தோன்றுமே.

இ-ள். களிப்படு புல்லரின் கனகம் தான் என வெளிப்படு மேருவின்-(தம்மிடத்தொன்றுண்டாயின் அதனை எவர்க்குங் காட்டி) மனங்களிக்கின்ற கீழோரைப்போல தான் பொன் என்று வெளிப்பட்டுக் காட்டுகின்ற மேருவைப்போல (த் தானும்) வெளிற்றறிவைக் காட்டுமோ காட்டாது),—துளி படு பனி புறம் சூழ்ந்து-(தன்னைப் பிறரறியாமல்) துளி பொருந்திய பனி புறத்தே சூழப்பெற்று,—இப் பொன்மலை-இந்த (இமயமாகிய) பொன்மலை,—அளிபடு பெரியரின் அமைந்து தோன்றும்-அன்பு பொருந்திய பெரியோரைப்போல அமைவுற்றுத் தோன்றும். எ-று.

ஓகாரம்-வினவோடெதிர்மறை. அமைந்துதோற்றல் - வெளிப்படாது தோன்றல். பெரியோரும் தமது மேன்மையை வெளிப்படுத்தாது தோன்றுவாராதலிற் பெரியரினமைந்து தோன்றும் என்றார். (சுக)

நீளமா பனிகொடு புதைத்து நீடயன்
காளமா முகிலிடை சூழ்ந்துங் காக்குவான்
பாளமா பசும்பொனிப் பதலைக் கல்லவோ
வாளமா கிரிபுறம் வளைத்து வைத்ததே.

இ-ள். நீடு அயன்-மேலான பிரமா,—நீள மா பனிகொடு புதைத்தும்-நெடிதுறப் பெரிய பனியைக்கொண்டு மறைத்தும்,—காளமா முகில் இடை சூழ்ந்தும்-கரிய பெரிய முகிலா லிடையே மூடியும்,—காக்குவான்-(அவ்வளவிலமையாது இன்னும்) காக்கும்பொருட்டு,—பாள மா பசும்பொன் இப்பதலைக்கு அல்லவோ-பாளமான பெரிய பசிய பொன்மயமான இம் மலைக்காகவன்றோ,—வாள மாகிரிபுறம் வளைத்து வைத்தது-சக்கரவாளகிரியைப் புறத்தே சூழ்வித்து வைத்தது. எ-று.

பாளம்-படலம். (சுஉ)

வாரியல் பனிப்பரப் பசல மன்னனைச்
சூரியன் வெங்கதிர் தொடாது காக்குவான்
சீரிய செயற்பர ராச சேகர
வாரியன் றடம்புகழ் சூழ்ந்த தன்னதே.

இ-ள். வார் இயல் பனிப் பரப்பு-(இமயமலையை) வடியுமியல்பினையுடைய பனியின் பரப்பானது சூழ்ந்திருத்தல்,—அசல மன்னனைச் சூரியன் வெம் கதிர் தொடாது காக்குவான்-அந்த மலையரசனாகிய இமயத்தைச் சூரியனுடைய உஷ்ணகிரணந் தீண்டாது காக்கும்படி,—சீரிய செயல் பரராசசேகர ஆரியன் தடம் புகழ்-சிறந்த செயலையுடைய பரராசசேகரனாகிய ஆரியச்சக்கிரவர்த்தியின் பரந்த புகழ்,—சூழ்ந்து அன்னது-சூழ்ந்தாற்போன்றது. எ-று.

பரப்புச்சூழ்ந்திருத்தல் அன்னது என முடிக்க. சூழ்ந்திருத்தல் என்பது அவாய்நிலையானே வருவிக்கப்பட்டது. இனி இதற்கு இமயம் பொன்னுதலாலே அதனைச் சூரியன் தன் கிரணங்களாகிய கைகளாலே தொடாதபடி என்று பொருள்கூறுவாருமுளர். (சுஙு)

மாடெலா முழையின்மா மணிகள் வாள்விட
நீடலாற் பழம்பகை நினைந்த நீள்பனி
மூடலா லெழுகதிர்க் கடவுள் மொய்ம்பின்மே
லோடலா தம்முழை யொதுங்கி யொக்குமே.

இ-ள். மாடு எலாம் முழையில் மா மணிகள் வாள் விடல் நீடல் - அம்மலையின் பக்கங்களிலெல்லாம் முழைஞ்சுகளினுள்ள மாணிக்கங்கள் ஒளியைக் காலுதல்,—பழம் பகை நினைந்த நீள் பனி மூடலால் - தொன்றுதொட்டுவந்த பகையை நினைத்த மிக்க பனி மூடிக்கொள்ளுதலால்,—எழு கதிர்க்கடவுள் - உதிக்கின்ற சூரியன்,—மொய்ம்பின் மேல் ஓடலாது - வலிமையோடு மேலாக ஓடிக்கொள்ளமுடியாது,—அ முழை ஒதுங்கி ஒக்கும் - அந்த முழைகளின்கண் மறைந்திருந்தாலொக்கும். எ-று.

ஆல் அசைநிலை. மூடலால் ஓடலாது ஒதுங்கியொக்கும் என முடிக்க. இனி நீடலால் என்பதைப் பகைக்கு விசேடணமாக்கி நீட்டித்துவருதலாற் பழம்பகையை நினைந்த நீள்பனி எனப் பொருள்கூறினு மமையும். இவ்வாறு பொருள்கூறுமிடத்து ஒக்கும் என்பதற்கு விடலை எழுவாயாக்குக. (சுச)

அயர்முலைக் கனகிரி மகளி ரஞ்சன
வியர்மதர்க் கண்ணிணை விரகின் மேலவர்
மயர்படச் சூரர மகளிர் சந்தனத்
துயர்மரப் பொதும்பர்புக் கொளியி யிருப்பரால்.

இ-ள். அயர் முலைக் கன கிரி மகளிர் அஞ்சன வியர் மதர் இணை கண் விரகின் - அயர்விக்கின்ற முலைப்பாரத்தையுடைய மலையரமகளிரது மைதீட்டிய வியர்வையையுடைய மதர்த்த இரண்டுகண்களின் விரகினால்,— மேலவர் மயர்பட - தேவர்கள் மயங்க, — சூரரமகளிர் உயர் சந்தனத்து மரப் பொதும்பர் புக்கு ஒளியிருப்பர் - (அவர் படிற்றொழுக்கத்தைநோக்குமாறு) தெய்வமகளிர் உயர்ந்த சந்தனமரச்சோலையிற் புகுந்து ஒளித்திருப்பார்கள். எ-று.

இன் ஏதுப்பொருட்டு. விரகு மயக்கத்தை உண்டாக்கும் உபாயம். மலையரமகளிருடைய கட்பார்வையினாலே தந்நாயகராகிய தேவர்கள் மயங்குதலைக்கண்ட சூரரமகளிர் அவர்கள் புணர்ச்சியைக் கண்டறிதற்குச் சந்தனச் சோலையிலே மறைந்திருப்பார்கள் என்பதாம். சூரரமகளிர் தேவப்

பெண்களாதலே, "அரமகளிர் சூரரமகளிர்" என்னும் பிங்கலநிகண்டானறிக. ஒளித்திருப்பர் என்பது விகாரமாயிற்று. மயர் மயல் என்பதன் போலி. இது தொடர்புயர்வுநவிற்சியணி. (சுரு)

வெற்பகத் தணங்கினர் விரைவி னுடிய
பொற்பகப் பந்துகை யகன்று போதர
வற்பகத் தங்கவர் கொழுந ராங்கயற்
கற்பகப் பொதும்பரி னுடிக் காண்பரால்.

இ-ள். வெற்பகத்து அணங்கினர் விரைவின் ஆடிய பொற்பு அகப் பந்து - மலையரமகளிர் விரைவாக (எறிந்து) விளையாடிய அழகைத் தன்னிடத்தேகொண்ட பந்து,—கை அகன்று போதர - கையைவிட்டு விலகிப் போக,—அன்பு அகத்து அங்கவர் கொழுநர் - அன்புபொருந்திய மனத்தையுடைய அவரது நாயகர்,—ஆங்கு அயல் கற்பகப் பொதும்பரில் நாடிக் காண்பர் - அங்கே பக்கத்திலுள்ள கற்பகச்சோலையிலே தேடிக் கண்டெடுப்பர்கள். எ-று.

காண்பர் உபாசாரம். இதுவுமேலையணி. (சுசு)

இன்னெறிப் பேரெழி லியக்கர் மெல்லியர்
சென்னெறித் தாமரை யடியிற் சேதகம்
புன்னெறிப் பனித்திரள் புக்க புக்கதோர்
கன்னெறிப் பாடெலாங் கலந்து கொள்ளுமே.

இ-ள். இல் நெறிப் பேர் எழில் இயக்கர் மெல்லியர் செல் நெறித் தாமரை அடியில் சேதகம் - இல்லொழுக்கத்தையுடைய பெரிய அழகைக் கொண்ட இயக்கமகளிரது செல்லுமியல்பையுடைய தாமரைமலர்போலு மடியிலுள்ள செம்பஞ்சுக்குழம்பை,—புல் நெறிப் பனித்திரள் - மெல்லிய வியல்பையுடைய பனிக்கூட்டம்,—புக்க புக்க கல்நெறிப் பாடெலாம் - அவர்கள் புக்க புக்க கல்வழிகளினிடங்களிலெல்லாம்,—கவர்ந்து கொள்ளும் - கவர்ந்துகொள்ளும். எ-று.

பனித்திரள் சேதகத்தைக் கவர்ந்துகொள்ளும் என்க. புன்மை - மென்மை. புன்னெறிப்பனித்திரள் என்பதை நெறிப் புல் பனித்திரள் என மாற்றி, நெறியிலுள்ள புல்லிற்பொருந்திய பனித்திரள் எனப் பொருள் கோடலுமொன்று. (சுஎ)

உம்பரி னோங்குமவ் வரையி னுச்சிதோய்
விம்பவெண் மதிவயின் விளங்கு நவ்வியை
வெம்புலி நோக்குபு வெகுண்டு பாய்தர
வம்புடைப் பொதும்பரின் மறைந்து பார்க்குமே.

இ-ள். உம்பரின் ஓங்கும் அ வரையின் உச்சி தோய் - ஆகாயத்தில் உயர்ந்த அம்மலையினுச்சியிலே படிந்த,—விம்ப வெண் மதியின் விளங்கு நவ்வியை - வட்டமாகிய வெள்ளிய சந்திரனிடத்து விளங்கும் மானை,—வெம் புலி நோக்குபு - கொடிய புலி பார்த்து,—வெகுண்டு - கோபித்து,—பாய்தர - பாய்ந்துகொன்றுண்ணும்படி,—வம்பு உடைப் பொதும்பரில் மறைந்து பார்க்கும் - நறுமணத்தையுடைய சோலையிலே மறைந்து நின்று (சமையம்) பார்க்கும். எ-று.

பாய்தர உபசாரம். இது தொடர்புயர்வுநவிற்சியோடுகூடிய மயக்க வணி. (சுஅ)

நோக்கிவண் குவளைகுற் றிதணு டக்கொடு
காக்குமென் றுணருநீஇக் கரிந்த கைம்மலர்
சேக்கவொண் சம்பகம் பறிக்குஞ் செல்வியர்
நீக்குமெல் லிழைச்சுட ரெங்கு நீளுமே.

இ-ள். நோக்கி வண் குவளை குற்று - (தங்கண்களையொத்தமையை) நோக்கிக் குவளைமலர்களைப் பிடுங்கி,—இதழ் நுடக்கொடு காக்கும் மென் துணர் உறீஇக் கரிந்த கை மலர் சேக்க - அவற்றின் இதழ்கள் நுடக்கத்தோடு காக்கின்ற மெல்லிய தாதுக்கள் உறப்பெற்றுக் கறுத்த கைமலர்கள் சிவக்கும்படி,—ஒண் சண்பகம் பறிக்கும் செல்வியர் - ஒள்ளிய சண்பக மலர்களைப் பறிக்கின்ற சிறுபெண்கள்,—நீக்கும் மெல் இழைச் சுடர் எங்கும் நீளும் - கழற்றிய மெல்லிய ஆபரணஒளி எங்கும் பரக்கும். எ-று.

குற்றுக் கரிந்த, உறீஇக் கரிந்த எனத் தனித்தனி முடிக்க. கறுத்த கைம்மலர் சிவக்கும்படி பறிக்குஞ் செல்வியர் என்க. சண்பகப்பூக்களைப் பறித்தற்குத் தடையாயிருத்தலின் ஆபரணங்களைக் கழற்றிவைத்தனர் என்பார் பறிக்குஞ்செல்வியர் நீக்குமெல்லிழை என்றார். இங்ஙனமன்றிப் பொருள்கோடல் பொருந்தாது. நோக்கவண்குவளை எனவும் பாடம். இதற்கு நோக்கம்போன்ற வண்குவளை எனப் பொருள்கூறுக. (சுகூ)

பொன்னிதழ் விரிப்பன கணிகள் பொன்மணி
மின்னித ழவிழ்ப்பன பூவை வெள்ளிய
தென்னிதழ் நெகிழ்ப்பன நாகஞ் செம்மணிக்
கொன்னிதழ் குலைப்பன செயலைக் கூடலே.

இ-ள். கணிகள் பொன் இதழ் விரிப்பன - வேங்கைகள் பொன்போலும் முகையை விரிக்கும்,—பூவை பொன் மணி மின் இதழ் அவிழ்ப்பன - காயாமரங்கள் அழகிய நீலமணிபோலும் முகையை அவிழ்க்கும்,—நாகம் வெள்ளிய தென் இதழ் நெகிழ்ப்பன - புன்னைகள் வெள்ளியையொத்த அழகிய முகையை நெகிழ்க்கும் - செயலைக் கூடல் செம்மணிக் கொன் இதழ்

குலைப்பன - அசோகமரச்சோலைகள் மாணிக்கம்போன்ற பெருமைபொருந்திய முகைகளைக் குலைக்கும். எ-று.

இதழ் என்பன ஆகுபெயர். இதில் விரிப்பன முதலிய வினைகளால் வேங்கை பொன்முடிச்சுக்களை விரித்து வைத்திருக்கின்றன என்பதும், காயா நீலமணிமுடிச்சுக்களை அவிழ்த்து வைத்திருக்கின்றன என்பதும், நாகம் வெள்ளிமுடிச்சுக்களை நெகிழச்செய்து வைத்திருக்கின்றன என்பதும், அசோகு மாணிக்கமுடிச்சுக்களைக் குலைத்துவைத்திருக்கின்றன என்பதுந் தொனித்தல் காண்க. இது பின்வருநிலை என்னுமலங்காரம். (எ0)

வெருப்பிடித் தூறுரு வண்ண மிக்கவா
னுருப்பிடித் தயல்செலா வொருவன் பார்வையை
விருப்பிடித் ததனிடை விடாதிவ் வெற்பிடைத்
திருப்பிடித் தொருகணஞ் சிறைசெய் திட்டதே.

இ-ள். வெருப்பிடித்து ஊறு உருவண்ணம் மிக்க ஆன் உருப்பிடித்து - அச்சமுற்று இடையூறடையாதபடி மிக்க தேனுவின் வடிவமொன்றையேபற்றி,—அயல் செலா ஒருவன் பார்வையை - வேறொன்றிற் செல்லாத திலீபனுடைய பார்வையை,—இ வெற்பிடைத் திரு - இந்த இமயமலையினழகு,—விருப்பு இடித்து அதனிடை விடாது பிடித்து - விருப்பைக் கெடுத்து அதன்மேற் செல்லவிடாமற் பிடித்து,—ஒருகணம் சிறைசெய்திட்டது - ஒருகணப்பொழுதிற்குத் தடுத்தது. எ-று.

தேற்றேகாரம் விகாரத்தாற்றொக்கது. திரு சிறைசெய்திட்டது என்க. (எக)

ஆயபோ ததிர்திரைக் கங்கை யாற்றயன்
மேயதூ யிளம்புத லதனை மெல்லவே
நேயமே பெரிதெழக் கறித்து நெஞ்சுறப்
போயதோர் பொறையகற் புழையி னென்பவே.

இ-ள். ஆய போது - அப்போது,—அதிர் திரைக் கங்கை ஆறு அயல் மேய தூய் இளம் புதலதனை - அதிருகின்ற திரையினையுடைய கங்கையாற்றினயலிலேபொருந்திய சுத்தமாகிய இளம்புதலை,—நேயம் பெரிது எழ மெல்லக் கறித்து - அன்பு மிகவும் எழுதலால் மெல்லக் கடித்துக்கொண்டு,— ஓர் பொறையகல் புழையில் நெஞ்சுறப் போயது - ஒரு துறுகல்லையுடைய முழைஞ்சின்கண்ணே விரும்பிச் சென்றது. எ-று.

அது பகுதிப்பொருள் விகுதி. அப்பொழுது என்றது திலீபன்பார்வையைத் திருப்பிடித்துச் சிறைசெய்தபொழுது என்றபடி. (எஉ)

மதக்கரி மத்தகம் வகிர்ந்து மாறரு
திதக்கதிர் நித்தில மெடுக்கும் வாளுகிர்க்

கதக்கலிச் சீயமொன் றெழுந்து கன்றிய
விதக்கதி யொடுமதன் மெய்யிற் பாய்ந்ததே.

இ-ள். மதக் கரி மத்தகம் வகிர்ந்தும் மாறு அருது இதக் கதிர் நித்திலம் எடுக்கும் - மதத்தையுடைய யானையின் மத்தகத்தைப் பிளந்தும் பகை நீங்காது இனிய ஒளியையுடைய முத்துக்களை எடுக்கின்ற,— வாள் உகிர்க் கதக் கலிச் சீயம் ஒன்று எழுந்து - கூரிய நகத்தையும் வலிய முழக்கத்தையுமுடைய சிங்கம் ஒன்று எழும்பி,—கன்றிய விதக் கதியொடும் - கோபித்த விதம்பொருந்திய கதியோடும்,—அதன் மெய்யிற் பாய்ந்தது - அக்காமதேனுவினுடைய மேனியிலே பாய்ந்தது. எ-று.

எடுக்கும் சீயம் என முடிக்க. மத்தகத்தைப் பிளந்து நித்திலத்தை எடுக்கத்தக்க கூரிய நகங்களையுடையதென்பார் வாளுகிர்.........சீயமென்ஞர். மத்தகம் - யானையின் றலைக்கட்புடைத்தவோருறுப்பு. (எங)

கட்புலம் பிறிதுறு காவ லான்செவிக்
குட்புகுந் துளத்திடை யுருமி னென்றிடப்
பெட்புறு முடலினிற் பிரிதல் போலுயிர்
கொட்புறு படரினு குளறி வீழ்ந்ததே.

இ-ள். கட்புலம் பிறிது உறு காவலான் செவிக்கு உள் புகுந்து - தன் கட்புலமானது பிறிதிலேசென்ற அரசனுடைய செவிவழியாக உள்ளே புகுந்து,—உளத்திடை உருமின் ஒன்றிட - மனத்தின்கண் இடிபோலப் போய்ப் பொருந்தும்படி,—உயிர் பெட்பு உறும் உடலினிற் பிரிதல்போல் - உயிரானது விரும்பப்படுகின்ற உடம்பினின்றும் பிரிதற்கட்சுழற்சிபோல,—கொட்பு உறு படரின் - சுழலுகின்ற வருத்தத்தோடும்,—நா குளறி வீழ்ந்தது - நாக்குளறி விழுந்தது.

பிறிது வினைப்பெயர்; இமயமலை. படரின் ஆ குளறி வீழ்ந்தது எனக் கண்ணழிப்பினு மமையும். (எச)

துடிக்குமா நிலைகொடு சுடர்க்க ணேக்கமு
னிடிக்குமா சிலையொடு மிடங்கை முன்செல
வடிக்குமா கலைதெரி வலங்கை வான்கணை
பிடிக்குமா வாகுமேற் பின்சென் றிட்டதே.

இ-ள். துடிக்கும் மா நிலைகொடு - (அதன் குளறுதலைக்கேட்ட சமையத்திற்றிலீபன்) பதறுகின்ற பெரிய தன்மையைக்கொண்டு,—சுடர்க்கண் நோக்கமுன் - ஒளிபொருந்திய கண்ணுலே பார்க்கமுன்,—இடங்கை இடிக்கும் மா சிலையொடும் முன்செல - இடக்கையானது ஒலிக்கின்ற பெரிய வில்லோடும் முன்னேசெல்ல,—வடிக்கும் மா கலை தெரி வலங்கை - தெளிந்த பெரிய தனுர்வேதத்தை ஆராய்ந்த வலக்கையானது, — வான் கணை

பிடிக்குமா - பெரிய கணையைப் பற்றும்பொருட்டு,—வாகுமேல் பின் சென்றிட்டது - தோளின்மேலாகப் பிற்பக்கத்திற் சென்றது. எ-று.

நோக்கமுன் என்பது விரைவுதோன்ற நின்றது. கையின்பயிற்சிதோன்ற, கலையாராய்தலாகிய அரசன்றொழிலை அதன்மேலேற்றிக் கூறினர். பின் - முதுகு. (எரு)

வெற்றிசெய் தனுவொடும் விரைந்து வீறொடு
மெற்றக முன்புகுந் திடங்கை யென்செயும்
பொற்றொழிற் றூணிவாய்ப் பகழிப் புங்கமேற்
பற்றிய வக்கரம் பந்த மாயதே.

இ-ள். வெற்றிசெய் தனுவொடும் வீறொடும் விரைந்து எல் தக முன் புகுந்து இடங்கை என் செயும் - வெற்றியைத்தருகின்ற வில்லோடும் பெருமிதத்தோடும் விரைந்து விளக்கம்பொருந்த முன்னேபுகுந்து இடக்கை யாது செய்யும்,—பொன் தொழில் தூணி வாய்ப் பகழிப் புங்கமேற் பற்றிய அக்கரம் - (பின்னேசென்று) பொன்னாலாகிய தொழிலமைந்த அம்பின் குதையிற்பற்றிய அவ்வலதுகரமானது,—பந்தமாயது - பந்தமுற்றது. எ-று.

பந்தம் - அம்பிற்பற்றியபடியே அசைவுறாதுநிற்றல். பெருமிதம் சிங்கத்தை எய்து கொல்லுவேனென்ற பெருமிதம்; முதலின்குணம் சினைமேலேற்றிக் கூறப்பட்டது. இனி அழகு எனப் பொருள்கொண்டு வலங்கை கணை கோத்தற்கேற்ப விற்பிடிக்குமழகு எனினுமாம். என் என்பது பயனின்மைகுறித்து நின்றது. "கற்றதனாலாயபயனென்" என்புழிப் போல. மேற்செய்யுளை அனுவதித்து முன்புகுந்து என்றார். (எசு)

செருப்பட லின்மையிற் றிருகித் தன்னையே
யருப்பட வெழுந்தெழுந் தகத்து வெஞ்சின
நெருப்பட நின்றன னிருமித் தந்நிலை
யுருப்பட வெழுதிய வோவ மொத்தரோ.

இ-ள். செருப் படல் இன்மையின் தன்னையே திருகி - (திலீபன்) போருண்டாதலின்மையினாற் றன்னோடே முறுகி,— வெம் சின நெருப்பு அருப்பட அகத்து எழுந்து எழுந்து அட - கொடிய கோபாக்கினியானது வெளிதோன்றாமல் உள்ளே எழுந்தெழுந்து வருத்த,—நிருமித்து அ நிலை உருப் பட எழுதிய ஓவம் ஒத்து நின்றனன் - (மனத்தில் இவ்வாறு எழுத வேண்டுமென்று) நியமித்து (அவன் நின்ற) அந்நிலையான ஒரு உருவமமையும்படி எழுதிய சித்திரத்தை ஒத்து நின்றான். எ-று.

நிலை இயல்பு; என்றது இடக்கை வில்லோடு முன்சென்றபடியும், வலக்கை பின்சென்று குதையைப்பற்றிப் பந்தமுற்றபடியுமாகிய அவ்வியல்பை.

எழுதுதல் ஈண்டுத் தொழிலுறச்செய்தல் என்னும் பொருள்பட நின்றது. அந்நிலை உருப்பட எழுதிய ஓவம் என்பதற்கு அவ்விடத்தே (அவ்வாருன) உருவமமையும்படி எழுதிவைத்த ஓவம் எனினுமாம். (எஎ)

முற்பதந் தடமுக மொய்ப்ப மூரிய
பிற்பதங் கறுவிவென் பிடிப்ப வான்மிசைப்
பொற்பொடு மாறறப் பொலிந்த கோளரி
சொற்பயன் வரவெதிர் சொல்லன் மேயதே.

இ-ள். முன் பதம் தடமுகம் மொய்ப்ப - முன்காலானது விசாலமாகிய முகத்திலே நெருங்கிப் பற்றவும்,— மூரிய பின்பதம் கறுவி வென் பிடிப்ப - வலிய பின்காலான்து கறுவுதலுற்று முதுகைப் பிடிக்கவும்.—ஆன் மிசை பொற்பொடு மாறு அறப் பொலிந்த கோளரி - தேனுவின்மீது அழகோடு தனக்கு எதிரின்றிப்பொலிந்த சிங்கமானது,—சொல் பயன் வர எதிர் சொல்லல் மேயது - தான்கூறுஞ் சொற்கள் பொருட்சிறப்பமையும்படி (திலீபனுக்கு) எதிரே சொல்லத் தொடங்கிற்று. எ-று.

ஒடு உருபை ஆனுருபின் பொருளாக்கினு மமையும். சொற்பயன்வர என்பதற்கு சொல்லிற் பயனுண்டாக எனினுமாம். (எஅ)

தெவ்வடு சிலையினைத் திருகி யூன்றினை
வவ்வவான் பகழியின் வலக்கை நீட்டினை
வெவ்விய நின்வலி விறல்வி டாதுபோ
யெவ்வயி னிகழ்ந்ததை யாரை யேற்றதே.

இ-ள். தெவ் அடு சிலையினைத் திருகி யூன்றினை - பகைவரைக் கொல்லுதற்குக் காரணமாகிய வில்லை (என்னேடு) மாறுபட்டு ஊன்றினுய்,— வவ்வ வான் பகழியின் வலக்கை நீட்டினை - எடுக்கும்படி பெரிய அம்பின்கண் வலக்கையை நீட்டினுய்,—வெவ்விய நின்வலி விறல் விடாதுபோய் எவயின் நிகழ்ந்தது - கொடிய உனது வலியானது வீரத்தை நீங்காதுசென்று எவ்விடத்து நடைபெற்றது,—யாரை எற்றது - யாரை எதிர்த்தது. எ-று.

உன்வலி முன்புறத்துச் சிலையிலும் நடைபெறவில்லை, பின்புறத்து அம்பிலும் நிகழவில்லை என்பார் எவ்வயின் நிகழ்ந்ததை என்றும், தன்னை எதிர்க்கமாட்டாதுபோயிற்று என்பது போதர யாரையேற்றது என்றும் இகழ்ந்து கூறிற்று என்க. (எகூ)

எய்வதின் ருயினு மெமது மேலிடர்
செய்வதின் றுறுவலி வென்றித் தேகவோர்
தெய்வதம் பொரினுநீ டிறலெற் சேர்தர
நொய்வதன் மேனியே நோக்கி நிற்குமே.

இ-ள். எய்வது இன்று ஆயினும் - எய்தற்ரெழில் இப்பொழுது (உன க்குக்) கைகூடுமாயினும்,—எமதுமேல் இடர் செய்வது இன்று - (அவ்வம்பு) எம்மீது (வந்து) யாதொரு துன்பமுஞ் செய்யமாட்டாது,—உறுவலி வென் றித் தேக ஓர் தெய்வதம் பொரினும் - மிக்க வலியையும் வென்றியையுமு டைய தேகத்தினைக்கொண்ட ஒரு தெய்வந்தான் வந்து என்னோடு பொரு தாலும்,—நீள் திறல் என் சேர்தர நொய்வு அதன் மேனியை நோக்கிநிற் கும் - அதனது மிக்க வலி என்னை அடைய மெலிவு அதன் தேகத்தை அடையும். எ-று.

நோக்கி நிற்கும் எனவே அடையும் என்பது தாற்பரியமாயிற்று. முன் பலரை வென்ற வலியுடைத்தாயினும் என்பார் உறுவலிவென்றித்தே கம் என்றார். வலியாலடைந்தவென்றி எனினுமாம். (௮௦)

மேக்குயர் பாதவம் வேரி னோடிறத்
தாக்குகாற் பெருவலி சையத் தாகுமோ
காக்குமிவ் வானின்மேற் கரந்த சிந்தையை
நீக்குதி பெயருதி நெறியி னீங்கியே.

இ-ள். மேக்கு உயர் பாதவம் வேரினோடு இறத் தாக்கு காற் பெரு வலி சையத்து ஆகுமோ - மேலே உயர்ந்த மரத்தை முதலோடுங் கெடும்படி தாக்குகின்ற காற்றினது பெரிய வலிமை மலைக்கட் சென்றெய்துமோ? (எய்தாது ஆதலால்),—காக்கும் இ ஆனின்மேல் கரந்த சிந்தையை நீக்குதி நெறியின் நீங்கிப் பெயருதி - நின்னாற் காக்கப்படுகின்ற இப்பசுவின்மீது பதிந்து மறைந்த நினைவை நீக்கி நின்றவவொழுக்கத்தினின்றும் நீங்கிப் பெயர்ந்து (நின்னூர்க்குப்) போகுதி. எ-று.

ஓகாரம் எதிர்மறை. சிந்தை ஆகுபெயர். காற்றின்வலி மரத்திலன்றி மலையிற் செல்லாமைபோல உன்வலி மெலியாரிடத்தன்றி வலியேனாகிய என்மாட்டுச் செல்லாது என்பதுதோன்ற நின்றமையின் முன்னிரண்டடி யும் பிறிதுமொழிதலென்னுமலங்காரம். (௮க)

செய்யன நெறியுளாய் தெரிக்கி னென்னை நீ
வெய்யவன் கொடுந்தொழில் விலங்கென் றெண்ணலை
நொய்யன புன்ருெழி னூற்கி லாநெறித்
துய்யன கணத்தினிற் றோன்றி னேனரோ.

இ-ள். செய்யன நெறியுளாய் - செம்மையான நெறிபொருந்திய அர சனே!—என்னைத் தெரிக்கின் - என்னை உனக்குத் தெரிவிக்கின்,—வெய்ய வன் கொடுந் தொழில் விலங்கு என்று எண்ணலை - நீ என்னை வெவ்விய வலிய கொடுந்தொழிலையுடைய விலங்கு என்று நினையாதே,—நொய்யன புன் தொழில் நூற்கிலா - அற்பமாகிய இழிதொழிலைச் செய்யாத,—நெறி துய்யன - ஒழுக்கத்தாற் றூய்மையான,—கணத்தினில் தோன்றினேன் - பூதங்களுள்ளே பிறந்துள்ளேனென்றெண்ணுக. எ-று.

செய்யன நெறி - கோடாநெறி. கொடுந்தொழிலை இழிந்ததென்றெண்ணுதல் நல்லொழுக்கமுடையார்கண்ணதாகலின் செய்யன நெறியுளாய் என்றும், இப்பசுவைக் கோறலாகிய கொடுந்தொழிலை இயற்றுதலால் விலங்கென்றெண்ணற்க என்பது தோன்றப் புன்றொழிஞற்கிலா......... கணத்தினிற்றேன்றினேனென்றுங் கூறிற்று. என்னை என்பது சிங்கநோக்குப்போலத் தாப்பிசையாய் நின்றது. என்று எண்ணுக என்பன அவாய்நிலையானே வருவிக்கப்பட்டன. (அஉ)

அலைப்படு கருணையென் றாதை யேவட
கலைப்படு பொருளெலா முணர்ந்து காஞ்சன
மலைப்படு சிலையினன் வழங்கு பேரரு
ணிலைப்படு குரிசில்பேர் நிரும்ப னென்பவே.

இ-ள். அலைப்படு கருணை என் தாதை - கடல்போன்ற கருணையையுடைய என்றந்தையானவன்,—வடகலைப்படு பொருளெலாம் உணர்ந்து - வடநூலிலேயுள்ள பொருள்களெல்லாவற்றையுங் கற்றுணர்ந்து,—காஞ்சன மலை படு சிலையினன் வழங்கு பேரருள் நிலைப்படு குரிசில் - மகாமேருமலைபாகப் பொருந்திய வில்லையுடைய சிவபிரான்கொடுத்த பேரருளிலே நிலைத்த தலைவன்,—பேர் நிரும்பன் என்ப - அவர்பேர் நிரும்பன் என்பர். எ-று.

அலை-ஆகுபெயர். உணர்ந்து நிலைப்படுகுரிசில் என இயையும். என்ப என்றான்; பெரியோர் பெயர் கூறலாகாமை கருதி. (அங)

திருத்துவெண் புகழுல கெங்குஞ் சேண்பட
விருத்துகும் போதர னென்னும் பேரினேன்
மருத்துவன் முதலினோர் வணங்கு மன்றுறை
நிருத்தன தேவலே நிலைமை யின்னதே.

இ-ள். திருத்து வெண் புகழ் உலகு எங்கும் சேண்பட இருத்து கும்போதரன் என்னும் பேரினேன் - திருத்தமாகிய வெள்ளிய புகழை உலகமெங்கும் பரக்கும்படிவைத்த கும்போதரனென்னும் பெயரையுடையேன்,—மருத்துவன் முதலினோர் வணங்கும் மன்று உறை நிருத்தனது ஏவல் - இந்திரன்முதலாகிய தேவர்கள் வணங்குகின்ற கனகசபையிற்பொருந்திய நடராசமூர்த்தியின் ஏவலாளன்,—நிலைமை இன்னது - எனது நிலைமை இத்தன்மைத்து. எ-று.

திருத்து வலித்தல்விகாரம். நிருத்தனுடைய ஏவலாலேயே இந்நிலையானது என்று நான்காமடிக்குப் பொருள்கூறுதல் சிறப்பின்று. ஏகாரங்களுள் முன்னையது பிரிநிலை; பின்னையது அசைநிலை. (அச)

வெவ்வுரு வாகிய வேழக் கன்றியு
நொவ்வுரு வாகுமெவ் வுயிர்க்கு நொய்துளம்

வவ்வுரு வழித்திடும் வலிய சிங்கமா
மிவ்வுரு வெடுத்தமை யியம்பக் கேட்டியால்.

இ-ள். வெம் உரு ஆகிய வேழக்கு அன்றியும் - (கண்டார் அஞ்சும்) கொடிய வடிவத்தையுடைய யானைக்கேயல்லாமலும்,—நோ உரு ஆகும் எ உயிர்க்கும் - துன்பத்தைத்தரும் வடிவத்தையுடைய எவ்வகைப்பட்ட உயிர்களுக்கும்,—நொய்து உளம் வவ்வு உரு அழித்திடும் வலிய சிங்கமாம் இ உரு எடுத்தமை இயம்பக் கேட்டி - விரைவில் மனத்தைக் கவருகின்ற அச்சத்தைக் கொடுக்கின்ற வலிய சிங்கமாகிய இந்த வடிவை எடுத்தவாற்றையும் (யான்) சொல்லக் கேட்குதி. எ-று.

வேழக்கு என்புழி அத்தும் இன்னுமாகிய சாரியைகள் விகாரத்தாற் றொக்கன. நோவ்வுருவாகுமெவ்வுயிரும் என்றது புலி முதலியவற்றை.

உரியவா மகவினின் முண்டத் துற்றகண்
ணெரியினு னுடொறு மெண்ணப் பட்டது
கரியமா றுயின்றுள தருவின் காட்சிய
தரியநான் முகன்றரு தருவி னுன்றது.

இ-ள். முண்டத்து உற்ற கண் எரியினன் உரிய ஆம் மகவினின் நாடொறும் எண்ணப் பட்டது - நெற்றியிற்பொருந்திய அக்கினிக்கண்ணை யுடையராகிய சிவபிரானுல் தமக்குரிய மகவைப்போல எப்பொழுதும் நினைக்கப்பட்டது,—கரிய மால் துயின்றுள தருவின் காட்சியது - (அதுவுமன்றிக்) கரிய வடிவத்தையுடைய விஷ்ணுமூர்த்தி நித்திரைசெய்கின்ற ஆலமரம்போலும் தோற்றத்தையுடையது,— அரிய நான்முகன் தரு தருவின் ஆன்றது - அரியதான பிரமாவினுற் றரப்பட்ட கற்பகதருவினு மகன்றுள்ளது. எ-று.

வருஞ்செய்யுளு மிதுவு மொருதொடர். கண்ணெரியினன் என்பதை எரிக்கண்ணினன் என விகுதிபிரித்துக் கூட்டுக. மக - குமரன். (அசு)

மணிக்கவி னுமையவள் கொங்கை மாமய
வணிக்குடத் தமுதமே யருத்த வார்ந்தது
கணிப்பருந் தேவராற் காண்டற் கொத்தது
தணிப்பில்சீ ருடையதித் தேவ தாருவே.

இ-ள். மணிக் கவின் உமையவள் கொங்கை மாமய அணிக் குடத்து அமுதம் அருத்த ஆர்ந்தது - மரகதமணிபோலும் அழகையுடைய உமாதேவியார் தனது முலையினது பெரிய மயமாகிய குடத்தினுலே நீரையூட்ட உண்டு வளர்ந்தது,—கணிப்பு அரும் தேவரால் காண்டற்கு ஒத்தது - அளவில்லாத தேவர்களால் நன்குமதித்து நோக்குதற்கேற்றது,—தணிப்பு இல் சீர் உடையது - குறைவில்லாத சிறப்பையுடையது,—இத் தேவதாரு - இத் தேவதாருவிருக்கம். எ-று.

முலையாகிய குடத்தாலே பாலை ஊட்ட உண்டது எனவு மொருபொருள்தோன்ற நின்றது. இப்பொருட்கு அமுதம் பால். சீர் என்றது அதன் சோபை, பொன்னிறம், பரிமளம் முதலியவற்றை. (அஎ)

புன்றொழிற் புலியொடு பொருத போர்மதக்
குன்றுரிஞ் சலினிது வடுவிற் கூடலாற்
கன்றினள் கண்ணுதற் கடவுள் பாகமே
யொன்றியெவ் வுலகமு முதவுங் கன்னியே.

இ-ள். இது - (இவ்வாறுன அருமை பெருமைகளையுடைய) இந்தத் தேவதாருவானது,—புன் தொழில் புலியொடு பொருத போர் மதக்குன்று உரிஞ்சலின் - (கொலையாகிய) இழிதொழிலையுடைய புலியோடு செய்த போரையுடைய யானை உரிஞ்சுதலினுலே,—வடுவில் கூடலால் - வடுவோடு பொருந்திற்று; அதனுல்,—கண்ணுதற் கடவுள் பாகம் ஒன்றி எவ்வுலகமும் உதவும் கன்னி - சிவபெருமானுடைய ஒரு கூற்றிலேபொருந்தி எல்லா வுலகத்தையும் ஈன்ற உமாதேவியார்,—கன்றினள் - வருத்தமுற்ருர். எ-று.

கூடலாற் கன்றினள் என இயையும். உம்மை முற்று. (அஅ)

எம்பரம் பொருளுமை யின்ன னீக்குவான்
கும்பவன் வயினவென் றென்னைக் கூவுறு
வும்பல்வெம் பகையதா வுருக்கொ ணீயென
நம்பன்முன் சிங்கமாய் நடந்திட் டேனரோ.

இ-ள். எம் பரம் பொருள் - எம்முடைய பரம்பொருளாகிய சிவபெருமான்,—உமை இன்னல் நீக்குவான் - உமாதேவியாருடைய (அத்) துன்பத்தை நீக்கும்படி,—வன் கும்ப வயின என்று என்னைக் கூவுறு - வலிய கும்போதரனே என்று என்னை அழைத்து,—நீ உம்பல் வெம்பகையதாய் உருக்கொள் என - நீ சிங்கமாக வடிவுகொள்ளுதி என்று கூற, — நம்பன் முன் சிங்கமாய் நடந்திட்டேன் - நான் அவர்முன்னே அதன்வடிவமாய்ச் சென்றேன். எ-று.

வன்மை வயிற்றிற்கடை. நீக்குவான் கூவுறு என இயையும். பரம் - சிரேட்டமானது. (அகூ)

அவ்வயி னிதனைநீ யடைந்து காவென
வெவ்வயி னுணவென வேண்ட நிற்கெதிர்
கவ்வையி னுயிரெலா மென்னக் கைதொழா
விவ்வயின் வைகின னெண்ணில் காலமே.

இ-ள். அ வயின் இதனை நீ அடைந்து கா என - அவ்விடத்தே இத் தேவதாருவையடைந்து நீ காக்குதியென்று (சிவபிரானென்னைநோக்கி)

ஆஞ்ஞாபிக்க (அதுகேட்ட யான்),—எ வயின் உணவு என - (எனக்கு) எவ்விடத்தில் உணவு (கிடைக்கும்) என்று வினவ,—நிற்கு எதிர் கவ்வையின் உயிரெலாம் என்ன - (அதற்கு அவர்) உனக்கு எதிர்ப்படுகின்ற கொள்கையையுடைய உயிர்களெல்லாம் (உணவாகும்) என்று கூற,—கைதொழா - (நன்றென்று) கைகூப்பி வணங்கி, — எண்ணில் காலம் - அளவில்லாத காலமாக, — இ வயின் வைகினேன் - இங்கே (உணவுக்கு யாதாயினுமொரு பிராணியும் வாராதோ என்று) இருந்தேன். எ-று.

தேவதாரு சிங்கத்தின்முன்னேநிற்றலின் இது எனச் சுட்டிக்கூறிற்று.

மன்றுகா ணடன்மொழி வழங்கு மன்றுதொட்
டின்றுகா றும்பெரும் பசியி னெய்தினே
னென்றுகா வதமுயி ருருவிக் கானிது
நன்றுகா விதியினர் நடத்த வந்ததே.

இ-ள். ஒன்று காவதம் உயிர் உறு இக்கான் - ஒருகாததூரம்வரையில் உயிர்கள் (எனக்கஞ்சி) வராத இக்காட்டிலே,—மன்று காண் நடன் மொழி வழங்கும் அன்றுதொட்டு இன்றுகாறும் - கனகசபையிலே காணப்படும் திருநடனத்தையுடையவராகிய சிவபிரான் சொன்ன அற்றைநாட்டொடங்கி இன்றுவரைக்கும் (இதனைக் காவல்செய்துகொண்டு),—பெரும் பசியின் எய்தினேன் - பெரும்பசியோடிருந்தேன்,—இது நன்று உகா விதியினர் நடத்த வந்தது - இப்பசுவானது நன்மையை நீக்கி விதிசெலுத்த (எனக்கு உணவாக) வந்தகப்பட்டது. எ-று.

காணல் செய்தலுமாம். உகா என்பதனை இறுதிதொக்க பெயரெச்சமாக்கி, சிங்கந் தன்னூழைப் புகழ்ந்துரைத்ததாகக் கோடலுமாம். (கக)

இமநெடுங் கதிரெனு மமுத மின்புறத்
தமநடந் தயிலவெத் தினமுஞ் சாருமோ
நமனடும் பதத்தி னவின்ற வாய்மையும்
சமனுமிவ் வானுயிர்த் தலையி னின்றவே.

இ-ள். இமநெடுங்கதிரெனும் அமுதம் - சந்திரனாகிய அமுதம்,—தமம் நடந்து இன்பு உற அயில - இராகுசென்று இன்பம் மிகும்படி உண்ணுதற்கு,—எத்தினமும் சாருமோ - எப்பொழுதும் கிடைக்குமோ (கிடையாது என்றபடி),—நமன் அடும் பதத்தினன் நவின்ற வாய்மையும் - இயமனை (உதைத்துக்) கொன்ற பாதத்தினையுடைய சிவபெருமான் கூறிய வார்த்தையும்,—சமனும் இ ஆன் உயிர்த்தலையில் நின்ற - இயமனும் இப்பசுவின் உயிரிடத்திலே நின்றன. எ-று.

ஓகாரம் எதிர்மறை. வாய்மை எதிர்ப்பட்ட உயிர் உனக்கு உணவு என்றது. இப்பசுவாகிய உணவு பசியோடிருந்த எனக்கு எப்பொழுதுங்

கிடையாது என்பதுதோன்றநின்றமையின் முன்னைய இரண்டடியும் பிறிதுமொழிதலென்னு மலங்காரம். வாய்மை சமன் என்னு மிருதிணைச் சொல்லுங் கலந்தெண்ணப்பட்டு இழிவினால் அஃறிணைமுடிபேற்றன. "பலவயினானு மெண்ணுத்திணை விரவுப்பெய ரஃறிணைமுடிபின செய்யுளுள் ளே" என்பது சூத்திரம். (கூஉ)

உருப்பமீக் கொண்டிட வுதரத் தூறுசெய்
நெருப்பையிங் கிதன்புலா னீரி னான்மிகும்
விருப்புற வவித்தலே யன்றி வேறிலேன்
றிருப்புதி கருத்தினைத் தெளியுஞ் சிந்தையாய்.

இ-ள். உருப்பம் மீக்கொண்டிட உதரத்து ஊறுசெய் நெருப்பை - வெப்பம் மேற்பட வயிற்றிலேயிருந்து வருத்துகின்ற நெருப்பை,—இங் கிதன் புலானீரினால் - இதனுடைய புலானீரினாலே,—மிகும் விருப்பு உற அவித்தலே அன்றி - மிக்க விருப்பம்பொருந்தத் தணித்தலேயன்றி,—வேறு இலேன் - வேறு கருத்துடையேனல்லேன்; ஆதலால்,—தெளியும் சிந்தையாய் - ஆராய்ந்துணரவல்ல மனத்தையுடையாய்,—கருத்தினைத் திருப்புதி - (ஆனின்மீதுவைத்த நின்) கருத்தை (இனித்) திருப்புதி. எ-று.

உதரத்தூறுசெய்நெருப்பு - உதராக்கினி. நெருப்பைத் தணிப்பது நீரா தலின் புலானீரினால் என்றார். புலானீர் - இரத்தம். ஊறு - உபசாரம். செய்யத்தக்கது இது செய்யத்தகாதது இது என்று ஆராய்ந்துணரவல்ல மனமுடையாய் என்பது போதரத் தெளியுஞ்சிந்தையாய் என்றும், அவ்வா றான சிந்தையையுடைய நீ யான் இதுகாறும் கூறியவற்றாற் பசுவை உண் ணுதலாகியஇது செய்யத்தக்கது என்பதை நன்கு உணர்ந்திருப்பாய் ஆத லால் இதன்மீதுவைத்த உன்மனத்தைத் திருப்புதி என்பதுபோதரத் திருப் புதிகருத்தினை என்றுங் கூறிற்று. (கூரு)

காப்புள படையினாற் காப்ப தாம்பொருள்
காப்பவன் முயலவுங் கைய கன்றதேற்
காப்பறு மதுசகங் கரிய தாகவே
காப்பவன் புகழினைக் களைவ தில்லையே.

இ-ள். காப்பு உள படையினால் காப்பது ஆம் பொருள் - காத்தலையு டைய படையினாற் காக்கப்படுவதாகிய பொருள்,—காப்பவன் முயலவும் கையகன்றதேல் - காப்போன் முயலாநிற்கவும் (அம்முயற்சி பயனின்மை யாம்வகை) கைகடந்ததேயாயின், — காப்பு அறும் அது - காக்கமுடியாத அது,—சகம் கரியதாக - உலகஞ் சான்றாக,—காப்பவன் புகழினைக் களைவது இல்லை - அவன் புகழைக் கெடுத்தலில்லை. எ-று.

உம்மை சிறப்பு. முயற்றின்மை பற்றியல்லது பயனெய்தாமைபற்றி உலகம் பழியாதென்னுங் கருத்தாற் சகங்கரியதாகவே எனக் கூறிற்று.

"பொறியின்மையார்க்கும்பழியன் றறிவறிந்—தாள்வினையின்மைபழி" என்ரூர் பிறரும். (கூச)

ஆதலா னின்பெரு வலியு மாற்றலிற்
பேதியா காப்பினிற் பிழையு மில்லையால்
வாதியா மனத்தினை வருத்தி டாதுணர்
நீதியாய் சேறெனை வறைந்து நின்றதே.

இ-ள். ஆதலால் - ஆதலினால்,—நின் பெருவலியும் - உன்னுடைய பெரிய வலிமையும்,—ஆற்றலில் பேதியா - செய்கையினாற் பேதமடையாது,—காப்பினில் பிழையும் இல்லை - உன்னுடைய காவலின்கண்ணுங் குற்றமில்லை,—வாதியா மனத்தினை வருத்திடாது - வாதஞ்செய்து மனத்தைவருத்தாமல்,—உணர் நீதியாய் சேறு என அறைந்து நின்றது - அறிந்த நீதியையுடையாய் செல்லுதி என்று சொல்லி நின்றது. எ-று.

ஆல் அசைநிலை. உம்மைகளுள் முன்னையது சிறப்பு; பின்னையது எச்சம். உணர்நீதியாய் என்பது "கழிந்தபற்றுடை" என்பதுபோல நின்றது. உணர் என்பதை முற்ருக்கிப் பொருள்கோடலுமொன்று. (கூரு)

வேறு.

அனைய சொற்றிறங் கேட்டுள வற்புத வரச
னினைய யிர்க்கிடை கரந்துநின் றியாவையு மியற்று
முனைவ னிற்றரு செயலிதென் றுணர்ந்தபின் முன்னே
தனைவ ருத்திய சிந்தையைச் சிறிதினிற் றவிர்ந்தான்.

இ-ள். அனைய சொல் திறம் கேட்டுள அற்புத அரசன் - அவ்வாருகிய (சிங்கத்தினது) சொற்றிறங்களைக்கேட்ட அதிசயத்தையுடைய திலீபமகாராசன்,—இது - இச்சம்பவம்,—இனை உயிர்க்கு இடை கரந்துநின்று யாவையும் இயற்றும் முனிவனின் தருசெயல் என்று உணர்ந்தபின் - வருந்துகின்ற ஆன்மாக்களினுள்ளே மறைந்துநின்று எல்லாவற்றையுஞ் செய்கின்ற சிவபெருமானலே தரப்பட்ட செயல் என்று உணர்ந்தபின்பு,— முன்னே தனைவருத்திய சிந்தையைச் சிறிதினில் தவிர்ந்தான் - முன்னே தன்னை வருத்திய மனத்திலுள்ள அபிமானத்தைச் சிறிதாக நீங்கினுன். எ-று.

சிந்தை - ஆகுபெயர். இது கடவுளுடைய செயலென்று உணர்ந்தபின்பு தன்னைவருத்திய க்ஷத்திரியாபிமானத்தைச் சிறிது தவிர்ந்தான் என்பார் முனைவனிற்றருசெயலிதென் றுணர்ந்தபின்முன்னே - தனைவருத்தியசிந்தையைச்சிறிதினிற்றவிர்ந்தான் என்ருர். முன்என்றது பந்தனையுற்றகாலத்தை.

மிகுதற் கொத்துள வலிதடைப் பட்டுளேன் விளம்ப
னகுதற் கொத்துள தேனுநீ சிந்தையு ணயத்தாற்
புகுதற் கொத்துள வறிவுளை யாதலிற் புகல்கே
னுகுதப் பில்லதோ ருரையினை யெனவிலை துரைக்கும்.

இ-ள். மிகுதற்கு ஒத்து உள வலி தடைப் பட்டுளேன் விளம்பல் நகுத ற்கு ஒத்து உளதேனும் - (பகையிடத்தே) மேற்படுதற்கியைந்த வலிமையா னது (இப்பொழுது செல்லாது) தடைப்பட்டுள்ளேனாகிய யான் உன்னோடு வாதஞ்செய்தல் சிரிக்கத்தக்கதேயாயினும், —நீ நயத்தால் சிந்தையுள் புகு தற்கு ஒத்துள அறிவுளை ஆதலில் - நீ நன்மையையுடையனவாதலால் என் னுடையசொற்கள் மனத்தினுள்ளே புகுதற்கேற்ற அறிவுடையை; ஆத லால்,—உகு தப்பு இல்லது ஓர் உரையினைப் புகல்கேன் என இஃது உரைக்கும் - நீக்கப்படுகின்ற வழுவில்லாத ஒரு வார்த்தையைச் சொல்லு கின்றேனென்று சொல்லிப் பின் இதனைச் சொல்லுவான். எ-று.

வலியிலார்கூற்றை இகழ்ந்துரைப்பது அறிவிலார்செயலன்றி நின்னை யொத்த அறிவுடையார் செயலன்றென்பான் சிந்தையுட்புகுதற்கொத்துள வறிவுளை என்றும், தான் கூறுவன நீதியுடையன என்பதும், வழுவில்லன என்பதுந்தோன்ற நயத்தால் என்றும், தப்பில்லது என்றுங் கூறினான். ()

வானை விட்டிடா மகேசன தாணையும் வழுவா
கானை விட்டிடாத் தவத்தினன் யாகமுங் கலையா
வானை விட்டென துடலையே யருந்துதி யென்றான்
றேனை விட்டடி கழுவுதா ருரத்தடந் திறலோன்.

இ-ள். தேனை விட்டு அடி கழுவு தார் உரத் தடம் திறலோன் - தேனை ஒழுகவிட்டுப் பாதங்களைக் கழுவுகின்ற மாலையையணிந்த மார்பி னையும் மிக்க வலியையுமுடைய திலீபன்,—ஆனை விட்டு எனது உடலையே அருந்துதி - (சிங்கத்தைநோக்கி) நீ இப்பசுவைவிடுத்து எனதுடம்பையே யுண்டு பசிதீர்குதி,—வானை விட்டிடா மகேசனது ஆணையும் வழுவா - (நீ அங்ஙனஞ்செய்தாற்) பெருமைநீங்காத சிவபெருமானுடைய ஆணையும் வழுவாது,—கானை விட்டிடாத் தவத்தினன் யாகமும் கலையா - வனத்தில் வசிக்கின்ற தவத்தினையுடைய வசிட்டமுனிவரது யாகமுங் கெடாது,— என்றான் - என்றுகூறினான். எ-று.

ஏகாரம் பிரிநிலை. அருந்துதி உபசாரவழக்கு. மகேசனதாணை பசு வின்மேற்றன்றி "எதிர்ப்பட்டவுயிரையுண்" எனப் பொதுமையினிற்றலால் என்னை யுண்டற்கட்படுமிழுக்கில்லையென்பதுதோன்ற வழுவா என்றும், பசுவையுண்டாற் பாலின்றி யாகம் அழியும்; என்னையுண்டால் அங்ஙனமா காது என்பான் யாகமுங்கலையா என்றுங் கூறினான். வழுவாது, கலை யாது என்பவைகள் ஈறுகெட்டுநின்றன. (கூஅ)

வெயிற்கு டைந்துகந் தரத்துறை கருவரி வெளிய
வெயிற்றெ ழும்புது நிலவினு லிரிதர நகையா
வியற்செ ழுங்கலை நுண்ணறி வின்னதோ வென்னுக்
கயிற்பெ ருங்கதிர்ப் பூணினற் கடலரி கழறும்.

இ-ள். வெயிற்கு உடைந்து கந்தரத்து உறை கருவரி - சூரியகிரணத்தாலுடைந்துபோய் மலைக்குகையுள்ளே (மறைந்து) உறைந்த இருளானது,— வெளிய எயிறு எழும் புது நிலவினால் இரிதர - வெண்மையாகிய பல்லிலிருந்து எழுகின்ற புதிய நிலவினாலே ஓடும்படி,— நகையா - சிரித்து,— இயல் செழும் கலை நுண் அறிவு இன்னதோ என்னு - இலக்கணமமைந்த செழுமையாகிய நூல்களிலே சென்ற (உனது) நுண்ணிய அறிவு இதுதானோ என்று இகழ்ந்து, — அடல் அரி - வலிமைபொருந்திய சிங்கமானது,—கயில் பெருங் கதிர்ப் பூணினாற்குக் கழறும் - மூட்டுவாயையும் பேரொளியையுங்கொண்ட ஆபரணத்தையணிந்தவனாகிய திலீபனுக்குப் பின்னுஞ் சொல்லும். எ-று.

வெயிற்கு என்பது வேற்றுமைமயக்கம். வெயிலாலுடைந்த இருள் நிலவினால் இரிதர என்பது முரண். நூல்களின்நுண்மை அறிவின்மேலேற்றப்பட்டது. " நுண்மாணுழைபுலமில்லான் " என்புழிப்போல. கயில் - அணிகளின்கடைப்புணர்வு. வினாவோகாரம் இகழ்ச்சிதோன்ற நின்றது. (கூகூ)

கந்த வேணிக ரிளமையு நறுமலர்க் கணைக்கை
யந்த வேள்பர வழகுமுற் றுடையை நீடயனர்
தந்த பாருல களிப்பதை நீத்திவண் டந்த
சிந்தை யேதுகொ னீகொலோ கற்றறி சிறியோன்.

இ-ள். கந்தவேள் நிகர் இளமையும் - கந்தசுவாமியை ஒத்த இளமையையும்,—நறு மலர்க் கணைக் கை அந்த வேள் பரவு அழகும் - நறுமணம் பொருந்திய புட்பபாணங்களைத் தரித்த கையையுடைய அந்த மன்மதனும் துதிக்கும் அழகையும்,—உற்று உடையை - பொருந்தியுடையை,—நீடு அயனர் தந்த பார் உலகு அளிப்பதை நீத்து - பெருமைபொருந்திய பிரமதேவராற்றரப்பட்ட நிலவுலகத்தைப் பரிபாலிப்பதைவிட்டு,—இவண் தந்த சிந்தை ஏது - எனக்கு (உணவாக உன்னைத்) த் தரத் துணிந்த புத்தி எத்தன்மையுடையது?—கற்று அறி சிறியோன் நீகொல் - (செய்வன தவிர்வனவற்றை) படித்தறிதலிலே மூடனாயினோன் நீதானோ. எ-று.

முதனூலிலே "விசாரமூடஃ" எனக் கூறப்படுதலின் கற்றறிசிறியோன் என்பதற்கு இவ்வாது பொருள்கொண்டாம். கற்றறிசிறியோன் என்பதற்குக் கற்றறிந்தமூடன் எனப் பொருள்கொண்டு நூல்களைக் கற்றறிந்தவனாயினும் அவற்றுட் கூறியவாறு செய்வன தவிர்வனவற்றைப் பகுத்து அறியாதவன் என்பது போதர அங்ஙனங் கூறிற்று எனினுமாம். பசுக்காத்தலால் வரும் அற்பபயனை விரும்பி இளமை, அழகு, உலகளித்தன்முதலிய பயன்களை ஒழித்தல் அதிசயிக்கத்தக்கது என்பது போதரக் கந்தவேணிகரிளமையு.........சிந்தையேதுகொல் என்றும், பெரிதும் அநேகமுமான பயனைத்தரும் உடம்பைவிடுத்து, அற்பபயன்றரும் பசுக்காத்தலாகிய ஒரேகாரியத்தைமாத்திரம் விரும்பிசசெய்தலின் உன்னை

விட மூடன் இல்லை என்பது போதர நீகோலோகற்றறிசிறியோன் என்றுங் கூறிற்று. (௧00)

இறந்த னீசெயி னுய்யுமீ தொன்றுமே யனையவாம்
பிறந்த லாகிய வுயிரெலாந் துயருறல் பெரிதா
லறத்து நேரிஃ தாய்ந்துணர் பெரிதமர் ராடு
மறத்து மாருயி ரடாதுவெங் கண்டிடும் வழக்கோய்.

இ-ள். நீ இறத்தல் செய்யின் ஈது ஒன்றும் உய்யும் - நீ (எனக்கு உணவாக) இறந்தால் இப்பசுவொன்றுமே உய்யும்,—ஏனைய பிறத்தலாகிய உயிரெலாம் துயர் உறல் பெரிது - மற்றையனவாகிய உடம்பெடுத்த ஆன்மாக்களெல்லாந் துன்பமுறுதல் அதிகமாகும் (நீ இறவாதொழியின் இது வொன்றே இறக்கும் ஏனையவெல்லாம் மகிழும்),—பெரிது அமர் ஆடும் மறத்தும் - பெரிதும் போராடுகின்ற மறநிலையிலும், — ஆர் உயிர் அடாது வெங் கண்டிடும் வழக்கோய் - அரிய உயிர்களைக் கொல்லாமல் (உபாயத்தாற்) புறங்காண்கின்ற வழக்கமுடையவனே, — அறத்து நேர் இஃது ஆய்ந்து உணர் - தருமநீதியிலே நின்று இவற்றுள்ளே (செய்யத்தக்கது யாதென்று) ஆராய்ந்து அறிந்துசொல்லுதி. எ-று.

உம்மைகளுள் முன்னையது தெரிநிலை; பின்னையது இழிவுசிறப்பு. சுட்டுப்பெயர் நீண்டது. செயினுய்யுமீதொன்றுமேனையவாம்பிறத்தலாகியவுயிரெலாந்துயருறல்பெரிதால் என்றமையானே செய்யாதொழியின் இது வொன்றே இறக்கும் ஏனையவெல்லாம் மகிழும் என்பது பெற்றும். மறத்திலும் உயிர்க்கொலைக்கு அஞ்சி அவற்றைக் கொல்லாது காத்து மகிழ்விக்கின்ற நீ அதன்புறத்திலே பல்லுயிரை வருத்துதல் தகுதியன்றென்பது போதர மறத்துமாருயிரடாதுவெங்கண்டிடும்வழக்கோய் என்று கூறிற்று. ஒருயிரைக் காத்தலினும் பல்லுயிரைக் காத்தலே உனக்கு அறமென்றது என்பதாம். (௧0௧)

ஊழி னன்பசு வொன்றழ முனிகதத் துகுதீ
யாழி சூழுல கேழையு மடுமென வஞ்சே
லேழி னோடிரு கோடியா னுதவுதி யிசையால்
வாழி மாசற வுயர்திசூழ்ந் தளப்பரும் வரத்தோய்.

இ-ள். சூழ்ந்து அளப்பரும் வரத்தோய் - ஆராய்ந்து அளத்தற்கரிய மேன்மையையுடையவனே,—ஊழின் நன்பசு ஒன்று அழ - ஊழ்வினையினால் நல்ல பசுவொன்று (கொலைத்தீங்கிலகப்பட்டு) அழுதலாலே,—முனி கதத்து உகுதீ - (உனது குருவாகிய) வசிட்டமுனிவர் கோபத்தினாலே உகுக்குஞ் சாபத்தீயானது,—ஆழி சூழ் உலகு ஏழையும் அடும் என அஞ்சேல் - கடலாற்சூழப்பட்ட உலகமேழனையும் சுடுமென்று அஞ்சாதே,—ஏழினோடு இருகோடி ஆன் உதவுதி - (இப்பசுவொன்றிற்காக அவருக்கு) ஒன்பதுகோடி பசுக்களைக் கொடுத்து,—இசையால் வாழி - (அக்கொடை

யாற் கீர்த்தியோடும் வாழுதி,—மாசு அற உயர்தி - குற்றம் நீங்க உயர்ச்சியையும் அடைகுதி. எ-று.

உம்மை முற்று. ஆலுருபு ஓடு உருபின்பொருட்டு. கதம் என்பதற்கேற்பச் சாபமென்பதை வருவித்து, உருவகத்திற்கேற்ப அடும் என்பதற்குச் சுடும் என உரைக்கப்பட்டது. ஒன்பதுகோடி என்றது பலகோடியை. "எழுபதுகோடியுறும்" என்புழிப்போல. இப்பசுக்கொலை உன்னால் வரவில்லை என்பது தோன்ற ஊழின் என்றும், அவ்வசிட்டரது கோபவலிமை தோன்ற ஏழையுமடும் என்றும், ஒரே பசுவையுடைய வசிட்டருக்கு அதனை இழத்தலான் வருந்துன்பம் பொறுத்தற்கரிதென்பதுதோன்ற ஒன்று என்றும், அவ்வொரேபசுவிற்காக நீ பல பசுக்களைக் கொடுக்கின் அவர் மகிழ்ந்து ஆசீர்வதிப்பார் என்பதுதோன்ற உதவுதி.........வாழி என்றும், நான் இறத்தலாற் புகழுண்டென மேற்றிலீபன் கூறுமைப்பொருட்டு இசையால் வாழி என்றும், பசுவை இறக்கவிடுதல் இகழ்வு என்னுமைப்பொருட்டு மாசறவுயர்தி என்றும் கூறிற்று. உதவுதி வினையெச்சமுற்று. இது வேண்டலணி. (கO௨)

திரத்து விண்ணவர் நகரினுஞ் சிறந்தொரு திருவின்
வரத்து யர்ந்திடு நகருளாய் வழக்கினு னின்னை
யிரத்தும் பல்லுயிர்க் கிரங்கிநின் புரத்தினை யினிதே
புரத்த லேகட னென்றிட வென்றியம் புகழோன்.

இ-ள். திரத்து விண்ணவர் நகரினுஞ் சிறந்து - நிலைமையினாலே தேவர்களுடைய நகரத்திலுஞ் சிறப்படைந்து,—ஒரு திருவின் வரத்து உயர்ந்திடும் நகருளாய் - ஒப்பற்ற செல்வத்தினது சிறப்பினால் உயர்வடைந்த நகரையுள்ளவனே,—வழக்கினால் நின்னை இரத்தும் - இத்துணையும் யான் பேசிய நியாயத்தினாலே உன்னை ஒன்று யாசிக்கின்றேம்,—பல் உயிர்க்கு இரங்கி நின் புரத்தினை இனிது புரத்தலே கடன் என்றிட - பல ஆன்மாக்களின்பொருட்டும் இரங்கி (அவற்றைக் காத்தற்குச் சாதனமாய) உன் உடம்பைக் காத்தலே (உனக்கு) முறை அதனைச் செய்யவேண்டும் என்று கூற,—வென்றி அம் புகழோன் - வெற்றியையுடைய அழகிய புகழைக்கொண்டவனாகிய திலீபன். எ-று.

ஏகாரங்களுள் முன்னையது அசைநிலை; பின்னையது தேற்றம். இரத்தும் என்பது ஓசைவகையால் இகழ்ச்சிதோன்றநின்றது. பசுவைக்காத்து உடம்பைவிடுதல் சுவர்க்கம்புகுதற்குக் காரணமென மேற்றிலீபன் கூறுமைப்பொருட்டுச், சுவர்க்கப்பேற்றினும் நின்னகரவாழ்வு சிறந்ததென்பது தோன்றச் சிறந்தொருதிருவின்வரத்துயர்ந்திடுநகருளாய் எனக் கூறிற்று. இதனை அலங்காரநூலார் கருத்துடை அணி என்பர். "ஈண்டரும்போக வின்பமீறில தியாண்டுக்கண்டா—மாண்டதேதுறக்கமஃதேயருமறைத்துணிவுமம்மா" என்றார் பிறரும். என்றிட என்னும் பெயரெச்சமும், புகழோன் என்னும் எழுவாயும் "கைப்புரந்தரு" என்னுங் கவியில் என்று என்பதனோடு முடியும். (கO௩)

வெடித்த டங்கயற் கண்ணியர் மைந்தர்வே தியர்கோ
நெடிற்கொ டுங்கொலை சூழ்ந்திட நீக்கருந் தீதிற்
படிற்ற னுண்மையிற் காப்பது காத்தது பலியா
விடிற்ற னுவியை விடுத்திடா வேந்துமோர் வேந்தோ.

இ-ள். வெடி தடம் கயல் கண்ணியர் - உகளுகின்ற விசாலமான கயல் போலும் கண்களையுடைய பெண்களும்,—மைந்தர் - பாலரும்,—வேதியர் - பார்ப்பாரும்,—கோ - பசுக்களும்,—நெடில் கொடும் கொலை சூழ்ந்திட நீக்க அரும் தீதில் படில் - பெரிய கொடிய கொலையானது சூழும்படி நீக்குதற் கரிய தீங்கிலே அகப்பட்டால்,—தன் ஆண்மையில் காப்பது காத்து - தன் ஆண்டன்மையினாலே காத்தற்குரிய கருவிகொண்டு காத்தும்,—அது பலியா விடில் - அக்காத்தற்றொழில் பயன்படாதொழிந்தால், — தன் ஆவியை விடுத்திடா வேந்தும் ஓர் வேந்தோ - தன் உயிரை விடல்வேண்டும்; அங்ஙனம் விடாத வேந்தனும் ஓர் வேந்தனெனப்படுவானோ? படமாட்டான். எ-று.

உயர்வுசிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. வேந்தும் என்பதில் உம்மை இழிவுசிறப்பு. ஓகாரம் - எதிர்மறை. ஓர்வேந்து என்புழி ஓர் என்னுமெண் புகழின்மை முதலியன விளக்கிற்று. காப்பது வினைப்பெயர்; முற்றாக்கிக் காக்கவேண்டியது எனப்பொருள்கூறலுமாம். பசு, பெண்டிர், பாலர், பார்ப்பார் முதலியோர் அரசரால் ஒருதலையாகக் காத்தற்குரியாரென்பது "நன்பால்பசுவேதுறந்தார்பெண்டிர்பாலர்பார்ப்பா-ரென்பாரை யோம்பேனெனின்" என்பதனாலுமுணர்க. "பல்லுயிர்க்கிரங்கிநின்புரத் தினையினிதே-புரத்தலேகடன்" என்னுஞ் சிங்கத்தின் கூற்றை இதனாற் பரிகரித்தான். (கO௪)

முன்னை யானெம குலத்துக்கு முதல்வனோர் மைந்தன்
றன்னை யானிளங் கன்றினுக் களித்தனன் றலைநாட்
பின்னை யானது பிழைப்பதோ பிறங்குசீ ரானிற்
கென்னை யானளித் திடுவது மெங்குலத் தியல்பால்.

இ-ள். முன்னையான் எமகுலத்துக்கு முதல்வன் - முன்னுள்ளோனும் எங்குலத்துக்கு முதல்வனுமாகிய மனுநீதிகண்ட சோழன், — தலைநாள் ஓர் மைந்தன்றன்னை ஆன் இளம் கன்றினுக்கு அளித்தனன் - முன்னைநாளிலே தன்னுடைய ஏககுமாரனுயிரைப் பசுவின் இளங்கன்றைக்கொன்ற குற்றத்தின்பொருட்டுக் கொடுத்தான் (எனவே கொன்றான் என்றபடி),—பின்னை யான் அது பிழைப்பதோ - (அச்சோழன் வம்மிசத்திலே) பின்னைநாளிற் பிறந்தவனாகிய யான் அம்முறையினின்றுந் தவறலாமா?,—பிறங்கு சீர் ஆனிற்கு - விளங்குகின்ற மகிமையையுடைய இப் பசுவின்பொருட்டு,—யான் என்னை அளித்திடுவதும் - நான் என்னுயிரைக் கொடுத்தலும் (எனவே நானிறத்தலும் என்றபடி),—எங்குலத்து இயல்பு - எங்குலமுறைமையாம். எ-று.

உம்மை உயர்வுசிறப்பு. ஆல் அசைநிலை. ஓகாரம் வினவோடெதிர் மறையாய் நின்றது. உயர்வுதோன்றக் குலத்துக்கு முதல்வனென்றும், ஏக குமாரனை இழத்தலின் அருமைதோன்ற ஓர்மைந்தனென்றுங் கூறினன். திருவாரூரிலேயிருந்து அரசியல்நடாத்திய மனுநீதிகண்டசோழன், தன் குமாரன் தேரூர்ந்துசெல்லும்பொழுது அதனுள்ளே அகப்பட்டிறந்த பசுக் கன்றின்பொருட்டு, ஏகுமாரனென்பதையும் நோக்காது, அமைச்சர் வேறு பிராயச்சித்தம் உண்டென்பதையும் நோக்காது அவனைத் தன் தேர்க்காலின் கீழ்க் கிடக்குமாறுசெய்து கொன்று நீதியை நிலைநிறுத்தினன் என்னுங் கதையையே கூறித் தான் கூறியதற்கு இலக்கியங் காட்டினன் திலீபன் என்க. எங்குலத்துள்ளானொருவன் இளங்கன்றின்பொருட்டுத் தன் ஏக குமாரனைக் கொன்றான்; அதனினுமுயர்ந்த இக் காமதேனுவின்பொருட்டு யான் உயிர்துறத்தல் தக்கதேயாமென்றானென்பதாம். இதனால் "இறத்த னீசெயினுய்யுமீதொன்றும்" என்னுங் கூற்றினைப் பரிகரித்தான். (க0ரு)

கேட்டி யிப்பசு வப்பெருஞ் சுரபியே கேட்டை
யீட்டி ருங்கொலை தற்படா தென்னினு மியல்பால்
வீட்ட ரும்பெரு வலியினர் புரத்திடை வெந்தீ
யூட்டி னன்றன தாணைக்குந் தடையிடை யுளதோ.

இ-ள். கேட்டி - கேட்பாயாக,—இப்பசு அப் பெரும் சுரபியே - இந்தப் பசு அந்தப் பெரிய தெய்வப்பசுவே,—கேட்டை ஈட்டு இரும் கொலை தற் படாது என்னினும் - கேட்டினை அடைவிக்கின்ற பெரிய கொலை தன்னைப் பொருந்தாதாயினும் (எனவே தான் கொல்லப்படுதலை அடையாதாயினும் என்றபடி),—இயல்பால் வீட்ட அரும் பெரு வலியினர் புரத்திடை - இயற் கையோடு அழித்தற்கரிய பெரிய வலியையுடையவர்களாகிய அசுரர்களது முப்புரங்களிலும்,—வெம் தீ ஊட்டினன் தனது ஆணைக்கும் தடை இடை உளதோ - கொடிய அக்கினியையூட்டிய சிவபெருமானது ஆணைக்கும் தடை யானது இடையிலே உண்டோ? இல்லை. எ-று.

உம்மை சிறப்பு. ஏகாரம் தேற்றம். முற்கூறியதினும் இப்பொழுது கூறுவதன் வலிமை தோன்றக் கேட்டி என்றும், எத்தனைகோடி பசுக்கள் கொடுப்பினும் இதற்கு இணையாகாது என்பது போதர அப்பெருஞ்சுரபியே என்றும், காமதேனுவாயின் நம்மாற் கொல்லப்படாதே எனச் சிங்கம் கூறுமைப்பொருட்டுக் கொலைதற்படாதென்னினும்......வெந்தீயூட்டினன் றனதாணைக்குந்தடையிடையுளதோ என்றுங் கூறினன். இதனாற் "பல் கோடிபசுக்கொடு" என்றதனைப் பரிகரித்தான். (க0சு)

கைப்பு ரந்தரு முனதகட் டங்கியுங் கனலா
திப்பெ ருந்துய ரானுமுய்ந் திடுமென திசையா
மெய்ப்பு ரந்தனி விளங்குமா செய்தமேல் விளியிப்
பொய்ப்பு ரந்தனை யயிறிநீ யென்றுபின் புகலும்.

இ-ள். நீ எனது இசையாம் மெய்ப்புரம் தனி விளங்குமா செய்து - சிங்கமே! நீ என்னுடைய கீர்த்தியாகிய மெய்யுடம்பை ஒப்பின்றி விளங்குமாறு செய்து,—மேல் விளி இப் பொய்ப் புரந்தனை அயிறி - மேலே அழிகின்ற இந்தப் பொய்யுடம்பை உண்டு பசிதீர்வாயாக,—புரம் கை தரும் உனது அகடு அங்கியும் கனலாது - சரீரத்திற்குச் சிறுமையைக் கொடுக்கின்ற உனது உதராக்கினியும் சுவாலித்தெரியாது, — இ பெரும் துயர் ஆனும் உய்ந்திடும் என்று - இந்தக் கொடுந்துயரில் அகப்பட்டுக் கிடக்கின்ற பசுவும் உய்யும் என்றுசொல்லி,—பின் புகலும் - பின்னுஞ் சொல்லுவான். எ-று.

உம்மைகள் எச்சம். மெய்யுடம்பு - சாவாவுடம்பு. புகழுடம்பு பூதவுடம்புகளின் அழிவழியாமைகள்தோன்ற மெய்ப்புரம், பொய்ப்புரம் என்றான். அவையிரண்டையும் "ஒருவனதிரண்டியாக்கையூன்பயினரம்பின்யாத்த -வருவழும்புகழுமென்றுங்கவற்றினூழ்காத்துவந்து - மருவியவுருவமங்கேமறைந்துபோமற்றையாக்கை -திருவமர்ந்துலகமேத்தச்சிறந்துபின்னிற்குமன்றே" என்பதனானுணர்க. இதனாற் "கந்தவேணிகரிளமையும் நறுமலர்க்கணைக்கையந்தவேள்பரவழகுமுற்றுடையை" என்னுங்கூற்றைப் பரிகரித்தான்.(கo௭)

தாக்கு பேருவ கைக்கட றழுவுசற் சங்கம்
வாக்கி னுன்மொழி யெதிர்சொல வருவதே வழக்கா
னீக்க லாதிவ ணெம்மொடு மினிது நேர்பட்ட
போக்க லாதபே ரளியைநீ பிரிப்பதும் புகழோ.

இ-ள். தாக்கு பேர் உவகைக் கடல் தழுவு சத்சங்கம் - பரக்கின்ற பெரிய மகிழ்ச்சியாகிய கடலைத் தழுவுகின்ற பெரியோனது கூட்டமானது,—வாக்கினல் மொழி எதிர்சொல வருவதே வழக்காம் - வாக்கினல் வார்த்தைகளை எதிரே பேசுதலினலே உண்டாவதே தொன்றுதொட்ட முறையாகும்,—நீக்கலாது இவண் எம்மொடும் இனிது நேர்பட்ட போக்கலாத பேர் அளியை - (அங்ஙனமே) உன்னேடுசெய்த சம்பாஷணையையுடைய எம்மோடு இனிது வந்துபொருந்திய பிரித்தற்கரிய பெருநட்பை,— நீ பிரிப்பதும் புகழோ - நீ பிரித்துவிடுவதும் உனக்குக் கீர்த்தியாகுமோ? ஆகாது. எ-று.

உம்மையும் ஒகாரமும் எதிர்மறை. சத் + சங்கம் = சற்சங்கம் என்றுயிற்று. சத்து - பெரியோன். மக்களில்லாத இக்காட்டிலே உனக்கும் எனக்கும் சம்பாஷணையினலே நண்புண்டாயிற்று; ஆதலால், நண்பனகிய நீ என் பிரார்த்தனையை அங்கீகரித்தல்வேண்டுமென்றனென்பதாம். "கலந்தாரைக்கைவிடுதல்கானகநாடா-விலங்கும்விள்ளலரிது" என்றார் பிறரும். ( )

அரச கோளரி யின்னண மிரப்பநின் றரியே
றுரைசெ யாதொளிர் தன்றலை சாய்த்தனு முயர்தார்

வரைசெய் வாகுபந் தந்தனி தீர்ந்தது வரிவிற்
றரைசெ யாவெதிர் வீழ்ந்தன னுவகையின் றலையான்.

இ-ள். அரசகோளரி இன்னணம் நின்று இரப்ப - அரசசிங்கமாகிய திலீபன் இவ்வாறு நின்று வேண்ட, — அரியேறு உரைசெயாது ஒளிர் தன் தலை சாய்த்தலும் - சிங்கேறு பின் ஒன்றுங்கூருமற் றன்றலையைச் சாய்த்த வளவில்,—உயர் தார் வரைசெய் வாகுபந்தம் தனி தீர்ந்தது - உயர்ந்த மாலையையணிந்த மலையையொத்த புயத்தின்கட்டும் தனியே நீங்கிற்று,— உவகையின் தலையான் - (அவனும்) மகிழ்ச்சியாற் சிறந்தவனுய்,—வரிவில் தரை செயா எதிர் வீழ்ந்தனன் - வரிந்து கட்டப்பட்ட வில்லை நிலத்திலே எறிந்துவிட்டுத் தன்னையுண்ணும்படி அதனெதிரே வீழ்ந்தான். எ-று.

அரசகோளரி ஏகதேசவுருவகம்; பகையரசர்களாகிய யானைகளுக்குச் சிங்கம்போன்றவன். தலைசாய்த்தது உடன்பாட்டுக்குறிப்பு. (கoக)

வேறு.

ஆழ்தலைக் கருது மாவிட் டரியதன் மெய்யி லாளி
வீழ்தலைக் கருதி னுன்றன் புறத்திடை வீழா நின்ற
தாழ்தலைக் கருதா மேலோர் தடக்கையால் விசும்பி னின்று
வாழ்தலைக் கருதி வீழ்ந்த கற்பக மலர்ப்பூ மாரி.

இ-ள். ஆழ்தலைக் கருதும் ஆ விட்டு - (கொன்று அதன்மெய்யில்) அமிழ்ந்துதலைக் கருதப்பட்ட பசுவைவிடுத்து,—ஆளி - சிங்கமானது,—அரிய தன் மெய்யில் வீழ்தலைக் கருதினுன்றன் புறத்திடை - அரிய தன்னுடைய சரீரத்திலே வீழ்ந்துண்ணுதலைக் கருதித் தன்சரீரத்தை ஒப்புவித்தவனுகிய திலீபனுடைய முதுகிலே,—தாழ்தலைக் கருதா மேலோர் விசும்பில் நின்று - மேன்மையைக் கருதுகின்ற தேவர்கள் ஆகாயத்திலே நின்று,—வாழ்தலைக் கருதித் தடக்கையால் வீழ்த்த - அவனுடைய நல்வாழ்வைக் கருதி விசாலமாகிய கையினுலே சொரிந்த,—கற்பக மலர்ப்பூ மாரி வீழாநின்ற - கற்பகத்தின் மலர்மழை சொரிந்தன. எ-று.

ஆழ்தல் - இறத்தலுமாம். இப்பொருட்குக் கருதல் பசுவின்வினை. வீழ்தல், கருதினுன் என்பன உபசாரவழக்கு. சிங்கந் தன்மேல் வீழ்ந்துண்ணும்படி கீழ்முகமாகக் கிடந்தான் என்னும் முதனூற்கேற்பப் புறத்திடை என்ருர். மலர்ப்பூ ஒருபொருட்பன்மொழி. புறத்திடைவீழாநின்ற என இயைக்க. (கக0)

தவப்பயத் துற்ற தோர்நந் தலைக்கன்று வருதி தாழ்வி
லவப்பயத் துருத செல்வத் தரும்பொருள் வருதி யெண்ணி
னவப்பயத் தளிக்குந் தெய்வ நன்மணி வருதி யென்னப்
பவப்பயத் தரிய தேனுப் பரிந்தினி தழைத்த தன்றே.

இ-ள். பவப் பயத்து அரிய தேனு-(தன்னை வழிபட்டாரைப்) பாவமாகிய பயனில் விடுதலில்லாத காமதேனுவானது (திலீபனை நோக்கி),—தவப் பயத்து உற்ற ஓர் நம் தலைக்கன்று வருதி-தபோபலத்தாலடைந்த ஒப்பற்ற நம்முடைய தலையீற்றுக்கன்றே (எழுந்து) வருகுதி,—அவப் பயத்து உறாத தாழ்வு இல் செல்வத்து அரும் பொருள் வருதி-அவப்பிரயோசனத்திற்செல்லாத செல்வத்துள்ளே அரியசெல்வமே (எழுந்து) வருகுதி,—எண்ணில் நவப் பயத்து அளிக்கும் தெய்வ நன்மணி வருதி என்ன-அளவில்லாத புதிய பயன்களைக்கொடுக்கும் நல்ல தேவமணியே (எழுந்து) வருகுதி என்று,—பரிந்து இனிது அழைத்தது-அன்புற்று இனிமையோடும் அழைத்தது. எ-று.

து சாரியை. செல்வத்தரும்பொருள் என்பதற்குச் செல்வமாகிய அரிய பொருளே எனினுமாம். யாவராலும் பெறுதற்கரியதென்பது தோன்றத் தவப்பயத்துற்ற என்றும், நன்னெறியிற் செல்வது என்பது போதர அவப்பயத்துறாத என்றும், அரசருட்சிறந்தான் என்பது தோன்றத் தெய்வ நன்மணி என்றுங் கூறிற்று. உவப்பினாலே உயர்திணை அஃறிணையாயிற்று. இது ஆர்வமொழி என்னுமலங்காரம். (கககக)

துடித்தன னெழுந்து மாற்ற நல்கிய துணிவாற் றன்னைப்
பிடித்தயின் றிடுவான் வேட்ட பெரும்பசிச் சிங்கங் காணான்
செடிச்சிறு செம்பொற் கிண்ணந் தேக்குபா லூட்டச் சேயை
யடித்தினி திரங்கி நின்ற வன்னையி னாவைக் கண்டான்.

இ-ள். மாற்றம் நல்கிய துணிவால் துடித்தனன் எழுந்து-(அது வருதி வருதி என்று) அழைத்த துணிவினாலே துடிப்புற்று எழுந்து நின்று,—தன்னைப் பிடித்து அயின்றிடுவான் வேட்ட பெரும்பசிச் சிங்கம் காணான்-தேனுவைப்பிடித்து உண்ணும்படி விரும்பிய பெரும் பசியையுடைய சிங்கத்தைக் கண்டிலனாய்,—செடிச் சிறு செம்பொன் கிண்ணந் தேக்கு பால் ஊட்டச் சேயை அடித்து-ஒளிபொருந்திய சிறிய சிவந்த பொன்னாலாகிய கிண்ணத்திலே நிறைத்த பாலை உண்பிக்கும்பொருட்டுப் புதல்வனை அடித்து,—இனிது இரங்கி நின்ற-(அப்புதல்வன் தான் அடிக்கவும் தன்னையே தழுவி அழுதலாற் பின் அடித்தமைபொருட்டு) இனிதாக இரங்கிநின்ற,—அன்னையின்-ஒருமாதாவைப்போல,—ஆவைக் கண்டான்-(இரங்கிநின்ற) அத்தேனுவையே கண்டான். எ-று.

பிரிநிலையேகாரம் விகாரத்தாற்றொக்கது. தன் என்றது தேனுவை. செடி-செடித்தொழிலுமாம். துடித்தனன் காணான் என்பன வினையெச்சமுற்றுக்கள். பின்னடி இரண்டற்கும் புத்திரப்பேற்றைக் கொடுக்கும்படி சோதித்தலால் வருத்தியும், தன்னையே அன்புசெய்து அடைதலாற் பின் வருத்தியது காரணமாக இரங்கிநின்ற ஆ என்னும் உள்ளுறைகொள்க.

கண்பிரித் தியன்ற மாயக் காட்சியு மெனதே வேறென்
றெண்பிரித் துணரே லென்னு லென்பெறற் கிசைந்தா யென்னு
நண்பிரித் திடாத தேனு நவிறலுங் கலியை நாளு
மண்பிரித் தளிக்கு மாறோர் மைந்தனைத் தருதி யென்றான்.

இ-ள். நண்பு இரித்திடாத தேனு - தன்மேல்வைத்த நண்பைக் கெடுத்துவிடாத தேனுவானது,—கண் பிரித்து இயன்ற மாயக் காட்சியும் எனதே - (திலீபனை நோக்கி) உன்னுடைய கட்பார்வையைப் பிரித்துவிட்டுச் செய்த மாயமான என்னைப்பற்றியதாகக் காணப்பட்ட (சிங்கத்தினது) தோற்றமும் என்னுடை செயலேயாம்,—வேறு என்று எண் பிரித்து உணரேல் - நான் வேறு சிங்கம் வேறு என்று மனத்திலே பிரித்துணராதே,—என்னால் என்பெறற்கு இசைந்தாய் என்ன நவிறலும் - அரசனே! என்னாலே யாது பெறுதற்கு (இவ்வழிபாட்டிற்) பொருந்தினாய் என்று கேட்டவளவில்,—கலியை நாளும் மண்பிரித்து அளிக்குமாறு - வறுமையை நாடோறும் பூமியினின்றும் பிரித்துநீக்கி (அதனைக்) காக்கும்படி,—ஓர் மைந்தனைத் தருதி என்றான் - ஒருபுதல்வனைத் தரல்வேண்டுமென்று பிரார்த்தித்தான். எ-று.

ஏகாரம் தேற்றம். உன் அன்பை ஆராயும்பொருட்டு நான்கொண்ட மாயமென்பதுபோதர எனதே என்று கூறிற்று. கலியைநாளும் மண்பிரித்தளிக்கும் என்றதனால் அப்புதல்வற்பேறும் பெரிதும் பரோபகாரத்தின் பொருட்டு என்பது பெறுதும். இசைந்தாய் என்பதற்கு விரும்பினாய் எனினும், கலி என்பதற்கு வஞ்சம் எனினுமாம். (கக௩)

காய்ப்புற வுள்ளத் துள்ளே கனல்படக் கிடந்த சிந்தை
நீப்புற வெனது தீம்பா றுய்க்குதி நிருப வென்ன
வேய்ப்புற நின்ற கன்று நுகர்ந்தபி னியைந்து கொண்ட
வாய்ப்புறும் யாக சேடம் வாங்குபு நுகர்வ னென்றான்.

இ-ள். நிருப - அரசனே!—உள்ளத்து உள்ளே காய்ப்பு உறக் கனல் படக் கிடந்த சிந்தை நீப்பு உற - உன்மனத்தினுள்ளே காய்ப்புப்பொருந்தும்படி கனலைப்பொருந்திக் கிடந்த எண்ணம் நீங்கும்படி,—எனது தீம்பால் துய்க்குதி என்ன - என்னுடைய இனிய பாலை உண்குதி என்று சொல்ல,—ஏய்ப்பு உற நின்ற கன்று நுகர்ந்தபின் - (அதனையுண்ணும்படி) பொருந்தி நின்ற கன்று உண்டபின்பு, — இயைந்துகொண்ட வாய்ப்பு உறும் யாக சேடம் - யாம் உண்ணுதற்கேற்றதான சிறந்த யாகசேடமான பாலை,—வாங்குபு நுகர்வன் என்றான் - (குருவாகிய வசிட்டர்தர) வாங்கியுண்பேனென்றான். எ-று.

சிந்தை - ஆகுபெயர். காய்ப்பு என்றது புத்திரப்பேறு இல்லையே என்று அடிக்கடி நினைந்து கன்றியதை. கன்று உண்ணாது உண்ணுதல் பாவமாய் முடியுமென்பதனானும், யாகத்திற்குப் பாலின்றியுண்ணின் யாகத்திற்கிடையூறுசெய்தமையாயும், உடையோனாகிய குருவின் உத்தரவின்றி

உண்டமையாயுமுடியுமென்பதனுனும் எய்ப்புறநின்றகன்றுநுகர்ந்தபின்...... யாகசேடம் வாங்குபுநுகர்வனென்றுன் என்க. யாகசேடம் யாகத்துக்கு உபயோகப்பட்டு எஞ்சிய பால்; இது உடம்பொடுபுணர்த்தலென்னுமுத்தி. கன்றுகுடித்தும், யாகத்துக்கு உபயோகமாகியும் எஞ்சிய பாலை வசிட்டருடைய உத்தரவோடுண்பேனென்றுன் என்பதாம். (ககச)

புறநிலை புகாது நீதி புல்லுபு பொலிந்து பொய்யா
வறநிலைப் பால தாய வம்மொழிக் கமைந்து போகா
விறனிலைக் கதிர்வேற் கண்ணி பூசனை கொண்டு வேதத்
திறநிலைத் தகைய வேள்விச் சாலைவாய்ச் சேர்ந்த தன்றே.

இ-ள். புறநிலை புகாது நீதி புல்லுபு பொலிந்து பொய்யா அறநிலைப் பாலது ஆய அ மொழிக்கு - பாவத்திற்புகாது நீதியைத்தழுவிப் பொலிவுற்று உண்மையான தருமவழியின்பகுதியதான (திலீபன்கூறிய) அவ்வார்த்தைக்கு,—அமைந்து போகா - உடன்பட்டு (த் தேனுவானது) சென்று,— விறல் நிலை கதிர் வேற் கண்ணி பூசனை கொண்டு - வலிமைதங்கிய ஒளிபொருந்திய வேலையொத்த கண்ணையுடையவளாகிய சுதக்கிணைசெய்த பூசனையை (மகிழ்ந்து) ஏற்றுக்கொண்டு,—வேதத் திறம் நிலைத் தகைய வேள்விச் சாலைவாய்ச் சேர்ந்தது - வேதவிதி நிலைபெற்ற தகைமைபொருந்திய யாகசாலையினிடத்துச் சேர்ந்தது. எ-று.

அறநிலையெனப் பின்னர்க்கூறலின் பாவத்தைப் புறநிலையென்றெழிந்தார். அறத்திற்குப் புறமாயுள்ளது பாவம். புறநிலைபுகாது என்றது கன்று குடித்தபின் உண்பேனென்றமையை. அறநிலைப்பாலதாய என்றது யாகசேடம் வாங்குபுநுகர்வன் என்றமையை. (ககரு)

முறிபெற்ற நிறத்த தேனு வருளினை முறையிற் போற்றி
நெறிபெற்ற வாற்றை யெல்லா நெடுந்தவற் குரைத்த லோடுங்
குறிபெற்றமுறையிற்றீம்பால்கொள்கெனக் கொடுத்தானுண்டு
வெறிபெற்ற தாரி னுனும் விஞ்செழிற் சாலை மீண்டான்.

இ-ள். முறிபெற்ற நிறத்த தேனு அருளினை முறையிற் போற்றி- இளந்தளிர்போன்ற நிறத்தினையுடைய தேனுவின் கிருபையை (வசிட்டகுரு கூறிய) முறையாலே துதித்து,—நெறிபெற்ற ஆற்றை எல்லாம் - வழியிலே அடைந்த வரலாறு முழுதையும்,—நெடும் தவற்கு உரைத்தலோடும் - அவருக்கு விண்ணப்பஞ்செய்தவளவிலே,—குறிபெற்ற முறையில் தீம்பால் கொள்க எனக் கொடுத்தான் - நீ குறித்த முறைப்படியே இனிய பாலைக் கொள்ளுக என்று (வசிட்டமுனிவரும்) உண்ணும்படி கொடுத்தார் - வெறி பெற்ற தாரினுனும் உண்டு விஞ்சு எழில் சாலை மீண்டான் - வாசனைகமழுகின்ற மாலையையணிந்த திலீபனும் (அதனை) உட்கொண்டு மிக்க அழகையுடைய பன்னசாலையினின்றுந் திரும்பினுன். எ-று.

குறி முதனிலைத்தொழிற்பெயர். (ககசு)

ஒலித்தரி யொன்றுகொள்ளாவுயச்செய்தோனெமையேல்வெய்தி
மெலித்தெதிர் விலக்கு மஞ்சா வெளிப்படினென்ன வோராப் [ன்
பலித்தொளிர் குருதிச் செங்கட் பகல்செய்வா ளரியு மேக்கிற்
கலித்தெழு பேழ்வா யத்தி பிடித்துடன் கரந்த தன்றே.

இ-ள். பலித்து ஒளிர் குருதிச் செங்கண் பகல்செய் வாள் அரியும் - மேற்பட்டு விளங்குகின்ற இரத்தம்போலும் சிவந்த கண்ணையுடைய பக லைச்செய்கின்ற வாளரியும்,—மேக்கில் கலித்து எழு பேழ் வாய் அத்தி பிடித்து - மேற்குப்பக்கத்திலே ஆரவாரித்து எழுகின்ற அகன்ற வாயை யுடைய அத்தியைப் பிடித்துக்கொண்டு,—ஒலித்து அரி ஒன்று கொள் ஆ உயச் செய்தோன் - முழங்கிவந்து சிங்கமொன்றுபிடித்த பசுவைவிடுவித்து உய்யும்படிசெய்த திலீபன்,—எமையேல் - (அதனினும் மென்மைபடைத்த) எம்மையாயின்,—அஞ்சா வெளிப்படின் வெய்தில் மெலித்து எதிர் விலக் கும் என்ன ஓரா - அஞ்சாமல் (யான்) வெளிப்பட்டால் விரைவிலே மெலி யச்செய்து எதிரே விலக்குவான் என்று உணர்ந்து,—உடன் கரந்தது - அதனோடு மறைந்தது. எ-று.

இதன்கண் சூரியன் சமுத்திரத்துள் மறைந்தது என்னும் பொருளே யன்றி சிங்கம் யானையைப் பிடித்துக்கொண்டு முன் ஒரு பசுவைப்பிடித்த சிங்கத்தை விலக்கிய திலீபன் றன்னையும் விலக்குவானென்றஞ்சி மறைந் தது எனவு மொருபொருள்தோன்ற வைத்தார் என்க. அரி என்பது சூரி யனுக்கும் சிங்கத்திற்கும், அத்தி என்பது கடற்கும் யானைக்கும் பொது வாய்நின்றன. சூரியனுக்கு இசையப் பொருள்கொள்ளுங்கால் கண் என் பதற்கு இடமென்றும், வாள் என்பதற்கு ஒளி என்றும் அத்தி பிடித்து என்பதற்குக் கடலையிடமாக்கொண்டு என்றும், சிங்கத்திற்கேற்பப் பொருள் கொள்ளுங்கால் கண் என்பதற்கு விழி என்றும், அத்திபிடித்து என்பத ற்கு யானையைப் பிடித்துக்கொண்டு என்றும் பொருள்கொள்க. இது தொனி. (கசள)

குறித்திடு மனைய வெய்ய கோளரி குருகினோடும்
பறித்தெதி ருடுக்க ளென்னு நிணமிசைப் பரந்து பாயக்
கறித்தெறி மருப்பொன் றோடுங் காருடற் குருதி மீது
தெறித்துவிண் பரத்தல்போலுஞ் செக்கரும் பிறையு மம்மா.

இ-ள். செக்கரும் பிறையும் - (சூரியன்அத்தமித்தபொழுதுதோன்றிய) செக்கர்மேகமும் பிறையும்,—குறித்திடும் அனைய வெய்ய கோளரி - குறிக்கப் பட்ட அந்தக் கொடிய கோளரியானது,—எதிர் உடுக்களென்னும் நிணம் மிசைப் பரந்து பாய - எதிரே நட்சத்திரங்களென்னும் நிணங்கள் மேலே பர ந்து செல்ல,—குருகினோடும் பறித்துக் கறித்து எறி மருப்பு ஒன்றோடும் - குருகோடும் பறித்துக் கடித்தெறிந்த கொம்பொன்றுடனே,—கார் உடல் குருதி மீது தெறித்து விண் பரத்தல் போலும் - (அந்த யானையின்) கரிய

உடம்பிலுள்ள இரத்தமானது மேலே தெறித்து ஆகாயத்திலே பரத்தலை யொக்கும். எ-று.

கோளரி என்பது கோளாகிய சூரியன் எனவும், சிங்கம் எனவும் பொருடந்துநின்றது. அந்தச் சிங்கம் தான்பிடித்த யானையைக்கொன்று குருகைப் பறித்ததெனவுமொருபொருடோன்றிற்று. பறித்து எறி மருப்பு எனவும், பாய எறி மருப்பு எனவும் தனித்தனி கூட்டி முடிக்க. அம்மா அசைநிலை. (ககஅ)

அவ்வரி குணக்கு வேலை புகேலென வரற்றி யஞ்சுங்
கவ்வயி னொதுங்கி வெற்பிற் கதிர்த்தலை சிறிது நீட்ட
நொவ்விய வதன்கட் டன்மை யுணர்ந்தனன் போல நோக்கி,
யெவ்வமின் முனிபாற் புக்கா னெழுந்தபே ருவகை யானே.

இ-ள். அ அரி - அந்த அரியானது,—குணக்கு வேலை புகேல் என அரற்றி அஞ்சும் கவ்வையின் ஒதுங்கி - கீழைத்திசையிலுள்ள அத்தியானது இங்கே வராதே (அரசனுளன்) என்று (அரசனை விளித்துக்) கதறி அஞ்சுகின்ற ஒலியினாலே (அச்சமுற்றதுபோலச் சிறிது) ஒதுங்கி,—வெற்பில் கதிர்த் தலை சிறிது நீட்ட - (அரசன் வருகின்றானோ என்று பார்ப்பது போல) உதயகிரியினிடத்தே கிரணங்களையுடைய தலையைச் சிறிது உயர்த்த,—நொவ்விய அதன்கண் தன்மை உணர்ந்தனன் போல நோக்கி - வருந்திய அந்த அத்தியின்கணுள்ள வியல்பை அறிந்தவனைப்போலக் கீழ்த்திசையைநோக்கி (எனவே சந்தியாவந்தனஞ்செய்து என்றபடி),—எழுந்த பேர் உவகையான் எவ்வம் இல் முனிபால் புக்கான் - (சந்ததியைப் பெற்றமைகாரணமாக) எழுந்த பெருமகிழ்ச்சியையுடையவனாகிய திலீபன் குற்றமில்லாத (குருவாகிய) வசிட்டமுனிவரிடத்திற் சென்றான். எ-று.

அரி சூரியனையும் சிங்கத்தையும் உணர்த்திநின்றது. புகல் என்னும் பாடத்திற்குத் தஞ்சம் என்று பொருள்கொள்க. (ககக)

முழுப்பெரு முதலை யுள்ளத் திருத்திய முனிவன் வேத
விழுத்தகை யாசி யோடும் விடைகொடுத் தருளா நிற்ப
வழுத்தருண் முனியை வேள்வி யதனைக்கற் றுவை யன்பால்
வழுத்துரை மலிவி னோடும் வலம்வந்து வணங்கி மீண்டான்.

இ-ள். பெரு முழுமுதலை உள்ளத்து இருத்திய முனிவன் - பெரிய முழுமுதலாகிய கடவுளை மனத்திலே (தியானத்தால் நிலையுற) இருத்திய வசிட்டமுனிவர்,—வேத விழுத்தகை ஆசியோடும் - வேதமந்திரத்தோடு பொருந்திய சிறந்த தகைமைபொருந்திய ஆசீர்வாதத்தோடும், — விடைகொடுத் தருளாநிற்ப - அநுமதிகொடுத்துநிற்ப (அப்பொழுது திலீபன்),—அழுத்து அருள் முனியை - அழுத்திய அருளையுடைய வசிட்டமுனிவரையும்,—கன்று ஆவை - கன்றையுடைய (நந்தினியென்னும்) பசுவையும்,—வேள்வி அதனை -

யாகத்தையும்,—அன்பால் வழுத்து உரை மலிவினேடும் வலம்வந்து - அன்பினுல் வழுத்துகின்ற வார்த்தையின்மலிவோடும் பிரதக்கிணஞ்செய்து,—வணங்கி மீண்டான் - வணங்கித் திரும்பினுன். எ-று.

கன்று ஆ - கற்ரு என்ருயிற்று. வழுத்துரை தோத்திரமுமாம். (கஉ௦)

பிரித்தன்ன பிள்ளைத் திங்க டணையொரு பெரிய திங்க
டரித்தன்ன நுதலி யோடுந் தவவனத் தெல்லை நீங்கித்
தெரித்தன்ன விதியிற் சொற்ற மயன்மதத்திரட்டையெல்லாம்
விரித்தன்ன வினையின் ருேற்றம் விளங்கொளித் தேர ணுன்.

இ-ள். பிரித்து அன்ன பிள்ளைத் திங்கள்தனை - பகிர்ந்தாற்போற்போன்ற இளந்திங்களை,—ஒரு பெரிய திங்கள் தரித்தன்ன நுதலியோடும் - ஒரு பூரணசந்திரன் தரித்தாற்போன்றநெற்றியையுடைய சுதக்கிணையோடும்,—தவ வனத்து எல்லை நீங்கி - (திலீபனுனவன் வசிட்டருடைய) தபோவனத்தெல்லையைக் கடந்து,—தெரித்தன்ன விதியில் சொற்ற மயன்மதத்திரட்டையெல்லாம் - தெரிக்கப்பட்டனவாகிய விதியோடுசொல்லிய மயனது நூலையெல்லாம்,—விரித்து அன்னவினையின் தோற்றம் விளங்கு - விரித்துச்செய்துவைத்தாற்போன்ற தொழிலின் பொலிவுவிளங்குகின்ற,—ஒளித் தேரன் ஆனுன் - ஒளியையுடைய தேரினிடத்தனுயினுன். எ-று.

மதம் - கொள்கை; அதன்திரட்டு நூல். பிரித்தன்னபிள்ளைத்திங்கள் - எண்ணுட்டிங்கள். மயனூலிற்சொல்லிய விதிமுழுதுமமைந்த தேரென்பார் தெரித்தன்னவிதியிற்சொற்றமயன்மதத்திரட்டையெல்லாம் - விரித்தன்ன வினையின்ருேற்றம்விளங்கொளித்தேர் என்ருர். குருவினுடைய ஆச்சிரமத்தெல்லையுள்ளே தேரிலேறிச்செல்லல் முறையன்மையின், ஆச்சிரமத்தெல்லையைநீங்கித் தேரிலேறினுன் என்க. (கஉக)

நீட்டிய திசையை மூடு நெடுமுகிற் படல மெல்லா
மோட்டிய வாகா யத்துக் கொப்பனைக் குரிய கோலங்
காட்டிய துதியைத் திங்கள் கண்டென நகரோர் காண
வீட்டிய திருவி னுன்ற விலங்கொளி நகரஞ் சேர்ந்தான்.

இ-ள். நீட்டிய திசையை மூடு நெடுமுகில் படலமெல்லாம் ஓட்டிய - நீண்ட திக்குகளைமூடிய நெடிய முகிற்படலமுழுதையும் நீக்கிய, — ஆகாயத்துக்கு ஒப்பனைக்கு உரிய கோலம் காட்டிய - ஆகாயத்திற்கு அலங்காரத்திற்கு உரிய அழகைக் காண்பித்த,—துதியைத் திங்கள் கண்டென - துதியைப்பிறையைக் கண்டாற்போல,—நகரோர் காண - நகரத்தார் (தன்னைக்) காண,—ஈட்டிய திருவின் ஆன்ற இலங்கு ஒளி நகரஞ் சேர்ந்தான் - சம்பாதிக்கப்பட்ட திரவியத்தாலே நிறைந்த விளங்குகின்ற ஒளியையுடைய நகரத்தையடைந்தான். எ-று.

நீடிய என்பது நீட்டிய என விரிந்துநின்றது. முகிற்படலமெல்லாமோட்டிய என்றதனுற் சரத்காலசந்திரன் என்பது பெறுதும். துதியைத்

திங்கள் நெடுநாட் காணப்படாதிருந்து காணப்படலாலும் மெலிந்த சரீர முடைமையானும் புதிய தோற்றத்தையுடைமையானும் திலீபனுக்குவமை யாயிற்று. திலீபனுக்கு மெலிந்த சரீரம் விரதம்பற்றியும், புதிய தோற் றம் சந்ததியை அடைதற்குரிய வரத்தைப் பெற்றமையானும் வந்தது.()

தேனுவந்தனப்படல முற்றிற்று.

---

# இரகுவுற்பத்திப்படலம்.

நளிகூரும் பொன்மவுலி நரபால னன்னிலா
வொளிகூரு மதிவதனி யொடுமின்பா லுறையுநா
ளளிகூரு மவள்வயினே யாயதா லன்பருக்
களிகூரு நல்லறத்தின் விளைவாய கருப்பமே.

இ-ள். நளி கூரும் பொன் மவுலி நரபாலன் - பெருமைமிகுந்த பொன்னாலாகிய முடியினையுடைய திலீபமகாராசன்,—நன்னிலா ஒளி கூரும் மதி வதனியொடும் - நல்ல நிலாவினது ஒளிமிகுந்த சந்திரன்போலும் முகத்தையுடையளாகிய சுதக்கிணையோடும்,—இன்பால் உறையு நாள் - இன்போடு இருக்கின்றநாளில்,—அளிகூரும் அவள் வயின் - அன்புமிக்க அவளிடத்தில்,—அன்பு அருக் களிகூரும் நல் அறத்தின் விளைவாய கருப்பம் ஆயது - விருப்பம்நீங்காத களிப்பைமிகுவிக்கின்ற நல்ல தருமத்தினது விளைவாகியுள்ள கருப்பம் உண்டாயது. எ-று.

அருத கூரும் என்னும் பெயரெச்சங்களைக் கருப்பம் என்னும் பெயரோடு தனித்தனி முடிக்க. பெயரெச்சத்தீறு விகாரத்தாற்றொக்கது. புத்திரப்பேறு இனி எமக்குத் தடையின்றிக் கிடைக்குமென்றதனலாய மகிழ்ச்சியோடிருந்தார் என்பார் இன்பாலுறையுநாள் என்றும், நெடுநாளாகவில்லாதிருந்து தோன்றிய கருப்பமாதலினாலே அவர்களுக்கு இடையறாத அன்பைக்கொடுத்துக்கொண்டிருந்ததென்பார் அன்பரு என்றும், உலகபரிபாலனமாகிய பேரறம் நிலைத்தற்குக் காரணமாகத் தோன்றியதாதலினாலே நல்லறத்தின்விளைவாயகருப்பம் என்றுங் கூறினர். திலீபனும் சுதக்கிணையும் புரிந்த நல்ல தருமத்தின் விளைவாயுள்ள கருப்பம் எனினுமாம். (க)

தொடைவார்மென்மலர்க்கோதைதுவணுண்ணூலிடையோடே
படைபாய்நவ் விழியினெய்ய மெய்சோரப் பரியுமாற்
புடைவார்மா மலைசுமந்து தள்ளாடிப் பொறுக்கலா
திடைவார்மேற் சோர்வேறி னெங்ஙனே பொறுப்பதே.

இ-ள். தொடை வார் மென் மலர்க் கோதை - தொடுக்கப்பட்டதாகிய நீண்ட மெல்லிய மலர்மாலையை அணிந்தவளாகிய சுதக்கிணை,—துவள் நுண்ணூல் இடையோடு - துவளுகின்ற நுண்ணிய நூலையொத்த இடையோடு,—படைபாய் நவ்வியின் நொய்ய மெய்சோரப் பரியும் - அம்புதைத்த மானினது மெய் சோர்தல்போலத் தன்னுடம்பு சோர்வடைய வருந்துவாள்,—புடைவார் மாமலை சுமந்து தள்ளாடிப் பொறுக்கலாது இடைவார் மேல் - புடைத்த கச்சையுடைய பெரிய (தன) மலையைச் சுமந்து தள்ளாடிச் சுமக்கமுடியாது வருந்துபவராகிய இடையார்மீது,—சோர்வு ஏறில் பொறுப்பது எங்ஙன் - சோர்வு அதிகப்படிற் சுமப்பது எவ்வாறு. எ-று.

வினை முடியாமைதோன்றநின்றது. மலையைச் சுமந்து வருந்துவார் மேற் சோர்வேறின் அவர் சுமப்பது எப்படி எனவு மொருபொருள்பயத்தலால் இது சிலேடையின் முடித்தலாகிய வேற்றுப்பொருள்வைப்பு என்னு மலங்காரம். தொடையையும் மலரையுமணிந்த கோதையையுடையாளெனினுமாம். (உ)

நெருங்காவி நுகர்கலையி னெருக்கினயர் நிலையதா
மருங்காவி பெற்றபலன் மற்றேவிம் மலர்க்கலா
தொருங்காவி யழகழிந்த கருங்காவி யொல்லைபோற்
கருங்காவி யெனக்கடலங் கண்பசலை பூத்தவே.

இ-ள். நெருங்கு ஆவி நுகர் கலையின் நெருக்கின் அயர் நிலையது ஆம் மருங்கு - நெருங்கிய அகிற்புகையையுண்ட வஸ்திரத்தின் நெருக்கினால் அயருகின்ற நிலையையுடையதாகிய இடை,—ஆவி பெற்ற பலன் மற்றே - உயிரைப்பெற்றுத் தைரியமடைந்தபலன் மாத்திரமா?—இ மலர்க்கு அலாது ஒருங்கு அழகு அழிந்த ஆவிக் கருங்காவி - (கண்களாகிய) இம்மலர்களுக்கு ஒவ்வாது ஒருங்கே அழகுகெட்ட வாவியின்கணுள்ள கருங்குவளைமலர்களை,—ஒல்லைபோல் கருங்காவி என - பழமைபோல (இவைகள்) கருங்குவளைமலர்கடான் என்றும் சொல்லும்படி,—கடல் கண் பசலைபூத்த - கடல்போன்ற கண்களிரண்டும் பசலைபூத்தன. (எனவே அதுவுமாம் என்றபடி.) எ-று.

ஆவி நுகர்கலை என்பதற்குப் பாலாவியின்றன்மையைத் தன்னிடத்தே கவர்ந்த கலை எனினுமாம். ஆவி அழகு அழிந்த என்பதற்கு மணமும் அழகும் அழிந்த எனினும் பொருந்தும். கருங்காவி கருங்காவி என்று சொல்லும்படி பொருந்த எனக் கருங்காவியை எழுவாயாகக்கொண்டு முடித்துப் பொருள்கோடலுமாம். சுதக்கிணையிடத்து வேறுபட்டுத் தோன்றிய குறி இடை தைரியத்தைப்பெற்றுத் தோன்றியதொன்றுமாத்திரமா? கண்கள் பசலைபூத்தனவுமாம் என்பது கருத்து. (ங.)

கரவாது வெண்சோதிக் கவினேறக் காண்டோறும்
வரவாகந் தனின்மாழை வனப்புளதா யினுமரு

விரவாதுள் வாங்கியுறச் செஞ்சோதி மேலெழீஇப்
பரவாது விசித்தனபோற் பசுநரம்பு பரந்தவே.

இ-ள். கரவாது வெண் சோதிக் கவின் ஏறக் காண்டோறும் - மறையாது வெள்ளொளியின் அழகானது (வரவர) மேற்படக் காணுந்தோறும்,—வர ஆகம் தனில் - மேலான மார்பின்கண்ணே,—மாழை வனப்பு உளதாயினும் - இயல்பாகப் பொன்னிறமுள்ளதாயினும்,—மரு விரவாது உள் வாங்கி உற - அவ்வனப்பு (வெள்ளொளியை) மறுத்து நெருங்காது உள்ளடங்கியிருக்கும்படி,—செஞ் சோதி மேலெழீஇப் பரவாது - (அதனிடத்திற் பொருந்திய) செவ்வொளி மேலெழுந்து பரவாமல்,—விசித்தனபோல் - கட்டிவிட்டதுபோல,—பசு நரம்பு பரந்த - பச்சைநிறமான நரம்புகள் பரந்தன. எ-று.

உற என்னுஞ் செயவெனெச்சத்தை பரவாது என்னும் எதிர்மறைவினையெச்சத்தோடு முடிக்க; ஏதுப்பொருட்டு. காண்டோறும் பரந்த, ஆகந்தனிற் பரந்த எனத் தனித்தனி கூட்டுக. செஞ்சோதிமேலெழீஇப்பரவாதும் மருவிரவாதும் உள்வாங்கியுற என மாற்றிப் பொருள்கோடலுமாம். (ச)

மாதோற்ற முறுங்கிரண மலியருண வனப்பினு
லோதேற்ற முடைத்தேனு மொண்குழைவாய்ந்தொளியையே
மீதேற்ற வள்ளைபுகா விளங்குமிரு நீலமாம்
போதேற்ற சரோருகமும் புதுமதியம் பொருவுமே.

இ-ள். தோற்றம் உறும் கிரண மலி மா அருண வனப்பினுல் ஓது ஏற்றம் உடைத்தேனும் - உதயத்தைப்பொருந்திய கிரணங்கள்பொலியப்பெற்ற பெரிய சூரியனையொத்த அழகினுற் சொல்லப்படும் உயர்ச்சியையுடைத்தாயினும், — ஒண்குழை வாய்ந்து ஒளியை மீது ஏற்ற வள்ளை புகா விளங்கும் - ஒள்ளிய குழையையணிந்து ஒளியைமேற்கொண்ட (காதாகிய) வள்ளையிற்புக்கு விளங்குகின்ற,—இரு நீலமாம் போது ஏற்ற - (கண்களாகிய) இரண்டு நீலமலர்களை (த் தன்னிடத்து) க் கொண்ட,—சரோருகமும் - (முகமாகிய) தாமரைமலரும்,—புது மதியம் பொருவும் - புதிய சந்திரனையொத்தது. எ-று.

எனவே முகமும் வெளுத்ததென்றபடி. வாய்ந்து ஏற்ற வள்ளை என்க. உடைத்தேனும் பொருவும் என முடிக்க. (ரு)

வீங்குபுனற் றிருவேலி விரிகடற்பார் வியப்புறத்
தீங்கின்முகக் குடைந்தமதி முகநோக்கிச் செவ்வியா
லாங்களியின் றதைந்துமுக மலர்ந்திடுமென் றமைந்திடாத்
தேங்குமுத வழகழிக்குஞ் செய்யவாய் விளர்த்ததே.

இ-ள். வீங்கு புனல் திரு விரிகடல் வேலி பார் - மிகுந்த நீரையுடைய அழகுபொருந்திய பரந்த கடலை எல்லையாகவுடைய பூமியில்,—வியப்பு

அரூத் தீங்கு இல் முகக்கு உடைந்த மதி முகம் நோக்கி - புசழப்படும் குற்றமில்லாத (சுதக்கிணையின்) முகத்திற்குத்தோற்ற சந்திரனது முகத்தைப் பார்த்து,—செவ்வியால் அளியின் தழைந்து முகம் மலர்ந்திடும் என்று - பருவத்தோடு வண்டுகளால் நெருக்கமுற்று முகம் மலரப்பெறுமென்று,—அமைந்திடாத் தேம் குமுத அழகு அழிக்கும் செய்ய வாய் - அமைவுற்றுத் தேன்பொருந்திய செங்குமுதமலரின் அழகைக்கெடுக்கின்ற சிவந்த வாயானது,—விளர்த்தது - வெளுத்தது. எ-று.

அமைதல் அழித்தற்குரியதன்மைகள் பலவற்றோடும் பொருந்துதல்; கருதுதலுமாம். என்று அழிக்கும் குமுதம் என இயைக்க. முகத்திற்குத் தோற்ற சந்திரனது முகத்தைப் பார்த்துச் செங்குமுதமலர்களலருமென்று கருதி அதனழகை அழிக்கும் சிவந்தவாய் இப்பொழுது வெளுத்தது என்பது கருத்து. பொருளடையானே உவமையடைபெற்றும். (சு)

எள்ளாதிங் கெமைநாளு மெடுக்கலா தெய்ப்பினுற்
றள்ளாடி நைந்தவிடை யுய்ந்ததெனத் தாம்பொறு
விள்ளாது விம்முறு வெய்துறு வெங்கதங்கண்
கொள்ளாநின் றனபோலக் குவிமுலைகண் கரிந்தவே.

இ-ள். எமை நாளும் எடுக்கலாது - எம்மை நாடோறுஞ் சுமக்கலாற்றாது,—எய்ப்பினுல் தள்ளாடி நைந்த இடை - (சுமந்ததனுலாய) இளைப்பினுலே அசைந்து வருந்திய இடையானது,—எள்ளாது இங்கு உய்ந்தது எனத் தாம் பொறு - இகழப்படாது இவ்விடத்து உய்ந்துவிட்டதென்று தாம் அதனைச் சகிக்காது,—விள்ளாது விம்முறு வெய்துறு வெங்கதம் கண் கொள்ளாநின்றனபோல - வெளியேசொல்லாது (மனத்துள்வைத்து) விம்மி வெதும்பிக் கொடிய கோபத்தைக் கண்களிற் கொண்டாற்போல,—குவி முலை கண் கரிந்த - திரண்ட முலைகள் (தம்) கண்கள் கறுத்தன. எ-று.

எள்ளாது என்பதை எடுக்கலாது என்பதன் எதிர்மறையோடு முடித்துப் பொருள்கோடல் இத்துணைச் சிறப்பின்று. கரிதல் கறுத்தல் என்ற பொருட்டாய் கருமையையுங் கோபத்தையுமுணர்த்திநின்றது. இது தற்குறிப்பேற்றம். (எ)

வன்னவா றுடைக்கடல் வந்த முத்தொளி
துன்னவா றரமிளிர் தோட்டுக் காதிடைப்
பொன்னவா றளந்திடு கண்ணி புன்கணுற்
றின்னவா றணிநல மிழந்து வைகினள்.

இ-ள். வன்ன ஆறு உடைக் கடல் வந்த முத்து ஒளி துன்ன - அழகிய ஆற்றினையுடைய கடலிற்றோன்றிய முத்தினது ஒளிபொருந்துதலால்,—வால் தர மிளிர் தோட்டுக் காதிடை - வெண்மைநிறந்தோன்றும்படி விளங்குகின்ற தோட்டினையுடைய காதின்கண்,—பொன்ன ஆறு அளந்திடு

கண்ணி - பொலிவையுடைய வழியை அளந்து செல்லுகின்ற கண்களை யுடையளாகிய சுதக்கிணை,—புன்கண் உற்று இன்ன ஆறு அணி நலம் இழந்து வைகினள் - வருத்தமுற்று இவ்வாறு அழகின்சிறப்பை நீங்கியிருந் தாள். எ-று.

துன்ன எதுப்பொருட்டு. (அ)

பொன்புரை மேனிய டொடையல் பூணினுந்
தன்பெருங் கரங்களாற் றள்ளி யாற்றுவாள்
வன்பெருந் துயரிடை மகிழ்ச்சி யெய்தினு
டுன்பமுந் தருமரோ தொலைவி லின்பமே.

இ-ள். பொன்புரை மேனியள் தொடையல் பூணினும் - பொன்போன்ற மேனியையுடையளாகிய சுதக்கிணை மாலையை அணியினும்,—தன் பெரும் கரங்களால் தள்ளி ஆற்றுவாள் - தனது பெரிய கைகளாலே (அம் மாலையைத்) தள்ளி (அதன்சுமையை)த் தணிப்பவள்,— வன் பெரும் துயரிடை மகிழ்ச்சி எய்தினள் - மிக்க பெரிய துயரின்கண்ணே மகிழ்ச்சியை அடைந்தாள்,—தொலைவில் இன்பம் துன்பமும் தரும் - அழிவில்லாத இன் பப்பொருள் துன்பத்தையும் தரும்போலும். எ-று.

ஆற்றுவாள் என்பதற்கு இளைப்பை ஆற்றுவாள் எனினுமாம். துயர் மாலையைத் தாங்கியதாலாய துயர். அதன்கண் மகிழ்ச்சி என்றது தள்ளு தலால் வந்த மகிழ்ச்சியை. எப்பொழுதும் இன்பத்தைக்கொடுப்பதாகிய மாலை இப்பொழுது துன்பத்தைக் கொடுத்ததாகலின், துன்பமுந்தருமரோ தொலைவிலின்பமே என்றார். இது வேற்றுப்பொருள்வைப்பு என்னு மலங் காரம். (கூ)

மண்ணெதிர்ப் படுபந்தொ டாடு மற்றைய
கண்ணெதிர்ப் படினுங்கைச் சோர்வு காட்டுமாற்
பண்ணெதிர்ப் படுமொழிக் கென்னை பற்றுவ
எண்ணெதி ரப்படு மின்ப துன்பமே.

இ-ள். மண் எதிர்ப்படு பந்தொடு ஆடும் மற்றைய கண் எதிர்ப்படி னும் - பூமியின்கண்ணே எதிர்ப்படுகின்ற பந்தோடு விளையாடுகின்ற மற் றைய பொருள்களும் (தன்) கண்களுக்குக் காணப்பட்டாலும்.—கைச் சோர்வு காட்டும் - (தீண்டுதற்கண்) கைச்சோர்வைக் காண்பிப்பாள்,—பண் எதிர்ப்படும் மொழிக்கு பற்றுவ என்னை - பண்போலும் மொழியையுடைய சுதக்கிணைக்குப் பற்றப்படுவன என்னை? (ஒன்றுமில்லை என்றபடி),— இன்ப துன்பம் எண் எதிரப்படும் - இன்பத் துன்பங்கள் மனத்தில் மாறு தலைப் பொருந்தும். எ-று.

மாறுதல் இன்பந் துன்பமாகவும் துன்பம் இன்பமாகவும் மாறுதல். இன்பத்தைக்கொடுக்கும் பந்துமுதலியன இப்பொழுது துன்பமாகத்தோன் றினமையின் எண்ணெதிரப்படுமின்பதுன்பமே என்றார். இதுவுமேலையணி.

மகிழ்ந்துறப் பதத்தினுங் கரத்தும் வாங்கணி
திகழ்ந்தரற் றுதுறை செயல்கொண் டுள்ளவாற்
புகழ்ந்தவர்க் கல்லது பொருந்தி டாதமை
யிகழ்ந்தவர்க் கியார்கொலோ விரங்கு வார்களே.

இ-ள். உற மகிழ்ந்து பதத்தினும் கரத்தும் வாங்கு அணி - மிகவும் மகிழ்ந்து காலினின்றும் கையினின்றும் கழற்றிய ஆபரணங்கள்.—திகழ்ந்து அரற்றுது உறை செயல் கொண்டுள்ள - விளங்கி ஒலியாதிருக்கின்ற செயலைக்கொண்டுள்ளன;—புகழ்ந்தவர்க்கு அல்லது பொருந்திடாதமை இகழ்ந்தவர்க்கு - புகழ்ந்தவர்க்கன்றிப் பகைத்துத் தம்மை இகழ்ந்தவர்களுக்கு,—இரங்குவார்கள் யார் - இரங்குபவர்கள் யாவர். எ-று.

அணி சிலம்பும், வளையலும். இவைகள் கழற்றியபடியால் இரங்காதிருந்தன என்க. புகழ்தல் அணிதலையும் இகழ்தல் கழற்றுதலையும் குறித்துநின்றன. இதுவுமேலையணி. (கக)

மணிவகுத் துடையபே ரணிகள் வாங்கவும்
தணிவறப் புதியதோர் காட்சி தந்தன
டுணிவுறக் கருவொடு தோற்றும் வண்ணமே
யணியவட் கென்னைகொ லணிக ளாயவே.

இ-ள். மணி வகுத்துடைய பேர் அணிகள் வாங்கவும் - மணிகளாற்செய்த பெரிய ஆபரணங்களைக் கழற்றவும்,—புதியதோர் காட்சி தணிவு அற தந்தனள் - (சுதக்கிணையானவள்) புதியதொரு தோற்றத்தைக் குறைவறக் காண்பித்தனள்,—துணிவு உறக் கருவொடு தோற்றும் வண்ணமே அணியவட்கு - தெளிவுபொருந்தக் கருப்பத்தோடு தோன்றுமியல்பே ஆபரணமாகப்பொருந்தியவளாகிய அச்சுதக்கிணைக்கு;—அணிகளாய என்னை - ஆபரணமாயுள்ளன வேறு யாவை?. எ-று.

உம்மை சிறப்பு. அணியவள் வினையாலணையும்பெயர். (கஉ)

போதெழில் வண்டலா டிடம்பு காநிகழ்
போதிசை தொழிதுாறு வறிதிற் போதவே
போதொரு மூன்றினி லமைத்த பொங்கணை
போதிரண் டினும்விடா புரிந்து வைகுமே.

இ-ள். போது எழில் வண்டல் ஆடு இடம் - மிகுந்த அழகையுடைய விளையாட்டைச்செய்கின்ற இடமானது,—புகா நிகழ்போது இசை தொழில் உறு வறிதிற் போத - (அச்சுதக்கிணை தன்னிடத்திற்) புகுந்து நடக்குங்காலத்து அடையப்படுகின்ற தொழிலை (இப்பொழுது) அடையாது வறிதாகக் கழிய,—போது ஒரு மூன்றினில் அமைத்த பொங்கு அணை - மூவகைப்பூக்களாலுஞ் செய்யப்பட்ட பொலிவாகிய சயனத்திலே,—போது

இரண்டினும் விடா புரிந்து வைகும் - இராப்பகலாகிய இரண்டுகாலத்திலும் நீங்காது விரும்பி இருப்பாள். எ-று.

போத வைகும் என இயையும்; நிகழ்காலம். முப்பூ கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ. "முப்பூவிளைந்தபடியென்கொல்" என்றார் பிறரும். (கங)

மெலியன வலியர்செய் விதியின் மேய்தரும்
வலியன மெலியர்செய் வகையின் வாய்க்குமான்
மெலியன வண்டலாட் டிடஞ்செய் மெய்த்தவம்
வலியன பூவணைத் தவத்தின் மாட்சியே.

இ-ள். வலியர் செய் விதியின் மெலியன மேய்தரும் - வலியோர்செய்த முயற்சியின் சிறுமையினாலே (அவர்செயல்) மெலியனவாகவும் போகும்,—மெலியர் செய்வகையின் வலியன வாய்க்கும் - மெலியோர் செய்த செயலின் பெருமையினாலே (அவர்செயல்) வலியனவாகவும் வாய்க்கப்பெறும்,—வண்டல் ஆட்டு இடம் செய் மெய்த்தவம் மெலியன - (என்னையெனின்) விளையாட்டிடம் செய்யப்பட்ட உண்மையான தவம் மெலியனவாயின,—பூ அணைத் தவத்தின் மாட்சி வலியன - பூவணையினது தவத்தின் மாண்பு வலியனவாயின. எ-று.

மெலியன - பெலமில்லாதன. வலியன - பெலமுள்ளன. ஆக்கம் வருவிக்கப்பட்டது. (கச)

சயந்தனைச் சசிபெறு தகவின் மைந்தனைப்
பயந்தன டெய்வதுந் துபியும் பம்பின
வியந்தன பாரெலா மிகுந்த வோகையே
நயந்தரு களிப்பினர் நவிலு மோதையே.

இ-ள். சசி சயந்தனைப் பெறு தகவின் மைந்தனைப் பயந்தனள் - இந்திராணி சயந்தனைப்பெற்ற தகைமையைப்போல (ச் சுதக்கிணையும்) புத்திரனைப் பெற்றாள்,—தெய்வ துந்துபியும் பம்பின - (அப்பொழுது) தேவதுந்துபியும் ஒலித்தன,—பாரெலாம் வியந்த - பூமியிலுள்ளவர்களெல்லாம் புகழ்ந்தார்கள்,—நயம் தரு களிப்பினர் ஓகையே நவிலும் ஓதை மிகுந்த - நன்மையைத்தருகின்ற களிப்பினையுடையவர்களாகிய நகரமாந்தர்கள் (புதல்வற்பேறாகிய) உவகைக்கருமத்தையே எடுத்துப்பேசுகின்ற ஆரவாரம் (எங்கும்) மிகுந்தன. எ-று.

ஐயுருபு விகாரத்தாற் றொக்கது. உம்மை எச்சத்தோடு சிறப்பு. அருமையும் பெருமையுந்தோன்றச் சயந்தனைச் சசிபெறுதகவின் என்றார். (கரு)

அருகலி லுவகைசொல் பவர்க்கு மன்னவன்
வருகென வேண்டுவ மகிழ்ந்து வீசினு
னிருகவ ரியுமுல கெங்கு மூடிய
ஒருகவி கையுமலா தொழிந்த வில்லையே.

இ-ள். அருகல் இல் உவகை சொல்பவர்க்கு - (புதல்வற்பேருகிய) பெரிய மகிழ்ச்சியை (த் தனக்கு வந்து) சொல்பவர்களுக்கு,—மன்னவன் வருக என வேண்டுவ மகிழ்ந்து வீசினன் - அயமகாராசன் வருக என்று (அவர்கள்) விரும்பியவற்றை மகிழ்ந்து பெரிதுங் கொடுத்தான்.—இரு கவரியும் உலகெங்கும் மூடிய ஒருகவரியும் அல்லாது - (அங்ஙனம் கொடுத்தபொழுது) இரண்டு சாமரைகளும் உலகமுழுது மூடிய ஒரு குடையுமன்றி (க் கொடாமல்) எஞ்சியனவாகிய பொருள்கள் பிறவில்லை. எ-று.

ஒழிந்தவில்லை எனவே ஏனையவெல்லாங் கொடுக்கப்பட்டன என்பதாம்.

வேறு.

தந்தெ னுவ யிர்க்குநுண் ணுசுப்பு வல்லி தன்னையே
யந்த நாண்ம றத்தல்கொண் டறக்க ளிப்பி னுடினர்
கந்த நாற லர்க்குழற் சுருக்கு டைந்து காறொடச்
சந்த னுச லத்தனம் வருத்து கின்ற தன்மையே.

இ-ள். தந்து என அயிர்க்கும் நுண் நுசுப்பு வல்லிதன்னை - நூலோ என்று ஐயமுறுகின்ற நுண்ணிய இடையாகிய கொடியை,—சந்தன அசலத் தனம் வருத்துகின்றதன்மை - சந்தனமணிந்த மலைபோன்ற முலைகள் (தம் பாரத்தானே) வருத்துகின்றதன்மையை,—அந்த நாள் மறத்தல் கொண்டு - (அரசபுதல்வன்பிறந்த) அற்றைத்தினத்தில் மறந்து - கந்தம் நாறு அலர் சுருக்கு உடைந்து கால்தொட - நறுமணங்கமழுகின்ற பூவை அணிந்த கூந்தலின் கட்டவிழ்ந்து காலைத்தீண்ட,— அறக் களிப்பின் ஆடினர் - மிகவும் களிப்பினேடு (பெண்கள்) கூத்தாடினர்கள். எ-று.

முலைப்பாரத்தால் இடை முரியுமென்பதை அரசனுக்குப் புத்திரன் பிறந்தான் என்ற மகிழ்ச்சியால் மறந்து பெரிதுங் கூத்தாடினர்கள் என்பது இதன் கருத்து. தொட ஆடினர் என இயையும்; காரியப்பொருட்டு. (கஎ)

திக்க ளந்த மான்மதந் திளைத்த வாசம் யாவும்வான்
புக்க ளந்த சுண்ணமென் பொடிப்பொ லிந்த பூழிபார்
மிக்க ளந்த குங்குமத் தளங்க ளுள்வி யப்பொடே
மக்க ளந்த நாகராகி மையல் கொண்டு வைகினர்.

இ-ள். மான்மதம் திளைத்த வாசம் யாவும் திக்கு அளந்த - மிருகமதங் கலந்த வாசனுதிரவியங்களிலுள்ள நறுமணங்களெல்லாம் திக்குவரையுஞ் சென்று பரந்தன,—மென் சுண்ணப்பொடிப் பொலிந்த பூழி வான் புக்கு அளந்த - மெல்லிய சுண்ணப்பொடிகளாற் பொலிவடைந்த பூழி ஆகாயத்திலே சென்று பரந்தன,—குங்குமத் தளங்கள் பார் மிக்கு அளந்த - குங்குமச் சேறு பூமியிலே மிக்குப் பரந்தன,—உள் வியப்பொடு மக்கள் அந்த நாகராகி மையல்கொண்டு வைகினர் - அகத்தே வியத்தலோடு மனுடர்கள் அந்தத் தேவர்களாகிக் களிமயக்கங்கொண்டிருந்தார்கள். எ-று.

உள்வியப்போடு விளையாட்டை இமையாது நோக்கி நிற்றலால் நாக ராகி என்றார். "மனிதருந்தேவரானூர்கண்ணிமையாதுவாழ்த்தி" என்றார் பிறரும். இனி "மக்களந்தநாகராதி" என்னும் பாடத்திற்கு இவ்வாசனை களால் மக்களுந் தேவராதியோரும் இஃதென்னையென்று மயக்கமுற்றிருந் தார் எனப் பொருள் கொள்க. (கஅ)

உற்று ளாரொ ருத்தருக் கொருத்த ரோடி யோகையே
சொற்று ளார வர்க்கவர் சுருக்கி லாது தூவினர்
மற்று ளாரி யாரும்யாரும் வண்மை யார்க ளாதலாற்
பெற்று ளாரை யின்னரென்று பேச லாவ தாகுமோ.

இ-ள். ஓடி உற்றுளார் ஒருத்தருக்கு ஒருத்தர் ஓகை சொற்றுளார் - ஓடிப்போய் அந்த நகரத்திலிருப்பவர்கள் ஒருத்தருக்கொருத்தர் மகிழ்ச்சி வார்த்தையைக் கூறினார்கள், — அவர்க்கு அவர் சுருக்கிலாது தூவினர் - அவர்க்கவரே குறைவின்றி (ப் பொன்னைச்) சொரிந்தார்கள்,—உளார் யாரும் யாரும் வண்மையார்கள் ஆதலால் - அங்குள்ளவர்கள் எவர்களும் கொடை யாளர்களாயிருத்தலினால்,—பெற்றுளாரை இன்னர் என்று பேசலாவது ஆகுமோ - (அவர்கள் கொடுத்த பொருள்களைப்) பெற்றவர்களை இவர்கள் என்று குறித்துச் சொல்லுதல் கூடுமோ. எ-று.

ஓகாரம் - எதிர்மறை. மற்று அசை. அவர்க்கு அவர் என்றது சொன் னவர்க்குச் சொல்லப்பட்டவர் என்றபடி. (கசு)

இரக்கு வாரி ரப்புமற்றை யீகுவார்க ளீகையு
நிரக்கு மாகு றைப்படாது நேர்நி றைந்து நிற்றலாற்
புரக்கு வாரு முள்ளகைப் பொருட்டி றம்பு றம்விடா
கரக்கு வாரு மற்றைநாளி னொத்து ளார்க ணத்தினே.

இ-ள். இரக்குவார் இரப்பும் ஈகுவார்கள் ஈகையும் - இரப்பவர்களு டைய இரந்துபெறும்பொருளும் கொடுப்பவர்களுடைய கொடைப்பொரு ளும் —நிரக்குமா குறைப்படாது நேர் நிறைந்து நிற்றலால் - நிறையுமாறு குறைவுபடாது சமப்பட்டு நிற்றலால்,—அற்றைநாளில் - அற்றைத்தினத் தில்,—புரக்குவாரும் - கொடுப்பவர்களும்,— உள்ள கைப்பொருள் திறம் புறம்விடா கரக்குவாரும் - தமக்குக் கிடைத்துள்ள கைப்பொருளின் பகுதி யைப் புறத்தே விடாது மறைத்துப் பேணிவைப்பவர்களாகிய அவ்விரப்பவர் களும்,—கணத்தின் ஒத்துளார் - ஒருகணப்பொழுதினுள்ளே தம்முளொத் தார்கள். எ-று.

மற்று அசைநிலை; வினைமாற்றுமாம். ஐ சாரியை. வறுமை மிகுதி பற்றித் தமக்குக் கிடைத்த பொருளைப் புறத்தே விடாமையின், உள்ளகைப் பொருட்டிறம்புறம்விடா-புரக்குவாரும் என்றார். இனி இதற்கு இரத்தற் றொழிலும் ஈதற்றொழிலுஞ் சமப்பட்டுநிற்றலாற் (கொடுப்பவர்களில்லாமை

யினுற்) கொடுப்பவர்களும் லோபிகளும் தம்முளொத்தார்கள் என்பாரு முளர். அது இத்துணைச் சிறப்பின்று. (உ0)

இம்பர் யாரு யாவுமெல்லை யில்ல கொள்ள வின்பொடோர்
நம்பி நாளி ரண்டுவார மாய தென்ன விற்றுவாஞ்
செம்பொன் மாலை யம்பொனுர்கள் சிந்து போது சென்றுவீழ்
பம்பு மார்ப தங்களே பலன்பெ ருது மீளுமே.

இ-ள். இம்பர் யாரும் யாவும் எல்லை இல்ல கொள்ள - இவ்விடத்து எவர்களும் எப்பொருள்களையும் அளவில்லாதனவாகப் பெற,—இன்பொடு ஓர் நம்பி நாள் இரண்டு வாரம் ஆயது - அக்கொண்டாட்டத்தோடு ஒப்பற்ற இரகு பிறந்தநாள் இரண்டுவாரங் கழிந்தது,—என் நவிற்றுவாம் - (அங்ஙன மாயபோது அவர்கள் கொடையைப்பற்றி நாம்) யாது சொல்வாம்,—செம் பொன் மாலை அம் பொனுர்கள் சிந்துபோது - சிவந்த பொன்னரிமாலை களை அழகிய இலக்குமியைநிகர்த்தவர்களாகிய மகளிர்கள் சிந்தும்போது,— சென்று வீழ் பம்பும் ஆர்பதங்களே பலன் பெருது மீளும் - அவற்றிற் சென்று விழுகின்ற ஒலிக்கின்ற வண்டுகளே அங்குப் பயன்பெருது திரும்பு வன. எ-று.

எனவே அங்குவந்தவர்களிற் பயன்பெருதவர்கள் ஒருவருமில்லை என் பதாம். பொன்னரிமாலையிற்றேனின்ருதலின், செம்பொன்மாலையம்பொ னுர்கள்.........பலன்பெருதுமீளுமே என்ருர். (உக)

மாத ராரொர் பாலர்மற்றை மைந்த ராரொர் பாலரே
தாது ராய மாலையார் தழைத்த சாரொர் சாரெலாம்
பாத ராக முங்கழற் பெய்பதும ராக முஞ்செறி
பேத ராக முங்கொ டேபிறங்கு மவ்வி டங்களே.

இ-ள். மாதரார் ஓர் பாலர் - பெண்கள் ஒருபக்கத்திலுளர்,—மைந்தரார் ஓர் பாலர் - ஆடவர்கள் ஒருபக்கத்திலுளர்,—தாதுராயமாலை ஆர் தழைத்த சார் ஓர் சாரெலாம் - பொன்னரிமாலைகள் நிறைந்து விளங்குகின்ற இடங் கள் ஒருபக்கமெல்லாம் உள்ளன,—அவ்விடங்கள் - அந்த இடங்கள்,—பாத ராகமும் - பாதத்தினிறத்தையும்,—கழல் பெய் பதுமராகமும் - வீரக்கழலி லணிந்த பதுமராகமணியினெளியையும்,—செறி பேதராகமும் கொடு பிறங் கும் - (இவ்விரண்டுஞ்) செறிந்த பேதமான நிறத்தையும் கொண்டு விளங்கும். எ-று.

பாதராகமும் பதுமராகமும் பொன்னரிமாலையிற் ரேற்றுதலின் செறி பேதராகமுங்கொடுபிறங்கும் என்ருர். ராகம் - நிறம். வினையெச்சவீறு கெட்டுநின்றது. (உஉ)

நிகரின் மைக்க ளுரொடு நெருங்கு மாந்தர் தம்மொடு
முகர மிக்க வீறுடு முதிர்ந்த கேளி மூளலாற்

பகரு மட்டு நீறொடும் பரந்த கந்த நீரொடு
மகரு விட்ட சேறொடு மலந்த லைவி ளைந்ததே.

இ-ள். நிகர் இல் மை கணாரொடும் நெருங்கு மாந்தர் தம்மொடும் - ஒப்பில்லாத மை எழுதிய கண்களையுடையவர்களாகிய மகளிருக்கும் நெருங்கிய ஆடவர்களுக்கும்,—முகரம் மிக்க வீறொடு - தலைமைமிக்க வேகத்தோடு,— முதிர்ந்த கேளி மூளலால் - மிகுந்த விளையாட்டு மூண்டுகொள்ளுதலால்,— பகரும் மட்டு நீறொடும் - சொல்லப்படுகின்ற வாசனைப் பொடியோடும்,— பரந்த கந்த நீரொடும் - பரந்த வாசனைபொருந்திய (பனி) நீரோடும்,— அகரு இட்ட சேறொடும் - அகிற்குழம்போடும்,—அலந்தலை விளைந்தது - கலகமுண்டாயது. எ-று.

முன்னருள்ள ஒடு உருபுகளிரண்டும் குவ்வுருபின்பொருளில் வந்தன. பின்னைய உடனிகழ்ச்சி. (உ௩)

வேறு.

வீரமே தருங்கொலை வேற்க ணார்முலைப்
பாரமே வருத்தினும் பரிவின் வல்லைபோ
யாரமே குழைத்திழைத் தப்பிக் கந்தநற்
சாரமே யிறைத்தனர் தலைம யங்கவே.

இ-ள். வீரம் தரும் கொலை வேல் கண்ணார் - வீரம்பொருந்திய கொலைத்தொழிலமைந்த வேல்போலுங் கண்களையுடையவர்களாகிய மகளிர்கள்,—முலைப் பாரம் வருத்தினும் - தம்மை (விரைந்து போதற்கு விடாது) முலைப்பாரம் வருத்தினலும்,— பரிவின் வல்லை போய் - விருப்பத்தினல் விரைந்து சென்று,—ஆரம் குழைத்து இழைத்து அப்பி - சந்தனச்சேற்றைக் குழைத்துண்டாக்கி (ஒருவர்க்கொருவர் அள்ளி) அப்பி,—தலைமயங்க கந்த நல் சாரம் இறைத்தனர் - (தம்முட்) கலப்புற வாசனைபொருந்த நல்ல (பனி) நீரைச் சொரிந்தார்கள். எ-று.

வருத்தினும் போய் என இயையும். தலைமயங்கல் ஒருசொல். (உச)

ஏந்திளங் கொங்கையா ரிரவி மொய்ம்பினர்
வாய்ந்துள சிவிறிநீர் வழங்கக் கங்கணப்
பூந்தளக் கமலமும் புதிய சங்கணி
காந்தளுந் தனித்தனி கடுப்பக் காணுமே.

இ-ள். ஏந்து இளம் கொங்கையார் - நிமிர்ந்த இளமையாகிய முலைகளையுடையவர்களாகிய பெண்களும்,—இரவி மொய்ம்பினர் - மலைபோலும் புயங்களையுடையவர்களாகிய ஆடவர்களும்,—வாய்ந்துள சிவிறிநீர் வழங்க - சிறந்த சிவிறியிலுள்ள பனிநீரைத் தெளிக்க,—கங்கணப் பூ தளக் கமலமும் - கடகத்தையணிந்த பொலிவாகிய இதழையுடைய தாமரைமலர்களும்,—புதிய சங்கு அணி காந்தளும் - புதிய வளையலையணிந்த காந்தண்

மலர்களும்,—தனித்தனி கடுப்பக் காணும் - ஒன்றுக்கொன்று ஒப்பக் காணப்படும். எ-று.

ஒருவருக்கொருவர் சமமான பருவமுடையரென்பார், எந்திளங்கொங்கையாரிரவிமொய்ம்பினர் என்றும், ஒன்றுக்கொன்று பிந்தாது வீசலால் தனித்தனிகடுப்பக்காணும் என்றுங் கூறினர். கங்கணக் கமலம் என்றது ஆடவர் கையை. சஙகணிகாந்தள் என்றது மகளிர் கையை. ஒவ்வாத கமலமுங் காந்தளும் ஒப்ப எனவு மொருபொருள் தோன்றநின்றது. (உரு)

வலியிரா நவ்வியும் மடங்க லேறுமொத்
தொலிவிரா யெதிர்ந்துள ரேனு மோர்ந்திடின்
மெலியரோ மெல்லியர் வேற்கை யாடவர்
புலிவிரா யெறிந்திடக் களபம் போக்குவார்.

இ-ள். வலி இரா நவ்வியும் மடங்கல் ஏறும் ஒத்து - (பெண்கள்) வலிமையில்லாத மானையும் (ஆடவர்கள் வலிமையுள்ள) சிங்கேற்றையும் ஒத்து;—ஒலிவிராய் எதிர்ந்துளரேனும் - ஆரவாரங்கொண்டு எதிர்ந்தாராயினும்,—ஓர்ந்திடின் மெல்லியர் மெலியரோ - ஆராயுமிடத்துப் பெண்கள் (ஆடவர்களுக்கு) வலிமையிற் குறைந்தவர்களோ? (அன்று; எனெனில்), —வேல்கை ஆடவர் புலி விராய் எறிந்திடக் களபம் போக்குவார் - வேலையேந்திய கையையுடைய ஆடவர்கள் புலியை நெருங்கி எறிய (அவர்கள் அதற்குமாறாகக்) களபத்தை எறிவார்கள். எ-று.

புலி நால்வகைச்சாந்துளொன்று. களபம் கலவைச்சாந்து. ஆடவர்கள் புலியை எறியப் பெண்கள் யானைக்கன்றை எறிவார்கள் என்பதுந் தோன்றநின்றது. (உசு)

பணைபடச் சிவிறிநீர் பாய்ச்சற் கேறுடு
பிணைபடச் செல்லுமங் கவர்க்குப் பெண்மரைத்
துணைபடக் கொடாமையுந் துலங்கு காவியி
னிணைபடக் கொடாமையு மெளிய வல்லவே.

இ-ள். பணைபடச் சிவிறிநீர் பாய்ச்சற்கு - பெருமைபொருந்தச் சிவிறிநீரைத் தெளித்தற்கு;—ஏறொடு பிணைபடச் செல்லும் அங்கவர்க்கு - சிங்கேற்றையும் பெண்மானையும் ஒப்பச் செல்லுகின்ற (ஆடவரும் பெண்களுமாகிய) அவ்விருபகுதியார்களுக்கும்,—பேண் மரைத் துணைபடக் கொடாமையும் - (அந்நீர்) விரும்பப்படுகின்ற தாமரைமலர்போன்ற இருகண்களினும்படக் கொடாமையும்,—துலங்கு காவியின் இணைபடக் கொடாமையும் எளியவல்ல - விளங்குகின்ற கருங்குவளைமலர்போலும் இருகண்களினும் படக் கொடாமையும் அரியனவாயின. எ-று.

ஏற்றை ஒப்பச் செல்லும் ஆடவர்க்கும் பிணையையொப்பச் செல்லும் பெண்களுக்கும் மரைத்துணைப்படக் கொடாமையும், காவியினிணைப்படக்

கொடாமையும் எளியவல்ல என்க. நிரனிறை. கொடாமையும் எளியவல்ல எனவே கொடுப்பர் என்பது தாற்பரியமாம். பெண் விகாரம். மரை முதற் குறை. தாமரை, காவி என்பன ஆகுபெயர்கள். (உஎ)

நன்பொருட் டிருதிறத் தவர்நன் கேளிவாய்த்
தென்பொருட் டெழுமிரு சிகரி தாங்கிய
மின்பொருட் டிரங்குமச் சிலம்பு தாள்விடா
தென்பொருட் டிரங்குமக் கழல்க ளென்பவே.

இ-ள். நன்பொருட்டு இருதிறத்தவர் நன் கேளிவாய் - மங்கலங் காரணமாக (ச் செய்யப்படும்) ஆண் பெண் என்னு மிருபகுப்பினர்களது நல்ல விளையாட்டினிடத்து,—தென் பொருட்டு எழும் இரு சிகரி தாங்கிய மின் பொருட்டு அ சிலம்பு இரங்கும் - அழகாகிய பொருளையுடைத்தாய் எழுந்த (முலைகளென்னும்) இருமலைகளைத் தாங்கிய இடை காரணமாக அச் சிலம்புகள் ஒலிக்கும்,—தாள்விடாது அக்கழல்கள் என்பொருட்டு இரங்கும் - கால்களை விடாமற் பற்றிக்கொண்டு அக்கழல்கள் யாதுகாரணமாக ஒலிக்கும். எ-று.

அகரச்சுட்டுக்களிரண்டும் முறையே பெண்களதும் ஆடவர்களதும் காலிலுள்ள சிலம்பும் கழலும் என்பவற்றைச் சுட்டிநின்றன. என்ப அசைநிலை. என் என்னும் வினு அதிசயங்குறித்து நின்றது. நன்பொருட்டு என்பதற்குப் பிள்ளையையுடையது எனப் பொருள்கூறி, விளையாட்டோடு கூட்டிப் பொருள்சொள்வாருமுளர். நன்பொருள் - பிள்ளை. (உஅ)

செருமித நிலைதெரிந் துரைப்பச் சேணுய
ரருமித நிலையவர் தமக்கு மாகுமே
பெருமித வரிசன மளாய பெட்பறு
நிருமித நிலைநெய் யாட்டு நீர்மையே.

இ-ள். பெருமித அரிசனம் அளாய பெட்பு அறு நிருமித நிலைய நெய் ஆட்டு நீர்மை - மகிமைபொருந்திய மஞ்சள் கலக்கப்பெற்ற விருப்புநீங்காத நியமிக்கப்பட்ட நிலையையுடைய நெய்விளையாட்டின் நீர்மையினது,— சேரும் இத நிலை தெரிந்து உரைப்ப - அடைந்த இன்பநிலையைத் தெரிந்து கூற,— சேண் உயர் அருமித நிலையவர் தமக்கும் ஆகுமே - சுவர்க்கமாகிய உயர்ந்த பதத்தையுடையவர்களாகிய தேவர்களுக்குங் கூடுமோ? (கூடாது.) எ-று.

வினு எதிர்மறுத்து நின்றது. அளாய, அறுத, நிலைய என்னும் பெயரெச்சங்கள் தனித்தனி நெய்யாட்டோடு முடிந்தன. இனி நீர்மை என்பதை எழுவாயாகக்கொண்டு நிலைய என்பதோடு முடித்துப் பொருள் கூறினு மமையும். சேரும் என்பது செரும் எனக் குறுகிநின்றது. (உகூ)

கலிப்புடை நறும்புனல் படிந்து கானலஞ்
சொலிப்புடை நாமவே லரசன் சொன்மறை

யொலிப்புடை முனியொடு மேகி யொண்டவப்
பலிப்புடைப் பருமணிப் பவனத் தெய்தினன்.

இ-ள். கலிப்பு உடை நறும்புனல் படிந்து - ஒலித்தலையுடைய நறிய நீரிலே ஸ்நானஞ்செய்து,—கானல் அம் சொலிப்பு உடை நாமவேல் அரசன் - ஒளியினது வளர்ச்சியையுடைய அச்சத்தைச்செய்கின்ற வேற்படையையேந்திய திலீபமகாராசன்,—சொல் மறை ஒலிப்பு உடை முனியொடும் ஏகி - சொல்லப்படுகின்ற வேதகோஷத்தையுடைய வசிட்டமுனிவரோடும் சென்று,—ஒண் தவப் பலிப்பு உடைப் பருமணிப் பவனத்து எய்தினன் - ஒள்ளிய தவப்பலிப்பாகிய புதல்வனையுடைய பரிய மணிகளை யழுத்திச் செய்த கோயிலையடைந்தான். எ-று.

படிந்து ஏகி எய்தினன் என முடிக்க. தவப்பலிப்புடைப்பவனம் என்பதற்கு, புதல்வனைத் தன்னிடத்துக் கொண்டமையாற் றவப்பலிப்பையுடைய கோயில் எனினுமாம். கோயில் - அரசமாளிகை. (௩௦)

பரிந்தரு டானமுற் பவித்தி ரத்தகை
யிருந்தொழி னடந்தவங் கிருந்த வேந்தருன்
மருந்தனற் கண்டபின் மகிழ்ச்சி யுண்ணிறைந்
திருந்தது நடந்தது கவ்வை யீட்டமே.

இ-ள். பரிந்து அருள் தானம் முன் பவித்திரத் தகை இருந்தொழில் நடந்தது - விரும்பிக் கொடுக்கப்படுகின்ற தானமுதலாகிய சுத்தமான தகைமைபொருந்திய பெரிய தொழில்கள் நடந்தன,—அங்கு இருந்த ஏந்தல் மருந்து அன்னாற் கண்டபின் - அங்கே இருந்த அரசன் (பிறவிப்பிணிக்கு) மருந்தையொத்த புதல்வனைக் கண்டபின்பு,—மகிழ்ச்சி உள் நிறைந்து இருந்தது - மகிழ்ச்சியானது அவன் உள்ளத்தே நிறைந்திருந்தது,—கவ்வை ஈட்டம் நடந்தது - துன்பக்கூட்டம் நீங்கியது. எ-று.

தானம் பீசதானமுதலியன. முற்பவித்திரத்தகையிருந்தொழில் என்றது சாதகன்ம முதலியனவற்றை. (௩௧)

வெங்கய நிருதர்த மகுட மீமிசை
யங்கதிர் கனைகழ லரச னனன
பங்கய மலர்தர விளங்கு பான்மையாற்
செங்கதி ராயினன் சிறிய செம்மலே.

இ-ள். வெம் கய நிருதர்தம் மகுட மீமிசை அதிர் கனைகழல் அரசன் ஆனன பங்கயம் - கொடிய யானைப்படையையுடைய அரசர்களது முடியின் மீது ஒலித்தலின் செறிவுபொருந்திய வீரக்கழலையுடைய அரசனது முகத் தாமரை,—அலர்தர விளங்கு பான்மையால் - அலரும்படி விளங்குந்தன்மையினால்,—செங்கதிர் ஆயினன் சிறிய செம்மல் - சூரியனாயினன் இளைய புதல்வனாகிய இரகு. எ-று.

எத்துணை வலிபடைத்த அரசர்களாலும் வணங்கப்படும் பாதங்களை யுடையவனென்பார், வெங்கயநிருதர்தம்மகுடமீமிசை யங்கதிர்கனைகழலர சன் என்றும், புதல்வனைக்கண்டு முகம்மலர்தலிற் செங்கதிராயினன்சிறிய செம்மலே என்றுங் கூறினர். இது ஏதுவுருவகம். (ருஉ)

உதியமை யுளத்தின னுவகை யொண்கடல்
கதியமை வின்றியே பெருகக் காண்டலாற்
புதியநன் கலையெலா நிறைந்த பூரண
மதியமு மாயின னனைய மைந்தனே.

இ-ள். உதி அமை உளத்தினன் உவகை ஒண் கடல் - கல்வியறிவமை ந்த மனத்தையுடையவனாகிய திலீபனது மகிழ்ச்சியாகிய ஒள்ளிய கடலை,— கதி அமைவு இன்றிப் பெருகக் காண்டலால் - கதிகுறைதலின்றிப் பெரு கச்செய்தலால், — அனைய மைந்தன் - அப்புதல்வன்,—புதிய நன் கலையெ லாம் நிறைந்த பூரண மதியமும் ஆயினன் - புதிய நல்ல கலைகளெல்லாம் நிறையப்பெற்ற பூரணசந்திரனுமாயினன். எ-று.

காண்டலால் ஆயினன் என்க. காண்டலால் என்பதற்குக் காணப் படலால் எனினுமாம். புதியமதி என்க. உவகைக்கடலைப் பெருகச்செய்த லாற் புதியமதி என்றார். இதுவுமேலையணி. (ருங)

அடுஞ்சயத் திகிரியா னனைய வேலையின்
விடுஞ்சிறை யின்மையான் மேய தென்புலம்
படுஞ்செய லினர்கட னென்னும் பாரமா
நெடுஞ்சிறை தான்றனி நீங்கி னனரோ.

இ-ள். அனைய வேலையின் - (புதல்வன்பிறந்த) அந்தச்சமையத்தில்,— விடும் சிறை இன்மையால் - தன்னால்விடப்படும் சிறை இல்லாமையினால்,— அடும் சயத் திகிரியான் - (பகைவரைக்) கொல்லுகின்ற வெற்றியைக்கொ ண்ட ஆஞ்ஞாசக்கரத்தையுடையவனாகிய திலீபன்,—மேய தென்புலம்படுஞ் செயலினர் கடன் என்னும் பாரமாம் நெடும் சிறை - (தன்னை) அடைந்த தென்புலத்தாரது கடனாகிய பாரமாகிய நெடிய சிறையினின்றும்,—தான் தனி நீங்கினன் - தான் தனியே நீங்கினன். எ-று.

இன்மையால் தனி நீங்கினன் என்க. மேய சிறை எனக் கூட்டுக. ருச

தெட்டமெய்த் தவப்பயச் செல்வற் கவ்வயின்
மட்டில கலைக்கட றனையும் வாளமர்
முட்டிய பகையையு முடிவு காண்பனென்
றிட்டன ரொருபெய ரிரகு வென்னவே.

இ-ள். மட்டு இல கலைக்கடல் தனையும் வாள் அமர் முட்டிய பகை யையும் முடிவு காண்பன் என்று - அளவில்லாத நூற்கடலையும் வாட்போ

ரில் எதிர்த்த பகைக்கடலையும் (இவன்) கடப்பான் என்று,—அவயின் - அவ்விடத்து,—தெட்ட மெய்த் தவப் பயச் செல்வற்கு - தெளிந்த மெய்த் தவப்பயனுயுள்ள புதல்வனுக்கு,—இரகு என்ன ஒருபெயர் இட்டனர் - இரகு என்று ஒருபெயரை இட்டார்கள். எ-று.

என்ன இட்டனர் என்க. லக் - கடத்தல். உ விகுதி. ரகு என்றது லகார ரகாரவொற்றுமைபற்றி. முடிவுகாணல்-முற்றுக்காணல்=ஒற்றுமை.

ஒல்லைமென் றிருவிளம் பருவத் தேயுரம்
புல்லவம் புவிமகள் புளகம் பூப்பநாட்
செல்லறத் தொடுமிக வளர்கின் றான்றிகழ்
மல்லலஞ் சிறுகலை மதிய மென்னவே.

இ-ள். ஒல்லை இளம் பருவத்தே மென் திரு உரம் புல்ல - விரைவில் இளம்பருவத்திலேயே மெல்லிய (இயல்பையுடைய) திருமகள் மார்பைத் தழுவவும்,—அம் புவிமகள் புளகம் பூப்ப - (சிறிய கால்படுந்தோறும்) பூமி தேவி புளகங்கொள்ளவும்,—திகழ் மல்லல் அம் சிறுகலை மதியம் என்ன - விளங்குகின்ற பொலிவாகிய அழகிய சிறிய கலையையுடைய பிறையைப் போல,— நாள் செல் அறத்தொடு மிக வளர்கின்றான் - பலநாட்சென்று முற்றிய தருமப்பயனோடு மிகவும் வளருகின்றான். எ-று.

புல்ல, பூப்ப வளருகின்றான், என்ன வளருகின்றான் எனத் தனித் தனி முடிக்க. பூருவசென்மத்திற்செய்த தருமப்பயனோடு வளர்கின்றான் என்பார் நாட்செல்லறத்தொடு என்றார். (ருசு)

வேறு.

விண்டிறந் தெழுந்த பானு விண்ணிழிந் துவரி வீழா
மண்டிறந் தெழுந்தா லொக்க வயங்கொளிவசிட்டன்வாய்மை
யெண்டிறந் தலர்ந்ததொன்மையெழுத்தெனுமிமையா வுள்ளக்
கண்டிறந் திட்டான் செல்வக் கவின்பெறு காம னார்க்கே.

இ-ள். விண் திறந்து எழுந்த பானு - ஆகாயத்தைக் கிழித்து எழுந்த சூரியன்,—விண் இழிந்து உவரி வீழா மண் திறந்து எழுந்தால் ஒக்க வயங்கு ஒளி வசிட்டன் - அவ்வாகாயத்தினின்றும் இறங்கிக் கடலிற் படிந்து பூமியைக் கிழித்துக்கொண்டு எழுந்தாற்போல விளங்குகின்ற ஒளியையுடைய வசிட்டன்,—செல்வக் கவின்பெறு காமனார்க்கு - செல்வத்தையுடைய அழகைப்பெற்ற மன்மதனையொத்தவனாகிய அப்புதல்வனுக்கு,—வாய்மை எண் திறந்து அலர்ந்த தொன்மை எழுத்து எனும் - (யாவர்க்கும்) உண்மையான அறிவை உண்டாக்கிப் பரந்த பழைய கல்வியென்னும்,—இமையா உள்ளக் கண் திறந்திட்டான் - இமையாத அகக்கண்ணைத் திறந்தான். எ-று.

காமனூர்க்குத் திறந்தான் என்க. விண்டிறந்தெழுந்தபானு......ஒக்க வயங்கொளிவசிட்டன்...எழுத்தெனும் இமையாவுள்ளக்கண்டிறந்திட்டான் என்றமையால், ஒளியினலன்றி, கண்ணைத் திறத்தலாலும் அச்சூரியனுக் கொப்பாதல் கொள்க. செல்வத்தைக் கவினுக்கடையாக்கிச் செல்வமாகிய கவின் எனினுமாம். எழுத்து ஆகுபெயர். (௩எ)

வரும்பொரு ளுணரு நேச மாசறு தயிலம் வாக்கி
யரும்பொருட் கலைக ளென்னு மணித்திரி யநந்த மாட்டிப்
பெரும்பொருட் புத்தி யென்னு மகலிடைப் பெரிதி ளுக
விரும்பொரு ளறிவுத் தீப மிருளறக் கொளுத்தி யிட்டான்.

இ-ள். பெரும் பொருள் புத்தி என்னும் அகலிடை - பெரிய பொருள் களையெல்லாம் நிச்சயித்து அறியும் புத்தியென்னும் அகலின்கண்,— வரும் பொருள் உணரும் நேச மாசு அறு தயிலம் வாக்கி - (நூல்களுள்ளே) பொரு ந்துகின்ற பொருள்களை அறியவிரும்புகின்ற அவாவாகிய குற்றமற்ற எண் ணெயை வார்த்து,—அரும் பொருள் கலைகள் என்னும் அணித் திரி அநந் தம் மாட்டி - அரிய பொருளையுடைய நூல்கள் என்று சொல்லும் அழகிய திரிகள் பலவற்றைச் சேர்த்தி,—இரும் பொருள் அறிவுத் தீபம் இருள் அற பெரிதின் ஆகக் கொளுத்தியிட்டான் - பெரிய பொருள்களை அறிகி ன்ற அறிவாகிய தீபத்தை அஞ்ஞானம் நீங்கும்படி பெரிதாகக் கொளுத் தினர். எ-று.

அகலிடை, வாக்கி, மாட்டி, கொளுத்தியிட்டான் என்க. பயிற்றுந் தோறும் நேசமுண்டாதலின் வாக்கி என வசிட்டன்மேலேற்றினர். (௩அ)

ஈட்டரு நயன நல்கி யிருளறச் சோதி யேற்றிக்
காட்டுமேற் பொருளை யெல்லாங் காண்பதற் கரிய வாமோ
பூட்டிய விருமை யின்ப வறத்துறைப் பொருளை யெல்லாம்
வேட்டுடன் றெருண்டு காணு விம்முறு விழுமந் தீர்ந்தான்.

இ-ள். ஈட்டு அரும் நயனம் நல்கி - சம்பாதித்தற்கரிய கண்ணைக்கொ டுத்து,—இருள் அறச் சோதி எற்றி காட்டுமேல் - இருள்நீங்கும்படி விள க்கை எற்றிக் காண்பிப்பாஞயின்,—பொருளை எல்லாம் காண்பதற்கு அரிய ஆமோ - பொருள்களையெல்லாம் ஒருவன் காணுதற்கு அரியதாகுமோ (ஆகாது),—பூட்டிய இருமை இன்ப அறத்துறைப் பொருளை எல்லாம் வேட்டு உடன் தெருண்டு காணு - வசிட்டன் கொளுவிய இருமையின்பத் திற்குமுரிய அறநூற்பகுதியின் பொருள்களையெல்லாம் விரும்பி ஒருசேரத் தெளிவுற்றறிந்து,—விம்முறு விழுமம் தீர்ந்தான் - விம்முதற்குக் காரணமா கிய துன்பத்தை நீங்கிஞன். எ-று.

ஒகாரம் எதிர்மறை. இது ஒட்டோடுகூடிய வேற்றுப்பொருள்வை ப்பு. நயனம்-கல்வி. சோதி-அறிவு. காட்டுமேல் என்பதற்கு வசிட்டன்

காட்டுமேல் எனவும், ஒருவன்காட்டுமேல் எனவுங் கொள்க. விழுமம் காணாமையால் வந்த துன்பம். (௩க)

நிபநவை யற்ற பெற்றி நெடும்பவ முன்னி னேச
விபநகி லப்பூங் கோதை யிடத்துள னேனு மெஞ்சாத்
தபநய நட்பிற் றூய தாபத னருளிற் றாழ்வி
லுபநய னத்தும் வேறோ ருற்பவ முற்றா னன்றே.

இ-ள். முன்னில் நிபம் நவை அற்ற பெற்றி நெடும் பவம் - கருதுமிடத்துக் காரணத்தாற் குற்றமற்ற நெடிய (உடற்) பிறப்பானது,—நேச இப நகிலப் பூ கோதை இடத்து உளனேனும் - விரும்பப்படும் யானைபோன்ற தனங்களையும் பொலிவாகிய கூந்தலையும் உடையளாகிய சுதக்கிணையிடத்து உள்ளாயினும்,—எஞ்சாத் தப நய நட்பிற்று ஆய தாபதன் அருளில் - குறையாத தவப்பயனில் விருப்பையுடையனாகிய வசிட்டமுனிவரது திருவருளினால்,—தாழ்வு இல் உபநயனத்தும் வேறு ஓர் உற்பவம் உற்றான் - மேன்மைபொருந்திய உபநயனத்தின் கண்ணும் வேறொருபிறவியை அடைந்தான். எ-று.

இரகு சுதக்கிணையிடத்துப் பிறந்தமையன்றி உபநயனத்தின்கண்ணும் வேறொரு பிறவியை அடைந்தான் என்பதாம். எனவே, துவிசத்துவம் அடைந்தான் என்பது கருத்து. காரணத்தாற் குற்றமற்ற பவம் என்றது புண்ணியஜன்மம் என்றபடி. (௪0)

சூழ்பட்ட கலைக ளொன்றிற் கொருவராந் தூய்மை யோர்பாற்
பேழ்பட்ட தனுமுற்சொல்லும்பெரும்படைத்தொழில்களெல்
லூழ்பட்ட வினைக ளூக்கத் துறுத்தலிற் கற்றான் கற்ற [லா
காழ்பட்ட கடுமை யாரே கணித்தெடுத் துரைக்க வல்லார்.

இ-ள். சூழ்பட்ட கலைகள் ஒன்றிற்கு ஒருவராம் தூய்மையோர்பால் - ஆராயப்பட்ட சாத்திரங்களுள்ளே ஒருநூலுக்கு ஒருவரேயாயுள்ளதெளிவுடையோராகிய பண்டிதர்களிடத்து,—பேழ்பட்ட தனுமுன் சொல்லும் பெரும் படைத் தொழில்களெல்லாம் - பகுதிப்பட்ட வில்முதலாகச் சொல்லப்படுகின்ற பெரிய படைக்கலத்தொழில்களெல்லாவற்றையும்,—ஊழ்பட்டவினைகள் ஊக்கத்து உறுத்தலின் கற்றான் - ஊழ்வினைகள் ஊக்கத்தோடு (அறிவினிடத்தே கொண்டுவந்து) உறுத்துதலினாற் கற்றறிந்தான்,—கற்ற காழ்பட்ட கடுமை கணித்து எடுத்து உரைக்க வல்லார் யார் - அவன் கற்ற மிகுந்த வேகத்தை அளவுபடுத்தி எடுத்துச்சொல்லவல்லவர் யாவர்? எ-று.

யாவர் என்னும் வினாப்பெயர் யார் என்றாய் ஈண்டின்மைகுறித்து நின்றது. எல்லாவித்தைகளிலும் ஒருவர் தெளிவுடையோராயிருத்தல் கூடாமையின் சூழ்பட்டகலைகளொன்றிற்கொருவராந்தூய்மையோர்பால் என்றும், வில்வித்தைமுதலிய எல்லாவித்தைகளிலும் இவன் சாமர்த்திய

மடைந்தான் என்பார் பேழ்பட்டதனுமுற்சொல்லும்பெரும்படைத்தொழில்களெல்லாம்.........கற்றான் என்றும், செயற்கையறிவோடு இயற்கையறிவுமுடையனென்பது தோன்ற, கற்றகாழ்பட்டகடுமையாரேகணித்தெடுத்துரைக்கவல்லார் என்றுங் கூறினார். (சக)

வாட்டொழில் வேலி கோலி யயிற்றொழி லகழி வாங்கித்
தோட்டொழின் ஞாயி லாக்கித் துளைக்கைமாத் துரக முள்ள
கோட்டொழிற் பொறிகள் செய்து தந்தைபாற்கற்றகோள்விற்
சேட்டொழிற்றெய்வம்வாய்ந்தோர்தெறற்கருநகருமொத்தான்.

இ-ள். வாள் தொழில் வேலி கோலி - வாள்வித்தையாகிய மதிலையுண்டாக்கி, — அயில் தொழில் அகழி வாங்கி - வேல்வித்தையாகிய கிடங்கைவளையச்செய்து, — தோள் தொழில் ஞாயில் ஆக்கி - மல்வித்தையாகிய ஞாயிலை உண்டாக்கி,—துளைக்கைமா துரகம் உள்ள கோள் தொழில் பொறிகள் செய்து - யானையும் குதிரையுமாகவுள்ளனவற்றிற் செய்யப்படும் தொழில்களாகிய பொறிகளைச்செய்து, — தந்தைபால் கற்ற கோள்வில் சேண் தொழில் தெய்வம் வாய்ந்து - பிதாவினிடத்துக்கற்ற கொலைத்தொழிலையுடைய வில்லினது பெரிய வித்தையாகிய நகர்த்தெய்வம் வாய்க்கப்பெற்று,—ஓர் தெறற்கு அரும் நகரும் ஒத்தான் - ஒரு அழித்தற்கரிய நகரத்தையுமொத்தான். எ-று.

இவைகள் தனக்குக் காவலாகவிருக்கத் தான் அவற்றிற்கு நடுவே அழிக்கப்படாமலிருந்தான் என்பார் இங்ஙனங் கூறினார். யானையுங் குதிரையுமாகவுள்ளனவற்றிற் செய்யப்படுந் தொழில் யானையேற்றமும் குதிரையேற்றமும். (சஉ)

முற்பொழு தாயி னனல் லறத்துறை முதிர்வி னுப்பட்
சொற்பொழு தாயி னன்வெம் பகையடுந் தொழிலிற் றண்ணெ
பிற்பொழு தாயி னன்றெண் பெருமதி யமைவிற் பின்னை [ண்
யற்பொழு தாயி னனில் லணிப்பக லொன்றி னானன்.

இ-ள். நல் அறத்துறை முதிர்வின் முற்பொழுது ஆயினன் - நல்ல தருமத்துறைகளின் முதிர்ச்சியினால் முற்பொழுதையொத்தான், — வெம்பகை அடும் தொழிலின் நாப்பண் சொல்பொழுது ஆயினன் - கொடிய பகையை அடுந்தொழிலினால் மத்தியானகாலத்தை ஒத்தான்,—தெண்பெரு மதி அமைவின் தண்ணென் பிற்பொழுது ஆயினன் - தெள்ளிய பெரிய புத்தி அமையப்பெறுதலால் குளிர்ச்சியையுடைய பிற்பொழுதை ஒத்தான்,—பின்னை அற்பொழுது ஆயினன் இல் - பின்னர் இராக்காலத்தை ஒத்தானில்லை, — அணிப்பகல் ஒன்றின் ஆனன் - அழகிய ஒரு பகற்காலத்தை ஒத்தான். எ-று.

வரவாமுதிர்தலாலே முற்பொழுதையும், அடுந்தொழிலினாலே உச்சிப் பொழுதையும், செல்லச்செல்ல அமைதலாற் பிற்பொழுதையுமொத்தான் என்க. ஏது உவமை. உருவகமாகக் கொள்ளினுமமையும். (சங)

விஞ்சிய வென்றித் தன்கை வேலொன்றிற் கரசர் யாரு
மெஞ்சலி லிகற்போர் தன்னி லிலக்கம தாகத் தானு
மஞ்சுகப் பரியோ னைரைந் தம்பினுக் கிலக்கமாய
வஞ்சிய ரிருகட் டாரை வாளினுக் கிலக்க மானன்.

இ-ள். விஞ்சிய வென்றித் தன் கை வேல் ஒன்றிற்கு - திலீபமகாரா சன் மிகுந்த வெற்றியையுடைய தனது கையிலுள்ள வேற்படையொன்றி னுக்கு;—அரசர் யாரும் எஞ்சலில் இகல் போர்தன்னில் இலக்கம் ஆக - அரசர்கள் யாவரும் குறையாத பகையையுடைய போரிலே இலக்காக,— தானும் - தானும்,—அம் சுகப் பரியோன் ஓர் ஐந்து அம்பினுக்கு இலக்கம் ஆய - அழகிய கிளியாகிய குதிரையையுடையவனாகிய மன்மதனது ஐந்து பாணங்களுக்கும் இலக்காயுள்ள,—வஞ்சியர் இருகண் தாரை வாளினுக்கு இலக்கம் ஆனன் - பெண்களது இரண்டுகண்களாகிய கூரியவாளுக்கு இலக் காயினன். எ-று.

அரசர்கள் தனது ஒருவேற்படைக்கிலக்காகத் தான் மகளிர் கண்களா கிய இருவாட்படைக்கிலக்கானன் எனவே காளைப்பருவத்தை அடைந்தான் என்பது பெறப்பட்டது. (சச)

கட்டழ கரும்பு காளைக் கற்பகங் காமர் காட்சி
மட்டில விளமை யென்னு மாட்சிய பலத்த தேனும்
பட்டுடைக் கமலச் சேக்கைப் பாசிழைப் பூவைக் கல்லாற்
கிட்டுமோ வெளிதிற் கீதப் பனுவன்மென் கிளியி னார்க்கே.

இ-ள். கட்டழகு அரும்பு காளைக் கற்பகம் - பேரழகுதோன்றப்பெற்ற காளைப்பருவத்தையுடைய இரகுவென்னுங் கற்பகதரு,—காமர் காட்சி மட்டு இல இளமை என்னும் மாட்சிய பலத்ததேனும் - அழகிய தோற்றத் தையுடைய அளவில்லாத இளமைப்பருவமாகிய நல்ல பழத்தையுடையதாயி னும்,— பட்டு உடை பாசிழை கமலச் சேக்கைப் பூவைக்கு அல்லால் - பட்டுவஸ்திரத்தையும் பசிய ஆபரணங்களையுமுடைய தாமரைச்சேக்கையை யுடைய பூவைக்கேயன்றி,—கீதப் பனுவல் மென் கிளியினார்க்கு எளிதில் கிட்டுமோ - கீதம்போன்ற சொற்களையுடைய மெல்லிய கிளியார்க்குக் கிடைக்கப்பெறுமோ. எ-று.

பூவை என்பது இலக்குமியையும், நாகணவாயையும், கிளியினார் என் பது பெண்களையும், கிளியையும் உணர்த்திநின்றன. எனவே இரகுவுக்கு இளமைப்பருவமடைய இலக்குமீகரமு மதிகரித்ததென்பது பெறப்பட்டது. ஓகாரம் எதிர்மறை. கட்டழகரும்பு என்பதற்கு அழகாகிய அரும்பை அரும்பிய எனினுமாம். (சரு)

நோக்கரு மநங்கன் முன்னை விதியினுற் பெரிது நோற்ற
பாக்கிய முருக்கொண் டன்ன படிவத்த பருவக் காளை
மாக்கவின் மடவார் கண்ணுள் வதிதலாற் றுயிலுஞ் சிந்தை
நீக்கற நிரம்ப லால்வே றுன்னலு நீக்கி ஞரே.

இ-ள். நோக்க அரும் அநங்கன் முன்னை விதியினுல் பெரிது நோற்ற பாக்கியம் உருக்கொண்டன்ன - பார்த்தறியமுடியாத அரூபியாகிய மன்மதன் முற்பிறப்பிலே விதிப்படி மிகவுந் தவஞ்செய்துபெற்ற செல்வமே ஒருவடிவெடுத்தாற்போன்ற,—படிவத்த பருவக் காளை - வடிவத்தையுடைய இளமைப்பருவத்தையுடையவனுகிய இரகு, — மாக் கவின் மடவார் கண்ணுள் வதிதலால் துயிலும் - பேரழகையுடைய பெண்களது கண்ணுள் இருத்தலால் நித்திரையையும்,—சிந்தை நீக்கு அற நிரம்பலால் வேறு உன்னலும் நீக்கிஞர் - மனத்துள் எங்கும்நிறைதலால் பிறிதொன்றைச் சிந்தித்தலையும் (அவர்கள்) நீங்கிஞர்கள். எ-று.

அருமை ஈண்டு இன்மைமேனின்றது. அநங்கன் நோற்ற பாக்கியம் உருக்கொண்டன்ன படிவம் என்க. (சசு)

தேசுலாங் காம னன்ஞன் வடிவெலாந் தெரியக் கொண்டு
பூசலார் விழியார் கள்ளஞ் செய்திடிற் போவ தெங்கே
காசுலாங் கொங்கை நல்லார் காண்டொறு மனைய காமன்
மாசிலா வழகுக் காவல் வல்லியிற் றளைக்கப் பட்டார்.

இ-ள். தேசு உலாம் காமன் அன்ஞன் வடிவெலாம் - ஒளிபரந்த மன்மதனையொத்தவனுகிய இரகுவினது வடிவுமுழுவதையும், — தெரியக்கொண்டு பூசல் ஆர் விழியார் கள்ளம் செய்திடில் போவது எங்கே - தெரிவுறும்படிகொண்டு போரார்ந்த கண்களையுடைய மகளிர் கள்ளஞ்செய்தால் (அவர்கள் தப்பிப்) போவது எங்கே?,— காசு உலாம் கொங்கை நல்லார் காண்டொறும் - இரத்தினவடங்கள் விளங்குகின்ற முலைகளையுடைய பெண்கள் (அவன்வடிவைப்) பார்க்குந்தோறும், — அனைய காமன் மாசு இலா அழகுக் காவல் வல்லியில் தளைக்கப்பட்டார் - அந்த மன்மதனது குற்றமில்லாத அழகாகிய காவலையுடைய விலங்கிற் பூட்டப்பட்டார்கள். எ-று.

தெரியக்களவெடுத்தாற் றப்புவது எப்படி? உடனே விலங்கிற் பூட்டப்பட்டார்; களவுசெய்தவர் விலங்கிற் பூட்டப்படுவர் என்ற விதிப்படி என்பதாம். தெரிவுறும்படி என்பது பிறர்க்குத் தெரியும்படி எனவும், கண்களுக்குத் தெரிவுறும்படி எனவும் பொருள்படநின்றது. கள்ளம் அவனுக்குத்தெரியாது அவன்வடிவைக் களவெடுத்தல். கொண்டுகள்ளஞ்செய்திடிற் போவது எங்கே என இயையும். (சஎ)

கண்ணினுர் சிறிய ருள்ளக் கருத்தினுர் பெரிய ரேனு
மெண்ணினுர் சேய்மை புக்கு மெண்ணுற்ரு ரண்மை புக்குங்

கண்ணினர் காணப்பெற்றார் காளையைப் பெரியர் கண்ணு
ரெண்ணினர் சிறிய ரென்ப ரிலங்கொளி யிளைய ரெல்லாம்.

இ-ள். கண்ணினர் சிறியர் உள்ளக் கருத்தினர் பெரியரேனும் - இயல்பிலே கண்ணர் சிறியரும் எண்ணர் பெரியருமாயினும், — காளையை - காளைப்பருவத்தையுடையவனாகிய இரகுவை. — எண்ணினர் சேய்மை புக்கும் எண்ணற்றார் - எண்ணர் தூரத்திற்புகுந்தும் சிந்தித்தார் (அன்றிக் கண்டிலர்), — அண்மை புக்கும் கண்ணினர் காணப்பெற்றார் - அண்மையிற் புகுந்தும் கண்ணர் காணப்பெற்றனர் (ஆதலால்). — பெரியர் கண்ணர் சிறியர் எண்ணினர் என்பர் - பெரியர் கண்ணரே சிறியர் எண்ணரே என்றுஞ்சொல்வர் (யாவரெனின்?), — இலங்கு ஒளி இளையரெல்லாம் - விளங்குகின்ற ஒளியையுடைய பெண்களெல்லாம். எ-று.

அண்மை சமீபம். புகுதல் வினைகள் முறையே எண்ணினர் கண்ணினர் என்பவற்றின் வினைகள். மனம் நெடுந்தூரஞ்செல்லுமியல்பினையுடையது; கண் சிறிதுதூரம்செல்லுமியல்பினையுடையது. ஆதலால் மனம் பெரியது; கண் சிறியது. அங்ஙனமாயினும் எமதுமனம் நெடுந்தூரம்புக்கும் இரகுவைக் காணவில்லை. எமதுகண் சிறிதிடம்புக்கும் இரகுவைக்கண்டு கொண்டது. ஆதலால் இப்பொழுது கண்ணே பெரியது எண்ணே சிறியது என்றார் என்பதாம். ஆர்விகுதி உயர்த்தற்கண்வந்தது. உம்மைகள் முறையே உயர்சிறப்பினும் இழிசிறப்பினும் வந்தன. ஒருபொருளைத் தேடித் தூரத்திற்போய்க் காணாதவனிலும் சமீபத்திற்கண்டவன் சிறந்தவன் என்பது போல இதுவும் கூறப்பட்டது. (சஅ)

நாணுமொன் றுயிரு மொன்றே நன்கிவை யிரண்ட தாகக்
காணுமொன் றுளதோ வுண்டேற் கடிதினீ கவர்ந்த நாணோ
டேணினம் முயிருங் கொண்டிட் டியம்புதி யின்றே லேந்தல்
பேணிநின் றருடி யென்னப் பேசுவார் பிடிய னாரே.

இ-ள். நாணும் ஒன்று உயிரும் ஒன்றே - எமது நாணும் (அதனோடு வேறின்றிச் சேர்ந்திருக்கும்) உயிருமொன்றேயாம், — நன்கு இவை இரண்டதாகக் காணும் ஒன்று உளதோ - மிகவும் இவற்றைப் பேதமாகக் காண்கின்ற ஒருதன்மையுமுண்டோ?, — உண்டேல் - அங்ஙனமுள்ளதாயின், — கடிதில் நீ கவர்ந்த நாணோடு ஏணில் நம் உயிரும் கொண்டிட்டு இயம்புதி - விரைவாக நீ கவர்ந்த நாணோடு இளைத்த நமதுயிரையும் (வேறாகக்கவர்ந்து) காட்டிவிட்டு (அதன்பின் ஒன்றோ இரண்டோ என்பதைச்) சொல்லுதி, — இன்றேல் - அதுகூடாதாயின், — ஏந்தல் பேணி நின்று அருடி என்னப் பேசுவார் - அரசனே! எம்மைப் பாதுகாத்து அருளுதி என்று சொல்வார்கள், — பிடியனார் - பிடிபோன்ற மகளிர். எ-று.

உண்டேல் கொண்டிட்டு இயம்புதி இன்றேல் அருடி என்னப் பேசுவார் என்க. கொண்டிட்டு என்பதை கொண்டு இட்டு எனக் கண்ணழித்துக் கொண்டு தந்து எனப் பொருள்கொள்ளினுமமையும். (சகூ)

நிலைகொண்ட நுசுப்பு நோவ நெடுங்கலை விசிப்ப தன்றி
வலைகொண்ட மானம் வேறென் மாணிழை யெங்கட் காஞன்
முலைகொண்டவடமுஞ்செங்கைமுறைகொண்டவளையும்போகக்
கலைகொண்டா லமையா தோவிக் காளைதன் காத லென்பார்.

இ-ள். மாண் இழை எங்கட்கு ஆஞல் - மாட்சிமைபொருந்திய ஆபரணங்களையணிந்த (பெண்களாகிய) எங்களுக்கோ எனின், — நிலைகொண்ட நுசுப்பு நோவ நெடும் கலை விசிப்பது அன்றி வலைகொண்ட மானம் வேறு என் - நிலையான இடைவருந்த நெடிய வஸ்திரத்தை உடுப்பதே (மானம்) அன்றிச் சூழ்ந்த மானம் வேறென்னை?,— இக்காளைதன் காதல் - இக்காளையின்மேற்கொண்ட காதலுக்கு,— முலைகொண்ட வடமும் செங்கை முறை கொண்ட வளையும் போக - முலையிற்பொருந்திய முத்துவடமுஞ் சிவந்த கையின் முறையாக அணிந்த வளையலும் ஒழிய,—கலைகொண்டால் அமையாதோ - வஸ்திரத்தைமாத்திரங் கொண்டாற் போதாதோ. எ-று.

வஸ்திரமே எங்களுக்கு மானமாதலின் வஸ்திரத்தைக் கொள்ளவே எமது மானம் போய்விடும்; மேற்படக் கொள்ளவேண்டாம். அங்ஙனமாக: வடத்தையும் வளையையுமேன் கொள்ளுகின்றதென்பதாம். (ரு0)

பெண்ணினும் பெரிய நெஞ்சிற் பெருகிய காத னீக்க
வெண்ணிநின் றியலு வாரு முளரெனி னிளவ றன்னை
மண்ணினுங் காண்பர் தங்கண் மனத்தினுங் காண்ப ரன்றி
விண்ணினுங் காண்ப ரென்ரு லெங்ஙனே விடுவ தம்மா.

இ-ள். பெண்ணினும் பெரிய நெஞ்சில் பெருகிய காதல் நீக்க - தங்கள் பெண்டன்மையினும்பார்க்கப் பெரிய மனத்திலே பெருகிய ஆசையை நீக்கும்படி, — எண்ணி நின்று இயலுவாரும் உளரெனில் - கருதிநின்ருெழுகுவாரும் (அப்பெண்களுள்ளே) உளரென்று பார்த்தால்,—இளவல்தன்னை மண்ணினுங் காண்பர் - இளமைப்பருவத்தை யுடையவனுகிய இரகுவைப் பூமியிலுங் காண்பார்கள்,—தங்கள் மனத்தினுங் காண்பர் - தங்கள் மனத்திலுங் காண்பார்கள்,—அன்றி விண்ணினுங் காண்பர் என்ருல் - அன்றி ஆகாயத்திலுங் காண்பார்கள் என்ருல்,—விடுவது எங்ஙன் - அவர்கள் அக்காதலை விடுவது எப்படி? எ-று.

ஓரிடத்திலாகுதல் இரகுவைக் காஞதிருந்தாற் பெண்கள் தங்காதலை நீக்கிவிடுவார்கள். எங்கும் அவனைக் காணும்போது அவர்கள் அக்காதலை நீக்குவது எப்படி என்பதாம். (ருக)

நுண்மையே யகல வாணிற் பிறத்தலாய் முன்னர் நோற்ற
தெண்மையே யானதிப்பா லென்றுகொண்டிளையோ ரெல்லாந்
திண்மையே திரண்ட தோளான் கண்படுந் தோறுஞ் செவ்விப்
பெண்மையே வேட்ப ராயிற் பிழைப்பரோ பிடிய ஞரே.

இ-ள். நுண்மை அகல ஆணில் பிறத்தலாய் முன்னர் நோற்றது - நுட்பமான புத்தி நீங்க ஆணிலே பிறக்கும்படி முற்பிறப்பிலே தவஞ்செய்தது,—இப்பால் எண்மையே ஆனது என்று கொண்டு - இவ்விடத்து எளிமையேயாய் முடிந்தது என்று கருதிக்கொண்டு, — இளையோரெல்லாம் - காளையர்களெல்லாம்,— திண்மையே திரண்ட தோளான் கண்படுந்தோறும் - திண்மையே திரண்டு தம்வடிவை எடுத்தாற்போன்ற புயங்களையுடையனாகிய இரகு தங்கண்ணுக்கெதிரே தோன்றும்பொழுதெல்லாம்,— செவ்விப் பெண்மையே வேட்பராயின் - செவ்வியையுடைய பெண்டன்மையையே விரும்புவாராயின்,— பிடியனார் பிழைப்பரோ - பெண்கள் பிழைப்பார்களோ. எ-று.

கண் படுந் தோறும் வேட்பராயில் என இயையும். ஏகாரங்களுள் முன்னையது அசைநிலை; பின்னைய முறையே பிரிநிலையும், தேற்றமும், பிரிநிலையுமாம். இங்ஙனமே "ஆடவர்பெண்மையையவாவுந்தோளினாய்" என்றார் பிறரும். (௫உ)

கொந்தினாற் பொலியும் வீதி யெங்கணுங் குறுகுந் தோறுஞ்
சந்தினாற் பொலியுங் கொங்கைத் தையலா ரினைய ராக
மைந்தினாற் புதுமைத் தாக வடுவற வெடுத்த வாளி
யைந்தினாற் குரிய வாறு மம்பினின் விளங்கி னானே.

இ-ள். கொந்தினால் பொலியும் வீதி எங்கணும் குறுகும் தோறும் - கூட்டத்தோடு பொலிகின்ற வீதி எவ்விடத்தும் (இரகு)செல்லுந்தோறும்,— சந்தினால் பொலியும் கொங்கைத் தையலார் இனையர் ஆக - சந்தனக்குழம்பாற் பொலிந்த தனங்களையுடைய மகளிர் இத்தன்மையராக,—மைந்தினால் புதுமைத்து ஆக வடு அற எடுத்த - வலிமையோடு புதிதாந்தன்மையுடைய தாகக் குற்றமற (ப் பஞ்சபாணங்களையுடைய மன்மதன்) எடுத்த,— வாளி ஐந்தினாற்கு உரிய ஆறும் அம்பினில் விளங்கினான் - அவற்குரிய ஒரு ஆறு மம்பைப்போல (அவ்விரகு) விளங்கினான். எ-று.

குறுகுந்தோறும் இனையராக விளங்கினான் எனவும், எடுத்த அம்பு எனவும் இயைக்க. எய்யாது கொல்லுந்தன்மையும், அகோராத்திரம் ஒரே தன்மையுமுடைமையின் புதுமைத்தாக வடுவற என்றார். (௫௩)

பூவினிற் பொலிந்தோன் றந்த பூமயில் புளகம் பூப்ப
மேவிடிற் பிறர்மே லுள்ளம் வைத்திட விடுமே யென்னுக்
காவலன் கணித்தி ராச கன்னியர்ச் சேர்த்த வன்னான்
றாவிலெத் தினத்துஞ் சேருஞ் சந்திரன் றனையு மொத்தான்.

இ-ள். பூவினிற்பொலிந்தோன் தந்த பூமயில் - பிரமனாற் சிருட்டிக்கப்பட்ட பூமிதேவியை - புளகம் பூப்ப மேவிடில் - மகிழ்ச்சி உண்டாகும்படி (இரகு) சேர்ந்தால்,—பிறர் மேல் உள்ளம் வைத்திட விடுமே என்னுக் காவ

லன் கணித்து - அவள் பிறமகளிர்மீது மனத்தைவைக்கவிடுவோளா? என்று திலீபன் கருதி,—இராச கன்னியர்ச் சேர்த்த - அரசகன்னியரைப் புணர்க்க, —அன்னான் தாவில் எத்தினத்தும் சேரும் சந்திரன்றனையும் ஒத்தான் - அவ்விரகு கேடற்ற எந்த நட்சத்திரங்களோடுங் கூடுகின்ற சந்திரனை ஒத்து (அம்மகளிரைக்) கூடினான். எ-று.

புளகம் - உபசாரம். பூமயில் விடுமே என்னாச் சேர்த்த அவன் ஒத்தான் என்க. ஒவ்வொரு நாளைக்கு ஒவ்வொருவராகப் புணர்ந்தான் என்பதுதோன்ற எத்தினத்துஞ்சேரும் சந்திரன்றனையும் ஒத்தான் எனப்பட்டது. இராச்சியபரிபாலனத்தில் இவன்மனஞ் சென்றுகொண்டிருக்கும்போது மகளிர்போகத்தில் மனமதிகஞ் செல்லாது என்பது கருதி, அப்பரிபாலனத்தை ஒப்புவிக்கமுன்னமே விவாகஞ்செய்துவைத்தான் என்பார் பூமயில்புளகம்பூப்ப.........ராசகன்னியர்ச்சேர்த்த என்றார். (௫௪)

கிட்டித்திண் டிறத்தை வீசிக் கிளர்மதம் பிலிற்றி யாவு
மட்டித்து வருமால் யானை மீக்கொளா மதச்செ ருக்கைக்
கொட்டித்தன் வயத்த தாக வியற்றுமவ் விசையிற் குன்றா
வெட்டுத்திக் கன்றி மற்றை யிரண்டையு நிரப்பு மன்றே.

இ-ள். கிட்டித் திண் திறல் கைவீசிக் கிளர்மதம் பிலிற்றி யாவும் மட்டித்து வரும் மால் யானை மீக்கொளா - சமீபித்துத் திண்ணிய வலிய துதிக்கையைவீசிக் கிளராநின்ற மதத்தைப்பிலிற்றித் தனக்கு எதிர்ப்பட்ட எவற்றையும் அழிவுசெய்துவருகின்ற பெரிய யானையின்மீது ஏறி,—மதச்செருக்கைக் கொட்டித் தன் வயத்தது ஆக இயற்றும் அ இசையால் - மதச்செருக்கை அடித்து நீக்கித் தன்வயத்ததாகச் செய்கின்ற அந்தப் புகழால், — குன்றா எட்டுத் திக்கு அன்றி மற்றை இரண்டையும் நிரப்பும் - அழியாத எட்டுத்திக்குகளையேயல்லாமல் மற்றைய இரண்டு திக்குகளையும் நிரப்புவான். எ-று.

கிட்டி மீக்கொளாக் கொட்டி இயற்றும் இசையால் நிரப்பும் என்க. இதனால் யானையேற்றத்தின் வன்மை கூறப்பட்டது. (௫௫)

நிரந்தரங் கறுத்த போர்த்தெவ் விரசனி நெரிந்து நீளச்
சரந்தரு கதியிற் றூய தாருளைப் புரவி மேலாய்க்
குரந்தரும் விசையி னீர்மொண் டுண்டிடாக் குரத்து வானிற்
பரந்தெழு தூளி போர்ப்பப் பரிதியிற் றிரியு மன்னோ.

இ-ள். நிரந்தரம் கறுத்த போர் தெவ் இரசனி நெரிந்து நீள - நாடோறும் கோபித்த போரையுடைய பகையாகிய இராக்காலம் உடைந்து தூரமாக,—சரம் தரு கதியில் தாய தார் உளைப் புரவி மேலாய் - சரகதியோடு தாவிய ஒழுங்கான பிடர்மயிரையுடைய குதிரையின்மேலேறி,—குரம்தரும் விசையின் - (நிலத்தை வெட்டுகின்ற) குளம்பின் விசையினாலே,—நீர் மொ

ண்டு உண்டிடா - நீரைமொண்டு உண்டு,— குரத்து வானில் பரந்து எழு தூளி போர்ப்ப - அக்குளம்பினுல் ஆகாயத்திலே பரந்து எழாநின்ற பூதூளி சுற்ற,—பரிதியில் திரியும் - சூரியனைப்போலத் திரிவான். எ-று.

நீள மேலாய்த் திரியும் என்க. குளம்பு கீழுள்ள நீர் தோன்றத்தக்க ஆழமாக நிலத்தை அகழ்ந்துவிடுதலின், குரந்தரும்விசையின் நீர்மொண்டுண் டிடா என்றார். சூரியனும் இருள்தூரமாகப் புரவிமேலாகி நீரையுண்டு தூளி போர்ப்பத் திரிதல் இயல்பாதலின் அவனை உவமைகூறினர். இதனுற் குதி ரையேற்றத்தின் வன்மை கூறப்பட்டது. (ருசு)

அறுகுவா ரணத்த வேங்கை யார்த்துமே லீர்த்திட் டங்கஞ்
சிறுகுவா னிலையிற் றாய சித்திரத் திகிரி யுய்யா
பெறுகுவார் விசால மெல்லாம் பிற்பொழு தேந்தும் பெட்பா
னறிகுவா னென்ன வல்லே யாழியி னளக்கு மன்னே.

இ-ள். அறுகு வார் அணத்த வேங்கை ஆர்த்து மேல் ஈர்த்திட்டு அங் கம் சிறுகு வான் நிலையில் தாய சித்திரத் திகிரி உய்யா - யானையாளியும் நீண்ட கழுத்தையுடைய புலியும் கட்டப்பட்டு மேலிழுக்கப்பட்டு அங்கம் ஒடுங்கிய பெரிய நிலையோடு தாவியவாறு செய்யப்பட்டுள்ள சித்திரங்களை யுடைய தேரைச் செலுத்தி, — பெறு கு வார் விசாலமெல்லாம் - பெற்று டைய பூமியினது நீண்ட பரப்புமுழுவதையும், — பிற்பொழுது ஏந்தும் பெட்பான் அறிகுவான் என்ன - பிற்காலத்திலே தாங்குந்தன்மையினுலே (இவ்வளவென இப்பொழுது) அறிபவனைப்போல, — வல்லே ஆழியின் அளக்கும் - விரைந்து உருளையால் அளப்பான். எ-று.

அறுகும் வாரணத்த வேங்கையும் தாய சித்திரம் எனவும், உய்யா அளக்கும் எனவும் இயைக்க. இதனுற் றேரேற்றத்தின் வன்மை கூறப் பட்டது. (ருஎ)

கைத்தலி லிளைஞர் மார்பங் கொட்டிய களபத் திட்ட
நித்திலக் குறியைத் தன்கை நெடுஞ்சிலை குழைய வாங்கி
வித்தகத் தசல மூடு துளைத்திடும் வேக வாளி
யுய்த்தவர்க் கூறு றாதே நீக்கிநின் றுவக்கு மன்னே.

இ-ள். கைத்தல் இல் இளைஞர் மார்பம் கொட்டிய களபத்து இட்ட நித்திலக் குறியை - (போர்த்தொழிற்பயில்வை) வெறுத்தலில்லாத இளைஞர் களது மார்பிலப்பிய களபத்தின்மீது பதித்த முத்தாகிய குறியை, — தன் கை நெடும் சிலை குழைய வாங்கி - தனது கையிலுள்ள நெடிய வில்லை வளை வுறும்படி வளைத்து, —வித்தகத்து அசலம் ஊடு துளைத்திடும் வேக வாளி உய்த்து - சாதுரியத்தோடு மலையினூடும் துளைத்துச் செல்லுகின்ற வேக மான அம்பை (ப் பூட்டி) ச் செலுத்தி, —அவர்க்கு ஊறு உறாது நீக்கி

நின்று உவக்கும் - அவர்களுக்கு ஊறுபாடுறுதபடி நீக்கி நின்று மகிழுவான். எ - று.

குறியை நீக்கிநின்று உவக்கும் எனவும், வாங்கி உய்த்து நீக்கிநின்று உவக்கும் எனவும் தனித்தனிமுடிக்க. வித்தகத்து உய்த்து எனக் கூட்டுக. இதனால் விற்போர்வலிமை கூறப்பட்டது. (ருஅ)

கனத்தெழு விலங்கற் றிண்டேர் கட்டடல் கடக்கு மற்று
மனத்துணர் கலையின்வந்த பலிப்பினுன் மகிழு மாறுச்
சினத்திளம் புலிப்போத் தன்ன திறற்புர வலர்கு மார
வினத்திள வரியே றன்ன னின்னணம் வளரு மன்றே.

இ-ள். கனத்து எழு விலங்கல் திண் தேர் கட்டு அடல் கடக்கும் - மிக்கெழுகின்ற மலையையொத்த திண்ணிய தேரையுடைய பகையரசர்களைக் களைந்து (அவர்களது) வலியைக் கடக்கின்ற,—மற்றும் மனத்து உணர் கலையின் வந்த பலிப்பினுல் மகிழும் - வேறும் மனத்தாலுணரப்படுகின்ற கலைப்பயில்வின்கண் வந்த வளர்ச்சியினுல் மகிழுவான்.— மாறுச் சினத்து இளம் புலிப்போத்து அன்ன திறற் புரவலர் குமார இனத்து - மாறுத கோபத்தையுடைய இளைய புலிப்போத்தையொத்த வலிய அரசகுமாரர்களது கூட்டத்தின்கண், — இள அரியேறு அன்னுன் - இளைய சிங்கேற்றையொத்து விளங்குபவனுகிய இரகு,—இன்னணம் வளரும் - இவ்வாறு வளருவான். எ - று.

தேர் ஆகுபெயர். மற்றும் என்றது வாள் வேல் முதலியவற்றை. இனத்து அன்னுன் என்க. இன்னணம் என்றது இவைகளைப்பயின்று மகிழுந் தன்மையோடு என்றபடி. (ருகூ)

இரகுவுற்பத்திப்படல முற்றிற்று.

---

# யாகப்படலம்.

உரையொடுங் காளை யோங்கக் கடாத்தொடு முரவுக் காலின்
புரையொடுஞ் சரற்கா லத்தின் பொலிவொடும் பொருந்தாநின்ற
நிரையொடுங் க்ரிய செய்ய வெண்மைய நெடிய செங்கை
வரையொடுங் கனலி யோடு மதியொடுங் கடுத்த மன்னன்.

இ-ள். உரையொடும் காளை ஓங்க - (இவ்வாறு) கீர்த்தியோடும் இரகு மகாராசன் வளர,—கடாத்தொடும் உரவு காலின் புரையொடும் சரற்காலத்தின் பொலிவொடும் நிரையொடும் பொருந்தா நின்ற - மதத்தோடும் வலி

மைபொருந்திய காற்றின் பெருமையோடும் சரற்காலத்தின் பெருமையோடும் முறையாகப் பொருந்திய,—கரிய நெடிய செங்கை வரையொடும் செய்ய கனலியோடும் வெண்மை மதியொடும் கடுத்த மன்னன் - கரிய யானையோடும் சிவந்த அக்கினியோடும் வெள்ளிய சந்திரனோடும் ஒத்த திலீபமகாராசன். எ-று.

கீர்த்தி கலைப்பயிற்சி முதலியவற்றாலாய கீர்த்தி. நெடுமையும் செம்மையும் கையை விசேடித்து நின்றன. கடாம்முதலியவற்றால் யானைமுதலியன கிளர்ச்சியுறுதல்போல இவனும் காளையாற் கிளர்ச்சியடைந்தான் என்பதாம். நிரனிறை. இதுவும் வருஞ் செய்யுளும் ஒருதொடர். (க)

வெய்தவப் பலத்து றுநன் னிலைகொடு விழைவி னானைக்
கைதவப் பவத்தை நீக்குங் கடவுண்மா முனிவ னன்பாற்
கொய்தவப் புதிய போது கொண்டருச் சித்த கொள்கைச்
செய்தவப்பலிப்பைநோக்கிச் சிந்தையிற்செருக்குக்கொண்டான்.

இ-ள். வெய்து அவப் பலத்து உறு நன்னிலைகொடு - கொடிய அவப் பலத்தோடு பொருந்தாத நல்ல விரதநிலையைக்கொண்டு,—விழைவின் - விருப்பத்தோடு,— ஆனை - பசுவை,— கைதவப் பவத்தை நீக்கும் கடவுள் மா முனிவன் அன்பால் - வஞ்சமாகிய பிறவியை நீக்கிய பெருமைபொருந்திய தேவவிருடியாகிய வசிட்டரது விருப்பங்காரணமாக,—கொய்த அப் புதிய போது கொண்டு அருச்சித்த கொள்கைச் செய்தவப் பலிப்பை நோக்கி - கொய்த அந்தப் புதிய மலரைக்கொண்டு பூசித்த கொள்கையையுடைய செய்யப்படும் தவத்தின் பலிப்பைக்குறித்து,—சிந்தையில் செருக்குக் கொண்டான் - மனத்திற் களிப்புற்றான். எ-று.

அன்பால் அருச்சித்த எனவும், கொள்கைத்தவம் எனவும் இயைக்க. தவப்பலிப்பு-புத்திரப்பேறு. மன்னன் நோக்கிச் செருக்குக்கொண்டான். என்க. (உ)

உப்புடைப் புவனி யெங்கு மொருதனி கவிக்குஞ் சோதிப்
பப்புடைத் தவள முத்தப் பருமணிக் கவிகை மன்னன்
வெப்புடைக் கொடிய தீய விம்மித வினையை வீட்டுந்
துப்புடைத் துரக மேத மியற்றுவான் சூழ்ந்து கொண்டான்.

இ-ள். உப்பு உடைப் புவனி எங்கும் ஒருதனி கவிக்கும் - கடலாகிய ஆடையையுடைய பூமியெங்குந் தனியே கவிக்கின்ற, — சோதிப் பப்பு உடை தவள முத்தப் பருமணிக் கவிகை மன்னன் - ஒளிப்பரப்பையுடைய வெண்மையாகிய பரிய முத்துமணிகளாற்செய்த குடையையுடைய திலீப மகாராசன்,—வெப்பு உடைக் கொடிய விம்மித தீய வினையை வீட்டும் துப்பு உடை - வெப்பத்தையுடைய கொடிய அதிசயமான தீவினைகளைக்

செடுக்கின்ற வலியையுடைய,—துரகமேதம் இயற்றுவான் சூழ்ந்துகொண்டான் - அசுவமேதயாகத்தைச் செய்யும்படி ஆலோசித்துக்கொண்டான். எ-று.

கவிக்கும் கவிகை எனக் கூட்டுக. வருத்துந்தன்மைபற்றி வெப்புடை என்றார். தீவினையைநீக்கும் வலியையுடைய துரகமேதமெனவே, நல்வினையைப்பயந்து சுவர்க்கத்தைக்கொடுக்கும் அசுவமேதம் என்பதுபெற்றும்.

மிகுப்பினிற் றழீஇய வாய விழுப்பொருட் கலப்பை வீக்கத்
தொகுப்பினிற்சூழ்ந்தவேள்வி தொடங்குபு வசிட்டன்சொல்லின்
பகுப்பினிற் சிறுமை தீர்ந்த குணமெலாம் பரித்த நுண்ணூல்
வகுப்பினிற் றவாத நீர வாம்பரி வருக வென்றான்.

இ-ள். மிகுப்பினில் தழீஇயவாய விழுப் பொருள் கலப்பை வீக்கத் தொகுப்பினில் - மிகுதியோடும் பொருந்தினவாய சிறந்த பொருள்களாகிய உபகரணங்களினது பொலிவின்றொகுதியோடும்.—சூழ்ந்த வேள்வி தொடங்குபு - ஆலோசித்த யாகத்தைத் தொடங்கி,—வசிட்டன் சொல்லின் - வசிட்டமுனிவருடைய கட்டளைப்படி,— பகுப்பினில் சிறுமை தீர்ந்த - பகுப்பினோடு குற்றங்களெல்லாம் நீங்கியதும்,—குணம் எலாம் பரித்த - குணங்களெல்லாவற்றையும் தாங்கியதுமாகி, — நுண் நூல் வகுப்பினில் தவாத நீர - நுட்பமான அசுவநூல் வகுத்துக்கூறிய இலக்கணங்களிலே தவறாத தன்மையையுடையதாகிய.—வாம் பரி வருக என்றான் - பாய்கின்ற குதிரை வருக என்றான். எ-று.

துவ்விகுதிகள் கெட்டுநின்றன. தீர்ந்ததும், பரித்ததுமாகித் தவாத நீரையுடைய பரி என்க. ஆகி என்பது எஞ்சிநின்றது. சொல்லின் வருக என்றான் என இயையும். (ச)

வேறு.

குலம்படு மையிரு சுழியுங் கோதற
வலம்படச் சுழிந்தன மாட்சித் தாயின
பலம்படு தெய்வமா மணிப கர்ந்திடி
னலம்படு நூன்முறை நவின்ற தன்னதே.

இ-ள். குலம் படும் ஐ இரு சுழியும் - (அக்குதிரையிலுள்ள) உயர்ந்த பத்துச்சுழிகளும்,—கோது அற வலம்படச் சுழிந்தன மாட்சித்து ஆயின - குற்றமற வலமாகச் சுழிந்தனவாய் மாட்சிமையுடைத்தாயின, — பலம்படு தெய்வ மாமணி - பயனைக்கொண்ட பெரிய தேவமணி என்னுஞ் சுழியும்,— பகர்ந்திடில் - சொல்லுகில்,—நலம்படு நூல் முறை நவின்றது அன்னது - நன்மையைக்கொண்ட அசுவலக்கணநூலின் விதியிலே சொல்லப்பட்டதாகிய விதியை ஒத்துள்ளது. எ-று.

ஐயிருசுழி "சிரமதனிலிரண்டு" என்னும் (திருவா. குதிரை. ௩௬-ஞ்) செய்யுளிற் கூறப்பட்டன. கண்டத்தில் வலமாகச் சுழிந்திருக்குஞ் சுழி தெய்வமணி. அதனை, "திணிதருகழுத்தினிற்சிறந்ததெய்வத-மணியுளதாகி" என்பதனாலறிக. (௫)

சங்கையின் மூவகை யுரைத்த தன்மையி
னங்கமு நடுநிலை யறியப் பட்டது
சிங்கலு மதிகமுந் தள்ளிச் செவ்வியிற்
பொங்கிய தந்தமும் புகன்ற வண்ணமே.

இ-ள். அங்கமும் - (அதனுடைய) அங்கமும், — சங்கையில் மூவகை உரைத்த தன்மையின் - அளவிலே மூவகையாகக்கூறியவியல்பிலே.—சிங்கலும் அதிகமும் தள்ளி நடுநிலை அறியப்பட்டது - குறைவும் அதிகமும் நீக்கிச் சமமாக அறியப்பட்டது. — செவ்வியில் பொங்கிய தந்தமும் புகன்ற வண்ணம் - செவ்வியோடு பொலிவுற்ற தந்தமும் முன்சொன்னபடியேயாம். எ-று.

மூவகை=அதிகம், சமம், சிங்கல். புகன்றவண்ணம் என்றது சமத்தை.

பெருநிறக் கொய்யுளை பிறங்கி நெய்த்துவார்ந்
தொருநிறத் தமைந்துமே லொழுக்கி யன்னதா
லிருநிறத் தடங்கணு மிலங்கு நெற்றியு
மருநிறப் புரோதமு மகன்று காட்டுமே.

இ-ள். பெருநிறக் கொய் உளை - பெரிய நிறத்தையுடைய கொய்யப்பட்ட பிடர்மயிர்,—பிறங்கி நெய்த்து வார்ந்து ஒருநிறத்து அமைந்து மேல் ஒழுக்கி அன்னது - விளங்கி நெய்ப்புற்று நீண்டு ஒரேநிறத்தோடுபொருந்தி மேலே ஒழுக்கிவிட்டாற்போன்றது,—இரு நிறத் தடம் கணும் இலங்கு நெற்றியும் - இரண்டாகிய நிறமமைந்த விசாலித்த கண்களும், விளங்குகின்ற நெற்றியும்,—அருநிறப் புரோதமும் - அரிய நிறத்தையுடைய மூக்கும்,—அகன்று காட்டும் - அகன்று காண்பிக்கும். எ-று.

ஒழுக்குதல் - நிரைத்துவைத்தல். (எ)

எய்த்தெழு பிறையினை வளைவின் றாகநேர்
வைத்துள தெனினிகர் வகுத்தற் கொப்பதாய்ப்
புத்தழ கொழுகிய போல நாசியின்
மத்திம மிலங்கியும் வலம்பட் டுள்ளதே.

இ-ள். எய்த்து எழு பிறையினை வளைவு இன்றாக நேர் வைத்துளது எனில் - தேய்ந்து வளருகின்ற பிறையை வளைவில்லாததாக (ச்செய்து) நேராக வைக்கப்பட்டதாயின்,—நிகர் வகுத்தற்கு ஒப்பதாய் - அதனை ஒப்புச்சொல்லற்கியைந்ததாயும், — புத்தழகு ஒழுகிய போல - புதிய அழகு

ஒழுகின்றதுபோலவும்,—நாசியின் மத்திமம் இலங்கியும் - மூக்கின்நடுவானது விளங்கியும்,—வலம்பட்டு உள்ளது - வலஞ்சுழிந் துள்ளது. எ-று.

ஒப்பதாய் இலங்கியும், போல இலங்கியும் எனத் தனித்தனிமுடிக்க.

மாகதி மாதரார் மனனிற் பல்படப்
போகிய திருசெவி யரம்பை பூத்தன
சேகமர் குறங்குக டிரண்டு நீண்டன
நாகமழ் மாந்தளிர் நவிறற் கொத்ததே.

இ-ள். மாகதி மாதரார் மனனில் பல்படப் போகியது - பெரிய கதியானது பெண்களது மனம்போலப் பலபடச்சென்றுள்ளது, — இருசெவி பூத்த அரம்பை அன - இருசெவிகளும் பூத்தனவாகிய வாழையின்பூவை ஒத்தன,— சேகு அமர் குறங்குகள் திரண்டு நீண்டன - வயிரம்பொருந்திய தொடைகள் திரண்டு நீண்டுள்ளன,—நா கமழ் மாந்தளிர் நவிறற்கு ஒத்தது - நாவானது கமழுகின்ற மாந்தளிரை உவமைசொல்லற்கியைந்தது. எ-று.

பல்கதி-நவகதி. பூத்த என்பதில் அகரந் தொக்குநின்றது. வாழைப்பூ வடிவும் பண்பும்பற்றிய உவமை. (கூ)

மற்றுள விளக்கமு மினைய மாட்சியும்
பெற்றுள வாம்பரி கொணர்ந்த பின்னரிற்
கற்றுள நான்மறை முனிவன் கைக்கொளாச்
சொற்றுள பூசனை நல்கிச் சொல்லுமே.

இ-ள். இனைய மாட்சியும் மற்று உள விளக்கமும் பெற்றுள வாம்பரி கொணர்ந்த பின்னர் - இவ்வாறான இலக்கணங்களின் பெருமையையும் மற்றுமுள்ள இலக்கணங்களின் பிரகாசத்தையும் பெற்றுள்ள வாவுகின்ற குதிரையைக் கொணர்ந்த பின்பு,—நான்மறை கற்றுள முனிவன் கைக்கொளா, — நான்கு வேதங்களையும் கற்றறிந்த வசிட்டமுனிவர் கையிற் கொண்டு,—சொற்றுள பூசனை நல்கிச் சொல்லும் - விதிக்கப்பட்ட பூசனையைச்செய்து சொல்லுவார். எ-று.

இன்-சாரியை. கைக்கொளா நல்கிச் சொல்லும் என இயைக்க. (க0)

வேறு.

மேம்படு வெட்சி மூன்றின் புனைதலின் விளங்கு வேள்வி
வாம்பரி காத்த லூனே வாகையின் வாகை யாமாற்
றேம்பொழி மலர்ப்பூந் தாராய் தீதிலா விதன்மேல் வென்றி
யாம்பரி சமைந்து நோக்கி னமரர்க்கு மரிய தன்றே.

இ-ள். மேம்படு வெட்சி மூன்றின் புனைதலின் - மேன்மைபொருந்திய வெட்சிமாலை முதலிய மூன்றினது புனைவிலும் பார்க்க,— விளங்கு

வேள்வி வாம்பரி காத்தல் தானே வாகையின் வாகை ஆம் - விளங்குகின்ற வேள்விக்குரிய பாய்கின்ற குதிரையைக் காத்தலே அரசர்க்குரிய வெற்றியிலும் சிறந்த வெற்றியாகும், —தேம் பொழி மலர்ப் பூ தாராய் - தேனைச் சொரிகின்ற மலர்மாலையை அணிந்த அரசனே, — தீது இல்லா இதன் மேல் வென்றி ஆம் பரிசு அமைந்து நோக்கின் - குற்றமில்லாத இக்குதிரையின்மீது வைத்து அடையப்படும் வெற்றி உண்டாந்தன்மையை உற்றுப் பார்க்கில், — அமரர்க்கும் அரியது - தேவர்களுக்கும் அடைந்துகோடல் அரிதேயாகும். எ-று.

ஆதலால் நீ இதனை அரிதாகக் காத்துக் கொள்ளுதல்வேண்டுமென்பது எஞ்சி நின்றது. புனைதலின் என்பதில் இன்னுருபு உறழ்பொருஉ.()

பெறற்கரும் பெற்றி யாவ ஞெருவனே பெறுகி லன்ன [ன்க
துறற்குவிண் ணுலகு ளார்க்கும் பொறாமையுள் ளுடைக்குமெ
பிறர்க்கினி யுரைப்ப தென்னே பெரியவிப் புரவி காக்கின்
மறக்கதி ரயில்வே னம்பி யல்லது மற்றி லென்றான்.

இ-ள். பெறற்கு அரும் பெற்றி யாவன் ஒருவன் பெறுகில் - பெறுதற்கரியதன்மையை யாவனாயினும் ஒருவன் பெற்றால், — அன்னது உறற்கு பொறாமை விண் உலகு உள்ளார்க்கும் உள் உடைக்கும் என்க - அவன் அதனைப் பெறுதற்கட் பொறாமையானது தேவர்க்கும் மனத்தை உடைக்கும் எனக்கொள்க, — இனி பிறர்க்கு உரைப்பது என் - அங்ஙனமாயின்; இனிப் பிறர்க்கு (உடைக்கும் என்பதைப்பற்றி யாம்) சொல்வதென்னை, — பெரிய இப்புரவி காக்கின் - பெரிய இந்தக் குதிரையைக் காக்கில், — மறக் கதிர் அயில் வேல் நம்பி அல்லது மற்று இல் என்றான் - வீரம்பொருந்திய ஒளியையுடைய கூரிய வேலையேந்திய இரகு (காக்கலாமே) அல்லாமற் பிறர் ஒருவராலும் காத்தல் கூடாது என்றான். எ-று.

காக்கின் அல்லது இல் என்றான் என்க. (கஉ)

ஆர்த்தன தொடையல் வேந்த னஃதுரை கேளா வாகம்
போர்த்தன புளக மிஞ்சி மயிர்ப்புறம் பொடிப்ப வல்லே
பார்த்தனன் பகர்தன் முன்ன மப்பணி பணிந்து சென்னி
சேர்த்தனன் வலயம் விம்மித் தெறித்திட வீங்கு தோளான்.

இ-ள். ஆர்த்தன தொடையல் வேந்தன் அஃது உரை கேளா - கட்டப்பட்ட மாலையை அணிந்த திலீபமகாராசன் அவ்வார்த்தையைக் கேட்டு,— ஆகம் போர்த்தன புளகம் மிஞ்சி மயிர்ப்புறம் பொடிப்ப - உடம்பு போர்த்தனவாகிய புளகத்தான் மிகுந்து மயிர்ப்புறமானது பொடிப்பையடைய,—பார்த்தனன் வல்லே பகர்தன் முன்னம் - பார்த்து விரையப் பணித்தற்கு முன்னமே, — அப்பணி பணிந்து சென்னி சேர்த்தனன் - அப்பணியை வணங்கிச்சிரசிற் கொண்டான், —வலயம் விம்மித் தெறித்திட வீங்கு தோ

ளான் - (களிப்பினல் அணிந்த) வலயம் விம்மித் தெறிக்கும்படி பூரிக்கின்ற புயங்களையுடையவனாகிய இரகு. எ-று.

பகர்தன்முன்னம் பணிந்து சேர்த்தான் என்க. குதிரையைக் காக்குந் தொழிலை அஞ்சாது மனக்களிப்போடு ஏற்றுக்கொண்டான்என்பார் வலயம்விம்மித்தெறித்திடவீங்குதோளான் என்றார். (கங)

மேதகு புரவி தன்னை விடுத்திட விளங்கு முள்ளக்
காதலி னிதனைச் சேனைக் கடலொடுங் காப்பான் போனன்
றாதென விளங்குஞ் செவ்வாய்த் தோகையர் துணைக்க ணீலப்
போதினுட் புகுந்து மின்னும் புனைமணிப் பூணி னானே.

இ-ள். மேதகு புரவி தன்னை விடுத்திட - மேன்மைபொருந்திய குதிரையைச் செல்லும்படி விடுக்க, — விளங்கும் உள்ளக் காதலின் இதனைக் காப்பான் சேனைக் கடலொடும் போனன் - விளங்குகின்ற மனவிருப்பத்துடனே இக்குதிரையைக்காக்கும்படி சேனசமுத்திரத்தோடும்போனன், — தூது என விளங்கும் செவ்வாய் தோகையர் துணை கண் நீலப்போதினுள் புகுந்து மின்னும் - தூதுளம்பழம்போல் விளங்குகின்ற சிவந்தவாயையுடைய பெண்களது இருகண்களாகிய நீலமலருட் புகுந்து விளங்கும், — புனை மணிப் பூணினன் - அணிந்த இரத்தினபரணங்களையுடையனாகிய இரகு. எ-று.

மின்னும் என்பது பூணினன் என்பதில் விகுதியோடு முடிந்தது. (கச)

வேறு.

தாரோதை யெழாநூறணை வாவாளி தடாமேல்
வேரோட லுறாமீது விளங்காளசை யாமே
நேரோடலி னேவெங்குர நிமிர்தூளியி னொருகாற்
றேரோனிருள் படமுந்துபு செல்கின்றன சிலமா.

இ-ள். சிலமா - சிலகுதிரைகள், — தார் ஓதை எழா - மணிமாலைகளினேசை எழாமலும், — நூல் தணவா - நூல்விதியைக் கடவாமலும், — வாளி தடா - சரம் தடுக்காமலும், — மேல் வேர் ஓடலுறா - தேகத்தில்வெயர்வை உண்டாகாமலும், — மீது விளங்கு ஆள் அசையாமே - தன்மீது விளங்குகின்ற ஆள் அசையாதபடியும், — நேர் ஓடலின் - நேரோடுதலினல், — வெம் குரம் நிமிர் தூளியின் ஒருகால் தேரோன் இருள்பட முந்துபு செல்கின்றன - வெவ்விய குளம்பினின்றுங் கிளராநின்ற தூளியினலே சூரியன் இருள்படும்படி முற்பட்டுச் செல்கின்றன. எ-று.

நேரோடலின் முந்துபு செல்கின்றன எனமுடிக்க ஆள்-பாகன். (கரு)

நிரவுங்கனை யிருளுந்திசை நிமிரும்புது வெயிலும்
விரவுங்கிரி யுடலுங்கனல் விழியுங்கொலை யெய்யார்

கரவுங்கர வில்லார்கலை யுணர்வும்புரை கழியா
விரவுந்திகழ் பகலுஞ்செல வேகுஞ்சில யானை.

இ-ள். சிலயானை - சிலயானைகள், — நிரவும் கனை இருளும் திசைநிமிரும் புதுவெயிலும் விரவும் - பரம்புகின்ற செறிந்தஇருளும் திசையிற்சென்று பரக்கும் புதியவெய்யிலும் பொருந்திய, — கிரி உடலும் கனல் விழியும் - மலைபோலும் உடம்பும் அக்கினியைக் காலுகின்ற கண்களும், — கொலை வெய்யார் கரவும் கரவில்லார் கலை உணர்வும் புரை கழியா - (அவற்ருற்) கொலைத்தொழிலைச் செய்யும் கொடியாரது வஞ்சத்தையும், வஞ்சமில்லாரது நூலுணர்ச்சியையும் ஒத்தலின்மிக்கு, — இரவும் திகழ் பகலும் செல - இராக்காலமும் விளங்குகின்ற பகற்காலமும் உண்டாக, — ஏகும் - செல்வன. எ-று.

அவற்ருல் என ஏது வருவிக்கப்பட்டது. சிலயானை இருள்விரவிய உடலும், வெயில்விரவிய விழியும் புரைகழியா ஏகும், செல ஏகும் எனத் தனித்தனி முடிக்க. புரை இருளும் புதுவெயிலும் எனக் கூட்டிப் பொருள் கூறினுமமையும். (கசு)

புடைகண்ணிய வொளிராழியின் வெளிபோதரு புயலின்
றடைகண்ணிய நிமிர்பேருயர் வதனின்றகு தகைசா
னடைகண்ணிய வகன்ஞாலமு நளிர்நாகமு மளவா
விடைகண்ணிய விரைபோயின வினவெண்ணில விரதம்.

இ-ள். இன எண்ணில இரதம் - கூட்டமாகியஅளவில்லாததேர்கள், — புடைகண்ணிய ஒளிர் ஆழியின் - பக்கத்தேபொருந்திய விளங்குகின்றஉருளையினுலும், — வெளிபோதரு புயலின் தடை கண்ணிய நிமிர்பேர் உயர்வதனின் - ஆகாயத்திலே செல்லுகின்ற மேகங்களினது தடையைச்செய்கின்ற நிமிர்ந்த பெரிய உயர்ச்சியினுலும், — தகு தகைசால் நடை கண்ணிய அகல் ஞாலமும் நளிர் நாகமும் அளவா - (தான்) மிக்க தகைமைபொருந்திய செல்லுதலைச் செய்கின்ற அகன்ற பூமியையும் விளங்குகின்ற ஆகாயத்தையும் அளந்து, — இடை கண்ணியு விரைபோயின - படைகளின் இடையே மதிக்கும்படி விரைந்து சென்றன. எ-று.

ஆழியின் ஞாலமும் உயர்வதனின் நாகமும் அளவாப் போயின என்க. (கஎ)

ததியின்சுழ றருமத்தென விடமுந் தகுவலமுந்
துதியின்றிரி வனவாயின துங்கப்பல துரக
மிதியின்றகு பலதாள விதம்பெற்றிட விடையின்
கதியின்றள ராதேகின கவனப்பல கலிமா.

இ-ள். துங்கப்பல துரகம் - உயர்ச்சியையுடைய பலகுதிரைகள், — ததியின் சுழல்தரு மத்தென இடமும் தகு வலமும் துதியின் திரிவன ஆயின -

தயிரின்கண்ணே சுழலுகின்ற மத்தைப்போல இடப்பக்கத்தும் தகைமை பொருந்திய வலப்பக்கத்தும் புகழப்படுதலோடுந் திரிவனவாயின,—கவனப் பல கலிமா - வேகத்தையுடைய பலகுதிரைகள், — மிதியின் தகு பல தாள விதம் பெற்றிட இடையின் கதியின் தளராது எகின - மிதியிறேலே தக்க பலதாளங்களின் வகைகள்பொருந்த இடையிலே கதியிற் றளர்ச்சிகொள் ளாது சென்றன. எ-று.

இடமும் வலமும் திரிதல் - இடசாரிவலசாரியாய்த் திரிதல். பெற் றிட எகின என்க. முதலினுமீற்றிலுமுள்ள இன்சாரியைகள் எதுகைநோ க்கித் திரியாதியல்பாயின. (கஅ)

மாழத்தரு மிடிவெங்குரன் மலர்செங்கதிர் வருமா
வேழத்தனை யொன்ருனு முயங்காதன வேனு
மாழத்தன வலியெஞ்சிட வதிராமத மதிலெண்
வேழத்தன மதவெங்களி விலகுஞ்சில வேழம்.

இ-ள். சில வேழம் - சில யானைகள்,—மாழத் தகும் இடி வெங்குரல் - இறக்கச்செய்தலிற்றக்க இடிபோன்ற வெவ்விய குரலினுல்,—மலர்செங்க திர் வருமா எழு அத்தனை ஒன்ருனும் உயங்காதனவேனும் - பரந்த சிவந்த கிரணங்களையுடைய சூரியன் (தன் தேரிற்பூட்டி) வருகின்ற குதிரைகள் எழாகிய அவ்வளவும் ஒன்ருனும் வருந்தாதனவாயினும்,—ஆழத்தன வலி எஞ்சிட மதமதில் அதிரா - ஆழமாகிய தம்முடைய வலிகுறையும்படி மதச்செருக்கால் ஒலித்து,—எண் வேழத்து அன்ன மதவெங்களி விலகும் - அட்டயானைகளையொத்த மதத்தின் கொடிய செருக்கோடு செல்லும். எ-று.

உயங்காதனவேனும் எஞ்சிட எனவும், அதிரா விலகும் எனவும் இயைக்க. (கசு)

நிதியக்கதி ரிடைதுற்றிய வுருணெட்டர முடிமேற்
பதியக்கதிர் மணிகிட்டிய வழிமிக்கொளி படரா
பொதியக்கதி ரவன்விட்டொளிர் வெயிலிற்றனி பொதியு
மதியக்கதிர் மலிகிற்பன வருநித்தில வையம்.

இ-ள். வரும் நித்தில வையம் - வருகின்ற முத்துத்தேர்கள்,—நிதியக் கதிர் இடை துற்றிய உருள் நெட்டர முடிமேல் பதிய - பொற்கிரணங் கள் தம்மிடத்தே நெருங்கப்பெற்ற உருளைகள் நெடிய சேடனுடைய முடி யின்மீதுபதிய,—கதிர்மணி கிட்டியவழி மிக்க ஒளி படரா பொதிய - ஒளி பொருந்திய அம்முடிமணிகள் சமீபித்தவிடத்து (அவற்றின்) மிக்க ஒளி படர்ந்துமூட,—கதிரவன் விட்டு ஒளிர் வெயிலில் தனி பொதியும் மதியக் கதிர் மலிகிற்பன - சூரியனது விட்டுவிட்டுவிளங்குகின்ற வெயிலினூற் றனியே மூடப்பெற்ற சந்திரனைப்போலப் பொலிகின்றன. எ-று.

பொதிய மலிகிற்பன எனமுடிக்க. மதியக்கதிர் பண்புத்தொகை. இனி இதற்கு ஒளி உருவோமூட அது வெயிலைப்போலவிளங்கத் தேர் சந்திர கிரணத்தைவீசுவன எனப் பொருள்கொள்வாருமுளர். இப்பொருட்கு விளங்க என்பது அவாய்நிலையானே வருவிக்கப்பட்டது. (உ0)

இகல்சென்றன திசைசென்றன விவுளிக்குல னெரிவா
லகல்சென்றன வடிசென்றன வடர்சென்றன வாளின்
புகல்சென்றன மிதியின்றிடை பொலிசென்றன படியாற்
பகல்சென்றன பரிசென்றன படிசென்றன பலமா.

இ-ள். பல மா - பலகுதிரைகள்,—இகல் சென்றன திசை சென்றன இவுளிக் குலன் நெரிவால் - வலிமைமிக்க திசைவரைக்கும்பரந்த குதிரைக்கூட்டங்களினது நெரிவினால், — சென்றன அகல்சென்றன அடி அடர்சென்றன - சென்றனவாகிய அகன்ற அடிகள்நெருங்கப்பெற்றன வாய்,— ஆளின் புகல்சென்றன மிதியின்று இடை பொலிசென்றன படியால் - பாகனது புகுதலைப்பொருந்தினவாய்ப் பூமியில்மிதியாது இடையே பொலிந்துசென்றதன்மையினால்,—பகல்சென்றன பரிசென்றன படிசென்றன - சூரியன் (தன்றேரிற்பூட்டிச்) சென்ற குதிரைகள் சென்றதன்மை போல (வேகத்தோடு) சென்றன. எ-று.

நெருக்கத்தினால் அந்தரத்திற்சென்றவைகள் சூரியனுடையகுதிரைகளை ஒத்தன என்பதாம். (உக)

நிலவுங்கனை கடலும்வெளி நிலமும்புற நிலையு
முலையும்படி யிருண்மண்டிட வுலகம்பொதி துகள்போய்
மலையுந்திசை புகுகின்றன வழியின்றென மறுகா
வலையும்புய லொடுமெங்கணு மசையுங்கொடி யடவி.

இ-ள். நிலவும் கனைகடலும் வெளிநிலமும் புறநிலையும் உலையும்படி இருள் மண்டிட - விளங்குகின்ற ஒலிக்கின்ற கடலிலும் ஆகாயத்திலும் புறவிடங்களிலும் உலைவுறும்படி இருள்நெருங்குமாறு,—உலகம் பொதி துகள் போய் மலையுந் திசை-நிலவுலகமுழுதிய துகள்சென்றுநெருங்குகின்ற திசைகளில்,—புகுகின்றன வழி இன்று என மறுகா அலையும் புயலொடும் - புகுகின்றனவாய் வழியில்லை என்று திரும்பி அலைகின்ற மேகத்தோடும்,— கொடி அடவி எங்கணும் அசையும் - கொடிக்கூட்டங்கள் எவ்விடத்தும் அசையும். எ-று.

மண்டிடப் பொதிதுகள்போய் அசையும் திசை என இயைக்க. (உஉ)

ஆறாயின வலையாயின வழியாமத மதனாற்
சேறாயின நிடராயின திறலோரணி சிதற
நீறாயின வளறாயின பரிவாயுமிழ் நீரான்
மாறாயின வல்லானிலை வழியாயின விலையே.

இ-ள். ஆறுயின - வழிகளாயுள்ளவைகள்,—அலையாயின அழியா மத மதனுல் சேறுயின - கடல்போற்பெருகின அழியாத மதத்திஞற் சேறு பட்டன,—திறலோர் அணி சிதற நீறுயின திடராயின - பின் வீரர்களது ஆபரணங்கள் சிதற நீறுகப்பெற்றனவாய்த் திடராயின,—பரிவாய் உமிழ் நீரால் அளறுயின - குதிரைகள் வாயிஞல் உமிழுகின்ற நீரிஞல் (மீளவும்) சேறுயின,—மாறுயின அல்லால் நிலைவழியாயின இலை - இவ்வாறு அடிக் கடி மாறுபட்டனவேயல்லாமல் நிலையானவழியாகவிருந்தனவில்லை. எ-று.

ஆறுயின சேறுயினவாய், திடராயினவாய், சேறுயினவாய் மாறுயின வல்லால் நிலையானவழியாக இருந்தனவில்லை என முற்றுக்களை எச்சங் களாக்கி முடிப்பினுமமையும். (உங)

படையெண்ணில பருதித்தொகை பருமுத்தணி தவளக்
குடையெண்ணில மதிவீரர் குலக்குன்றகன் மார்பத்
தொடையெண்ணில மின்னுக்கொடி யிவைநின்ருெளிர் சுடரி
னடையெண்ணில வுளவுண்டுகொ ஞறுதன சுடரே.

இ-ள். படை எண் இல பருதித் தொகை - படைகள் அளவில்லாத ஞாயிற்றின்ருெகையாகும், — பருமுத்து அணி தவளக் குடை எண்இல மதி - பரிய முத்துக்களாலலங்கரித்த தவளக்குடைகள் அளவில்லாத திங்க ளின்ருெகையாகும்,—வீரர் குலக் குன்று அகல் மார்பத் தொடை எண் இல மின்னுக் கொடி - வீரர்களது குலமலைபோன்ற அகன்ற மார்பிலணிந்த மாலைகள் அளவில்லாதமின்னற்கொடிகளாகும்,—இவை நின்று ஒளிர் சுட ரின் நடை எண் இல உள - இவைகள் நின்று விளங்குகின்ற ஒளியினது செல்லுகையும் அளவிறந்தனவாகவுள்ளன,—நாஞதன சுடர் உண்டுகொல்- இவற்றிற்கு நாஞத சுடர்களும் ஆகாயத்திலுண்டோ. எ-று.

சுடர்-சூரியசந்திரர். (உச)

தலைநின்றன முரசத்தொடு தருபல்லிய மெவையு
மலைநின்றன வொலியெங்கு மயங்கத் திசைமருளா
நிலைநின்றன முகிலஞ்சுபு நெடிதோதை நிரப்பா
வலைநின்றன பிறநின்றன வறையும்பரி செவையே.

இ-ள். தலைநின்றன முரசத்தொடு தரு பல்லியம் எவையும் மலைநின் றன ஒலி எங்கும் மயங்க - தலைமைபொருந்திய முரசத்தோடு தக்க பல வாத்தியங்கள் எவற்றினும் மாறுபட்டனவாகிய ஒலிஎவ்விடத்துங் கலப்ப,— நிலைநின்றன முகில் அஞ்சுபு நெடிது ஓதை நிரப்பா திசை மருளா அலை நின்றன - அதனுல் இடந்தோறுநின்ற முகில்கள் அஞ்சிப் பேரொலிசெ ய்து செல்லுகின்ற திக்குத்தெரியாமல் அலைவுற்றுநின்றன,—பிறநின்றன அறையும் பரிசு எவை - பிறவாக நின்றனவற்றைக்குறித்துச் சொல்லுந் தன்மை யாது?. எ-று.

அது உருபு விகாரத்தாற்றொக்கது. இனி இதற்கு ஒலிமயங்கத் திசை மயங்கி நிலையாகநின்ற முகில்கள் (மேலும்மேலுமொலித்தலால்) அஞ்சி நிரப்பி அலைந்துநின்றன எனினுமாம். பிறநின்றனவறையும்பரிசெவை என்பதற்கு அறையுந்தன்மையாக நின்றன பிற எவை? எனப் பொருள்கோடலுமாம். (உ௫)

வேறு.

துதிமுறை வழாது சேனை யின்னணந் தொடர்ந்து செல்லக்
கதிமுறை வழாத வாசி போதலுங் கலையின் செல்வ
மதிமுறை வழாத தெய்வ முனிவரன் வளர்ப்ப மாட்சி
விதிமுறை வழாது நன்னர் விளைந்தன வேத வேள்வி.

இ-ள். துதிமுறை வழாது சேனை இன்னணம் தொடர்ந்து செல்ல - துதிக்குமுறையிற்றவறாது சேனைகள் இவ்வாறு தொடர்ந்து செல்ல,—கதிமுறை வழாத வாசி போதலும் - கதியின்முறையில்வழுவாத குதிரை செல்லுதலும்,—கலையின் செல்வ மதிமுறை வழாத தெய்வ முனிவரன் வளர்ப்ப - கலைகளின் செல்வத்தையுடைய புத்தியின்முறையிற்றவறாத தெய்வ முனிவராகிய வசிட்டர் வளர்ப்ப,—வேதவேள்வி மாட்சி விதிமுறை வழாது நன்னர் விளைந்தன - வேதவிதிப்படிசெய்யப்படும் யாகமானது மாட்சிமை பொருந்திய விதியின்முறையிற்றவறாது நன்குநடந்தன. எ-று.

கதி-வேகம். செயற்கையறிவோடு இயற்கையறிவுமுடையரென்பார் கலையின்செல்வமதிமுறைவழாததெய்வமுனிவரன் என்றார். வளர்ப்ப விளைந்தன என முடிக்க. (உ௬)

பெரியகற் பகநன் னீழ லினன்செவிப் புழையிற் பீடா
ரெரியழற் கொழுந்தும் வேலுய்த்திட்டெனவிறுப்பவெங்கும்
பருமணிச் சுடர்க ணாறிப் பாய்கதிர்ப் பரிதி நாண
விரிமகத் தலத்தி னின்று மெழுந்தன வேத வோதை.

இ-ள். பெரிய கற்பகநன்னீழலினன் செவிப் புழையில் - பெரியகற்பகச்சோலையின் நல்ல நீழலையுடையவனாகிய இந்திரனது செவித்துளையின் கண்ணே,—பீடு ஆர் எரி அழல் கொழுந்தும் வேல் உய்த்திட்டு என இறுப்ப - பெருமைபொருந்திய அக்கினியிலே காய்ச்சிய வேலைச் செலுத்தினாற்போலப் புக்குத் தாங்கும்படி,—எங்கும் பருமணிச் சுடர்கள் நாறிப் பாய் கதிர்ப் பரிதி நாண விரி மகத் தலத்திளின்றும் - எவ்விடத்தும் பரிய மணிகளின் ஒளிகள்தோன்றிப் பரந்தகிரணங்களையுடைய சூரியன் நாணும்படி பரக்கின்ற யாகசாலையினின்றும்,—வேத ஓதை எழுந்தன - வேதவொலி எழுந்தன. எ-று.

இறுப்ப எழுந்த என முடிக்க. காரியப்பொருட்டு. நாறி விரி மகத் தலம் என இயைக்க. (உ௭)

வானுலா நிவந்த மேக வயின்றழீஇத் திசைகள் வெளவிக்
கானலார் கதிரை மூடிக் கலைமதி கடந்து காமர்
மீனுலா மிடங்கண் மண்டி வியனுல களந்து முற்றுந்
தானலா தில்லை யென்ன விரிந்தது தூம தண்டம்.

இ-ள். வான் உலாம் நிவந்த மேக வயின் தழீஇ - ஆகாயத்தில்விளங்குகின்ற உயர்ந்த மேகமண்டலத்தைத்தழுவி,—திசைகள் வௌவி - திக்குகளையுங்கவர்ந்து,—கானல் ஆர் கதிரை மூடி - ஒளிபொருந்திய சூரியமண்டலத்தையும் மூடி,—கலைமதி கடந்து - கலைகளையுடைய சந்திரமண்டலத்தையுங் கடந்து,—காமர் மீன் உலாம் இடங்கள் மண்டி - அழகிய நட்சத்திரங்கள் விளங்குகின்ற இடங்களிலும் நிறைந்து,—வியனுலகு அளந்து - சுவர்க்கலோகத்தையுமளந்து,—முற்றும் தான் அல்லாது இல்லை என்னத் தூமதண்டம் விரிந்தது - உலகமுழுவதும் தானேயன்றி வேறில்லை என்று சொல்லும்படி புகைத்திரள் பரந்தது. எ-று.

வியனுலகு - சிறந்த உலகு=சுவர்க்கம். (உஅ)

விரைசெலா நின்ற வந்த வெம்புகை மிளிர்நாற் கோட்டுப்
பரசுமால் யானை யாற்குப் பாரிற்போர் விளையு மாற்று
லுரைசெய்நீள் பதிசிப் பால வுன்னத வரிமீத் தங்கி
யரசுவீற் றிருக்குந் தூம நிமிர்ந்தது மனைய தொன்றே.

இ-ள். விரைசெலாநின்ற அந்த வெம்புகை - விரைந்துசெல்லாநின்ற அந்த வெவ்விய புகையானது,—மிளிர் நாற் கோட்டுப் பரசு மால் யானையாற்குப் பாரில் போர் நிகழும் ஆற்றால் - விளங்குகின்ற நான்குதந்தங்களையுடைய துதிக்கப்படும் பெரிய ஐராவதயானையை (வாகனமாக) உடைய இந்திரனுக்குப் பூமியிற் போர்நிகழுந்தன்மையினல்,— உரைசெய் நீள் சீப்பால உன்னத அரிப் பதி - சொல்லப்படுகின்ற நீண்ட ஒளியின்பகுதியையுடைய உயர்ச்சிபொருந்திய அக்கினிதேவன்,—மீத்தங்கி அரசுவீற்றிருக்கும் தூமம் நிமிர்ந்ததும் அனையது - மேலேதங்கி அரசுவீற்றிருக்கின்ற ஆசனமாய புகை நிமிர்ந்ததையும் ஒத்தது. எ-று.

நிகழுமாற்றல் நிமிர்ந்ததும் அனையது என்க. யாகப்புகை மேற்கிளர்தல், தமது எசமானகிய இந்திரனுக்குப் பூமியில் யுத்தம் நிகழுந்தன்மையினல் அக்கினிதேவன் அரசுவீற்றிருக்கும் 'ஆசனமாய புகை பூமியில் இராது அவ்விந்திரற்குத் துணையாய்ச் சுவர்க்கத்துக்குச் சேறல்போலும் என்பது கருத்து. இனிச் சீபதியின் பாற்கடலிலுள்ள வடவை தங்கிவீற்றிருக்குந் தூமம் என்பாருமுளர். சீபதி-விஷ்ணு. சொன்னிலைமாறல். (உக)

விரைமதிக் கலையின் செல்வ முனிவரன் விளைப்ப நீடு
புரைதபப் பொலிந்த குண்டத் தெழுந்தொளிர் புதிய செந்தீ

யுரவயத் திகிரிச் செங்கை யுபேந்திர னுந்திச் செய்ய
மரைமலர்ப் பொகுட்டிற் றோன்றுங் கடவுளை மானு மாதோ.

இ-ள். விரை மதிக் கலையின் செல்வ முனிவரன் விளைப்ப - நுட்பமாகச்செல்லுகின்ற புத்தியையும், கல்விச்செல்வத்தையுமுடைய வசிட்டமுனிவர் வளர்ப்ப,—நீடு புரை தபப் பொலிந்த குண்டத்து எழுந்து ஒளிர் புதிய செந்தீ - நெடிய குற்றமறப் பொலிந்த ஓமகுண்டத்தினின்றும் மேல் எழுந்து விளங்குகின்ற புதிய அக்கினி,—உரவயத் திகிரிச் செங்கை உபேந்திரன் உந்திச் செய்ய மரைமலர்ப் பொகுட்டில்தோன்றும் கடவுளைமானும் - வலிமைபொருந்திய வெற்றியையுடைய சக்கரப்படையை ஏந்திய சிவந்த கையையுடைய விஷ்ணுவினது சிவந்த உந்திக்கமலத்திற்றோன்றிய பிரமனை ஒக்கும். எ-று.

செந்தீ மானும் என இயைக்க. ஓமகுண்டம் உந்திக்கமலத்தை ஒக்கும் என்க. (ௌ0)

களிநிலைத் தாய வெய்யோ ருடற்றடி கௌவி யுண்டு
நளிநிலைத் தாய செந்நீர் நாறிலை நாம வேலா
னளிநிலைத் தாய வேத வறநிலைத் தென்னு மின்ன
தெளிநிலைத் தொண்ணூற்றொன்பான் யாகமுந்திருத்தினானே.

இ-ள். களி நிலைத்து ஆய வெய்யோர் உடல் தடி கௌவி உண்டு - கறுவத்தின்நிலையையுடையோராய பகைவரின் உடம்பிற்றசையைக் கௌவியுண்டு, — நளிநிலைத்து ஆய செந்நீர் நாறு இலை நாம வேலான் - செறிவுநிலைத்துள்ள இரத்தம் நாறுகின்ற இலைத்தொழிலமைந்த அச்சம்பொருந்திய வேற்படையையுடையவனாகிய திலீபன், — அளிநிலைத்து ஆய வேத அற நிலைத்து என்னும் - அன்புசெய்யப்படும் நிலையையுடைத்தாகிய வேதத்திற்சொல்லப்பட்ட தருமநிலையையுடையது என்று சொல்லப்படும்—இன்ன தெளிநிலைத் தொண்ணூற்று ஒன்பான் யாகமும் திருத்தினான் - இவ்வாறான தெளியப்படும் தன்மையையுடைய தொண்ணூற்றொன்பது யாகங்களையுஞ் செய்தான். எ-று.

இன்ன யாகம் எனக் கூட்டுக. வேலான் திருத்தினான் என முடிக்க.

நட்பதி னுலகங் காக்கு நராதிப னயப்பி னுள்ளப்
பெட்பது பெறுதன் முன்னம் பெருவகை பெரிது போகி
விட்பதி யுடைய வெள்ளி வெண்களிற் றண்ண லின்னே
தட்பது தகவ தென்ன நுதலுபு சமைவ தானான்.

இ-ள். விண்பதியுடைய வெள்ளி வெண் களிற்று அண்ணல் - அப்பொழுது சுவர்க்கத்தையுடைய ஐராவதவாகனனாகிய இந்திரன், — நட்பதின் உலகம் காக்கும் நராதிபன் நயப்பின் உள்ளப் பெட்பது பெறுதன்முன்னம் -

விருப்பினால் உலகத்தைக்காக்கும் அரசனாகிய திலீபன் மகிழ்ச்சியோடும் மனத்தில் விரும்பிய பேற்றைப் பெறுதற்குமுன்னமே, — பெறாவகை பெரிதுபோகித் தட்பது தகவது என்ன நுதலுபு - பெறாதபடி மிகவுஞ்சென்று தடுத்துவிடுவது தகுதி என்று ஆலோசித்து,—சமைவதானான் - முயலுவானாயினான். எ-று.

அண்ணல் நுதலுபு சமைவதானான் என முடிக்க. (௬உ)

பெருமன வையத் தேறிப் பிறர்பெறல் பொறாமை யென்னு
மொருமகன் வயிரமுட்கோ றொடாவினைப் புரவி யொய்யச்
செருமன நிலையிற் போவா னேனுமற் றொருதிண் டேரி
னருமையி னேறி யூரா வந்தர மிழிந்திட் டானால்.

இ-ள். பெருமன வையத்து ஏறி - பெரிய மனமாகிய தேரிலேறி,— பிறர்பெறல் பொறாமை யென்னும் ஒருமகன் வினைப் புரவி ஒய்ய - பிறருடைய பெறுதற்கண்ணே பொறாமையாகிய ஒருபாகன் வயிரமாகிய முட்கோலைப்பிடித்துத் தீவினையாகிய புரவியைச்செலுத்த,—சேரும் அன நிலையிற் போவானேனும் - பொருந்திய அந்த நிலையாகப் போவானாயினும்,— மற்று ஒரு திண் தேரின் அருமையின் ஏறி ஊரா அந்தரம் இழிந்திட்டான் - பிறிதொரு திண்ணியதேரில் அரிதாக ஏறிச் செலுத்தி ஆகாயத்தினின்று மிறங்கினான். எ-று.

ஏறிப்போவானேனும் ஏறி ஊரா இழிந்திட்டான் என்க. சேரும் என்பது செரும் எனக் குறுகிநின்றது. செருமனநிலையின் என்பதற்குப் போரில் மன்னியநிலை என்றல் சிறப்பின்று. (௬௩)

தளநிலை மலர்த்தார் வேந்தன் றாரிணி பொதிந்த கீர்த்தி
களநிலை நிமிர வாக்கங் கைவந்து குறுக வேள்வி
வளநிலை பெருக வொன்னார் மதிநிலை யருக மாட்சி
யுளநிலை மனனிற் செல்லு மொருபெரும் புரவி கண்டான்.

இ-ள். தள நிலை மலர்த்தார் வேந்தன் தாரிணி பொதிந்த கீர்த்தி களநிலை நிமிர - இதழ்பொருந்திய மலர்மாலையை அணிந்த அரசனது பூமியை மூடிய கீர்த்தி இடங்கடோறும் மேற்படவும்,—ஆக்கம் கைவந்து குறுக - (அவனுக்குச்) செல்வம் வந்தடையவும்,—வேள்விவளம் நிலைபெருக - யாகத்தின் வளமானது நிலைபெருகவும்,—ஒன்னார் மதிநிலை அருக - பகைவரது அறிவினிலைமை குறையவும்,—மாட்சி உளநிலை மனனின் செல்லும் ஒரு பெரும் புரவி கண்டான் - மாட்சிமைபொருந்திய அழிவில்லாத மனத்தைப்போலச் செல்லும் ஒப்பற்ற பெரிய குதிரையைக் கண்டான். எ-று.

நிமிர, குறுக, பெருக, அருக செல்லும் புரவி என்க. (௬௪)

வேறு.

மண்ம யக்கு மயக்குடை மையலா
ருண்ம யக்கென வாசியை யுற்றுளார்
கண்ம யக்கி னுறங்குபு கைக்கொளா
வெண்ம யக்கி விசும்பிடை யேறினன்.

இ-ள். மண்மயக்கும் மயக்கு உடை மையலார் உண் மயக்கு என - பூமியிலுள்ளாரை மயக்குகின்ற மயக்கத்தையுடைய மாயாவித்தைக்காரர் பிறருடைய மனத்தை மயக்குதல்போல,—உற்றுளார் கண்மயக்கின் உறங்குபு எண்மயக்கி - பின்வந்தவர்கள் கண்மயக்கத்தோடு உறங்கும்படி அவர்கள் மனத்தைமயக்கி,—வாசியைக் கைக்கொளா விசும்பிடை ஏறினன் - குதிரையைக் கைக்கொண்டு ஆகாயத்தில் ஏறினன். எ-று.

உண்மயக்கு என்பதில் மயக்கு முதனிலைத்தொழிற்பெயர். காரியப் பொருட்டில்வந்த உறங்க என்னும் செயவெனெச்சம் உறங்குபு எனச் செய்தெனெச்சமாகத் திரிந்துநின்றது. மயக்கென மயக்கி எனவும், உறங்குபு மயக்கி எனவும் இயைக்க. (௩௫)

ஏணின் றோங்கிய யாக விழுப்பலன்
மாணின் றோங்கிய வாம்பரி காண்கிலார்
நாணின் றோங்கிய மம்மரி னண்ணினார்
கோணின் றோங்கிய கொற்றவில் வீரரே.

இ-ள். ஏண் நின்று ஓங்கிய யாக விழுப்பலன் மாண் நின்று ஓங்கிய வாம்பரி காண்கிலார் - பெருமை நிலையுற்றுயர்ந்த யாகத்தின் சிறந்த பலன் மாட்சியோடு நிலையுற்று விளங்குதற்குக் காரணமாகிய வாவுகின்ற குதிரையைக் காணாதவராய்,—நாண் நின்று ஓங்கியமம்மரின் நண்ணினார் - நாண்நிலையுறப்பெற்று மிக்கமயக்கத்தைப்பொருந்தினார்கள்,—கோண் நின்று ஓங்கிய கொற்ற வில்வீரர் - வளைவு நிலையுற்றுவிளங்கிய வெற்றியை யுடைய வில்லையேந்திய வீரர்கள். எ-று.

ஓங்கிய என்னும் பெயரெச்சம் பரி என்னும் ஏதுப்பெயர்கொண்டது. காண்கிலார் வினையெச்சமுற்று. நின்று நண்ணினார் என இயைக்க. (௩௬)

குன்றந் தேடியுங் கொன்னதி கூடியுந்
துன்றுங் கான்றுரு விக்கொடு துன்னியுஞ்
சென்றெம் மாடுந் தெரித்திடை தைவரா
நின்றின் னுவலை நீங்கல ராயினர்.

இ-ள். குன்றம் தேடியும் - (இரகுவின் வில்வீரர்கள்) மலைகளிற்றேடியும்,—கொன்நதி கூடியும் - பெருமைபொருந்திய நதிகளிற்சென்று நாடியும்,—துன்றும் கான் துருவிக்கொடு துன்னியும் - நெருங்கிய காடுகளை

ஆராய்ந்துகொண்டு சென்றும், — சென்று எமாடும் தெரித்து இடைதைவரா நின்று - இவ்வாறு போய் எவ்விடங்களிலும் பார்த்து இடையே ஆராய்ந்துநின்று,—இன்ன அலே நீங்கலர் ஆயினர் - துன்பக்கடலினின்றும் நீங்காதவராயினர்கள். எ-று- (௩எ)

காக்கும் வாம்பரி காண்கில தென்றொலி
பூக்கும் வாய்மொழிக் கூற்றம் புகுந்துயிர்
தீக்குஞ் செய்கை செயச்செயத் தேம்பினன்
வாக்கும் வாகையும் வண்மையு மாறிலான்.

இ-ள். காக்கும் வாம்பரி காண்கிலது என்ற ஒலி பூக்கும் வாய்மொழிக் கூற்றம் புகுந்து - காக்கப்பட்ட வாவுகின்ற குதிரை காணப்பட்டில்லது என்ற ஒலிமிக்க வார்த்தையாகிய கூற்றம்புகுந்து,—உயிர் தீக்கும் செய்கை செயச் செயத் தேம்பினன் - உயிரைக்கெடுக்குஞ் செய்கையைச் செய்யச் செய்யத் தளர்ந்தான்,—வாக்கும் வாகையும் வண்மையும் மாறிலான் - உண்மையும் வெற்றியும் கொடையும் நீங்காதவனாகிய ரகு. எ-று.

என்ற என்பதில் அகரம் தொக்குநின்றது. (௩அ)

மாய மங்கது வாதலின் மாழ்கிநின்
றேயெ னுங்கணத் தேயுணர் வெய்தியே
தூய நெஞ்சிற் சுடுகனல் கண்வழி
போயி றங்கிப் புகையெழப் பொங்கினன்.

இ-ள். அங்கு அது மாயம் ஆதலின் மாழ்கி நின்று - அவ்விடத்து அது மாயமாதலினாலே மயக்கமுற்று நின்று, — ஏ எனும் கணத்து உணர்வு எய்தி - ஏ என்றுஞ் சொல்லுங் கணப்பொழுதினுள்ளே அறிவைப்பொருந்தி,—தூய நெஞ்சில் - சுத்தமாகிய மனத்தில்,—சுடுகனல் கண்வழிபோய் இறங்கிப் புகை எழப் பொங்கினன் - சுடுகின்ற அக்கினியானது கண்ணின் வழியேசென்று இறங்கிப் புகையுண்டாகக் கோபித்தான். எ-று.

நெஞ்சில் பொங்கினன் என இயையும். (௩க)

பாழி யிற்பரி கொண்டு படர்ந்துளா
ராழி புக்குள ராயினு மக்கணத்
தூழி யிற்படர் தீயினி லொண்கட
லேழு முற்றுற வென்கணை யெய்துமே.

இ-ள். பாழியில் பரி கொண்டு படர்ந்துளார் ஆழிபுக்குளராயினும் - பெருமையோடு குதிரையைக் கொண்டுசென்றவர்கள் கடலிற்புக்கொளித்தாராயினும், — அக் கணத்து ஒண் கடல் ஏழும் முற்றுற - அப்பொழுதே ஒள்ளிய கடல்கள் ஏழும் அழியும்படி,—ஊழியில் படர் தீயினில் என்கணை

எய்தும் - ஊழிகாலத்திலே பரம்புகின்ற அக்கினியைப்போல எனதுபாணஞ் செல்லும். எ-று.

புக்குளாராயினும் எய்தும், தீயினில் எய்தும், முற்றுற எய்தும் எனத் தனித்தனி முடிக்க. (சO)

வஞ்சர் புக்கரம் வைகிடிற் சேடனென்
வெஞ்ச ரத்தி னிறப்பது மெய்ம்மையான்
மிஞ்சு ரத்து மிகுஞ்சுமை யேற்றியெண்
குஞ்ச ரத்துயிர் கொண்டன ரென்பவே.

இ-ள். வஞ்சர் அரம் புக்கு வைகிடில் - குதிரைக்கள்வர் பாதலத்திற் புகுந்து இருக்கில்,—சேடன் என் வெம் சரத்தின் இறப்பது மெய்ம்மை - சேடனானவன் எனது கொடிய அம்பினால் இறப்பது உண்மை (அதனால்),— மிஞ்சு உரத்து மிகும் சுமை ஏற்றி - (அவர்கள்) மிகுந்த வலியோடு பெரும் பாரத்தைச் சுமத்தி,—எண் குஞ்சரத்து உயிர் கொண்டனர் - அட்டயானைகளின் உயிரைக் கவர்ந்தவர்களேயாவர். எ-று.

ஆல், என்ப என்பன அசைநிலை. சேடனின்பாரம் அவனைக்கொன்ற விடத்து எட்டியானைகளின் மேலாமாதலின் சுமையேற்றி என்றார். (சக)

கன்ன மேகொடு போயின கண்டகர்
பொன்னின் மாநகர் புக்குறை வாரெனிற்
சொன்ன வானவர் துய்க்கு மருந்துசே
ரன்ன மாநகர்க் காக்கின ராலமே.

இ-ள். கன்னம் கொடு போயின கண்டகர் - களவுசெய்துகொண்டு சென்ற கள்வர்,—பொன்னின் மாநகர் புக்கு உறைவாரெனில் - சுவர்க்க லோகம் புக்கிருப்பாராயின்,—சொன்ன வானவர் துய்க்கும் மருந்துசேர் அன்ன மாநகர்க்கு - சொல்லப்பட்ட தேவர்கள் உண்ணுகின்ற அமுதம் பொருந்திய அந்தப் பெரிய நகரத்திற்கு,—ஆலம் ஆக்கினர் - நஞ்சை உண்டாக்கினவரேயாம். எ-று.

சொன்ன நகர் என இயைக்க. ஆலம் ஆக்கினர் எனவே அந்நகரை அழியச்செய்தவராவர் என்றபடி. (சஉ)

காய ருந்திறற் கள்வர் தயித்திய
ராயு மென்கணைக் காற்றுவ தெங்ஙனே
வேய்நெ ருங்கிய சூழலின் வெம்மைய
தீயெ ழுந்திடி னென்கொ றெரிப்பதே.

இ-ள். காய் அரும் திறல் கள்வர் தயித்தியர் ஆயும் - கொல்லுகின்ற அரிய திறலையுடைய குதிரைக்கள்வர் அவுணர்களாயினும்,—என் கணைக்கு

ஆற்றுவது எங்ஙன் - என்கணைக்கு ஆற்றலுடையராவது எவ்விடத்து,—வேய் நெருஙகிய சூழலின் - மூங்கில்நெருங்கிய இடத்திலே,—வெம்மைய தீ எழுந்திடில் தெரிப்பது என் - வெப்பத்தையுடைய அக்கினி மூளுமாயின் அது (அவற்றை எரிப்பதைக் குறித்து) நாம் விதந்து சொல்வது என்னை. எ-று.

எனவே அவுணர்களை என்பாணம் மிக இலகுவாகக் கொல்லுமென்பதாம். என்கணைக்காற்றுவது எங்ஙன் என்பதற்கு, என்கணையை அவர்கள் பொறுப்பது எவ்விடத்து எனினுமாம். (௪௩)

வெப்பு றத்திகழ் விற்றிகி ரிக்கிரிக்
கப்பு றத்திருள் புக்குள ரல்லரே
லிப்பு றப்பரப் பெங்கணு மென்கணை
குப்பு றத்திரிந் தாருயிர் கொள்ளுமே.

இ-ள். வெப்பு உறத் திகழ் வில் திகிரிக்கிரிக்கு அப்புறத்து - (சூரிய) வெப்பமுண்டாக விளங்குகின்ற ஒளிபொருந்திய சக்கரவாளகிரிக்கு அப்புறத்திலுள்ள, — இருள் புக்குளர் அல்லரேல் - இருளுலகிற் புக்கிருப்பவரல்லராயின்,—இப்புறப் பரப்பு எஙகணும் - இப்புறத்திலுள்ள பூமியின்பரப்பெங்கும்,—என்கணை குப்புறத் திரிந்து ஆர் உயிர் கொள்ளும் - என்பாணம் குதித்துத்திரிந்து அரிய உயிரைக்கவரும். எ-று.

அல்லரேல் கொள்ளும் என இயைக்க. சக்கரவாளக்கிரிக்கு இப்புறத்து வெய்யிலாதலின் வெப்புறத்திகழ்விற்றிகிரிக்கிரிக்கு என்றார். (௪௪)

வேறு.

இனையன கழறி நம்பி யுலகெலா மிமைப்பி னேகும்
துனையன பகழி யாய்பு துணிபுகொண் டெழுமவ் வேல்வை
முனையன வினையிற் றூய தீவினை முற்றிற் சூழ்நல்
வினையென வணுகிற் றந்த நந்தினி விரைவி னம்மா.

இ-ள். இனையன கழறி - இவைபோல்வனவற்றைச்சொல்லி,—நம்பி - இரகுமகாராசன், — உலகு எலாம் இமைப்பின் ஏகும் துனையன பகழி ஆய்பு துணிபுகொண்டு எழும் அ எல்வை - உலகமெங்கும் இமைப்பொழுதிலே செல்லுகின்ற விரைவையுடைய அம்பினை ஆராய்ந்து எடுத்துத் துணிவுற்று எழுகின்ற அப்பொழுது, — முன்னையன வினை ஆய தீவினை முற்றில் சூழ் நல்வினை என - பழவினையாகிய தீவினையின் முடிவிலடைந்த நல்வினையைப்போல, — அந்த நந்தினி விரைவின் அணுகிற்று - அந்த நந்தினி விரைவாக வந்தது. எ-று.

இற்று சாரியை. குதிரையையிழந்து வருந்தியது தீவினைவந்ததுபோன்றும், அப்படி வருந்தியகாலத்து நந்தினிவந்தது அத்தீவினையின்முடிவிலே நல்வினைவந்ததுபோன்றும் இருந்தவென்க. (௪௫)

ஏலவங் கெதிர்ந்த வானினீர்ம்புன லங்கை யேற்றுக்
காலையங் கதிரிற் சேந்த கண்கழீஇ விசும்பு பார்த்தான்
சோலைபந் தாருத் தாமஞ் சூழ்தலைக் குலிச வைவேன்
மாலையங் கதிரின் மின்ன வலாரிமீப் போதக் கண்டான்.

இ-ள். ஏல அங்கு எதிர்ந்த - சமையத்திற்குப்பொருந்த அங்கே எதிராகவந்த, — ஆனின் ஈர் புனல் அங்கை ஏற்று - பசுவின் குளிர்ந்தசலத்தைக் கையின்கணேற்று,—காலை கதிரில் சேந்த கண்கழீஇ விசும்பு பார்த்தான் - உதயஞாயிற்றைப்போலச் சிவந்த கண்களைக் கழுவி ஆகாயத்தைப் பார்த்தான்,—அம் தாருச் சோலைத் தாமம் சூழ் தலைக் குலிச வை வேல் மாலைக் கதிரின் மின்ன - (அங்ஙனம்பார்த்தபொழுது) அழகிய கற்பகதருச்சோலையினதுமாலைசூழ்ந்த நுதியையுடைய குலிசமாகிய கூரியபடை மாலைக்காலத்துச் சூரியனைப்போலப்பிரகாசிக்க,—வலாரி மீப்போதக் கண்டான்- இந்திரன் மேலேசெல்லக் கண்டான். எ-று.

காலையங்கதிர், மாலையங்கதிர் என்பழி அம் சாரியைகள். "வேற்றுமையாயினைகானிறுமொழி-யீற்றழிவோடுமம்மேற்பவுமுளவே" என்னுஞ் சூத்திரத்து ஈற்றழிவோடும் என்றவும்மையால், காலை, மாலை என்னு மைகாரவீற்றுமொழிகள் ஈறழியாமலே ஐகாரச்சாரியை பெற்றுவந்தன. ()

வாம்பரிக் கள்வ வேகேல் மாயஞ்செய் வஞ்ச வேகேல்
கூம்புடைத் தேர வேகேல் கொடியரிற் கொடியா யேகே
லாம்பரி சறியா யேகே லவுணருக் கெளியா யேகே
றேம்பின திறத்தா யேகே லென்றனன் செருக்கொள் வீரன்.

இ-ள். செருக் கொள் வீரன் - போரிற்கொண்ட வீரத்தையுடையோனாகிய இரகு,—வாம் பரிக் கள்வ ஏகேல் - வாவுகின்ற குதிரையைக் களவு செய்தவனே செல்லாதே,—கூம்பு உடைத் தேர ஏகேல் - கூம்பையுடைய தேரைக்கொண்டவனே செல்லாதே,—கொடியரில் கொடியாய் ஏகேல் - கொடியவர்களுட் கொடியவனே செல்லாதே,—ஆம் பரிசு அறியாய் ஏகேல் - மேல்வருந்தன்மையை அறியாதவனே செல்லாதே, — அவுணருக்கு எளியாய் ஏகேல் - அவுணர்களுக்கு எளியவனே செல்லாதே,—தேம்பின திறத்தாய் ஏகேல் என்றனன் - வலிகுறைந்த தன்மையையுடையானே செல்லாதே என்றான். எ-று.

வீரன் என்றனன் என முடிக்க. ஏகேல் என்பன முன்னிலையேவலொருமை எதிர்மறைத்தெரிநிலைவினைமுற்றுக்கள். (௪௭)

கருமுகிற் பிறப்ப தல்லாற் காசினிப் பிறந்து மீப்போ
முருமென வெழுந்த வெஞ்சொ லொல்லொலி செவியிற் பாய
வருகடற் பிறப்ப தல்லால் வான்வரு வடவைத் தீயிற்
றிருகினன் றேரி னோடு மாயிரஞ் செங்க ணனே.

இ-ள். கருமுகில் பிறப்பது அல்லால் காசினி பிறந்து மீப் போம் உரும் என - கரியமுகிலிற் பிறப்பதன்றிப் பூமியிற் பிறந்து மேலேபோகின்ற இடியைப்போல,—எழுந்த வெம் சொல் ஒல் ஒலி செவியில் பாய - எழுந்த கொடுஞ்சொல்லினது ஒல்லென்ற ஒலியானது செவியினிடத்தே புக,—ஆயிரம் செங்கணான் - ஆயிரஞ் சிவந்த கண்களையுடையவனாகிய இந்திரன்,—வரு கடல் பிறப்பது அல்லால் வான் வரு வடவைத்தீயில் தேரினொடு திருகினன் - மேற்படுகின்ற கடலிற்பிறப்பதன்றி ஆகாயத்திற்றோன்றிய வடவாமுகாக்கினியைப்போலத் தேரோடும் திரும்பினான். எ-று.

பாயத் திருகினான் என்க. கோபத்தோடு திரும்பினான் என்பார் வடவைத்தீயிற்றிருகினான் என்றார். (சஅ)

நிசிப்பட்ட வளகப் பைம்பொ னிரைவளைத் தடங்கைச் செங்கட்
சசிப்பட்ட மனனிற் செந்தீத் தழைத்திடத் திருகாநின்ற
வசிப்பட்ட குலிசத் தேவும் வையமும் வையத் தட்டின்
விசிப்பட்ட வேள்வி மாவு நோக்கினன் விளம்பு கின்றான்.

இ-ள். நிசி பட்ட அளகப் பைம்பொன் நிரை வளைத் தடம் கைச் செங்கண் சசிப் பட்ட மனனில் - இருளையொத்தகூந்தலையும் பசிய பொன்னாலாகிய நிரையான வளையலையணிந்த வளைந்த கையையும் செவ்வரிபரந்த கண்களையுமுடைய இந்திராணியைப்பொருந்திய மனத்தில்,— தீதழைத்திட - அக்கினி தழைக்க,—திருகாநின்ற வசிப்பட்ட குலிசத்தேவும் - திரும்பிய கூர்மையைக்கொண்ட குலிசப்படையையுடைய இந்திரனையும்,— வையமும் - தேரையும்,—வையத்தட்டின் விசிப்பட்ட வேள்விமாவும் - தேர்த்தட்டிலே கட்டுதலைப்பொருந்திய யாகத்திற்குரிய குதிரையையும்,—நோக்கினன் விளம்புகின்றான் - பார்த்துச் சொல்லுகின்றான். எ-று.

சசிப்பட்ட, வசிப்பட்ட என்பவைகளை எழுவாய்த்தொடராகக்கொள்ளினு மமையும். இந்திராணியையே நோக்கிய மனம் என்பார் சசிப்பட்ட மனம் என்றார். இதனால்; இந்திராணியை இழக்கவருமென்ற அச்சத்தினாலேயே இக்குதிரையைக் கவர்ந்தான் என்பது குறிப்பிக்கப்பட்டது. (சகூ)

பழிப்பது படாத வேள்வி யாதினும் பாகமுன்ன
மொழிப்பது படாது கொள்ளு முவப்புடை யொருவனீயே
செழிப்பது திகழ வெந்தை யியற்றிய தெய்வ வேள்வி
யழிப்பது துணிகின் றாயா லவுணரே யளிய ரம்மா.

இ-ள். பழிப்பது படாத வேள்வி யாதினும் - பழித்தலைப்பொருந்தாத யாகங்களெவற்றின்கண்ணும்,— பாகம் முன்னம் ஒழிப்பது படாது கொள்ளும் உவப்பு உடை ஒருவன் நீயே - அவிப்பாகத்தை முன்னரே நீக்காது கொள்ளுகின்ற மகிழ்ச்சியையுடைய ஒருவனாகிய நீயே,— செழிப்பது திகழ எந்தை இயற்றிய தெய்வ வேள்வி அழிப்பது துணிகின்றாய் - செழிப்பானது விளங்க என்பிதா இயற்றிய தெய்வத்தன்மைபொருந்திய

யாகத்தை அழித்தற்குத் துணிகின்றாய்;—அவுணரே அளியர் - (ஆகையால் இதனை நோக்குமிடத்து) அவுணர்களே அருளுடையர்கள். எ-று.

அவியை முன்னரே ஏற்கின்றமையினாலே பாதுகாத்தற்குரியவனாயிருந்தும் இரக்கமின்றி அழிப்பதற்குத் துணிகின்றமையின், உன்னினும் பார்க்க அவியை யேலாது அழிக்கின்ற அவுணரே யளியர் என்பான் இங்ஙனம் கூறினான். அம்மா வியப்பின்கட் குறிப்பு. (ருo)

போதவேள் வியினை யெஞ்சா தழித்திடும் புன்மை யோர்செ
யேதமே யணுகா வண்ண மிசைந்துகொண் டினிது காக்கு
நீதகா திழைத்தி யாயி னிலைக்குமோ நெறிக ணித்த
வேதநா லுரைத்த தொல்லை விதியும்போ யிறந்த தன்றே.

இ-ள். போத வேள்வியினை எஞ்சாது அழித்திடும் புன்மையோர் செய் ஏதமே அணுகாவண்ணம் - மிகவும் யாகத்தை எஞ்சாதபடி அழிக்கின்ற எளியோராகிய இராக்கதர் முதலியோர் செய்கின்ற குற்றமே அடையாதபடி;—இசைந்துகொண்டு இனிது காக்கும் நீ - மனம் ஒருப்பாடுற்று (அவ்வேள்வியை) நன்கு காக்கின்ற நீயே,—தகாது இழைத்தியாயின் - (காத்தலாகிய நின் பெருமைக்குத்) தகாதனவற்றைச் செய்வாயாயின்;—நெறிகள் நிலைக்குமோ - யாகமுதலிய தருமநெறிகள் நிலையுறுமா,—நித்த வேதநூல் உரைத்த தொல்லை விதியும்போய் இறந்தது - நித்தமான வேதநூல் கூறிய பழைய விதியும் நீங்கி அழிந்தது. எ-று.

காப்போர் எனக் கூறப்பட்டோர் அழித்தலின் 'வேதநூலுரைத்த தொல்லைவிதியும்போயிறந்தது என்றான். ஏகாரம் தேற்றம். (ருக)

நள்ளொத்த வுலகின் மற்றை நாட்டினி னவின்ற கேள்வி [ய்
தெள்ளத்தெள் ளியநன் னீர்மைச் செய்கையிற் சிறந்த சீரோ
கள்ளத்து நிரந்த மாய வஞ்சனை காசி லாநின்
னுள்ளத்து முளதே யாயி னுலகமு மில்லை போலும்.

இ-ள். நள் ஒத்த உலகில் - நடுவேயமைந்துள்ள பூவுலகிலும்,—மற்றை நாட்டினில் - மற்றைய உலகங்களிலும், — நவின்ற கேள்வி தெள்ளத் தெள்ளிய நன்னீர்மைச் செய்கையில் சிறந்த சீரோய் - சொல்லப்பட்ட நீதிநூல்கள் மிகத் தெளிவாகக் கூறிய நல்லொழுக்கச் செயலிற் சிறந்த சிறப்பையுடைய தேவராசனே,—கள்ளத்து நிரந்த மாய வஞ்சனை காசு இலா நின் உள்ளத்தும் உளதேயாயின் - கள்ளத்தோடு நிறைந்த மாயா வஞ்சனை உனது மனத்திலும் உள்ளதேயானால்,—உலகமும் இல்லைப் போலும் - இனி உலகமும் அழிந்துவிடும்போலும். எ-று.

உம்மை சிறப்பு. நல்லோர் தருமங்களை அழிக்கத் தொடங்கிக்கொண்டமையின் இனி உலகம் நிலைத்தலரிதென்பான் உலகமுமில்லைப்போலும் என்றான். (ருஉ)

உலகெலாம் பரவப் பட்ட வுனதுழி யொருவிற் ருயி
னலகிலா வரிய நீதி யாருழிச் செல்லு மையோ
நிலைகுலா நீர்மை யாரை நீணெறி நிரந்து நேடி
னிலைகொலா மிடர்செய் பாரி னென்பிழைத் தேங்கள் யாமே.

இ-ள். உலகெலாம் பரவப் பட்ட உனதுழி ஒருவிற்று ஆயின் - உலகத்துள்ளார் யாவரானும் துதிக்கப்பட்ட உன்னிடத்தில் நீங்கியதாயின்,— அலகுஇலா அரிய நீதி ஆருழிச் செல்லும் - அளவில்லாத அரிய நீதியானது வேறு யாரிடத்திலே சென்றிருக்கும்,—ஐயோ! நிலைகுலாம் நீர்மையாரை நீள் நெறி நிரந்து நேடின் இலைகொலாம் - ஐயோ! நிலையாக விளங்கும் நல்லொழுக்கமுடையாரை (சுவர்க்க முதலிய) உயர்ந்த கதிகளிலும் ஆராய்ந்துபார்க்கில் இல்லைப்போலும்,—இடர்செய் பாரில் யாங்கள் என் பிழைத்தேம் - (அங்ஙனமாகுல்) தீவினையையே மிகுத்துச் செய்கின்ற பூமியில் நாங்கள் யாது பிழைசெய்தேம். எ-று.

நல்வினையையே மிகுத்துச்செய்யும் உயர்ந்தகதிகளில் தீவினைசெய்யப்படில், தீவினையையே மிகுத்துச் செய்யும் பூமியில் நாங்கள் செய்வது பிழையன்று என்பான் நிலைகுலா நீர்மையாரை......... என்பிழைத்தேங்கள் யாமே என்முன். ஐயோ என்பது இரக்கப்பொருளில் வந்தது. (ருங.)

துண்ணெனத் தொடர்ந்து போகித் தொல்லையோ ரிதயத் துள்ளே
புண்ணெனக் கிடந்து வெய்திற் புழுங்குபு புடைப்ப தல்லாற்
பெண்ணெனச் சிறந்த மாயத் தெய்திய விழிபும் பின்னர்க்
கண்ணெனச் சிறந்த தென்னச் சிறக்குமோ கரவு மையா.

இ-ள். ஐயா! - அரசனே!,—துண்ணெனத் தொடர்ந்து போகித் தொல்லையோர் இதயத்துள் புண்ணெனக் கிடந்து - விரைவாகத் தொடர்ந்துசென்று பழையோருடைய மனத்தினுள்ளே புண்ணுகக் கிடந்து,— வெய்தில் புழுங்குபு புடைப்பது அல்லால் - வெம்மையோடு புழுங்கச் செய்து தாக்குவதேயன்றி,—கரவும் - களவும், — பெண்ணெனச் சிறந்த மாயத்து எய்திய இழிபும் பின்னர் கண்ணெனச் சிறந்தது என்ன - பெண்ணென்று சிறப்புப்பெயர்படைத்துள்ள மாயையினுல் அடைந்த இழிவைத்தருவதாகிய யோனியும் கண்ணென்று சிறந்து காட்டினுற்போல,— சிறக்குமோ - பிறிதொன்ருகச் சிறந்து காட்டுமோ. எ-று.

ஓகாரம் எதிர்மறை. புழுங்குபு என்பதில் பிறவினை விகுதி தொக்குநின்றது. அல்லால் சிறக்குமோ என இயைக்க. இழிபு உபசாரம். யோனியை மறைத்ததுபோல இதனை மறைத்தல் கூடாது என்பதாம். (ருச)

ஆதலாற் றரக நீகொண் டகலுத லறிவன் றன்றி
யேதிலா ருலகி னின்னை யிகழவும் படுவ துண்டா

ளீதியால் விடுத்து நேரில் கற்பக நீழற் சேறி
தீதிலா தென்ன மேலோன் சிறுநகை பொடித்துச் செப்பும்.

இ-ள். ஆதலால் துரகம் நீகொண்டு அகலுதல் அறிவன்று - ஆதலினாலே குதிரையை நீகொண்டு செல்லுதல் முறையன்று,—அன்றி எதிலார் உலகில் நின்னை இகழவும்படுவது உண்டு - (அது) அல்லாமலும் அயலார்கள் உலகத்திலே உன்னை இகழவும்படுவதுண்டு,—நீதியால் விடுத்து தீது இலாது நேர் இல் கற்பக நீழல் சேறி என்ன - நீதியோடு (குதிரையை) விடுத்துத் தீமையின்றி (உனது) உவமையில்லாத கற்பக நீழலின்கண்ணே சென்று வசிக்குதி என்று கூற,—சிறுநகைபொடித்து மேலோன் செப்பும் - புன்னகைசெய்து இந்திரன் சொல்லுவான். எ-று.

தீதிலாது என்பதில் இலாது என்பதை முற்றாக்கி அடையாது எனப்பொருள் கூறினுமமையும். என்னச் செப்பும் என முடிக்க. (ருரு)

தெள்வலி யுடையை யாகத் திறத்தினு லுந்தை தேந்தார்க்
கள்வழி தருவிற் சூழ்ந்த நகர்கொளக் கருத்திற் கொண்டா
னுள்வரு மவாவி னார்மற் றேதிலா ருடைமை யுள்ள [டோர்.
கொள்வது துணிந்தா ராயிற் கொடுப்பரோ வருந்திக் கொண்

இ-ள். தெள் வலியுடையை - தெளிந்த வலியையுடையானே,— உந்தை - உன் பிதாவாகிய திலீபன்,—யாகத்திறத்தினால் - யாகத்தின் பகுதியினால்,—தேம் தார் கள் வழி தருவில் சூழ்ந்த நகர் கொளக் கருத்தில் கொண்டான் - வாசனைபொருந்திய பூக்களிலுள்ள தேன்வழிகின்ற கற்பக தருவாற்சூழப்பட்ட நகரத்தைக் கைக்கொள்ளும்படி சிந்தித்தான்,—உள் வரும் அவாவினர் எதிலார் உடைமை உள்ள கொள்வது துணிந்தாராயின் - மனத்தில் வளராநின்ற ஆசையையுடையோர் அயலாருடைய பொருளாக உள்ளனவற்றைக் கொள்வதற்குத் துணிந்தாராயின்,—வருந்திக் கொண்டோர் கொடுப்பரோ - அப்பொருள்களை வருந்திச் சம்பாதித்தோர் கொடுப்பாரோ? எ-று.

ஓகாரம் எதிர்மறை. மற்று அசைநிலை; வினைமாற்றுமாம். (ருசு)

நல்லன நணுகி வெய்ய தீயன நலிந்து நாளு
மெல்லன பெரிய கீர்த்தி வளர்ப்பதே யியற்கை யென்ப
வல்லன பகையி னன்றி மற்றையோர் திறத்து நீதி
யல்லன செயவு முள்ளத் தமைப்பரோ வரசி னூன்றோர்.

இ-ள். நல்லன நணுகி - நல்லனவாகிய வினைகளைப் பொருந்துமாறுசெய்து,—வெய்ய தீயன நலிந்து - கொடிய தீயனவாகிய வினைகளைக் கெடுத்து,—நாளும் எல் அன பெரிய கீர்த்தி வளர்ப்பதே இயற்கை - நாடோறும் சூரியனையொத்த பெரிய கீர்த்தியை வளர்ப்பதே (அரசியன் முறை நிறைவுற்றோர்க்கு) முறையாகும்,— வல்லன பகையின் அன்றி

மற்றையோர் திறத்து நீதி அல்லன செயவும் - (அஃதொழித்துத் தமக்குக் கேடுசூழ்தலில்) வல்ல பகைவர்களிடத்தன்றி ஏனையோர்களிடத்து நீதியல்லாதனவற்றைச் செய்தற்கும்,— அரசின் ஆன்றோர் அமைப்பரோ - அரசியலால் நிறைந்தவர்களாகிய அரசர்கள் மனத்திற் கருதுவார்களோ. எ-று.

ஓகாரம் எதிர்மறை. என்ப அசை. உம்மை எதிர்மறை; அசை ஆக்கினும் அமையும். (௫எ)

மாலவற் கல்லா லின்றே வரப்புரு டோத்த மப்பேர்
மேலவற் கல்லா லின்றே விழுமிய மகேச நாமஞ்
சாலவெற் கல்லா லின்றே சதக்கிர தென்னுந் தற்பே [ரோர்.
ரேலவிப் பொருள்கண் மூன்றும் பிறிப்பரோ வறத்தி னேன்

இ-ள். வரப் புருடோத்தமப் பேர் மாலவற்கு அல்லால் இன்று - மேலான புருடோத்தமனென்னும் பேர் விஷ்ணுவுக்கேயன்றிப் பிறருக்கில்லை,— விழுமிய மகேச நாமம் மேலவற்கு அல்லால் இன்று - சிறந்த மகேசன் என்னும் பெயர் சிவனுக்கேயன்றிப் பிறருக்கு இல்லை,—சதக்கிரது என்னும் தத் பேர் சால எற்கு அல்லால் இன்று - சதக்கிரது என்னும் அப்பெயர் மிகவும் எனக்கேயன்றிப் பிறருக்கில்லை,—ஏல இப் பொருள்கள் மூன்றும் அறத்தின் என்றோர் பிரிப்பரோ - (தம்மைப்) பொருந்துமாறு இப்பெயர்கள் மூன்றையும் தருமத்திேனாடியைந்தவர்களாகிய பெரியோர்கள் பிரிப்பார்களோ. எ-று.

ஓகாரம் எதிர்மறை. தத் என்னும் வடமொழி தற் எனத் திரிந்து நின்றது. (௫அ)

அன்பற வினைய மாற்ற மறைதலும் வேள்வி நாத
னென்பது போத றன்னை யெண்ணினை யில்லை போலும்
வன்பெரு மதியா யென்றான் மற்றவன் வான நாடன்
றன்பெருங் கண்க டோறுந் தழலெழச் சாற்று கின்றான்.

இ-ள். அன்பு அற இனைய மாற்றம் அறைதலும் - அன்பு நீங்க இவ்வார்த்தையை இந்திரன் கூறுதலும்,—அவன் வன் பெருமதியாய் வேள்விநாதன் என்பது போதல் தன்னை எண்ணினை இல்லை போலும் என்றான் - அவ்விரகுவானவன் வலிய பெரிய புத்தியையுடையானே! (நீ சதக்கிரது என்னும் பெயர்போகின்றது என்று இவ்வாறு செய்யின்) வேள்விக்குவேந்தன் என்னும் பெயர் அழிதலைச் சிந்தித்திலாய்போலும் என்றான்,—வானநாடன் தன் பெரும் கண்கள்தோறும் தழல் எழச் சாற்றுகின்றான் - (அப்பொழுது) இந்திரனனவன் தன்னுடைய பெரிய கண்கடோறும் அக்கினிதோன்றச் சொல்லுகின்றான். எ-று.

வன்பெருமதியாய் என்றது புகழ்வதுபோலப் பழித்தது. பரிகாசத்தாற் கோபமுண்டாயிற்று என்க. (௫௯)

மகரவா ரிதிசூழ் வையத் தலத்தினின் மாட்சித் தாய
நிகரிலா வரத்தி னேன்ற கபிலனை நிகர்க்கின் றேனுற்
சிகரவா குவிஞய் செய்ய றீவினைச் செயலின் மூழ்குஞ்
சகரர்தா மடைந்த வெய்ய நெறியினிற் சார்த ருனே.

இ-ள். சிகர வாகுவிஞய் - மலைபோலும் புயத்தையுடைய இரகுமகா ராசனே!,— மகரவாரிதி சூழ் வையத்தலத்தினில் - கடல்சூழ்ந்த பூமியிலே.— மாட்சித்து ஆய நிகரிலா வரத்தின் என்ற கபிலனை நிகர்க்கின் றேன் - (நுங்குலத்தாராகிய சகரரையழித்த) மாட்சிமையுடைத்தாய ஒப்பில்லாத வரத்தினுன்மிக்க கபிலமுனிவரை யான் ஒத்திருக்கின்றேன்.— தீவினைச்செயலின் மூழ்கும் சகரர் அடைந்த வெய்ய நெறியினில் சார்தல் செய்யல் - (ஆதலால்) தீவினைச்செயலில் அழுந்திய அந்தச் சகரர் அடைந்த கொடிய கதியின்கணடைதலை நீயும் செய்துகொள்ளாதே. எ-று.

எனவே என்னுல் அழிக்கப்படாதே என்பது கருத்து. தாம் தேற்றத்தின்கண் வந்த சாரியை. தான், ஏ அசைகள். சகரமகாராசனுடைய வேள்விக் குதிரையை இந்திரன் கவர்ந்துசென்று பாதலத்திலிருந்த கபிலமுனிவர்பக்கத்திற் கட்டிவிட, சகரன் புதல்வர் அறுபதினுயிரவரும் பூமியைத் தோண்டிப் பாதலத்திற்சென்று குதிரையைக்கண்டு கபிலமுனிவரோடு எதிர்க்க அவர் அவர்களைக் கோபித்து எரித்தாராதலின் தீவினைச்செயலின்மூழ்குஞ் சகரர்தாமடைந்தவெய்யநெறியினிற் சார்தல்செய்யல் என்ருர். (௬0)

என்றவ னிசைத்த லோடு மேந்தலு மெரியு முள்ளங்
கன்றுபு கறுத்த வாளி தொடுக்குதி கடிதி னென்ருு
னன்றென விசிகம் வில்லி னுட்டின னடவ முன்னே
யொன்றுவெம் பகழி யன்னு னுரத்தினிற் புதைய வுய்த்தான்

இ-ள். என்று அவன் இசைத்தலோடும் - என்று அவ்விந்திரன் சொல்லியவளவில்,—ஏந்தலும் எரியும் உள்ளம் கன்றுபு - இரகுமகாராசனும் (கோபத்தினுல்) எரிகின்ற மனங்கன்றி,—கறுத்த வாளி கடிதின் தொடுக்குதி என்ருன் - கோபத்தைக்கொண்ட பாணத்தை விரைவிலே தொடுக்குதி என்ருன்,—நன்று என விசிகம் வில்லில் நாட்டினன் நடவ முன்னம் - (இந்திரன்) நல்லது என்று அம்பினை வில்லிற் ருடுத்துச் செலுத்த முன்னரே,—ஒன்று வெம்பகழி அன்னுன் உரத்தினில் புதைய உய்த்தான்-இரகுமகாராசன் ஒரு கொடிய பாணத்தை அவ்விந்திரனுடைய மார்பிலே புதையும்படி செலுத்தினுன். எ-று.

நடவமுன் உய்த்தான் என இயைக்க. (௬௧)

உடுபதிப் பெயரி னுட்ட வுறுங்கணை நுழைந்த மார்பிற்
கடுவிசைப் பகழி பாயக் கணையொன்று கதழ்வி னுய்த்தான்

றொடிகழற் குரிசில் கங்குற் சுருட்குழ லியர்கண் ணென்னு
மடுதிறற் பகழி பாயு மகலம்புக் கமர்ந்த தன்றே.

இ-ள். உடபெதிப்பெயரின் நாட்ட உறும் கணை நுழைந்த மார்பில் - இந்திராணியினது கண்களாகிய மிக்க பாணங்கள் நுழைந்த மார்பிலே.— கடு விசைப் பகழி பாய - கடியவிசையையுடைய அம்பு பாய,—கணையொன்று கதழ்வின் உய்த்தான் - (இந்திரனும்) அம்பொன்றை வேகத்தோடு செலுத்தினன்,—தொடி கழல் குரிசில் கங்குல் சுருள் குழலியர் கண் என்னும் அடுதிறல் பகழி பாயும் அகலம் புக்கு அமர்ந்தது - (அது) கட்டிய வீரக்கழலையுடைய இரகுமகாராசனது இருளையொத்த சுருளமைந்த கூந்தலையுடையவர்களாகிய மகளிரது கண்களென்னும் கொல்லுந்தொழிலையுடைய அம்புகள்பாய்கின்ற மார்பிற் புக்கிருந்தது. எ-று.

உடபெதிப்பெயர் - சசி=இந்திராணி. பாய உய்த்தான்; அது புக்கமர்ந்தது என முடிக்க. பாய நிகழ்வுப்பொருட்டு. (௬௨)

மேக்கினன் கருகக் கண்கள் சிவந்தொரு விசிகம் வீர
னூக்கினன் பெரியன் வாளி யொன்றொறுத் தொன்று சேற
வாக்கினன் குரிசின் மாற்றி யைந்தின்பி னைந்து பல்லம்
போக்கினன் புவன மூன்றும் புகைபுகப் புகுந்த வன்றே.

இ-ள். மேக்கினன் கருகக் கண்கள் சிவந்து ஒருவிசிகம் வீரன் ஊக்கினன் - செந்நிறம்படைத்த சூரியனும் கருநிறமடையும்படி தன் கண்கள் சிவந்து ஒரு அம்பினை வீரனாகிய இரகுமகாராசன் செலுத்தினன்,— பெரியன் வாளி ஒன்று ஒறுத்து ஒன்று சேற ஆக்கினன் - இந்திரன் அம்பொன்றால் (அவ்வம்பினை) அறுத்து பின்னும் ஓரம்பைச் செல்லும்படி செலுத்தினன்,—குரிசில் மாற்றி ஐந்தின்பின் ஐந்து பல்லம் போக்கினன்- இரகுமகாராசன் அதனைவிலக்கி ஐந்துபாணங்களின்பின் ஐந்துபாணங்களை (எனவே பத்துப்பாணங்களை) ச் செலுத்தினன்,—புவனம் மூன்றும் புகை புகப் புகுந்த - (அப்பாணங்கள்) திரிலோகத்திலும் புகைசெல்லும்படி சென்றன. எ-று.

அன்று, ஏ அசைகள். வாளி ஒன்று ஒறுத்து ஒன்று சேற ஆக்கினன் என்பதற்குப் பாணங்களை ஒன்றொறுக்கவும் ஒன்று செல்லவுமாகச் செலுத்தினன் எனினுமாம். (௬௩)

நெற்றியை நோக்கிற் றொன்று நிறம்புக நிமிர்ந்த தொன்று
விற்றெற வோடிற் றொன்று விலோதனம் விரைந்த தொன்று
பற்றிய பகழி சிந்தும் படிபடப் படர்ந்த தொன்று
மற்றைய வொன்றிற் போகி வாண்முக மடுத்த வன்றே.

இ-ள். ஒன்று நெற்றியை நோக்கிற்று - (அவற்றுள்) ஒருபாணம் (இந்திரனுடைய) நெற்றியை நோக்கிச் சென்றது,— ஒன்று நிறம் புக

நிமிர்ந்தது - ஒரு பாணம் (அவனுடைய) மார்பிற் புகும்படி கிளர்ந்து சென்றது,—ஒன்று வில் தெற ஒடிற்று - ஒருபாணம் (அவனுடைய) வில்லை வெட்டும்படி ஒடியது.—ஒன்று விலோதனம் விரைந்தது - ஒரு பாணம் (அவனுடைய) கண்களை நோக்கி விரைந்து சென்றது, —ஒன்று பற்றிய பகழி சிந்தும்படி படர்ந்தது - ஒருபாணம் (அவன்) கையிற் பற்றிய பாணஞ் சிந்தும்படி சென்றது.—மற்றை ஒன்றிற் போகி வாள் முகம் மடுத்த - மற்றைய ஐந்துபாணங்களும் ஒருதொடையாகச்சென்று ஒளிபொருந்திய அவனுடைய முகத்திலே முகஞ்செய்தன. எ-று.

அன்று, ஏ அசைகள். (சுச)

கல்லொன்று கடல தாகக் கண்டவன் கதழ்வு கைமிக், கெல் லொன்று பகழி தூண்ட வெதிர்ந்தவா றளவை யெண்ணில், வில் லொன்றி னிரண்டு மூன்று கோலினின் விளங்கு நான்கிற், சொல் லொன்றிற் றுணித்தான் மிக்க தொடையொன்றிற்றுமித்து வீழ்த் தான்.

இ-ள். கல் ஒன்று கடலது ஆகக் கண்டவன் கதழ்வு கைமிக்கு எல் ஒன்று பகழி தூண்ட - (மைநாகமென்னும்) மலையொன்றினைக் கடலிற் புகும்படி செய்தவனாகிய இந்திரன் வேகங்கொண்டு ஒளிபொருந்திய பாணத்தைச் செலுத்த,—எதிர்ந்த ஆறு அளவை எண்ணில் - எதிர்ந்தப டியே (அப்பாணங்களின்) அளவைக் கணிக்கில்.—வில் ஒன்றின் இரண்டு மூன்று கோலினின் - ஒருவில்லிற்பூட்டிச் செலுத்திய ஐந்துபாணத்தி னால்,—விளங்கு நான்கில் சொல் ஒன்றில் துணித்தான் - விளங்குகின்ற நான்கின்கண்ணும் சொல்லப்படும் ஒன்றின்கண்ணுந் துணித்தலைச்செ ய்தான், — மிக்க தொடை ஒன்றில் துணித்து வீழ்த்தான் - எஞ்சியவற் றை ஒருதொடையினால் வெட்டி விழுத்தினான். எ-று.

எண்ணில் ஐந்தில் துணித்தான்; தொடை ஒன்றில் துமித்தான் என்க. (சுரு)

கைவினைத் தொடைபோ யொல்லைக் கடைப்படு முன்னங் கா
செய்வினைப் பகழி நூறு திகிரிக்கொன் பதுதிண் டேரி [லின்
னுய்வினைப் புரவிக் கெண்ப தொருபஃ துய்ப்பாற் கொன்றே
யெய்வினைப் பெரியோற் காக வேவினா னிலங்கு வேலான்.

இ-ள். கைவினைத் தொடைபோய் ஒல்லை கடைப்படு முன்னம் - தன் கைத்தொழிலாற் செலுத்திய பாணங்கள் விரைவாகப்போய் முடியமுன் னரே,— செய்வினைப்பகழிநூறு - செய்கின்ற போரையுடைய நூறுபாண ங்களை,— திகிரிக்கு ஒன்பது - தேருக்கு ஒன்பதும்,—திண் தேரின் உய் வினைப் புரவிக்கு எண்பது - திண்ணிய தேரிற் பூட்டிய இழுக்கின்ற தொழிலையுடைய குதிரைகளுக்கு எண்பதும்,—உய்ப்பாற்கு ஒருபஃது -

பாகனுக்குப் பத்தும்,—எய்வினைப் பெரியோற்கு ஒன்று ஆக - எய்யுந் தொழிலையுடைய இந்திரனுக்கு ஒன்றுமாக,—இலங்கு வேலான் காலின் ஏவினன் - விளங்குகின்ற வேற்படையையேந்தியவனாகிய இரகுமகாராசன் காற்றைப்போல விரைந்து (செல்லுமாறு) செலுத்தினன். எ-று.

நூறு ஏவினன் என இயைக்க. (ருசு)

கால்வந்த கணத்தின் வீயக் கடுவிசைத் தெய்வ வாசி
மேல்வந்த நொடியின் மாய முண்முனை விழுக்கோற் கையான்
பால்வந்த துடியின் மாளப் பண்ணவன் றன்மே லாலம்[றான்.
போல்வந்த விமைப்பிற் றீயக் கணையொன்று பொறித்து நின்

இ-ள். கால் வந்த கணத்தின் வீய - தேரின்மேல் வந்த பாணங்கள் ஒன்பதும் கணப்பொழுதினுள்ளே அழியவும்,—கடுவிசைத் தெய்வ வாசி மேல் வந்த நொடிப்பின் மாய - மிகுந்த வேகத்தையுடைய தெய்வத்தன்மை பொருந்திய குதிரையின்மேல் வந்த பாணங்கள் எண்பதும் நொடிப்பொழுதினுள்ளே அழியவும்,—முள் முனை விழுக் கோல் கையான்பால் வந்த துடியின் மாள - முள்ளுப்போன்ற நுதியையுடைய சிறந்த தாற்றுக் கோலை ஏந்திய கையையுடையனாகிய பாகன்மீது வந்த பாணங்கள் பத்தும் துடிப் பொழுதினுள்ளே அழியவும்,—தன்மேல் ஆலம்போல் வந்த இமைப்பில் தீய - தன்மீது நஞ்சைப்போல்வந்த பாணம் ஒன்றும் இமைப்பொழுதினுள்ளே அழியவும்,—பண்ணவன் கணை ஒன்று பொறித்து நின்றான் - தேவனாகிய இந்திரன் ஒருகணையைச் செலுத்திநின்றான். எ-று.

கால்-ஆகுபெயர். வீய, மாய, மாள, தீயப் பொறித்துநின்றான் என முடிக்க. கணம், நொடி, துடி, இமைப்பு என்பன சிறிய காலஅளவின் பேதங்கள். (ருஎ)

பொறித்தகை விடாது மாலோன் பொங்கியைஞ் ஞூறு புங்கந்
தெறித்தன னொன்றை யொன்று கௌவுபு சேற வீரன்
குறித்தன னொன்றை மாற்ற வொன்றெதிர் குறுக விடா
மறித்தன னளவற் றாக வான்கணை மடுத்து மாதோ.

இ-ள். மாலோன் பொங்கி பொறித்த கை விடாது ஐஞ்ஞூறு புங்கம் ஒன்றை ஒன்று கௌவுபு கசேறத் தெறித்தனன் - இந்திரன் கோபித்துத் தொடுத்த கையைவிடாது ஐஞ்ஞூறு அம்புகளை ஒன்றையொன்று கௌவிச் செல்லும்படி செலுத்தினன்,—வீரன் குறித்தனன் அளவு அற்றாக வான் கணை மடுத்து - வீரனாகிய இரகுமகாராசன் நோக்கி அளவு அத்தன்மையதாகப் பெரிய அம்பினைத்தொடுத்து,—ஒன்றை மாற்ற ஒன்று எதிர் குறுக வீடா மறித்தனன் - ஒவ்வொன்றை மாற்ற ஒவ்வொன்று எதிர்செல்லும்படி விட்டுத் தடுத்தான். எ-று.

வீடா விகாரம். ஒன்றின்பின்ஞென்ருக விடுத்தான் என்பார் ஒன்றை யொன்று கௌவுபு சேறவிடுத்தனன் என்றும், முன்வந்ததை ஒன்றுசென்று மாற்றிமுடிய மற்றதை மற்றது எதிர்சென்று தடுக்குமாறு விடுத்தான் என் பார் ஒன்றைமாற்றவொன்றெதிர்குறுகவீடா என்றுங் கூறினர். (சுஅ)

ஆய்ந்தன பகழி யெண்ணி லடுத்தடுத் தேவ வேவப்
பாய்ந்தன பரந்து வானப் பரப்பெலாம் பாயப் பாய
வீந்தன வீய வீய விடுப்பதே யல்லால் வேக
மோய்ந்தன ரின்றே தம்மி லுறுவலிக் குவமை யொப்பார்.

இ-ள். ஆய்ந்தன பகழி எண்ணில் அடுத்து அடுத்து ஏவ ஏவ - ஆரா ய்ந்தெடுத்தனவாகிய அம்புகள் அளவில்லாதனவற்றை அடுத்தடுத்துச் செ லுத்தச் செலுத்த,—வானப் பரப்பு எலாம் பரந்து பாய்ந்தன - அவைகள் ஆகாயத்தின் பரப்பெல்லாம் பரந்து பாய்ந்தன.—பாயப் பாய வீந்தன - அவ்வாறு பாயப்பாய அழிந்தன,—வீய வீய விடுப்பதே அல்லால் - (அவ் வாறு) அழிய அழிய மீளவும் செலுத்துவதேயன்றி,—உறு வலிக்கு உவமை தம்மில் ஒப்பார் வேகம் ஓய்ந்தனர் இன்று - மிகுந்த வலிமைக்கு உவமை யிலே தம்முளிணையொத்த வீரர்கள் (தம்) வேகம் குறைந்திலர். எ-று.

அடுக்குகள் பன்மைகுறித்து நின்றன. (சுகூ)

அலைப்படப் புகுந்த பல்ல மாழியொன் ருழித் தீயி
னிலைப்படப் புகுந்த பல்ல நெடுங்கட லிரண்டு கூற்றின்
கொலைப்படப் புகுந்த பல்லங் குணிப்பதோ குனிந்த சாபக்
கலைப்படப் புகுந்த வாறே திசைத்திசை கலந்த வன்றே.

இ-ள். அலை படப் புகுந்த பல்லம் - கடலிற் பொருந்தச்சென்ற அம் புகளும்,—ஆழி ஒன்று ஆழித்தீயின் நிலைப்படப் புகுந்த பல்லம் - புறக்கட லிற்பொருந்திய வடவாமுகாக்கினியினிடத்துப் புகுந்த அம்புகளும்,— நெடும் கடல் இரண்டு கூற்றின் கொலைப்படப் புகுந்த பல்லம் - நெடிய கடல் இரண்டுகூருகக் கொலைப்படும்படி புகுந்த அம்புகளும்,—குணிப்ப தோ - அளவிடப்படுவனவோ,—குனிந்த சாபக் கலைப்படப் புகுந்த ஆறு திசைத்திசை கலந்த,—வளைந்த வில்வித்தைக்கிசையச் சென்றவாறே திசை கடோறுங் கலந்தன. எ-று.

ஓ எதிர்மறை. சாபத்தினின்றுஞ் செல்லுமள வெவ்வளவோ அவ்வள வாகவே திசைகளிலுஞ் சென்றன என்பதாம். இரண்டுகூறு என்பதற்கு இருவருஞ் செலுத்துவதால் இரண்டு கூருக என்பாருமுளர். (எ0)

ஆலொக்குஞ் சிலகங் காள வரவொக்குஞ் சிலநீ டாடற்
காலொக்குஞ் சிலவ தாடங் கதமொக்குஞ் சிலவெங் கால
வேலொக்குஞ் சிலநல் லோர்நல் வினையொக்குஞ்சிலதூண்வந்த
மாலொக்குஞ் சிலவோர்சிம்புள் வடிவொக்குஞ் சிலபோர்வாளி.

இ-ள். போர்வாளி - போரையுடைய அம்புகளில்,—சில ஆல் ஒக்கும் - சில அம்புகள் நஞ்சையுமொக்கும்,—சில கங்காள அரன் ஒக்கும் - சில அம்புகள் முழுவெலும்பையணிந்த உருத்திரனையுமொக்கும்,—சில நீடு ஆடல் கால் ஒக்கும் - சில அம்புகள் மிக்க வலியையுடைய இயமனையும் ஒக்கும்,—சில ஆடு அங்கதம் ஒக்கும் -சில அம்புகள் ஆடுகின்ற பாம்பினையும் ஒக்கும்,—சில வெம் கால வேல் ஒக்கும் - சில அம்புகள் கொடிய சூலத்தையும் ஒக்கும்,—சில நல்லோர் நல்வினை ஒக்கும் - சில அம்புகள் நல்லோருடைய நல்வினையையும் ஒக்கும்.—சில தூண்வந்த மாலொக்கும் - சில அம்புகள் தூணினின்றுந் தோன்றிய விஷ்ணுவாகிய நரசிங்கத்தையும் ஒக்கும்,—சில ஓர் சிம்புள் வடிவு ஒக்கும் - சில அம்புகள் ஒப்பற்ற சரவப் பறவையின் வடிவையும் ஒக்கும். எ-று.

அது, பகுதிப்பொருள் விகுதி. போர்வாளி என்பதைச் சில என்பவற்றோடு கூட்டிச் சிலவாகிய போர்வாளி எனப் பொருள்கூறி இறுதிவிளக்கு ஆக்கினுமமையும். (௭௧)

நுதியொடு நுதிக டாக்கப் பிறந்தநோன் பொறியா காய
நதியொடு கொதிப்ப மாலை நளிர்சிறை விசையக் காலின்
கதியொடு கிளர்ந்த வோர்நாற் கருங்கடல் கலந்து பாயுங்
குதியொடுங் குலைந்த வாசைக் குலநெடுங் குன்ற மெல்லாம்.

இ-ள். நுதியொடு நுதிகள் தாக்கப் பிறந்த நோன்பொறி ஆகாய நதியொடும் கொதிப்ப - நுதியோடு நுதிகள் தாக்குதலாற் பிறந்த வலிய அக்கினிப்பொறிகள் ஆகாயத்திலுள்ள கங்கையாற்றோடு கிடந்து கொதிப்ப,—மாலை நளிர் சிறை விசை அக்காலின் கதியொடு ஓர் நால் கருங்கடல் கிளர்ந்த - அப்பாணங்களின் ஒழுங்கான குளிர்ச்சியமைந்த சிறையின் விசையாலாய அந்தக் காற்றின் வேகத்தினால் நான்கு கரிய கடல்களுங் கிளர்ந்தன.—கலந்து பாயும் குதியொடும் ஆசைக் குல நெடுங் குன்றம் எல்லாம் குலைந்த - அப்பாணங்கள் கூடிப் பாயும் குதிப்பினால் திக்கிலுள்ள நெடிய குலமலைகளெல்லாம் குலைவடைந்தன. எ-று.

கொதிப்பக் கிளர்ந்தன என முடிக்க. கொதிப்ப, நிகழ்காலம். கிளர்ந்த கடல் கலந்துபாயுங் குதிப்பினால் குலைந்த என்பாருமுளர். கதியொடு, குதியொடு என்புழி ஒடு உருபுகள் ஏதுப்பொருட்கண் வந்தன. (௭௨)

வேறு.

எய்விசை யின்றொடை யென்ன விசைப்பா
ருய்விசை விஞ்சை யுழிப்பவ முற்றே
மொய்விசை யம்புசென் மொய்ம்பின வென்பார்
கைவிசை காணிலர் காணுந ரெல்லாம்.

இ-ள். காணுநர் எல்லாம் - அப்போரைக் காண்கின்றோரெல்லாம்,—கைவிசை காணிலர் - கைவிசையைக் காணாதவராய், — எய் விசையின்

தொடை என்ன இசைப்பார் - எய்யப்படும் விசையினையுடைய தொடையிலை சதியேயென்று சொல்வார் (சொல்லுக அங்ஙனமன்று),—இன உய்விசை விஞ்சையுழிப் பவம் உற்று மொய் விசை அம்பு செல் மொய்ம்பு என்பார் - இத்தன்மை உய்தல்பொருந்திய வில்வித்தையிற் றேற்றமுற்றுச் செறிந்த விசையை யுடைய அம்புகள் செல்லுகின்ற வலியே யென்று சொல்வார் கள். எ-று.

காணிலராய் என்பர் என்க. காணிலர் வினையெச்சமுற்று. இங்ஙன மே கம்பரும் "கடுப்பின்க ணமரரேயுங் கார்முகத் தம்புகையாற் - றொடுக் கின்றான் றுரக்கின்றானென் றுணர்ந்திலர் தொடுத்தவாழி - யிடுக்கொன் றுங்காணார்காண்பதெய்தகோ ஞெய்தி னெய்திப் - படுக்கின்றபிணத்தின் பொம்மற் குப்பையின் பரப்பே பல்கால்" எனக் கூறுதல் காண்க. இதனை நிரனிறையாக்கிப் பொருள்கோடல் சிறப்பின்று. (எ௩)

ஏக மளந்த வினத்தொடை யல்லால்
வேக மளந்தில மிக்கிரு செங்கை
காக மளந்த களத்திரு கன்ன
பாக மளந்த படித்தொழின் மாதோ.

இ-ள். காகம் அளந்த களத்து - காகங்களா லளக்கப்பட்ட போர்க்கள த்தின்கண்ணே,—இரு கன்ன பாகம் இரு செங்கை மிக்கு அளந்த படித் தொழில் வேகம் - இரண்டு காதுகளையும் இரண்டு சிவந்த கைகளும் மிக்கு அளந்த தன்மையான வேகத்தை,—ஏகம் அளந்த இனத்தொடை அல்லால் அளந்தில - ஒன்றாக அளந்த கூட்டமான பாணமேயன்றிப் பிறிதொன்று மளந்தில. எ-று.

எனவே கைவேகத்தைப் பாணமேயளந்தன என்பதாம். கைவேகத்து க்குத் தக்கபடி பாணமுஞ் செல்லுமென்றவாறு. ஏகமளந்த வினத்தொடை யென்றது பலவற்றை ஒன்றாகச் சேர்த்து விடப்பட்டபொழுது ஒருதொ டையென்று எண்ணப்பட்ட பாணங்களை. (எ௪)

ஒன்றிய மாலை யினிற்கணை யுய்த்தே
துன்றிய நாணி துடிப்பன வல்லான்
மன்ற வொறுது வளைந்தன வாறே
நின்றில சாப நிமிர்ந்தில வன்றே.

இ-ள். ஒன்றிய மாலையினில் கணை உய்த்து - ஒன்றிய வரிசையாகப் பாணங்களைச் செலுத்தி,—துன்றிய நாணி துடிப்பன அல்லால் - நெருங்கி நாணிகள் துடிப்பனவேயன்றி,— மன்ற ஒறுது வளைந்தனவாறு சாபம் நின்றில நிமிர்ந்தில - மிகவும் குறையாது வளைந்தபடியே விற்கள் நின்றுமில: நிமிர்ந்துமில. எ-று.

எனவே நிமிர்வதும் வளைவதுமாயிருந்தன என்றபடி. (எ௫)

காணி புகுந்த கலைத்தொழில் வல்லோர்
பாணி புகுந்த படித்திற னெல்லா
நாணி புகுந்து நடத்துவ தல்லாற்
றாணி புகுந்தமை கண்டெவர் சொல்வார்.

இ-ள். காணி புகுந்த கலைத்தொழில் வல்லோர் பாணி புகுந்த படித்திறன் எல்லாம் - உரிமையாகப் புகுந்த வில்வித்தையில் வல்லோரது கையிற் புகுந்த தன்மையான தொழிலின்பகுதியெல்லாம்,—நாணி புகுந்து நடத்துவது அல்லால் - நாணியிற் புகுந்து நடத்துதலை (க்கண்டுசொல்வதே) யல்லாமல்,—தூணி புகுந்தமை கண்டு எவர் சொல்வார் - தூணியிற் புகுந்தமையைக்கண்டு யாவர்தாம் சொல்வார்கள். எ-று.

நடத்துவதல்லால் கண்டு எவர் சொல்வார் என்க. எவர் என்னும் வினாப்பெயர் ஈண்டின்மை குறித்து நின்றது. (எசு)

தடுப்பது முண்டு சமர்க்கணை முன்ன
மடுப்பது முண்டு வலித்தல் வழாமே
தொடுப்பது முண்டு விரற்றொடு புங்கம்
விடுப்பது முண்டுகொ லென்ன வியப்பார்.

இ-ள். சமர்க்கணை தடுப்பதும் உண்டு - போரையுடைய கணையைத் தடுத்தலுமுளது,—முன்னம் மடுப்பதும் உண்டு - முன்னராகச்சென்று மார்பின்கண்ணே ஏற்பதும் உண்டு,—வலித்தல் வழாமே தொடுப்பதும் உண்டு - நாணை இழுத்தல் தவறாமல் தொடுத்தலுமுளது,—விரல் தொடு புங்கம் விடுப்பதும் உண்டுகொல் என்ன வியப்பார் - விரலாற்றொடுக்கப்படும் அப்பாணங்களைத் தவறவிடுதலும் உளதோ என்று அதிசயிப்பார்கள். எ-று.

மடுத்தல் என்பதற்கு நிறைவித்தல் எனப் பொருள்கொண்டு, ஒருவர் முன் ஒருவர் நிறைவித்தலுமுளது எனப் பொருள்கொள்வாருமுளர். (எஎ)

வேறு.

மேயின கணைபட விலகுபு கடிதொலி வெடிபட விரைசேணிற்
போயின வெறிதுற வலைகடல் பருகின பொதுளின சிலவாளி
யேயின வெதிரெதி ரிகலின மழைபடு மிடிகொடு வருவேகத்
தீயென முழ்கின கடுவிசை குறுகின திருகின சிலபாணம்.

இ-ள். சிலவாளி - சிலபாணங்கள்,—மேயின கணைபட விலகுபு கடிது வெடி ஒலிபட விரை சேணில் போயின - எதிராகவந்த கணைகள் அழியும்படி செய்து விலகி விரைந்து வெடியோசையுண்டாகும்படி கதிகொண்டு ஆகாயத்திற் சென்றனவாய்,— வறிது உற அலைகடல் பருகின பொதுளின - வறிதாகும்படி அலைபொருந்திய கடலைப் பருகி நெருங்கின,—சிலபாணம் -

சிலபாணங்கள்,—ஏயின எதிர் எதிர் இகலின மழைபடும் இடிகொடு வரு வேகத் தீயென முடுகின - ஏவப்பட்டனவாய் எதிரெதிரேபகைத்து முகிலிற் பொருந்திய இடித்தலைக்கொண்டுவருகின்ற அக்கினியைப்போல விரைந்தனவாய்,—கடுவிசை குறுகின திருகின - கடிய விசையைக்கொண்டு கிட்டிப் பொருதன. எ-று.

போயின, பருகின, ஏயின, இகலின, முடுகின, குறுகின, என்பன முற்றெச்சங்கள். (எஅ)

மகிதல வயினிரு வகிர்பட விடைபல வழிபட நுழைபோகா
வகிதல வரவின தணிமுடி மணியிடை யணவின சிலவாளி
மிகுகணை முடுகிய தடியினி லெதிர்படு விசையொடுமிசையேகி
முகிலக டுருவுபு முதிர்கரு வறலிடை முழுகின சிலபாணம்.

இ-ள். சிலவாளி - சிலபாணங்கள்,—மகிதல வயின் இரு வகிர்பட இடை பல வழிபட நுழை போகா - பூமியின்வயிறு இருபிளவாகவும் அதனிடையே பலவழிகள் உண்டாகவும் நுழைந்து சென்று,—அகிதல அரவினது அணிமுடி மணியிடை அணவின - பாதலத்திலுள்ள பாம்பின் அழகிய முடியிலுள்ள மணியினிடத்துச் சென்று சமீபித்தன,—சிலபாணம் - சிலபாணங்கள்,—மிகுகணை முடுகிய தடியினில் எதிர்படு விசையொடு மிசை ஏகி - மிகுந்த பாணங்கள் விரைந்துதோன்றிய வில்லினிடத்து எதிரேதோன்றிய விசையோடு மேலாகச்சென்று,—முகில் அகடு உருவுபு முதிர் கரு அறலிடை முழுகின - முகிலின்வயிற்றை ஊடுருவி முதிர்ந்த கருவாகிய நீரிடத்து முழுகின. எ-று.

போகா அணவின எனவும், ஏகி, உருவுபு, முழுகின எனவும் முடிக்க.

கழைசெறி யடிநிலை தழல்பட நெடுமுடி கடல்பட விருள்காலு
முழைசெறி மலைபல பொடிபட விடிபட முடுகின சிலவாளி
தழைசெறி யடவிக டுருவிய விசைகொடு தணிவில திசைதாவிக்
குழைசெவி யிபவிரு கவுள்படு மதவழி குறுகின சிலபாணம்.

இ-ள். சிலவாளி - சில அம்புகள்,—கழைசெறி அடிநிலை தழல்பட நெடுமுடி கடல்பட இருள் காலும் முழை செறி மலைபல பொடிபட இடிபட முடுகின - மலைகளினது மூங்கில்கள்செறிந்த அடிப்புறத்தில் அக்கினிபற்றவும் நெடிய முடிகள் கடலிற்போய் விழவும், இருளைக்காலுகின்ற முழைகள் செறிந்த அம்மலைகள் பலபொடியாகவும் இடியைப்போல விரைந்துசென்றன,—சிலபாணம் - சிலபாணங்கள்,—தழைசெறி அடவிகள் துருவின விசைகொடு தணிவு இல திசை தாவி-தழைகள்செறிந்த காடுகளை ஆராய்ந்து விசைகொண்டு தாமதியாது திக்குகளிற்றாவி,—குழை செவி இப இருகவுள் படு மதவழி குறுகின - குழைத்த செவியையுடைய யானைகளின் இரண்டு கதுப்புகளிலும் உண்டாகின்ற மதத்துவாரத்தினுள்ளே நுழைந்தன. எ-று.

தழல்பட, கடல்பட, பொடிபட, முடுகின எனவும், தணிவிலவாய்த் தாவிக் குறுகின எனவும் முடிக்க. கழைசெறி அடிநிலை தழல்படவும், மேகங்கள் நெருங்கலால் முடி கடல்படவும், மலை பொடிபடவும் முடுகின என முடித்து. பாணங்கள் கழையிற்சென்று பற்றலால் தழல்படவும், மேகங்களிற்சென்று ஊடுருவலாற் கடல்படவும், இடிபோற்றாக்கலான் மலைகள் பொடிபடவும் முடுகின எனப் பொருள்கோடலுமாம். (அ೦)

சம்பர வரியிடு தருகணை யிருபுடை தகைவொடு தரைபாயத் [வ
தும்பைகொ டொடையவன் விடுகணை கடுகிய துணையொடுமிசைபோ
செம்பில னுழைதரு கணைவிளை கனலுடல் செறிதர வரமேவி
வெம்பின பணிசில சிறைகொடு கடுவுக மிசைபுகு வனபோலும்.

இ-ள். சம்பரவரி இடு தருகணை இருபுடை தகைவொடு தரைபாய - இந்திரன் செலுத்திய தகைமைபொருந்திய பாணங்கள் இருபக்கத்திலுஞ் செறிவோடு பூமியிற்பாய,—தும்பைகொள் தொடையவன் விடுகணை கடுகிய துணையொடு மிசை போவ - தும்பைமாலையைத் தரித்தவனாகிய இரகு விடுத்த பாணம் விரைந்து செல்லுகின்ற வேகத்தோடு மேலாகப்போவன (எது போலுமெனின்),—செம் பிலன் நுழைதரு கணை விளை கனல் உடல் செறிதர - செவ்விய பாதலத்தில்நுழைந்த அப்பாணங்களிலுண்டான அக்கினி உடலிற்செறிய,—அரம் மேவி வெம்பின பணி சில சிறைகொடு கடு உகமிசை புகுவன போலும் - பாதலத்திற்பொருந்தி வெப்பமுற்ற பாம்புகள் சில சிறகுகளைக்கொண்டு நஞ்சுசொரிய ஆகாயத்திற் பறந்து செல்லுதலைப் போலும். எ-று.

போவ தொழிற்பெயர். பாயப்போவ புகுவனபோலும் என முடிக்க. ()

கலிகெழு சுடர்விடு கழலவன் விடுகணை ககனம துறவோட
நலிவறு மகபதி விடவிட வருகணை நவையறு தரைவீழ்வ
வொலிகெழு பவனமு முயவுற விரைவினொ டுடுமுக டுறவோடி
மலிகணை யுருவிய வழிவழி கருமுகின் மழைசொரிவனபோலும்.

இ-ள். கலிகெழு சுடர்விடு கழலவன் விடுகணை ககனமது உற ஓட - ஒலிபொருந்திய ஒளியைக் காலுகின்ற கழலையுடையவனாகிய இரகு விடுத்த பாணங்கள் ஆகாயத்தில் ஓட,—நலிவு அறு மகபதி விடவிட வருகணை நவை அறு தரைவீழ்வ - கேடற்ற இந்திரன் விடவிட வருகின்ற அம்புகள் குற்றமில்லாத பூமியில்வீழ்வன (எதுபோலுமெனின்),—மலிகணை ஒலிகெழு பவனமும் உயவுற விரைவினொடு உடு முகடு உற ஓடி உருவிய வழிவழி - மிகுந்த பாணங்கள் ஒலிபொருந்திய வாயும் வருந்தும்படி விரைவோடு நட்சத்திரங்கள்பொருந்திய அண்டமுகட்டைப்பொருந்த ஓடி. உருவிய வழிதோறும்,—கருமுகில் மழை சொரிவன போலும் - கரிய முகில்கள் மழையைச் சொரிதல்போலும். எ-று.

ஓட வீழ்வ சொரிவனபோலும் என முடிக்க. வீழ்வ சொரிவன என்பன தொழிற்பெயர். வழிவழியென்பது பன்மைபற்றிய அடுக்கு. (அஉ)

வேறு.

படிக்கொடி மகிழ வெம்போர் படுதலும் வென்றிப் பைம்பூந்
தொடிக்கொடி துலங்கும் வெய்ய சுடர்முகக் கணையொன் றுய்
நடிக்கொடி நிகர்ப்பத் தோமி னனிவிசும் பரங்கி னாடு [யா
மிடிக்கொடி விழவெய்திட்டா னிணையில்விற் றடக்கையானே.

இ-ள். படிக்கொடி மகிழ வெம்போர் படுதலும் - இவ்வாறு இருவருக்கும் பூமிதேவி மகிழும்படி வெவ்வியபோர் நிகழ்ந்தபொழுது,—இணை இல் வில் தடக்கையான் - ஒப்பில்லாத வில்லையேந்திய கையையுடையவனாகிய இரகு,—பை பூ தொடி வென்றிக்கொடி துலங்கும் வெய்ய சுடர்க்கணை ஒன்று உய்யா - பசிய பொலிவாகிய வளையலையணிந்த வீரலக்குமி விளங்கும் கொடிய அக்கினிபாணமொன்றைச் செலுத்தி,— நடிக்கொடி நிகர்ப்ப தோமில் விசும்பு அரங்கில் நனி ஆடும் இடிக்கொடி விழ எய்திட்டான் - நடனமகளைநிகர்ப்பக் குற்றமில்லாத ஆகாயமாகிய அரங்கிலே மிகவும் ஆடுகின்ற இடிக்கொடியானது அற்றுவிழும்படி எய்தான். எ-று.

உய்யா எய்தானென்க. தன்றலைவன் தேவனோடு போர்செய்தமையிற் படிக்கொடி மகிழ்ந்தாள் என்க. (அரு)

திறந்தரித் துலக மூன்றும் விழுங்குபு தூமந் தேங்க
நிறந்தரித் தெவையும் பற்றி நெருப்பெழ வீழ்ந்த வானி
மறந்தரித் தனந்த னுச்சி வகிர்படப் போகிக் கூர்மப்
புறந்தரித் தங்க ணாற்றுப் புனல்குடித் தாறிற் றன்றே.

இ-ள். திறம் தரித்து உலகம் மூன்றும் விழுங்குபு தூமம் தேங்க - வலிமையைப்பொருந்தி உலகங்கள் மூன்றையும் விழுங்கிப் புகை நிறையுமாறு,—நிறம் தரித்து எவையும் பற்றி நெருப்பு எழ வீழ்ந்த வானி - நிறத்தைப் பொருந்தி எப்பொருள்களிலும் பற்றி நெருப்பு உண்டாக விழுந்த இடிக்கொடி,—மறம் தரித்து அனந்தன் உச்சி வகிர்படப் போகி - மறத்தன்மையைப்பொருந்திச் சேடனுடைய உச்சி பிளக்கும்படிசென்று,—கூர்மம் புறம் தரித்து - ஆதிகூர்மத்தின் முதுகிற்றங்கிச் சென்று,—அங்கண் ஆற்றுப் புனல் குடித்து ஆறிற்று - அங்கே உள்ள ஆற்றுநீரைக்குடித்து ஆறியது. எ-று.

தேங்கப் பற்றி எழ வீழ்ந்தவானி போகித் தரித்து குடித்து ஆறிற்று என இயைக்க. (அசு)

செல்விளை கொடியோ கொய்து வீட்டினன் சிறந்த விந்தை
யல்விளை யளக மென்ன வமரர்கோ னகத்துட் கொள்ளா

வில்விளை வினையி னெண்ணில் வெஞ்சின விசிக முந்தி
மல்விளை வயங்கு திண்டோள் வள்ளலை மறைத்திட் டானே.

இ-ள். செல்விளை கொடியோ கொய்து வீட்டினன் சிறந்த விந்தை அல்விளை அளகம் என்ன - (இரகுமகாராசன்) இடிக்கொடியையா கொய்து விழுத்தினன் (அன்று) நமது சிறந்த வீரலக்குமியின் இருளையொத்த அளகத்தையே (கொய்து விழுத்தினன்) என்று,—அமரர் கோன் அகத்தில் கொள்ளா - இந்திரன் தன்மனத்துட் கருதி,— வில் விளை வினையில் எண்ணில் வெம் சின விசிகம் உந்தி - விற்றொழிலினால் அளவிறந்த கொடிய கோபத்தையுடைய அம்புகளைச்செலுத்தி,—மல் விளை வயங்கு திண் தோள் வள்ளலை மறைத்திட்டான் - மற்போர்முற்றிய விளங்குகின்ற திண்ணிய புயங்களையுடைய இரகுமகாராசனை (த்தெரியாமல்) மறைத்தான். எ-று.

கொள்ளா உந்தி மறைத்திட்டான் என முடிக்க. செல்விளைகொடி - மேகத்திலுண்டான (இடியாகிய) கொடி. வில்விளைவினை - வில்லிற் செய்யப்பட்ட தொழில். மல்விளை என்பதற்கு மற்போரைச்செய்கின்ற எனினுமாம். (அரு)

தீமுகப் பகழி யொன்றிற் செறிகணை யனைத்துந் தீத்துக்
காய்முகப் பகழி யொன்று தொடுத்தது கடியு மெல்லை
பாய்முகப் பகழி யொன்றி லெண்ணில பரப்பிப் பல்கூர்
வாய்முகப் பகழி யொன்றால் வரிவினா ணறுத்தான் மன்னே.

இ-ள். தீமுகப் பகழி ஒன்றில் செறிகணை அனைத்தும் தீத்து - (இரகுமகாராசன்) அக்கினிபாணமொன்றினாலே நெருங்கிய அம்புகளனைத்தையும் அழித்து,—காய்முகப்பகழி ஒன்று தொடுத்து - (இந்திரன்மேல்) அக்கினிபாணமொன்றைச் செலுத்தி,—அது கடியும் எல்லை - (அவன்) அதனை வெட்டும்பொழுது,—பாய்முகப் பகழி எண்ணில் ஒன்றில் பரப்பி - பரந்த முகத்தையுடைய பாணங்கள் அளவில்லாதனவற்றை ஒரேதொடையிலே (அவன்மீது) பரப்பி,—பல் கூர் வாய் முகப் பகழி ஒன்றால் வரிவில் நாண் அறுத்தான் - பல கூரிய வாயையுடைய முகத்தைக்கொண்ட பாணமொன்றால் வரிந்த வில்லிற்பொருந்திய நாணை அறுத்தான். எ-று.

தீத்துத் தொடுத்துப் பரப்பி அறுத்தான் என வினைமுடிபுசெய்க. பாய்முகப்பகழி என்பதிற் பாய் என்பதைப் பகழிக்கு விசேடணமாக்கிப் பாய்கின்ற பாணம் எனப் பொருள்கொள்வாருமுளர். (அசு)

நீடுபே ரரவ நாணி விசித்தமா மேரு நேரக்
கோடுபே ராத சாப நாணறு குமில வோதை
பாடுபே ருலக மேழுஞ் செவிடுறப் பரந்து பப்பின்
மூடுபே ரண்ட கூட முகடுபுக் கடங்கிற் றன்றே.

இ-ள். நீடு பேர் அரவம் நாணி விசித்த மா மேரு நேர் அக் கோடு பேராத சாப நாண் அறு குமில ஓதை - நெடிய பெரிய வாசுகிப்பாம்பாகிய நாணைக் கட்டிய பெரிய மேருவாகிய வில்லை ஒத்த அந்த வளைவுநீங்காத வில்லினது நாண் அற்ற பேரொலியின் ஓசையானது,—பாடு பேர் உலகம் ஏழும் செவிடுறப் பரந்து - பெருமைபொருந்திய உலகங்கள் ஏழும் செவிடடையும்படி பரந்து,—பப்பின் மூடு பேர் அண்டகூட முகடு புக்கு அடங்கிற்று - பரப்போடுமூடிய அண்டகூடமுகட்டிற்புகுந்து அடங்கியது. எ-று.

ஓதை பரந்து அடங்கிற்று என முடிக்க. உலகமேழுஞ் செவிடுறத்தக்க ஓதையை விளைக்கத்தக்க வின்னாண் என்பார் நீடுபேரரவநாணிவிசித்தமா மேருநேரக் - கோடுபேராதசாபநாண் என்றார். (அஎ)

ஏமச்சூட் டிசைந்த வின்னா ணறுத்தலு மிவன்போர் வாகை
நாமச்சூட் டுடைய வீரன் மற்றொன்றி னடுங்கா னென்னாத்
தாமச்சூட் டிலங்கு தெய்வத் தாருவ னலர்ந்த தாம [ன்.
வாமச்சூட் டிசைக்கும் வள்வாய் வச்சிரப் படையை யுய்த்தா

இ-ள். இவன் ஏமச் சூட்டு இசைந்த வில் நாண் அறுத்தலும் - இந்த இரகுமகாராசன் பொன்னரிமாலை தூக்கப்பெற்ற வில்லின் நாணை அறுத்தவளவில்,—போர் வாகை நாமச் சூட்டு உடைய வீரன் மற்று ஒன்றின் நடுங்கான் என்னா - போரிலணியும் வாகைமாலையையுடைய வீரனாகிய இரகுமகாராசன் வேறொன்றாலும் நடுங்கமாட்டானென்று கருதி,—தாமச் சூட்டு இலங்கு தெய்வத்தாருவன் - ஒளிபொருந்திய நுதலணிவிளங்குகின்ற இந்திரன்,—அலர்ந்த தாம வாமச் சூட்டு இசைக்கும் வள்வாய் வச்சிரப்படையை உய்த்தான் - அலர்ந்த பூக்களாற்றொடுத்த அழகிய மாலைகட்டப்பெற்ற கூரிய வாயையுடைய குலிசப்படையைச் செலுத்தினான். எ-று.

ஏமச்சூட்டு என்பதற்குப் பொற்குஞ்சமென்பாருமுளர். தெய்வத்தாருவன் - தேவதாருவையுடைய இந்திரன். என்னா உய்த்தான் என இயைக்க.()

பிற்பட வனிலம் வெய்ய பேரழற் கொழுந்துச் சும்மை
முற்படப் புறம்பு சூழ்ந்த மூடிருட் பிழம்பு மாய்ந்திட்
டெற்பட வகிலந் தீகுற் றிடர்ப்பட விமைப்பிற் போகிக்
கொற்பட விலங்கும் வேலான் மார்பகங் குளித்த தன்றே.

இ-ள். அனிலம் பிற்பட - (வேகத்தினாலே) வாயு பிற்படவும்,—வெய்ய பேர் அழல்கொழுந்துச் சும்மை முற்பட - (காலுகின்ற) வெப்பமான பெரிய அக்கினியின் கொழுந்துக்கூட்டம் முற்படவும்,— புறம்பு சூழ்ந்த மூடு இருள் பிழம்பு மாய்ந்திட்டு எல்பட - சக்கரவாளகிரியின் புறத்திற் சூழ்ந்துள்ள மூடிய இருட்பிழம்பு அழிந்து ஒளியுண்டாகவும்,— அகிலம் தீகுற்று இடர்ப்பட - உலகம் அழிவுற்று இடர்ப்படவும்,— இமைப்பில்

போகி - இமைப்பொழுதிற் சென்று,—கொல்பட இலங்கும் வேலான் மார்பகம் குளித்தது - கொற்றொழிலைப்பொருந்தி விளங்கும் வேலையுடையவனாகிய இரகுவின் மார்பின்கண் மூழ்கியது. எ-று.

பிற்பட, முற்பட, எற்பட, இடர்ப்படப் போகிக் குளித்தது என முடிக்க. கொற்பட என்பதிற் பட என்னும் செய்வெனெச்சம் செய்தெனெச்சப் பொருளில் வந்தது. (அகூ)

சூழ்தந்த தானை யோர்கட் டுளியொடுந் துயரிற் றோயா
வீழ்தந்து தெளிவுற் றன்னார் விரைந்துதுள் ளோதை யோடு
மூழ்தந்தவினைகொண்டுய்ப்ப வொருகணத்தெழுந்து நெஞ்சக்
காழ்தந்த வெகுளி பொங்கக் கடுஞ்சம ரதனின் மூண்டான்.

இ-ள். துயரில் தோயா சூழ்தந்த தானையோர் கண் துளியொடும் வீழ்தந்து - (வச்சிரம் மார்பிற் குளித்தலாலே) துன்பத்திலமிழ்ந்தித் தன்னைச் சூழ்ந்த சேனைவீரரது கண்ணிற்றுளியோடும் வீழ்ந்து,— ஊழ்தந்த வினைகொண்டு உய்ப்பத் தெளிவுற்று அன்னார் விரைந்து துள் ஓதையோடும் ஒருகணத்து எழுந்து - ஊழாற்றரப்பட்ட நல்வினைகொண்டு செலுத்தலாற் றெளிவடைந்து அவ்வீரர் விரைந்து கூத்தாடுகின்ற ஒலியோடும் ஒருகணப் பொழுதிலே எழுந்து,—நெஞ்சம் காழ்தந்த வெகுளி பொங்க கடும் சமரதனில் மூண்டான் - மனத்தில் வயிரம்பொருந்திய கோபங்கிளரக் கடிய போரிலே மூண்டான். எ-று.

தோயா, வீழ்ந்து, தெளிவுற்று, எழுந்து மூண்டான் என்க. துளி அழுகையையும், ஓதை மகிழ்ச்சியையுங் குறிப்பித்துநின்றன. (கூ0)

புரையகல் குலிசம் பாய்ந்த புண்ணிழி குருதிப் பூட்செவ்
வரையகன் மார்பின் வாகை வள்ளலை மகிழ்ந்து நோக்கா
நிரையக னெடுங்க ணைஞ்ஞூற் றிரட்டியா னிமிருந் தீய
வுரையகன் மதுர வாய்மை யின்னண முரைப்ப தானான்.

இ-ள். நிரை அகல் நெடும் கண் ஐஞ்ஞூற்று இரட்டியான் - நிரையான அகன்ற நெடிய ஆயிரங்கண்களையுடையவனாகிய இந்திரன்,—புரை அகல் குலிசம் பாய்ந்த புண் இழி குருதி பூண் செவ்வரை அகல் மார்பின் வள்ளலை மகிழ்ந்து நோக்கா - ஒப்பில்லாத குலிசம்பாய்ந்த புண்ணினின்றுஞ் சொரிகின்ற இரத்தமாகிய ஆபரணத்தையுடைய சிவந்த மலைபோன்ற மார்பினையுடைய இரகுவை மகிழ்ந்து பார்த்து,— தீய உரை அகல் நிமிரும் மதுர வாய்மை இன்னணம் உரைப்பதானான் - தீமையான மொழிகளை நீங்கிய மிகுந்த மதுரமான வார்த்தையை இவ்வாறு சொல்வானாயினான். எ-று.

புண்ணிழிகுருதிப்பூண் என்பதற்குப் புண்ணாகிய சொரிகின்ற இரத்தம்பொருந்திய ஆபரணம் எனினுமாம். விழுப்புண்ணாதலின் ஆபரணமென்றார். நோக்கா உரைப்பதானான் என முடிக்க. (கூக)

மாண்மதி படைத்த கல்வி வரிசிலைத் தடக்கை நம்பி
கேண்மதி விசும்பு தாவுங் கிரிச்சிறை யரிந்த வென்றி
நீண்மதிக் குலிசம் பாயப் பிழைத்தவர் நின்னை யல்லா
ஞண்மதி யுலகிற் பின்னை யுண்டென நவிற்ற லாமே.

இ-ள். மாண் மதி படைத்த கல்வி வரிசிலைத் தடக்கை நம்பி கேள் - மாட்சிமைபொருந்திய அறிவினையும் பெற்றகல்வியினையும் உடைய வரிந்த வில்லையேந்திய நீண்ட கையையுடைய நம்பியே கேட்குதி,— நாள் மதி உலகில் - புதிய சந்திரனையுடைய உலகத்திலே,—விசும்பு தாவும் கிரிச்சிறை அரிந்த வென்றி நீள் மதி குலிசம் பாயப் பிழைத்தவர் - ஆகாயத்திற் பறக்கும் மலையின் சிறகையரிந்த வெற்றியையுடைய நீண்ட மதிப்பைக்கொண்ட வச்சிராயுதம் பாய்ந்து ஊடுருவப் பிழைத்தவர்கள், — நின்னை அல்லால் பின்னை உண்டென நவிற்றல் ஆமே - உன்னையல்லாமல் வேறுபேர் உளர் என்று சொல்லுதல் கூடுமோ. எ-று.

வினு கூடாமை குறித்துநின்றது. கேண்மதி என்பதில் மதி முன்னிலையசை. (கஉ)

ஆதலா னுலக மூன்று மருவலி யறிந்து தம்மிற்
காதலாற் புகழத் தக்காய் கண்டுழி மகிழ்ந்தே னின்னைத்
தீதிலா மனக்கண் வேறு தெரிந்திடல் சிறந்த வாசி
யீதலாற் பெறுக வீந்தேன் வேண்டுவ விசைத்தி யென்றான்.

இ-ள். ஆதலால் - ஆகையினுல்,—உலகம் மூன்றும் அருவலி அறிந்து தம்மில் காதலால் புகழத்தக்காய் கண்டுழி நின்னை மகிழ்ந்தேன் - மூன்றுலகத்தாரும் அரிய வலியை அறிந்து தங்களுள் விருப்போடு புகழத்தக்கவனே (எழக்) கண்டபொழுதே உன்னை மகிழ்ந்தேன்,—தீது இல்லா மனக்கண் வேறு தெரிந்திடல் - தீமையற்ற மனத்தின்கண்ணே வேறொன்றையுஞ் சிந்தியாதே,—சிறந்த வாசி ஈதலால் வேண்டுவ பெறுக ஈந்தேன் இசைத்தி என்றான் - சிறந்த குதிரையாகிய இதனையேயன்றி (இன்னும்) வேண்டியவற்றைப் பெறுக தந்தேன் (அவற்றைச்) சொல்லுதி என்றான். எ-று.

ஆதலாற் கண்டுழி மகிழ்ந்தேன் என இயைக்க. (கரு)

அத்தலை யிளவ ரூனு மறைகுவான் யாக நூறு
முய்த்தலை வுருது முற்றும் பலத்தினை யுதவு வாயா
னத்தலை பழன நன்னாட் டெந்தைக்குன் னயங்கொ டேத
ரித்தலை நிகழ்வை யெல்லா மியம்பவும் வேண்டு மென்றான்.

இ-ள். அத்தலை இளவல் தானும் அறைகுவான் - அவ்விடத்து இளைமைப்பருவத்தையுடையவனுகிய இரகுவும் சொல்லுவான்,—யாகம் நூறும் உய்த்து அலைவுருது முற்றும் பலத்தினை உதவுவாய் - யாகங்கள் நூறும்

செய்யப்பட்டு அலேவுபடாது முடியும் பயனைத் தருகுவாய்,—உன் நயம் கொள் தூதால் - (அன்றியும்) உனது நன்மையைக்கொண்ட தூதினுல்.— நத்து அலே பழன நன்னுடு எந்தைக்கு - சங்குகள் அலேகின்ற வயல்களைக் கொண்ட நல்லநாட்டையுடைய என்பிதாவுக்கு,—இத்தலே நிகழ்வையெல்லாம் இயம்பவும் வேண்டும் என்ருன் - இவ்விடத்து நிகழ்ச்சியையெல்லாம் சொல்லவும் வேண்டுமென்ருன். எ-று.

ஆல் அசைநிலே. உம்மைகள் மூன்றும் முறையே எச்சப்பொருளிலும், முற்றுப்பொருளிலும், எச்சப்பொருளிலும் வந்தன. (கூச)

அன்னதே யாக வென்னு வறைந்தவா றருளி யையன்
பொன்னக ரதனிற் புக்கான் சுதக்கணே புதல்வன் ருனு
நன்னகர் மீண்டான் றூது நடந்தவ னுமவேற்கை
மன்னவன் முன்னர்த் தோன்றி வாழிய வென்ன நின்ருன்.

இ-ள். அன்னதே ஆக என்னு அறைந்தவாறு அருளி - அவ்வாறே யாகுக என்று (அவன்) கேட்டவாறே கொடுத்து,—ஐயன் பொன் நகரதனிற் புக்கான் - இந்திரன் சுவர்க்கலோகத்திற் புகுந்தான்,—சுதக்கணே புதல்வன்ருனும் நன்னகர் மீண்டான் - சுதக்கணே புதல்வனுகிய இரகுவும் நல்ல நகரைநோக்கித் திரும்பினுன்,— தூது நடந்தவன் நாம வேல் கை மன்னவன் முன்னர்த் தோன்றி வாழிய என்ன நின்ருன் - தூதாகச்சென்றவன் அச்சம்பொருந்திய வேலேயேந்திய கையையுடைய திலீபனுக்கு முன்னரே தோன்றி வாழுக என்று வாழ்த்தி நின்றனன். எ-று.

ஏகாரம் தேற்றம். உம்மை எச்சம். (கூரு)

அன்னனவ் விடத்த னுக வரசனு மமைந்து நோக்கி
யின்னனிவ் விடத்த னென்ன வுணர்புல னின்மை யாலே
யென்னனெவ் விடத்தன் வந்த தென்னேகொ லென்ன யானே
யின்னனிவ் விடத்த னென்னு வடைந்தமை யியம்பு கின்ருன்.

இ-ள். அன்னன் அவ்விடத்தன் ஆக - அத்தூதுவன் அவ்விடத்தே சென்று நின்ருனுக,—அரசனும் அமைந்து நோக்கி - திலீபமகாராசனும் உற்றுநோக்கி,—இன்னன் இவ்விடத்தன் என்ன உணர் புலன் இன்மையால் - இவன் இவ்விடத்துள்ளவன் என்று (சுட்டி) அறிகின்ற அறிவு இல்லாமையினுலே,—என்னன் எவ்விடத்தன் வந்தது என்னே என்ன - நீ எவன் எவ்விடத்திலுள்ளவன் வந்தகாரணம் யாது என்று வினுவ,— யான் இன்னன் இவ்விடத்தன் என்னு அடைந்தமை இயம்புகின்ருன் - யான் இவன் இவ்விடத்திலுள்ளவன் என்று கூறிப் பின் வந்தகாரணத்தைக் கூறுகின்ருன். எ-று.

முன் ஒருகாலத்தும் கண்டறியாமையினுலே ஞாபகத்தில் அவ்வறிவு இல்லே என்பார் உணர்புலனின்மையாலே என்ருர். இன்னன் என்னன்

என்பவைகள் பெயரைச்சுட்டிநின்றன. நோக்கி என்பது என்ன என்பதில் விகுதியோடு முடிந்தது. (௬௬)

தற்பெய ரனந்த மேனுஞ் சதக்கிர தென்னுந் தாழ்வில்
சொற்பெயர் பிறராற் கொள்ள விடான்றனித் தூத னுவேன்
முற்பெய ரொடித்தி யார்க்கு முடிப்பரும் யாக முற்றிப்
பிற்பெயர் கொள்வா னின்றோ யடைந்தமை பெரிது கேட்டி.

இ-ள். தன் பெயர் அனந்தமேனும் சதக்கிரது என்னும் தாழ்வு இல் சொல் பெயர் பிறரால் கொள்ள விடான் தனித் தூதன் ஆவேன் - தன்னுடையபெயர் அனந்தமாகவுளதாயினும் சதக்கிரது என்னும் மேலான சொற்பெயரைப் பிறராற் கவரப்பட விடாதவனாகிய இந்திரனது ஒப்பற்ற தூதுவனுவேன்,— முற் பெயர் ஒடித்து யார்க்கும் முடிப்ப அரும் யாகம் முற்றி பின் பெயர் கொள்வான் நின்றோய் - முற்கூறிய (இந்திரனுடைய) அப்பெயரை அழித்து எவர்களாலும் முடித்தற்கரிய யாகத்தைமுடித்துப் பின் அப்பெயரைக்கொள்ளும்படி நின்ற அரசனே,—அடைந்தமை பெரிது கேட்டி - யான்வந்த காரணத்தை மிகவும் கேட்குதி. எ-று.

சொற்பெயர் சொல்லாகிய பெயர். வினைத்தொகை எதுகைநோக்கி வலிந்து நின்றதூஉமாம். அனந்தமேனும் விடான் எனவும், ஒடித்துக்கொள்வான் நின்றோய் எனவுமுடிக்க. முற்பெயர் ஒடித்து என்பது முன்னுள்ளபெயராகிய திலீபனென்னும்பெயரை நீக்கி எனவும், பிற்பெயர் என்பது பின்னேபொருந்தும் பெயராகிய சதக்கிரது என்னும் பெயரை எனவும் பொருள்கொள்ளக் கிடந்தமையுங் காண்க. (௬௭)

வரந்தரு முனது செம்மன் மனத்தினின் வாசி போதப்
புரந்தொரு தடையு மின்றிக் காத்தனன் போந்தா னாக
வுரந்தருங் கவன மாவை யொருபெருந் தேவன் கொண்டு
கரந்தனன் போத வானீர் கண்கழூஉக் காணப் பட்டான்.

இ-ள். வரம் தரும் உனது செம்மல் - மேன்மையைப் பொருந்திய உனது புதல்வனாகிய இரகு,—மனத்தினில் வாசி போத ஒரு தடையும் இன்றிப் புரந்து காத்தனன் போந்தான் ஆக - மனோவேகத்தோடு குதிரை செல்ல ஒருதடையுமின்றி நன்கு காத்துச் சென்றானாக,—உரம் தரு கவன மாவை ஒரு பெரும் தேவன் கொண்டு கரந்தனன் போத - வலிமைபொருந்திய வேகத்தையுடைய குதிரையை ஒப்பற்ற பெரிய தேவன் கவர்ந்துகொண்டு மறைந்து செல்ல,—ஆன் நீர் கண் கழூஉக் காணப்பட்டான் - (அப்பொழுது அவ்விரகு) காமதேனு என்னும் பசுவின் சலத்தினாலே கண்ணைக்கழுவி (அவ்விந்திரனைக்) கண்டான். எ-று.

காணப்பட்டான் என்பது ஈண்டுக் கண்டான் என்னும் பொருட்டாய் நின்றது. (௬௮)

முற்றொழிற் றிறத்து நைந்தோன் முரட்சமர் முடுகு மென்னும்
பிற்றொழிற் றிறத்தி னுள்ள மகிழ்ச்சியைப் பிடித்துச் சொல்லுஞ்
சொற்றொழிற் றிறத்து வாசி விடாமையிற் சுருக்கி லாத
விற்றொழிற் றிறத்து வீடா வெஞ்சமம் விளைந்த தன்றே.

இ-ள். முன் தொழில் திறத்து நைந்தோன் - முன்செய்யப்பட்ட களவுத்தொழிலின்பகுதியினால் வருந்தியவனாகிய இரகு,—முரண் சமர் முடுகும் என்னும் பின் தொழில் திறத்தின் உள்ளம் மகிழ்ச்சியைப் பிடித்து - வலிய போர்வரும் என்று கருதிய பின்வருகின்ற அத்தொழிலின்பகுதியினால் மனம் மகிழ்ச்சியைப்பொருந்தி,—சொல்லும் சொல் தொழில் திறத்து வாசி விடாமையின் - (சமாதானமாகச்)சொல்லும்சொல்லின் தொழிற்பகுதிக்குக் குதிரையை விடாமையினாலே,—சுருக்கு இலாத வில் தொழில் திறத்து வீடா வெம் சமம் விளைந்தது - குறையாத விற்றொழிலின்பகுதியினால் அழியாத கொடிய போர் (இருவருக்கும்) உண்டாயது. எ-று.

விடாமையின் விளைந்தது என முடிக்க. (கக)

விரிபுகழ்க் கடவு ளாவான் விற்றொழிற் குடைந்து தான்கொ
ளொருதனிப் படையை யேவ வுரத்தது புகுத லோடும்
பெரிதுறத் தளர்ந்து வீழ்ந்து கணத்தெழீஇப் பின்னும் யாரும்
வெருவரச்சமரின் மூண்டான் விண்ணவன்மகிழ்ந்துசொல்வான்.

இ-ள். விரி புகழ்க் கடவுளாவான் - பரந்த புகழையுடைய தேவன்,—வில் தொழிற்கு உடைந்து தான் கொள் ஒரு தனிப் படையை ஏவ - விற்போருக்கு உடைந்து தான்கொண்ட ஒப்பற்ற (வச்சிரப்) படையைச் செலுத்த,—அது உரத்துப் புகுதலோடும் - அது மார்பிற்புகுதலும், — பெரிது உறத் தளர்ந்து வீழ்ந்து கணத்து எழீஇ பின்னும் யாரும் வெருவரச் சமரில் மூண்டான் - பெரிதாகத் தளர்ந்து விழுந்து கணப்பொழுதினுள்ளே எழுந்து பின்னும் யாரும் அஞ்சும்படி போரில் மூண்டான். எ-று.

புகுதலோடும் வீழ்ந்து எழீஇ மூண்டான் என வினைமுடிபுசெய்க. ()

மாவிதொன் றன்றி வேட்ட பெறுகென மகமோர் நூறு
மாவது முடிவு கொண்ட பலத்தினை யருளு கென்றான்
தேவனு மருளிப் போன னென்றனன் றேவ னுவா
னேவனே வென்னைத் தூது விடுத்தவ னென்று போனான்.

இ-ள். இது மா ஒன்று அன்றி வேட்ட பெறுக என - இக்குதிரை ஒன்றையுமேயன்றி (இன்னும்) விரும்பியவற்றைப் பெறுக என்று (தேவன்) கூற,—மகம் ஓர் நூறும் ஆவது முடிவு கொண்ட பலத்தினை அருளுக என்றான் - (அப்பொழுது இரகு) யாகங்கள் நூறும் முடிவுபெற்ற

பலனைத் தருக என்று சொன்னான்,—தேவனும் அருளிப்போனான் என்றனன் - தேவனும் அருள்செய்து சென்றான் என்று கூறினவனாய்,—தேவனுவான் எவனோ என்னைத் தூது விடுத்தவன் என்று போனான் - அத்தேவனுவான் எவனோ என்றால் என்னைத் தூதாகவிடுத்த அவ்விந்திரனே என்று சொல்லிப் போனான். எ-று.

என்றனன் என்று போனான் என முடிக்க. என்றனன் வினையெச்சமுற்று. (௧0௧)

கொந்தழற் குட்டத் திட்ட பொன்னெனக் குலவு போரின்
விந்தையிற் றிகழ்ந்த வீரன் வீங்கிசை விளங்க வாரா
வந்தரத் தவனை வென்றிட் டரும்பலன் பெற்ற வாற்றாற்
சிந்தையிற் செருக்கி நின்ற தாதைதாள் சென்னி சேர்த்தான்.

இ-ள். கொந்து அழல் குட்டத்து இட்ட பொன் என - திரண்ட அக்கினியையுடைய குண்டத்திலே இட்ட பொன்னைப்போல,—குலவு போரின் விந்தையில் திகழ்ந்த வீரன் - விளங்குகின்ற போரிலே விந்தையினாலே விளங்கிய வீரனாகிய இரகு,—வீங்கு இசை விளங்க வாரா - மிக்க இசை விளங்கும்படி வந்து,—அந்தரத்தவனை வென்றிட்டு அரும்பலம் பெற்றவாற்றால் சிந்தையில் செருக்கி நின்ற தாதை தாள் - (தான்) இந்திரனை வென்று அரிய பயனைப்பெற்ற தன்மையினால் மனத்திலே களிப்புற்று நின்ற பிதாவின் பாதங்களை,—சென்னி சேர்த்தான் - சிரசிற்சூடி வணங்கினான். எ-று.

விந்தை-சாமார்த்தியம்; வீரலக்குமி என்றல் சிறப்பின்று. பொன்னெனத் திகழ்ந்தவீரன் எனவும், வாரா சேர்த்தான் எனவும் முடிக்க. போராகிய அக்கினிக்குண்டத்தில் தன்னை ஓடவைத்து விந்தையாகிய ஒளியால் விளங்கிய வீரன் என விரித்துப் பொருள்கொள்க. (௧0௨)

செங்கண்மற் றவன்றன் மார்பின் மறுவிவன் செருவிற் கொண்ட
வங்கிதத் தழகுண் டாங்கொ லென்றுகொண் டகிலம்போற்றும்
பொங்கணிப் புதிய மார்பந் தழுவினான் புனித யாக
வெங்கனற் றூம நாறும் விளங்கொளி மேனி யானே.

இ-ள். செங்கண் அவன்றன் மார்பின் மறு - சிவந்த கண்களையுடைய அவ்விஷ்ணுவினது மார்பிலுள்ள மறு,—இவன் செருவில் கொண்ட அங்கிதத்து அழகு உண்டாங்கொல் என்று கொண்டு - இவன் போரிலே கொண்ட தழும்பினும் அழகுள்ளதாமோ என்று (புகழ்ந்து) கொண்டு,—அகிலம் போற்றும் பொங்கு அணிப் புதிய மார்பம் தழுவினான் - உலகந் துதிக்கும் பொலிவாகிய ஆபரணத்தையுடைய புதிய மார்பினைத் தழுவினான்,—புனித யாக வெங்கனல் தூமம் நாறும் விளங்கு ஒளி மேனியான் - பரிசுத்தமான வெவ்விய யாகாக்கினியின் புகைகமழும் விளங்குகின்ற ஒளிபொருந்திய மேனியையுடையவனாகிய திலீபன். எ-று.

மற்று அசை. இனி அதனை மறுவோடு சேர்த்துப் பிறிது என்னும் பொருளில் வந்ததாகக் கோடலுமாம். அங்கிதமென்றாரேனும் எற்புழிக் கோடலால் மார்பிற் புண் என்றே கொள்க. கொண்டு தழுவினன் எனக் கூட்டுக. கொண்டு என்பதை அகிலத்திற்கேற்றல் இத்துணைச்சிறப்பின்று. அணி-சட்டையுமாம். இனி விழுப்புண்ணாகிய அணியையுடைய மார்பு எனினுமாம். "விழுப்புண் மார்பினும் முகத்தினும் பட்டபுண்" என்றார் பரிமேலழகரும். (கOங)

மீறுதற் கிசைந்த யாக விழுப்பல வீக்கம் யாவுங்
கூறுதற் களவிற் றாமோ கொடும்பவக் குறும்பு மாய
வாறுதற் கமைந்த சிந்தை யரசன்போய்க் கதியி னார
வேறுதற் கமைத்த தோற்றத் திறைவையி னின்ற வன்றே.

இ-ள். மீறுதற்கு இசைந்த யாக விழுப் பல வீக்கம் யாவும் கூறுதற்கு அளவிற்று ஆமோ - மேற்படுதற்கியைந்த யாகத்தினது சிறந்த பயனின் மிகுதியனைத்தும் கூறுதற்கு அளவுபடுமோ,—கொடும் பவக் குறும்பு மாய ஆறுதற்கு அமைந்த சிந்தை அரசன் போய்க் கதியின் ஆர ஏறுதற்கு - கொடிய பாவமாகிய குறும்பு அழியும்படி அடங்குதற்கமைந்த மனத்தையுடைய அரசன் சென்று மேற்கதியில் மிகவும் ஏறுதற்கு,—அமைத்த தோற்றத்து இறைவையின் நின்ற - செய்யப்பட்ட தோற்றத்தையுடைய ஏணியைப்போல (அவை) நின்றன. எ-று.

ஓ எதிர்மறை. அவை நின்ற எனமுடிக்க. எழுவாய் வருவிக்கப்பட்டது. மாய ஏறுதற்கு என இயைக்க. (கOச)

புறப்புவி யில்லை யென்னப் பொதுக்கடிந் தெடுத்த பார
மிறக்குபு வள்ளன் மேரு விணைமணிப் புயத்தி னேற்றி
யறத்துணை யயனின் றுய்ப்ப வறிவுத்தே ரதனிற் போகி[ன்.
மறப்பவக் குறும்பை வெல்வான் வான்றவ வனத்துச் சார்ந்தா

இ-ள். புறப் புவி இல்லை என்னப் பொதுக் கடிந்து எடுத்த பாரம் இறக்குபு - புறம்பான பூமியில்லை என்று சொல்லும்படி பொதுக்கடிந்து எடுத்த பூமிபாரத்தை இறக்கி,—வள்ளல் மேரு இணை மணிப் புயத்தின் ஏற்றி - இராகுவினது மேருவை ஒத்த இரண்டாகிய அழகிய புயத்திலே சுமத்தி,—அறத்துணை அயல் நின்று உய்ப்ப அறிவுத் தேரதனில் போகி - அறமாகிய துணை பக்கத்தில் நின்று செலுத்த அறிவாகிய தேரிற்சென்று,—மறப் பவக் குறும்பை வெல்வான் வான் தவவனத்துச் சார்ந்தான் - மறத் தன்மையையுடைய பாவமாகியகுறும்பை வெல்லும்படி பெரியதவவனத்தை அடைந்தான். எ-று.

ஏற்றிப் போகிச் சார்ந்தான் என முடிக்க. (கOரு)

யாகப்படல முற்றிற்று.

# திக்குவிசயப்படலம்.

---

கனைகழல் வீரனுங் காவ லான்றரு
புனைமணி முடியொடும் பொலிந்து தோன்றினன்
றினகரன் றிவாந்தகா லத்திற் சேர்த்திய
வினவொளி கொடுகன லிலங்கிற் றென்னவே.

இ-ள். தினகரன் திவாஅந்தகாலத்துச் சேர்த்திய இன ஒளி கொடு கனல் இலங்கிற்று என்ன - ஞாயிறு மாலைக்காலத்திலே (தன்கட்) சேர்த்திய கூட்டமான ஒளியைக்கொண்டு அக்கினியானது விளங்கினாற் போல,—கனைகழல் வீரனும் - ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த வீரனாகிய இரகுவும்,—காவலான் தரு மணிபுனை முடியொடும் பொலிந்து தோன்றினன் - அரசனாகிய திலீபன் (தன் விருத்தாப்பியதசையிற்) கொடுத்த அரசோடும் பொலிந்து விளங்கினான். எ-று.

என்னப் பொலிந்து தோன்றினன் என முடிக்க. திவாஅந்தகாலம் - பகலின் அந்தமானகாலம்; எனவே மாலைக்காலம் என்பதாயிற்று. புனை மணிமுடி என்பதை மணிபுனைமுடி என மாற்றி மணியாற் புனைந்த முடி எனப் பொருள்கொள்க. புனைதல் அழகுபெறச் சமைத்தல். முடி என்றது முடியையணிதற்குக் காரணமாகிய அரசினை; காரணகாரிய உபசாரம். "ஸராஜ்யம் குருணா தத்தம் ப்ரதிபத்யாதிகம் பபௌ." என்னும் முதனூற் சுலோகக் கருத்துநோக்கி இவ்வாறு பொருள் கூறப்பட்டது. ஞாயிறு மாலைக்காலத்திற்கொடுத்த ஒளியால் அக்கினி விளங்கினாற்போலத் திலீபன் தன் விருத்தாப்பியதசையிற் கொடுத்த இராச்சியத்தினால் இரகுவும் விளங்கினான் என்பது கருத்து. திவாந்தகாலம் என்னும் உவமையடையாற் பொருளடை வருவிக்கப்பட்டது. அக்கினி இயல்பாக ஒளியுடையதாயினும் ஞாயிற்றின் விளக்கத்தானே தோன்றாதிருந்து பின் அது அத்தமயனமாகும்போது அதன் ஒளியோடுங்கூடி உலகின்கண் அதிகம் விளங்கினாற் போல, இரகுவும் இயல்பாகவே தேசுடையனாயினும் திலீபனுடைய இராச்சியகாலம்வரையும் தோன்றாதிருந்து பின் அவன் விருத்தாப்பியதசையிற் கொடுத்த இராச்சியதேசினோடும்கூடி உலகின்கண் முன்னையினும் அதிகம் விளங்கினான் என்பார் இவ்வாறு கூறினார். (க)

நிமிர்தரு மிசையினன் றன்னை நேர்ந்துமு
னிமிர்தரு புகைக்கன லென்று நோக்கிய
வமரிடு மதிபல வரசர் பின்னர்தந்
தமரொடு மடுஞ்சினைத் தழலி னேக்கினர்.

இ-ள். நிமிர்தரும் இசையினுன்றன்னை நேர்ந்து - (அரசையடைந்த உலகில்) மேற்பட்ட கீர்த்தியையுடையனுகிய இரகுவைப் பெற்று,—முன் நிமிர்தரு புகைக்கனல் என்று நோக்கிய அமர் இடு மதி பல அரசர் - திலீபன்காலத்திலே (அவனுடைய அரசினைக்) கிளர்ந்த புகையோடுகூடிய அக்கினியாக நோக்கிய போரைச்செய்கின்ற அறிவையுடைய அரசர்கள் பலரும்,—பின்னர் தம் தமரொடும் அடும் சிகைத் தழலின் நோக்கினுர் - அயனுகிய இவன்காலத்திலே (அதனைத்) தமது கிளையோடும் அடுகின்ற சுவாலையோடு கூடிய அக்கினியைப்போல நோக்கினுர்கள். எ-று.

திலீபன் காலத்திலும் பார்க்க இவன் காலத்திலே அரசு அதிகம் மேன்மையடைந்து விளங்கிற்றென்பது கருத்து. புகையோடு கூடிய அக்கினியென்றது மூட்டப்பட்டபொழுதே எரிகின்ற அக்கினியை. சிகைத் தழலென்றது மூட்டப்பட்டபின் சுவாலித்தெரிகின்ற அக்கினியை. இவற்றிற்கேற்ப உபமேயத்திலும் பொருள் கொள்க. (உ)

இச்சையாங் கட்புலப் படாளென் றெண்ணினு
நிச்சமா மன்னவ னிறைந்த தேசெனுங்
கைச்சரோ ருகத்திடை விளங்குங் கஞ்சமென்
பிச்சமே கொடுதிருப் பெரிது பேணினுள்.

இ-ள். திரு - இலக்குமியானவள்,—இச்சை ஆம் கண் புலப்படாள் என்று எண்ணினும் - (விடயங்களைப்பற்றியறிய) விரும்புகின்ற கண்ணுக்கு காணப்படாளென்று கருதினுலும்,—நிச்சம் ஆம் மன்னவன் நிறைந்த தேசு எனும் - அழிவற்ற அரசனது நிறைவுகொண்ட காந்தி என்று சொல்லுகின்ற,— கைச்சரோருகத்திடை விளங்கும் கஞ்சம் என் பிச்சம் கொடு - தனது கைத்தாமரையினிடத்து விளங்குகின்ற தாமரைமலரென்னுங் குடையினுல்,—பெரிது பேணினுள் - மிகவும் விரும்பிச் சேவித்தாள். எ-று.

ஏ அசை. கொடு மூன்ரும்வேற்றுமைச் சொல்லுருபு. எண்ணினும் பேணினுள் எனவும், நிச்சமாம் தேசு எனவும், தேசெனும் பிச்சம் எனவும் இயைக்க. இரகுவினுடைய காந்தியினுலே குடையும் அதனுலே இலக்குமி பெரிது பேணலும் அனுமானிக்கப்பட்டதென்பார் நிச்சமாமன்னவனிறைந்ததேசெனும்... ... ... ... ... ... ... ...பிச்சமேகொடுதிருப் பெரிதுபேணினுள் என்றும், இரகுவினுடைய காந்தி மேலெழுந்து குடைபோலச் சூழ்ந்துநிற்றலின் தேசெனும்பிச்சமென்றுங் கூறினுர். குடையென்று அனுமானித்தற்கேற்ற தேசு என்பது போதர நிச்சமாமன்னவனிறைந்ததேசு எனப்பட்டது. "வாயாஜெஷணஜெக்ஷூ)ண-தஜெ)ரஶ)ாகிஜவஷ யஃ—வஃாவஃா-தவஹெ)ணஹெஜெஷா ஜ்ராஜ)ஃக்ஷி-தஃ." என்னு முதனூற் சுலோகத்திற்கியைய இவ்வாறு பொருள்கூறப்பட்டது இதனுல் இலக்குமிவாசங் கூறப்பட்டது. (ங)

குருதிநா றொளிறுவேன் மன்னன் கொற்றமே
கருதிநா வலர்தநா வுறைந்து காமரு
பருதிநாண் மலர்ப்பொருட் டுறையும் பார்தரு
சுருதிநா யகன்மயி றுதிப்பதா யினுள்.

இ-ள். காமரு பருதி நாண்மலர்ப்பொருட்டு உறையும் - விரும்பப்படுகின்ற தாமரைமலர்ப்பொருட்டின்மீதிருக்கின்ற, — பார்தரு சுருதி நாயகன்மயில் - பூமியைச் சிருட்டிக்கின்ற பிரமாவின் மனைவியாகிய நாமகளானவள்,—குருதி நாறு ஒளிறு வேல் மன்னன் கொற்றமே கருதி - இரத்தந்தோன்றுகின்ற பிரகாசிக்கும் வேலையேந்திய அரசனுடைய வெற்றியையே கருதி,—நாவலர்தம் நா உறைந்து துதிப்பதாயினுள் - நாவலரது நாவிலிருந்து துதிப்பாளாயினுள். எ-று.

பருதிநாண்மலர் - சூரியனுல் அலர்த்தப்படும் மலர்; எனவே தாமரை மலர் என்பது பெறப்பட்டது. கருதி உறைந்து துதிப்பதாயினுள் என வினைமுடிபுசெய்க: உபசாரம். காமரு என்பதில் உகரத்தைச் சாரியையாகக் கொண்டு அழகு எனப் பொருள்கோடலுமாம். இதனுல் நாமகள்வாசங் கூறப்பட்டது. (ச)

ஒருமனு முதலிய மன்ன ரொண்புய
மருதடைந் திடினுமோர் காலு மன்றலைப்
பெருளெனப் புதுமணம் பெற்ற பெற்றியி
னருமலர்ப் புயம்புவி மங்கை நண்ணினுள்.

இ-ள். மனுமுதலிய மன்னர் ஒண் புயம் ஒரு மருது அடைந்திடினும் - மனுமுதலிய அரசர்களது ஒள்ளிய புயத்தை ஒறுத்தலின்றி விரும்பி அடைந்திருந்தாளாயினும்,—புவிமங்கை - பூமிதேவியானவள்,—ஓர்காலும் மன்றலைப் பெருளென - ஓர்காலும் விவாகத்தைப் பெருதவளைப்போல,—புதுமணம் பெற்ற பெற்றியின் - புதுமணத்தைப்பெற்ற தன்மையோடு,—நருமலர்ப் புயம் நண்ணினுள் - தேன்பொருந்திய மலர்மாலையையணிந்த (இரகுவின்) புயத்தை அடைந்தாள். எ-று.

பெருளென நண்ணினுள், பெற்றியின் நண்ணினுள் எனத் தனித்தனி இயைக்க. இவனுடைய அரசியல் மனுமுதலிய அரசர்களுடைய அரசியலினும் அதிகஞ் சிறந்து புதிதாகத் தோன்றிற்றென்பார் அடைந்திடினும் ... பெருளென...நண்ணினுள் என்ருர். ஓர்காலும் மன்றலைப் பெருள் - கன்னிகை. இதனுல் அரசநீதியின் மிகுதி கூறப்பட்டது. (ரு)

உரப்பயோ ததிவரு மும்ப ரூணதன்
பரப்பெலா மெல்லெனப் படர்தல் போலவே
திரப்பதா தியங்கடற் செல்வன் செய்யகோல்
புரப்பதா யெண்டிசை யளாவிப் போயதே.

இ-ள். உரப் பயோததி வரும் உம்பர் ஊண் - பாற்கடலிற்றோன்றிய அமிர்தம்,—அதன் பரப்பெலாம் மெல்லெனப் படர்தல்போல - அக்கடலின் பரப்பெங்கும் மெல்லவாகப் பரத்தல்போல,—திரப் பதாதியங்கடற் செல்வன் செய்யகோல் - நிலையான சேனைக்கடலாகிய செல்வத்தையுடைய இரகுவினது செங்கோல்,—புரப்பதாய் எண்திசை அளாவிப் போயது - காப்பதாய்ப் பூமியினது எட்டுத்திசைகளிலும் அளாவிச் சென்றது. எ-று.

அமுதம் பாற்கடலெங்கும் பரந்தாற்போலச் செங்கோல் பூமியெங்கும் பரந்தது என்பது கருத்து. உவமைமுகத்தானே செங்கோலின் தண்ணளிபெற்றாம். இதனால் அரசின்றன்மை கூறப்பட்டது. (சு)

பார்தனி லின்னணம் பருவங் கொண்டெழு
கார்தரு கொடையினான் விளங்கக் காட்சியிற்
கூர்தரு கலையெலாங் கொடுத்தும் வாங்கியுந்
தீர்வினை யிலான்றெளி பருவஞ் சேர்ந்ததே.

இ-ள். பார்தனில் இன்னணம் பருவம் கொண்டு எழு கார்தரு கொடையினான் விளங்க - பூமியில் இவ்வாறு பருவமுற்றெழுந்த மேகம்போன்ற கொடையையுடையவனாகிய இரகு (அரசியல்பூண்டு) விளங்க,—காட்சியில் கூர்தரு கலையெலாம் கொடுத்தும் வாங்கியும் தீர்வினையிலான் - தோற்றத்தினால்மிக்ககலைகளையெல்லாம் (தன் மித்திரனாகிய சூரியனுக்குக்) கொடுத்தும் மீளக் கவர்ந்தும் (அத்தொழிலில் எக்காலமும்) நீங்காதவனாகிய சந்திரன்,—தெளி பருவம் சேர்ந்தது - (மேகங்களின் மறைப்பைநீங்கி ஒளியினால்) தெளிவையடைகின்ற சரற்காலமானது வந்தடைந்தது. எ-று.

இன்னணம் கொடையினான் விளங்கத் தெளி பருவஞ் சேர்ந்தது என இயைக்க. பருவங்கொண்டெழுகார் என்றமையினாலே கொடையின் மிகுதி பெறப்படும். இச்செயுளிலே இவ்வாறு பூமியிலே பருவங்கொண்டெழுந்த காராகிய கொடையோன் விளங்கச் சரற்காலம் வந்தது என்பதுந் தொனித்தல் காண்க. பருவங்கொண்டெழுந்த காராகிய கொடையோன் விளங்க என்றது கார்காலம்விளங்க என்றபடி. சந்திரன் சூரியனுக்குத் தன்கலைகளைக்கொடுத்து வாங்குபவனென்பதை "பத்திரட்டியிலீரிரண்டொழிந்தபல் கலையோன் - மித்திரற்கவைகொடுத்துப்பின்மீளவுங்கவர்வோன்" என்னும் பாரதச்செய்யுளானறிக. (எ)

வேறு

இனிப்பா லோது மொழியோடு மேகா நிற்கு முயிரோடுந்
தனிப்பா ருள்ளந் தடுமாறச் சாருந் தடங்கார் தணந்தேக
நனிப்பான் மையகன் னெறிகூடி நலியும் பாச விருணாறுந்
துனிப்பா தகவல் வினைநீக்குந் தூயோர் போன்ற சுடர்வானம்.

இ-ள். இனிப்பால் ஓதும் மொழியோடும் ஏகாநிற்கும் உயிரோடும் தனிப்பார் உள்ளம் தடுமாற - இனிமையோடு கூறுகின்ற வார்த்தையோடும்

உடம்பைவிட்டுச் செல்லுகின்ற உயிரோடும் (நாயகரைப்பிரிந்து) தனித்திருக்கின்றவர்களாகிய மகளிர்களுடைய மனந்தடுமாறும்படி,—சாரும் தடம் கார் தணந்து ஏக - அடைந்த பெரிய மேகங்கள் நீங்கிச் செல்ல,—சுடர் வானம் - ஒளிபொருந்திய ஆகாயம்,—நனிப் பான்மைய நன்னெறிகூடி - மிகவும் ஒழுகற்குரிய தன்மையையுடையதாகிய சன்மார்க்கத்தைத் தலைப்பட்டு,—நலியும் பாச இருள் நாறும் துனிப் பாதக வல்வினை நீக்கும் தூயோர் போன்ற - (தம்மை) வருத்துகின்ற பாசமாகிய மயக்கம்பற்றித் தோன்றுந் துன்பத்தைத்தருகின்ற கொடிய வலிய இருவினைகளையும் நீக்கிய பெரியோர்களைப் போன்றன. எ-று.

மொழியோடும் உயிரோடும் தடுமாறச் சாருந் தடங்கார் எனவும், கூடி நீக்குந் தூயோர் எனவும் இயைக்க. பருவங்குறித்துச் சென்ற நாயகரைப் பிரிந்திருக்கு மகளிர் அவரைநோக்கி மனமலையும்படிவந்த கார் என்பார் தனிப்பாருள்ளந்தடுமாற என்றார். நன்னெறி, சன்மார்க்கம், ஞானநெறி என்பன ஒருபொருளன. தூயோர் ஞானத்தைத் தலைப்பட்டு இருவினைகளையும் நீக்கிச் சுத்தாவத்தையை அடைதல்போல, வானமும் சரற்காலத்தைப்பொருந்திக் காரைநீக்கி வெளிப்பை அடைந்தது என்பார் இவ்வாறு கூறினர். (அ)

தேமா லிகைமன் னவன்புகழ்வான் றீண்ட நோக்கி நம்வலிமுன் [ர்
போமா றடர்த்தான் றனதளவே யொளித்தல்போன்று போயதுபா
வேமா றிரவி நெடுங்கரத்தால் வெந்தீ விளைக்கு முதுவேனிற்
கோமான் வெந்நிட் டொளித்தோடக்குனியும்வானக் கோதண்டம்.

இ-ள். பார் வேமாறு இரவி நெடும் கரத்தால் வெந்தீ விளைக்கும் முது வேனில் கோமான் வெந்இட்டு ஒளித்து ஓட - பூமி வேகுமாறு சூரியனுடைய நெடிய கிரணத்தினால் கொடிய வெப்பத்தையுண்டாக்கும் முதுவேனிலாகிய அரசன் புறமிட்டு ஒளித்தோடும்படி,—குனியும் வானக் கோதண்டம் - வளைந்த வானவில்லானது,—தேம் மாலிகை மன்னவன் புகழ் வான் தீண்ட நோக்கி நம் வலி முன் போமாறு அடர்த்தான் - தேன்பொருந்திய மாலையையுடையவரசன் தன்புகழ் வானைத்தீண்டும்படி கருதி நமது வலியை முன்னரே அழியும்படி பொருதான் என்று,—தனது அளவே ஒளித்தல் போன்று போயது - அவனளவிற் பயந்து ஒளித்தலைப்போன்று சென்றது. எ-று.

கோதண்டம் போயது என இயைக்க. என்று என்பது எஞ்சிநின்றது. தனதளவில் என்பதற்குத் தன்னளவிலே எனப் பொருள்கூறினுமமையும். ()

களிக்க லாமிக் குளதானைக் கைவேன் மன்னன் கடன்முரசின்
றெளிக்க லாய வொலிகேட்டுச் சிலம்ப றீரிந் திரன்யான
மளிக்க லாய நீர்வறந்திட் டகலா வாசை யந்தத்தி
லொளிக்க வான்கண் டிறந்தனபோல் விளங்கா நின்ற வுடுமாலை.

இ-ள். களி கலாம் மிக்குள தானை கைவேல் மன்னன் கடல் முரசின் தெளிக்கல் ஆய ஒலி கேட்டு - களிப்பைத்தருகின்ற போரில்மிக்க சேனைகளையுடைய கையில் வேலையேந்திய இரகுமகாராசனது கடல்போன்ற முரசினது தெளிவுபொருந்திய ஓசையைக் கேட்டு,—சிலம்பல் தீர் இந்திரன் யானம் - முழக்கம்நீங்கிய இந்திரனுடைய வாகனமாகிய மேகம்,—அளிக்கல் ஆய நீர் வறந்திட்டு அகலா ஆசை அந்தத்தில் ஒளிக்க - (உலகிற்குக்) கொடுக்கப்படுவதாகிய நீர் வறந்து அகன்று திகாந்தத்தில் ஒளிக்க,—வான் கண் திறந்ததுபோல் உடுமாலை விளங்காநின்ற - ஆகாயம் விழித்ததுபோல நட்சத்திரங்கள் விளங்கின. எ-று.

நீர் வறத்தல் நாவுலர்தலையுங் குறித்து நின்றது. இது தற்குறிப்பேற்றமென்னுமலங்காரம். (௧௦)

ஊனே றயில்வெஞ் சரமாரி யுய்த்திட் டொல்லா வுயர்வலியாற்
றேனே றலர்க்கற் பகநீழற் றேவ னேருஞ் செருமீதில்
வானேர் வெற்பின் மயில்களிப்ப மன்னன்கணையான்மடிந்தன்று
தானே வீழ்ந்து பிலம்புக்க போல வுருமுச் சாம்பினவே.

இ-ள். ஊன் ஏறு அயில் வெம் சரமாரி உய்த்திட்டு - உடம்பில் ஏறுகின்ற கூரிய வெவ்விய பாணமழையைச் செலுத்தி,—ஒல்லா உயர் வலியால் தேன் ஏறு அலர்க் கற்பக நீழல் தேவன் நேரும் செருமீதில் - (பிறர்க்குப்) பொருந்தாத உயர்ந்த வலியோடு தேன்மிக்க மலரையுடைய கற்பகதரு நீழலையுடையனாகிய இந்திரன் எதிர்த்த போரில்,—வான் ஏர் வெற்பின் மயில் களிப்ப மன்னன் கணையால் மடிந்து - ஆகாயத்தில் உயர்ந்த மலையில்வசிக்கின்ற மயில்போல்வாளாகிய துர்க்கை மனங்களிப்படையும்படி இரகுவினுடைய பாணத்தினால் வெட்டுண்டு,—அன்று வீழ்ந்து பிலம் புக்க போல - அசுவத்தின்பொருட்டுப் பொருத அஞ்ஞான்று விழுந்து பாதலத்திற்புகுந்ததுபோல,—உருமுச் சாம்பின - இடிகள் சோர்வடைந்தன. எ-று.

தான், ஏ அசைகள். உய்த்திட்டு நேரும் செரு எனவும், மடிந்து வீழ்ந்து புக்கபோலச் சாம்பின எனவும் வினைமுடிபுசெய்க. வானேர் என்பதை வான் நேர் எனக் கண்ணழித்து வானையளாவிய எனப் பொருள்கோடலுமாம். அசுவம் - குதிரை. (௧௧)

வில்லார் கனக மணிப்பைம்பூண் விளங்குங் கொங்கை வேழமட
நல்லா ரளக பந்தியென விருண்ட செவ்வி நளிர்தண்கா[ளொன்
சொல்லார் விலைமங் கையரின்பந் துய்த்தே யூடத் தோய்பொரு
றில்லா வார்வத் திளையோரிற் களியிற் றீர்ந்த வினமஞ்ஞை.

இ-ள். வில் ஆர் கனக மணிப் பைம்பூண் விளங்கும் கொங்கை வேழ மடநல்லார் அளகபந்தி என - ஒளியார்ந்த பொன்னாலும் மணியாலும்

செய்த ஆபரணங்கள் விளங்கும் மூலைகளாகிய யானைகளையுடைய மடமை பொருந்திய மகளிரது அளகபந்தியைப்போல,— செவ்வி நளிர் தண்கா இருண்ட - செவ்வியமைந்த குளிர்ச்சிபொருந்திய சோலைகள் இருண்டன,— சொல் ஆர் விலைமங்கையர் இன்பம் துய்த்து ஊடத் தோய் பொருள் ஒன்று இல்லா ஆர்வத்து இளையோரில் - (வேசியருறவு இருமைக்குங்கூடாது என்று நூல்களிற்) சொல்லப்படுகின்ற அவ்விலைமகளிரது இன்பத்தை அனுபவித்து (பொருளில்லாமையால் அவர்) வெறுப்ப அவருக்குக் கொடுத்துச் சேருதற்குரிய பொருள் சிறிதும் இல்லாத ஆசையையுடைய காளையரைப்போல,—இன மஞ்ஞை களியில் தீர்ந்த - கூட்டமான மயில்கள் களிப்பின் நீங்கின. எ-று.

கார்காலத்திற்றளிர்த்த இலைகளெல்லாம் இப்பொழுது முற்றி நன்கு கறுத்தன ஆதலின் இருண்ட என்றும், பொருளுள்ளகாலத்திலே அப்பொருளைக்கொடுத்து வேசியரின்பையனுபவித்துப் பொருள்முடிந்தவுடன் அவர்கள்வெறுத்துவிட அதனால் ஆசையிருந்தும் அவர்களுக்குக்கொடுத்துப் புணர்தற்குப் பொருளில்லாது வறுமையடைந்த காளையர் களிப்பின்நீங்கினாற்போல, மயில்களும் கார்காலம்முழுதுங் களிப்பைப்பொருந்திநடித்து அதுமுடிந்து சரற்காலம் வந்தவுடன் தமக்கு விருப்பிருந்தும் காலம்மாறினமையிற் களிப்பினின்றும் நீங்கின என்பார் சொல்லார்விலைமங்கையரின்பந் துய்த்தேயூடத்தோய்பொருளொன்-றில்லாவார்வத்திளையோரிற்களியிற்றீர்ந்தவினமஞ்ஞை என்றுங் கூறினார். (கஉ.)

துறைவண் டார்கைத் திருவன்னார் நிற்பத் துணைக்க ணிழலதனை
யுறைவண் டானந் தெளிநீருட் கயலென் றுன்னு மொளிர்வாவி
நிறைவண் டாமக் கருவிளையின் செம்மல் கரியா நிமிரறுகாற்
சிறைவண் டூத நறும்போதிற் செந்தீ விளைப்ப செங்காந்தள்.

இ-ள். துறை வண்டு ஆர் கைத்திரு அன்னார் நிற்ப - நீர்த்துறையிலே வளையலார்ந்த கையையுடைய இலக்குமியையொத்தவர்களாகிய மகளிர் நிற்ப,—துணைகண் நிழலதனை - (நீருட்டோன்றும் அவர்களுடைய) இரு கண்களின் நிழலை,—தெளி நீருள் கயல் என்று உறை வண்டானம் உன்னும் ஒளிர் வாவி - தெளிந்த நீரினுள்ளே இருக்கும் கயல்மீன்களென்று நீர்க்கரையில் இருக்கும் கொய்யடிநாரைகள் கருதப்படுகின்றன விளங்குகின்ற வாவிகள்,—நிறை வண் தாமக் கருவிளையின் செம்மல் கரியா - நிறைந்த அழகிய பூக்களையுடைய கருவிளையின் பழம்பூக்கள் கரியாக,—நிமிர் அறுகால் சிறைவண்டு ஊத - கிளருகின்ற அறுகாலையுடைய சிறகினைக் கொண்ட வண்டுகள் ஊத,—நறும்போதில் செந்தீ விளைப்ப செங்காந்தள் - நறியபூவினால் அக்கினியை உண்டாக்குவன செங்காந்தள்கள். எ-று.

நீராடவந்த மகளிரின் கண்ணிழலை வண்டானம் கயலென்று கருதப் படுவன வாவி என்றதனால் கார்கால மழையினால் மகளிராடத்தக்கதாக குளங்கள் நீரானிறைந்திருந்தன என்பதும், செம்மல்கரியாச்செங்காந்

தள்செந்தீவிளைப்ப என்றதனாற் காந்தள் பூத்தன என்பதும் தோன்றின. "அரக்காம்பனெருப்பூதும்" என்றார் பிறரும். (கரு)

நீடிக் கேறும் புகழ்வேந்த னேரா ராய நிலவேந்தர்
பீடிற் றோயும் பெரும்புகழ்போ லஃகா நின்ற பெருநதிக
ணாடிக் கால பாசத்தி னணுகித் தீய கொலைநாளு
நேடிக்கூட்டுங் கொடியோர்த நெஞ்சம்போன்ற நெறியெல்லாம்.

இ-ள். நீள் திக்கு ஏறும் புகழ் வேந்தன் நேரார் ஆய நிலவேந்தர் பீடில் தோயும் பெரும் புகழ்போல் - நெடிய திக்குகளிற்போயேறிய புகழையுடைய அரசனாகிய இரகுவினது பகைவராகிய பூமியிலுள்ளவரசர்களது பெருமையோடு பொருந்திய மிக்க புகழைப்போல,—பெருநதிகள் அஃகா நின்ற - பெரிய நதிகளெல்லாம் நீர்சுருங்கப்பெற்றன,—நெறியெல்லாம் - வழிகளெல்லாம்,—நாடிக் கால பாசத்தின் அணுகித் தீய கொலை நாளும் நேடிக் கூட்டும் - (நிற்குமிடத்தை) ஆராய்ந்து இயமபாசத்தைப்போல வந்து கொடிய கொலைத்தொழிலை நாடோறும் விரும்பி (உயிர்களை) அடைவிக்கும்,—கொடியோர்தம் நெஞ்சம் போன்ற - கொடியோர்களது மனத்தைப்போல ஈரமற்றன. எ-று.

கொலைநாளுநேடிக்கூட்டும் என்பதற்குக் கொலையை நாடோறும் விரும்பிச்செய்து அதனாற் பாவத்தைத் தம்மையடையுமாறு செய்கின்ற எனப் பொருள்கோடலுமாம். கொலைத்தொழிலைச்செய்யுங் கொடியோரது மனம் ஈரமற்று வறந்திருத்தல்போல வழிகளும் ஈரமற்று வறந்தன என்பார் கொடியோர்தநெஞ்சம்போன்ற என்றார். (சச)

வேறு.

கைதிக ழித்திறப் பருவங் காண்டலு
நெய்திகழ் குரூஉச்சுடர் நிலவு வேலினன்
மெய்திகழ் மந்திரத் தலைவ ரோடும்வே
றெய்தியின் னணமெடுத் திசைப்ப தாயினன்.

இ-ள். கைதிகழ் இத்திறப் பருவம் காண்டலும் - இடந்தோறும் விளங்குகின்ற இத்தன்மையான சரற்காலநிகழ்ச்சிகளைக் கண்டவளவில்,—நெய் திகழ் குரூஉச் சுடர் நிலவு வேலினன் - நெய்விளங்குகின்ற நிறம் பொருந்திய ஒளிவிளங்கும் வேற்படையையுடையவனாகிய இரகு,— மெய் திகழ் மந்திரத் தலைவரோடும் வேறு எய்தி - உண்மையான மந்திரிமாரோடும் வேறிருந்து,—இன்னணம் எடுத்து இசைப்பதாயினன் - இவ்வாறு எடுத்துச் சொல்வானாயினன். எ-று.

கைதிகழ் என்பதை ஒருசொல்லாகக் கொண்டு பொருள்கோடலும், (பயன்றரத்தக்கதாகக்) கையிற்கிடைத்து விளங்குகின்ற எனப் பொருள் கோடலும் பொருந்தும். காண்டலும் எய்தி இசைப்பதாயினன் என வினைமுடிபு செய்க. (சரு)

கயந்தரு தானைவேன் மன்னர் கைக்கொளுஞ்
சயந்தரு மெப்பெருஞ் சீர்த்தி தன்னினும்
வியந்திடு மாதிர விசய மெய்ப்புக
ழுயர்ந்ததென் றென்மனத் துற்ற துண்டரோ.

இ-ள். கயந்தரு தானை வேல் மன்னர் கைக்கொளும் - யானைப்படையையுடைய வேலையேந்திய அரசர்களடைகின்ற,—சயம் தரும் எப்பெரும் சீர்த்தி தன்னினும் - வெற்றியைத்தருகின்ற எவ்வகைப்பட்ட கீர்த்திகளினும்பார்க்க,—வியந்திடு மாதிர விசய மெய்ப்புகழ் உயர்ந்தது என்று - வியக்கப்படுகின்ற திக்குவிசயத்தால்வரும் உண்மையான புகழே உயர்ந்ததென்று,—என் மனத்து உற்றது உண்டு - என்மனத்தில் (ஓர் எண்ணம்) அடைந்ததுண்டு. எ-று.

கீர்த்தி தன்னினும் உயர்ந்தது என்று உற்றது உண்டு என இயைபு செய்க. எப்பெருஞ் சீர்த்தி என்றது யாகம், பகையரசரோடு பொருதல் முதலியவற்றால் வருங் கீர்த்தியை. (கசு)

மெய்ம்மன மந்திர விதியி னுன்மிகைத்
தெம்மனர் விசயமுந் திருவும் வாரிநின்
றெம்மனர்க் களித்திடு மியல்பி னீரிசை
நும்மனக் கருத்தினை நுவலுவீ ரென்றான்.

இ-ள். மெய் மன மந்திர விதியினால் - உண்மையான மனத்திற்பொருந்திய ஆலோசனையின் முறையினால்,—மிகை தெவ் மனர் விசயமுந் திருவும் வாரிநின்று எம் மன்னர்க்கு அளித்திடும் இயல்பினீர் - (அடங்காது)மேற்படுதலையுடைய பகையரசரது வெற்றியையும் செல்வத்தையும் அள்ளிநின்று எங்குலத்தரசருக்குக் கொடுக்குமியல்புடைய அமைச்சர்களே,—இசை நும் மனக் கருத்தினை நுவலுவீர் என்றான் - (இதன்கண்) இயைந்த உங்கள் மனக்கருத்தைச் சொல்வீர்கள் என்றான். எ-று.

விதியினால் வாரிநின்று அளித்திடும் இயல்பினீர் எனக் கூட்டுக. தெவ் என்னும் மொழியினீற்று வகரம் மன்னர் என்னும் மகரமுதன்மொழி வந்தவிடத்து "தெவ்வென்மொழியே" என்னுஞ் சூத்திரத்து "மவ்வரின் வஃகான் மவ்வுமாகும்" என்பதனால் மகரமாகத் திரிந்து முடிந்தது. எங்குலத்தரசர் கருத்தை நுங்கருத்தில் வைத்து நூல்விதியோடும் பொருந்த ஆராய்ந்து செயத்தக்கது இது செயத்தகாதது இது என்று கண்டு, செயத்தக்கனவற்றைக் கூறிச் செய்வித்து, அவர்களுக்கு அதனால்வரும் வெற்றியையும் செல்வத்தையும் அளித்தவியல்புடையீராதலினால் என் கருத்தையுந் தப்பாது எண்ணிச் சொல்லுவீர் என்பான் இங்ஙனங்கூறினான். (கஎ)

என்றலு மதிக்கதி ரிறுப்ப நீர்தருந்
துன்றருங் காந்தமே யென்னச் சொன்மதிக்

குன்றிரு வருளலா லுளகொ லென்றெதிர்
நின்றடி தொழுதிவை நிகழ்த்தன் மேயினர்.

இ-ள். என்றலும் - என்று இரகு கூறுதலும்,—மதிக் கதிர் இறுப்ப நீர் தரும் துன்று இரும் காந்தம் என்ன - (தன்னிடத்து வந்து) சந்திரகிரணம் தங்க நீரைத்தருகின்ற செறிந்த பெரிய காந்தம்போல,—சொல் மதிக்கு உன் திருஅருள் அலால் உள கொல் என்று - யாம் சொல்லுகின்ற புத்திக்கு உன்னுடைய திருவருளேயன்றி வேறுகாரணமும் உண்டோ என்று,—எதிர் நின்று அடி தொழுது இவை நிகழ்த்தன் மேயினர் - எதிரேநின்று பாதங்களைவணங்கி இவற்றைச் சொல்லுவாராயினர். எ-று.

என்றலும் நிகழ்த்தன் மேயினர், கந்தமே என்ன நிகழ்த்தன் மேயினர் எனத் தனித்தனி முடிக்க. (௧அ)

களம்படு பன்மதி கடிந்தொன் றாக்கிய
விளம்பரு மந்திர விதியை மேதக
வுளம்பொதி மன்னவ னொருவ னாமெனத்
தளம்பலின் முரசறைந் துலகஞ் சாற்றுமே.

இ-ள். கள்ளம் படு பல் மதி கடிந்து ஒன்று ஆக்கிய விளம்பு அருமந்திர விதியை - வஞ்சம்பொருந்திய பல புத்திகளைவிலக்கி ஒருவழிப்படுத்திய சொல்லுதற்கரிய மந்திரமுறையை,—மேதக உளம் பொதி மன்னவன் ஒருவன் ஆம் என - மேன்மைதக மனத்தில்வைக்கின்ற அரசன் ஏகசக்கிராதிபதியாவானென்று,—தளம்பல் இல் முரசு அறைந்து உலகம் சாற்றும் - அசைவற்ற முரசையடித்து உலகம் கூறும். எ-று.

விதியைப் பொதி மன்னவன் எனக் கூட்டுக. முரசறைந்துசாற்றல் - பிரசித்தப்படுத்திக் கூறல். (௧௯)

இனந்தரு சந்திவிக் கிரகம் யானமா
சனந்துவை தத்தொடாச் சிரயந் தானெனு
மனந்தரு குணங்களோ ராறும் வல்லகோ
வனந்தபூ பாலர்கட் கரச னுவனே.

இ-ள். இனம் தரு சந்தி விக்கிரகம் யானம் ஆசனம் துவைதம் ஆச்சிரயம் எனும் - கூட்டமான சந்தியும், விக்கிரகமும், யானமும், ஆசனமும், துவைதமும், ஆச்சிரயமுமென்னும்,—மனம் தரு குணங்கள் ஓராறும் வல்ல கோ - மனத்திற் சிறந்துள்ள குணங்களாறிலும் வல்ல அரசன்,—அனந்த பூபாலர்கட்கு அரசனுவன் - அளவில்லாத அரசர்களுக்கு மேலான அரசனுவான். எ-று.

இனந்தருகுணங்களாறு என இயைக்க. சந்தி - நட்பாக்கல். விக்கிரகம் - விரோதம். யாநம் - பகைவன்மேற்சேறல். ஆசனம் - காலம்பார்த்திருத்தல்.

துவைதம் - பிரித்தல். ஆச்சிரயம் - பகையை வெல்லுதற்கு வேறொருவனை யடைதல். இவற்றைப் பின்வருஞ் செய்யுள்களாலறிக. (உ0)

சந்தியே தம்மிலொத் திருத்த றாழ்வறு
மந்தில்விக் கிரகமே விரோத மாகுமாற்
சிந்தைகொள் யானமேற் செல்ல லாசன
முந்திய காலமங் குணர்ந்தி ருத்தலே.

இ-ள். சந்தி தம்மில் ஒத்திருத்தல் - சந்தியாவது அரசர்கள் பகைநீங்கித் தம்மிலொத்திருத்தல்,—தாழ்வு அறும் விக்கிரகம் விரோதம் ஆகும் - குற்றமில்லாத விக்கிரகமாவது பகைத்தலாகும்,—சிந்தைகொள் யானம் மேற்சேறல் - கருதப்படுகின்ற யானமாவது பகைவர்மேற் சேறலாகும்,— ஆசனம் முந்திய காலம் உணர்ந்து இருத்தல் - ஆசனமாவது முதன்மைபொருந்திய காலத்தைக்கருதி இருத்தலாகும். எ-று.

அந்தில், ஆல், ஆங்கு என்பன அசைநிலைகள். (உக)

தடத்திரு மன்னவர் தம்மின் மாறுகொண்
டிடப்பொது விருத்தலே துவைத மென்பராற்
றிடத்தவாச் சிரயமங் கொருவன் செய்சமர்
கடக்கமற் றொருவனை நட்புக் காண்டலே.

இ-ள். துவைதம் தட திரு மன்னவர் தம்மில் மாறு கொண்டிடப் பொது இருத்தல் என்பர் - துவைதமாவது பெரிய செல்வத்தையுடைய அரசர் இருவர் தம்முள் மாறுபாடுற (த் தாம் அவர்க்கு) ப் பொதுவாக இருத்தல் என்று சொல்வர்,—திடத்த ஆச்சிரயம் ஒருவன் செய் சமர் கடக்க மற்றொருவனை நட்புக் காண்டல் - திடமான ஆச்சிரயமாவது ஒருவனோடுசெய்த போரைக் கடக்கும்படி மற்றொருவனை நட்புச்செய்தலாகும். எ-று.

ஆல் அசை. ஏகாரங்கள் பிரிநிலை. (உஉ)

விருத்திநற் றானநீள் கயமென் றேமிக
வுரைத்தன வுதயமோர் மூன்று மோர்ந்துள
திருத்தகு மன்னவன் றேவர் தம்மையும்
வருத்திய தெவ்வினை வலியின் றாக்குமே.

இ-ள். விருத்தி நல் தானம் நீள் கயம் என்று மிக உரைத்தன உதயம் ஓர் மூன்றும் - விருத்தியும் நல்லதானமும் நீண்டகயமும் என்று மிகவுஞ் சொல்லப்பட்டனவாகிய தோற்றம் மூன்றையும்,—ஓர்ந்துள திருதகு மன்னவன் - அறிந்த செல்வத்தாற்றக்க அரசன்,—தேவர் தம்மையும் வருத்திய தெவ்வினை வலி இன்று ஆக்கும் - தேவர்களையும் வருத்திய பகையை வலிமையற்றதாக்குவான். எ-று.

மன்னவன் ஆக்கும் என ஒட்டுக. (உ௩)

ஏறுதன் செயல்பலிப் பெய்த மாற்றவன்
வீறுவெஞ் செயல்குறைந் திடல் விருத்தியாங்
கூறுதா னஞ்சமங் கொளல் விருத்தியை
மாறிநின் றுரைப்பதே கயத்தின் வண்ணமே.

இ-ள். விருத்தி ஏறு தன் செயல் பலிப்பு எய்த மாற்றவன் வீறுவெம் செயல் குறைந்திடல் - விருத்தியாவது உயர்ந்த தன்செயல் பலிக்கப் பகைவனுடைய மிக்க கொடிய செயல் குறைதலாகும்.— கூறு தானம் சமம் கொளல் - சொல்லப்பட்ட தானமாவது அச்செயல் இருவருக்கும் சமமாதல்,— கயத்தின் வண்ணம் விருத்தியை மாறிநின்று உரைப்பது - கயத்தினியல்பாவது மேற்கூறிய விருத்தியினியல்பை மாறிச் சொல்வதாகும். எ-று,

விருத்தியை மாறிச்சொல்வது எனவே, தன்செயல் குறைய மாற்றான் செயல்பலிப்பெய்தல் கயம் என்பது பெறப்படும். இவ்வியல்பையும் அரசன் அறிந்தாற்றான் இதனையொழித்து விருத்தியைநோக்கிச் செய்வனென்க. ()

மந்திரம் பிரபுவுற் சாக மாம்வல
முந்துறு சத்திகள் மூன்று மங்கது
தந்திடு சித்தியுந் தரிக்கு மன்னவற்
கெந்தமா நிலங்கொலோ வெய்தி டாதவே.

இ-ள். மந்திரம் பிரபு உற்சாகம் ஆம் வல முந்து உறு சத்திகள் மூன்றும் - மந்திரமும் பிரபுவும் உற்சாகமுமாகிய வல்ல முதன்மைபொருந்திய சத்திகள் மூன்றையும்.—அது தந்திடு சித்தியும் தரிக்கும் மன்னவற்கு - அவைகள் தருகின்ற சித்தியையும் பொருந்தியிருக்கின்ற அரசனுக்கு,—எய்திடாத எந்த மா நிலம் - அடையாதன எந்தப் பெரிய நிலங்கள். எ-று.

வினவால் எல்லாமடையுமென்பது பெறப்படும். கொல், ஓ அசைகள். ()

நோகவுட் டாள்கெட நுடங்கும் வெம்பகை
பாகமிட் டாழ்வினிற் பதிந்த தாயினு
மாகமுட் டாவழா வாகை யோர்புக
ழாகவொட் டாதறை யாணி யாகுமே

இ-ள். நோக உள் தாள் கெட நுடங்கு வெம்பகை - வருந்தவும் உள் முயற்சிகெடவும் மெலியச்செய்கின்ற வெவ்விய பகையானது,—பாகம் இட்டு ஆழ்வினில் பதிந்ததாயினும் - (தன்னினும்) பிரிக்கப்பட்டுக் கீழ்ப்பட்டுத் தாழ்வடைந்திருந்ததாயினும்,— மாகம் முட்டா - (அப்பகையானது) ஆகாயத்தை முட்ட வளர்ந்து,—வழா - தவறாது,—வாகையோர் புகழ் ஆக ஒட்டாது அறை ஆணி ஆகும் - வெற்றியையுடையோரது புகழை வளரவிடாது அறைகின்ற ஓர் ஆணியாகும். எ-று.

நோகவுட்டாள்கெடநுடங்கும்வெம்பகை என்பதற்கு, நோகுமாறு உள்ளே முயற்சிகெட வளைந்த பகை எனப் பொருள்கொண்டு உட்பகை எனினுமாம். பதிந்ததாயினும் முட்டா வழா ஆகும் என இயைக்க. (உசு)

கனந்தரு பகையைவேர் களைத லின்றியே
தனந்தரு புரவலர் தழைப்ப தெங்ஙனே
நனந்தலை யுலகிரு ணலியு மாயினுந்
தினந்தொறும் பரிதியு மலைந்து செல்லுமே.

இ-ள். கனந்தரு பகையை வேர் களைதல் இன்றி - பெருமைதக்க பகையை வேரோடு களையாது,—தனம் தரு புரவலர் தழைப்பது எங்ஙன் - செல்வத்தால் மிக்க அரசர்கள் தழைப்பது எப்படி?,—நனந்தலையுலகு இருள் நலியுமாயினும் - பூமியிலுள்ள இருளை (ஒருநாளிற்) கெடுக்குமாயினும்,—பரிதியுந் தினந்தொறும் மலைந்து செல்லும் - (அவ்வளவோடுவிடாது முற்றக் கெடுக்குமாறு) சூரியனும் நாடோறும் (அவ்விருளோடு) பொருது செல்லும். எ-று.

சூரியனும் ஒருநாளோடுவிடாது பின்னும் எஞ்சிய இருள் உளவோ என்று நாடி ஒவ்வொருநாளும் இருளைப் பொருது செல்லுதல்போல, அரசனும் பகையைக்கொன்று இன்னும் உளவோ என்று நாடி முற்றாய்க் களையவேண்டும் என்பது இதன்கருத்து. மலைதல் பொருதலின் வன்மை தோன்றநின்றது. இது திருட்டாந்த அணி. (உஎ)

ஏறுழ்வலிப் பெரும்பகை தாழ்ந்த வென்றுதாந்
தெறுவலி யடக்குதல் சீரி தல்லவா
றுறுகணை யடியிற்கீழ்ப் பட்ட வொன்றிலாச்
சிறுதுக ளெழுந்தவர் சென்னி மூடுமே.

இ-ள். எறுழ் வலிப் பெரும் பகை தாழ்ந்த என்று - மிகுந்த வலியையுடைய மிக்க பகையாயுள்ளன தம்மினுந் தாழ்ந்தன என்று கருதி,—தாம் தெறு வலியடக்குதல் சீரிது அல்ல - தாம் (அப்பகையை) கொல்லுகின்ற வலியை அடக்கியிருத்தல் (அரசர்களுக்குச்) சிறப்புடையதல்ல,—உறுதுணை அடியின் கீழ்ப்பட்ட ஒன்று இலாச் சிறு துகள் எழுந்து - (வழிச்செல்வோரது) செல்லுகின்ற இரண்டுபாதங்களினதும் கீழேபொருந்திய பல சிறிய துகள்கள் (அல்லவா?) எழுந்து;—அவர் சென்னி மூடும் - அவர்களது தலையை மூடுகின்றன. எ-று.

ஆல் அசை. முன் துகள் சிறியதாய்க் கீழேபொருந்தியதாயினும் பின் பல கூடி மேற்பட்டுத் தலையை மூடுதல்போல முன் பகை சிறிதாய்த் தாழ்ந்ததாயினும் பின் பலகூடிப் பெருத்தவழி மேற்பட்டுக் கொல்லுமாதலின் அதனைச் சிறிதாயிருக்கும்பொழுதே களையவேண்டுமென்பார் தாழ்ந்தவென்று தாந்தெறுவலியடக்குதல்சீரிதல்ல என்றார். இதுவுமேலையணி. (உஅ)

புகுநிதி நிறைவென வெறுத்தல் பொங்கெழி
றொகுகதிர் முடியினர் சூழ்ச்சித் தல்லவாற்
றகுசல நிதிநிறை தரத்த தாயினு
மிகுநதி வரவினை வெறுப்ப தில்லையே.

இ-ள். புகு நிதி நிறைவு என வெறுத்தல் - வருகின்ற திரவியத்தை (நமக்கோ பொருள்) நிறைவாக உளது (ஆதலின் இது வேண்டியதின்று) என்று வெறுப்பது,—பொங்கு எழில் தொகு கதிர் முடியினர் சூழ்ச்சித்து அல்ல - பொலிகின்ற அழகுதொக்க ஒளிபொருந்திய முடியையுடையவர்களாகிய அரசர்களது உபாயத்தினிடத்ததன்று.—தகு சலநிதி நிறை தரத்தது ஆயினும் - தகைமைபொருந்திய கடல் நீரால் நிறைந்த தன்மையையுடையதாயினும்,—மிகு நதி வரவினை வெறுப்பது இல்லை - மிகுந்த நதியினது வரவினையும் வெறுக்கமாட்டாது. எ-று.

சூழ்ச்சித்து அல்ல என்பதில் துவ்வைச் சாரியையாக்கிச் சூழ்ச்சிஅல்ல எனக் கோடலுமாம். ஆல் அசைநிலை. இதுவு மேலையணி. (உகூ)

ஆதலின் மந்திர விதியு மன்னதாற்
றீதில செய்வன செய்யின் மிக்கதே
பேதறச் செய்வதே பெற்றித் தாயதோர்
நீதியென் றவனடி சூடி நீங்கினர்.

இ-ள். ஆதலின் - ஆதலினால்,—மந்திர விதியும் அன்னது - (எங்கள்) மந்திரத்தின்முறையும் அம்முடிபினதேயாம்,—தீது இல செய்வன செய்யின் மிக்கதே - தீமையில்லாதனவாய்ச் செய்யவேண்டியனவற்றைச் செய்யின் அது மேன்மையுடையதேயாகும்,—பேதம் அறச் செய்வதே பெற்றித்து ஆயது ஓர் நீதி என்று - வேறுபாடில்லாது நீ எண்ணிய அக்கருமத்தைச் செய்தலே குணமாகியதொரு முறையாகும் என்று கூறி,—அவன் அருள் சூடி நீங்கினர் - அவனது விடையைப்பெற்று நீங்கினர்கள். எ-று.

பேதம் என்பதினீறுகெட்டுப் பேது என நின்றது. பேது என்பதற்கு அறிவுமயக்கம் எனினுமாம். ஆதலின் செய்வதே நீதி என்று சூடி நீங்கினர் என்க. (௩௦)

வேறு.

புனைமா மகுட வேல்வேந்தன் றிசையோ ரெட்டிற் போர்கடந்து
வினைமாண் வாகை தனிசூட விரும்பா நின்றேம் வீழதரச்
சினமால் யானை மிசைமுரச மறையு மாறு செய்வீர்க
ளெனமா ருதத்தின் வேகத்தார் சிலவர் போகி யிதுசொன்னர்.

இ-ள். மா மகுடம் புனை வேல் வேந்தன் - பெரிய கிரீடத்தையணிந்த வேலையேந்திய அரசன்,— திசை ஓர் எட்டில் போர்கடந்து - திசைக

ளெட்டிலுஞ் (செய்யப்படும்) போரை வென்று.—வினை மாண் வாகை தனிசூட விரும்பா நின்றேம்-அத்தொழிலினுல் அடையப்படும் மாட்சிமைப்பட்ட வென்றியைத் தனியே சூடுதற்கு விரும்புகின்றேம்.—சினமால் யானை மிசை முரசம் அறையுமாறு செய்வீர்கள் என-(ஆதலாற் சேனைகள் வரும்படி) ஓங்கிய வாயையுடைய கோபத்தைக்கொண்ட பெரிய யானையின்மீது (ஏற்றி) முரசையடிக்கும்படி செய்யுங்களென்று கூற,—சிலவர் மாருதத்தின் வேகத்தார் போகி இது சொன்னுர்-சிலதூதுவர் வாயுவேகத்தாராய்ச் சென்று இதனைக் கூறினுர்கள். எ-று.

புனைதலை மகுடத்திற்கேற்றிப் பொருள்கூறினுமமையும். மகுடவேந்தன் என இயைக்க. வேகத்தாரை வினையெச்சமுற்றுக்காது வினையாலணையும் பெயராகக்கொண்டு வேகத்தினையுடையவர்களாகிய சிலவர் என முடிக்கினுமமையும். (௩௧)

நெடுங்கட் டிசையெட் டினும்விசயத் தம்ப நிறுவி நிலவேந்தன்,
ஞெடுங்கைச் சரத்தாற் புகழ்பொறிப்பான் றுணிந்தான் முரசமறை
கெனநின், ஞெடுங்கிப் பெரிதப் பணிதலைக்கொண் டுள்ளூர் களிப்
பான் வள்ளுவனு, மடுங்கைக் களிற்றின் பிடரேறி மணிமா முரச
மறைகின்முன்.

இ-ள். நிலவேந்தன்-பூமிக்கரசனுகிய இரகுமகாராசன்,—நெடுங்கண் திசை எட்டினும் விசயத்தம்பம் நிறுவி-நெடிய இடத்தையுடைய திசைகள் எட்டிலும் வெற்றித்தம்பத்தை நிறுத்தி.—தொடும் கைச்சரத்தால் புகழ் பொறிப்பான் துணிந்தான்-செலுத்துகின்ற கையிலுள்ள பாணமாகிய எழுதுகோலால்(அத்தம்பத்திலே தனது)புகழை எழுதும்படி துணிந்தான்,—முரசம் அறைக என-ஆதலால் (சேனைகள்வருமாறு) முரசை அடிக்குக என்று (அத்தூதுவர்) கூற,—ஒடுங்கி நின்று பெரிது அப்பணி தலைகொண்டு-ஒடுங்கிநின்று மிகவும் அப்பணியைச் சிரசிற்கொண்டு,—வள்ளுவனும் அடும் கைக் களிற்றின் பிடர் ஏறி-வள்ளுவனும் கொல்லுகின்ற கையையுடைய யானையின்பிடரில் ஏறி,—உள் ஊர் களிப்பான் அணிமா முரசம் அறைகின்முன்-உள்ளேபரந்த களிப்பையுடையனுய் அழகிய பெரிய முரசை அடிக்கின்முன். எ-று.

என என்னும் செயவெனெச்சம் அறைகின்முன் என்னும் பிறவினை கொண்டது. உள்ளூர் களிப்பான் என்பதற்கு அந்நகரத்தார் களிக்கும்படி எனினுமாம். புகழை உண்டாக்குவது சரமேயாதலின் அதனை எழுதுகோலாக உருவகித்தார். (௩௨)

கலித்தாழ் கடற்பார் பரந்துதிசை காணு நின்று கனற்றேற்றும்
புலித்தா ணேயர்வின் மலையேறிப் பொன்னு டளக்கும் புகழ்வாய்ப்ப
வொலித்தாழ்கழலான் றிசைவிசயங்கொள்வானெருமை யுள்ளத்தே
வலித்தான் மதத்த மால்யானை மான்றே ரரசர் வம்மின்கள்.

இ-ள். கலித் தாழ் கடல் பார் பரந்து - ஒலிபொருந்திய ஆழமாகிய கடலாற்சூழப்பட்ட பூமியிற் பரந்து,—திசை காணுநின்று - திக்குகளைப் பொருந்தி,—கனல் தோற்றும் புலித்தானையர் வில் மலையேறி - (முனிவர்வளர்த்த) வேள்வித்தீயிற்றோற்றிய புலியின்தோலை வஸ்திரமாகவுடையவராகிய சிவபெருமானது வில்லாகிய மேருமலையிலேறி,—பொன் நாடு அளக்கும் புகழ் வாய்ப்ப - பொன்னுலகத்தை அளக்கின்ற புகழ்வாய்க்கும்படி,—திசை விசயம் கொள்வான் ஒலித் தாழ் கழலான் ஒருமை உள்ளத்தே வலித்தான் - திக்குவிசயங்கொள்ளும்படி ஒலிபொருந்திய வீரக்கழலையணிந்தவனாகிய இரகுமகாராசன் தனது ஒருப்பட்ட மனத்திலே துணிந்தான்,—மதத்த மால் யானை மான் தேர் அரசர் வம்மின்கள் - (ஆதலால்) மதத்தைக்கொண்ட பெரிய யானைப்படையையும் குதிரைபூண்ட தேரையுமுடைய அரசர்களே (போருக்கு) வாருங்கள். எ-று.

திசைவிசயம்கொள்வான் என்பதை திக்குவிசயத்தைத் தான் அடையும்படி எனவும், திக்கை விசயம்கொள்ளும்படி எனவும் விரிக்கலாமாதலின் திக்குவிசயங்கொள்ளும்படி எனப் பொதுமையினுரைத்தாம். அரசர் என்றது அவனுக்கங்கமாயுள்ள அரசரை. இதனால் அரசரை அழைத்தமை கூறப்பட்டது. (ங௩)

சேகா யத்தி னீங்கரிதாய்ச் செறிந்த மறுவெஞ் செருக்களத்தி
னேகா நிற்கு மவ்வேலை யெறிந்தோ ரெறிவேற் றழும்பாகி
லாகா யத்தின் வருதிங்கட் கழகன் றேயென் றமரதனின்
மாகா யத்தின் மூண்மதுகை வேட்கு மறவோர் வம்மின்கள்.

இ-ள். சே காயத்தில் நீங்கரிதாய்ச் செறிந்த மறு - செவ்விய உடம்பிற் பிரிவின்றிச் செறிந்த மறுவானது,—வெம் செருக்களத்தில் ஏகாநிற்கும் அவ்வேலை எறிந்தோர் எறி வேல் தழும்பு ஆகில் - வெவ்விய போர்க்களத்திலே செல்லுகின்ற அப்பொழுது முன் எறியப்பட்டோர் எறிந்த வேலின் றழும்பாயிருக்குமாயின்,—ஆகாயத்தில் வரு திங்கட்கு அழகு அன்றே என்று - ஆகாயத்தில்வருகின்ற சந்திரனுக்கு அழகாயிருக்குமல்லவா என்று கூறி,—அமரதனில் மாகாயத்தில் மூள் மதுகை வேட்கும் மறவோர் வம்மின்கள் - போரிலே பெரிய கோபத்தோடு மூளுகின்ற வலியைவிரும்பும் வீரர்களே வாருங்கள். எ-று.

என்று மூள் மறவோர் என இயையும். போர்க்காயத்தையே அழகாகக் கொள்வோர் என்பார் என்றுமூள்மறவோர் என்றார். சேகாயத்திநீங்கரிதாய் என்பதற்கு வைரமாய் எலும்பினின்றும் நீங்குதற்கரிதாய் எனக் கூறுதலும் அமையும். இதனால் வீரரை அழைத்தமை கூறிற்று. (ங௪)

வாலப் பிறையின் கோட்டரவம் வளைத்தா லன்ன கிம்புரித்திண்
கோலத் தவள மருப்பினுதி யேதி கொளுத்திக் குன்றுதித்த

காலைக் கதிரோ னிகரோடை புனைந்து மலர்த்தேங் கண்ணீத்து
மாலைச் சுரும்புண் மதயானை பண்ணு யாரும் வம்மின்கள்.

இ-ள். வாலப் பிறையின் கோட்டு அரவம் வளைத்தால் அன்ன - இளம்பிறையின் கோட்டிலே பாம்பு சுற்றினாற்போன்ற,—கிம்புரித் திண் கோலத் தவள மருப்பின் நுதி - கிம்புரியையணிந்த திண்ணிய அழகிய வெண்மையாகிய கோட்டின் நுதியிலே,—எதி கொளுத்தி - வாளைக் கட்டி,—குன்று உதித்த காலைக்கதிரோன் நிகர் ஓடை புனைந்து - மலையிலுதித்த உதயசூரியனையொத்த ஓடையையணிந்து,—மலர்த் தேம் கள் நீத்து மாலைச் சுரும்பு உண் மத யானை பண்ணு - மலரிலுள்ள இனிய தேனைவிட்டு வரிசையான வண்டுகள்வந்து உண்ணுகின்ற மதத்தையுடைய யானைகளையலங்கரித்து,—யாரும் வம்மின்கள் - யாவரும் வாருங்கள். எ-று.

கொளுத்தி, புனைந்து, பண்ணு, வாருங்கள் எனமுடிக்க. பிறைகோட்டுக்கும், அரவு கிம்புரிக்கும் உவமை என்க. இதனால் யானைவீரரையழைத்தமை கூறிற்று. (௩௫)

கார்ப்புல் லியவொல் லொலியுருளிற் கலியா நிற்பக் கடுஞ்சாரி
பேர்ப்பின் வயிர வச்சதனிற் றடையா காதுபெரி தாய்ந்து[ர்த்த
போர்ப்பல் படைசே மித்திரவி புரைவெண் படத்தாற் புறம்போ
வார்ப்பொ னுகத்திற் பரிபூட்டி மணித்தேர் புனையா வம்மின்கள்.

இ-ள். கார் புல்லிய ஒல்லொலி உருளில் கலியாநிற்பக் கடும் சாரி பேர்ப்பின் - மேகத்திற்பொருந்திய ஒல்லென்றவொலியானது உருளிலே ஒலிக்கக் கடியசாரி விடவேண்டுமாயின்,—வயிர அச்சதனில் தடையாகாது பெரிது ஆய்ந்து - வயிரமாகிய அச்சினாலே தடையாகாதபடி அதன்கண் பழுதுண்டோ என மிகவும் ஆராய்ந்து,—போர் பல் படை சேமித்து - போர்க்குரிய பல படைகளையும் சேமித்துவைத்து,—இரவி புரை வெண் படத்தால் புறம் போர்த்த வார்ப் பொன் நுகத்திற் பரி பூட்டி - (ஒளியால்) இரவியை ஒத்த வெள்ளிய வஸ்திரத்தினாற் புறத்தைமூடிய வாரையுடைய பொன்னாலாகிய நுகத்திலே குதிரைகளைப் பூட்டி,—மணித்தேர் புனையா வம்மின்கள் - (இவ்வாறு) அழகிய தேரை அலங்கரித்து அதன்மேலிவர்ந்து வாருங்கள். எ-று.

ஆய்ந்து, சேமித்து, பூட்டி, புனையா வம்மின்கள் எனமுடிக்க. பேர்ப்பின் தடையாகாது ஆய்ந்து என இயைக்க. அச்சுமுரியில் தடையாகுமென்பார் அச்சதனிற்றடையாகாது என்றார். இதனால் தேர்வீரரை அழைத்தமை கூறிற்று. (௩௬)

அனலிற் றேய்ந்தவ் வனலையெலா மஞ்சார்க்களிக்கு மடற்படையின்
கனமுற் றார்புட் டிலும்விசித்துக் கதிர்ச்சா லிகையு மணிந்துகதி
ரினனிற் றேரி னிடைப்பூண்ட வெழுமா வதனி னிருங்காலின்
மனனிற் றவுந் தடம்புரவி யணியா வம்மின் வம்மின்கள்.

இ-ள். அனலில் தோய்ந்து அ அனலையெலாம் அஞ்சார்க்கு அளிக்கும் அடற்படையின் கனம் உற்று ஆர் புட்டிலும் விசித்து - அக்கினியிலே தோய்ந்து அவ்வக்கினியையெல்லாம் பகைவர்க்குக் கொடுக்கும் வலிய படைகளின் மிகுதியைப்பொருந்தி நிறைந்த தூணியையுங் கட்டி,—கதிர் சாலிகையும் அணிந்து - ஒளியையுடைய சட்டையையும் அணிந்து,—கதிர் இனனின் தேரின் இடைபூண்ட எழு மா அதனின் - கிரணங்களையுடைய சூரியனுடைய தேரினிடத்தேபூண்ட எழுகுதிரைகளையும்போல,—இருங்காலின் மனனின் தாவும் தடம் புரவி அணியா - பெரிய காற்றைப்போலவும் மனத்தைப்போலவும் பாய்ந்து செல்லுகின்ற பெரிய குதிரைகளையலங்கரித்து,—வம்மின் வம்மின்கள் - வாருங்கள் வாருங்கள். எ-று.

விசித்து அணிந்து அணியா வம்மின்கள் என்க. இனனின் வம்மின்கள் எனினுமாம். அதனின் அணியா என இயைக்க. அடுக்கு விரைவுபற்றிவந்தது. இதனாற் பரிவீரரை அழைத்தமை கூறிற்று. (௩எ)

என்னப் பெரிய வீதிதொறு முரைத்திட் டெங்கு மெங்குமொலி
துன்னத் தமர மணிமுரச மறையா நிற்பத் துணிந்தியாரு
முன்னற் கரிய கடையுகத்தி னுடையா நேமி வரையுடைத்துப்
பின்னப் படுத்திப் புறவாழி வரல்போல் வந்த பெருஞ்சேனை.

இ-ள். என்னப் பெரிய வீதிதொறும் உரைத்திட்டு - என்று பெரிய வீதிகடோறும் சொல்லி,—எங்கும் எங்கும் ஒலி துன்ன தமர மணி முரசம் அறையா நிற்ப - எவ்விடத்தும் எவ்விடத்தும் ஒலிபொருந்த ஒலிபொருந்திய அழகிய முரசை அடிப்ப,—துணிந்து யாரும் உன்னற்கு அரிய உடையா நேமி வரை உடைத்து பின்னப்படுத்தி புற ஆழி கடையுகத்தில் வரல் போல் - (உடைக்குமாறு) துணிந்து யாவரும் சிந்தித்தற்குமரிய உடையாத சக்கரவாளகிரியையுடைத்துப் பின்னமாக்கிப் புறக்கடலானது கடையுகத்தில் வருதல்போல,—வந்த பெரும் சேனை - வந்தன பெரிய சேனைகள். எ-று.

நிற்ப வந்த என இயையும். உன்னற்கரிய வரை எனக் கூட்டுக. (௩அ)

பலம்புரி தருவோ ரைந்து நேர்சொலப் படினு மிக்க
நலம்புரி யற்றை நாளி னன்கொடைக் குடையா நிற்பக்
குலம்புரி மகர வேலை குழீஇக்குரைத் தென்னக் கொற்ற
வலம்புரிச் சுரிசங் கார்ப்ப வெழுந்தனன் மன்னர் கோமான்.

இ-ள். பலம் புரி தரு ஓரைந்தும் நேர் சொலப்படினும் - பலனைக் கொடுக்கின்ற தருக்களைந்தும் (அவன் கொடைக்கு) உவமைசொல்லப்படினும்,—மிக்க நலம் புரி அற்றைநாளில் நன்கொடைக்கு உடையாநிற்ப - மிக்க நன்மையைச்செய்கின்ற அற்றைத்தினத்தில் (அவனுடைய) நல்ல கொடைக்குத் தோற்ப,—குலம்புரி மகரவேலை குழீஇக் குரைத்து என்ன -

கூட்டமான சமுத்திரங்கள் கூடி ஒலித்தாற்போல,—கொற்ற வலம்புரிச் சுரிசங்கு ஆர்ப்ப - வெற்றிபொருந்திய வலம்புரியாகிய சுரித்த சங்கு ஆரவாரிப்ப,—மன்னர் கோமான் எழுந்தனன் - அரசர்க்கரசனுகிய இரகுமகாராசன் எழுந்தான். எ-று.

உடையா நிற்ப எழுந்தான், ஆர்ப்ப எழுந்தான் எனத் தனித்தனி முடிக்க. தனக்கு வெற்றியுண்டாகவேண்டுமென்று எற்றைநாளினும் அற்றைநாளில் அதிகமாகக் கொடுத்தான் என்பார் தருவோரைந்தும் நேர்சொலப் படினுமிக்கநலம்புரியற்றைநாளினன்கொடைக்குடையாநிற்ப என்றார். ()

இங்கிவ னெழுந்து செல்லு மெல்லையின் முன்ன ரீண்டி
மங்குன்மென் குழலார் சிந்து மங்கலப் பொரியி னீட்டம்
சிங்கலி லரசர் சீர்த்தி சின்னபின் னங்க ளாகிப்
பொங்கல மென்ன வந்து சரண்புகல் போன்ற வன்றே.

இ-ள். இங்கு இவன் எழுந்து செல்லும் எல்லையில் - இவ்விடத்திலே இந்த இரகுமகாராசன் எழுந்து செல்லும்பொழுது,—முன்னர் ஈண்டி மங்குல் மென் குழலார் சிந்தும் மங்கலப் பொரியின் ஈட்டம் - (அவன்) முன்னுக நெருங்கி மேகம்போன்ற மெல்லிய கூந்தலையுடையவர்களாகிய பெண்கள் சிந்துகின்ற மங்கலமான பொரிக்கூட்டம் (அவனை வந்து அடைதல்),—சிங்கல் இல் அரசர் சீர்த்தி சின்ன பின்னங்கள் ஆகி - அழிவற்ற அரசர்களுடைய கீர்த்தி சின்னமும் பின்னமுமாகி,—பொங்கலம் என்ன வந்து சரண் புகல்போன்ற - மேலெழமாட்டேமென்று வந்து அவனைச் சரணடைதலையொத்தன. எ-று.

பொரியினீட்டம் போன்றன என்க. (சo)

வண்குழைப் புதிய சோதி மதியிரு மருங்கும் வந்த
கண்கொளற் கரிய மின்னுக் குழுவினிற் கவினு நிற்ப
வொண்குலப் புடவி யெங்கு மொருதனி கவிக்குங் கொற்ற
வெண்குடைத் தரள ராசி வெண்ணிலா விசும்பு வீங்க.

இ-ள். வண் குழைப் புதிய சோதி - (காதிலணிந்த) அழகிய குழையினது புதிய சோதியானது,—மதி இரு மருங்கும் வந்த - முகமாகிய சந்திரனினது இருபக்கத்திலும்வந்த,—கண் கொளற்கு அரிய மின்னுக் குழுவினில் கவினு நிற்ப - கண்ணுற் பார்த்தற்கரிய மின்னற்கூட்டத்தைப் போல விளங்கவும்,—ஒண் குலம் புடவி எங்கும் ஒருதனி கவிக்கும் - ஒள்ளிய உயர்ந்த பூமியெங்கும் தனியே கவிக்கப்பட்ட,—வெண் கொற்றக் குடைத் தரள ராசி வெண்ணிலா விசும்பு வீங்க - வெண்கொற்றக்குடையிலுள்ள முத்துக்கூட்டத்தின் வெண்மையாகிய நிலாவானது ஆகாயமெங்கும் பரக்கவும். எ-று.

சோதி கவினு நிற்ப என இயையும். (சக)

செங்கதிர் வெயிலை யெல்லா மொன்றுறச் செய்த தன்ன
மங்கல மகுட கோடி மணிக்கதிர் திசையை வவ்வத்
திங்கள்வெண் கதிரை யெல்லா மிரண்டுறச் செய்த வன்ன
பொங்கெழிற் கவரி மென்கா லிருபுடை பொலிந்து வீச.

இ-ள். செங் கதிர் வெயிலை எல்லாம் ஒன்று உறச் செய்தது அன்ன-ஞாயிற்றின் வெயின்முழுதையு மொன்றாகச் செய்தாற்போன்ற.—மங்கல மகுட கோடி மணிக் கதிர் திசையை வவ்வ-மங்கலகரமான முடியின் தலையிலுள்ள இரத்தினகாந்தி திசையைக் கவரவும்,—திங்கள் வெண் கதிரை யெல்லாம் இரண்டு உறச் செய்த அன்ன-திங்களுடைய வெண்மையாகிய கிரணங்களையெல்லாம் இரண்டாக்கச் செய்தாற்போன்ற,—பொங்கு எழில் கவரி மென் கால் இருபுடை பொலிந்து வீச-பொலிவாகிய அழகிய சாமரையின் மெல்லிய காற்று இருபக்கத்திலும் பொலிந்து வீசவும். எ-று.

செய்தது என்பதில் து சாரியை. செய்தாலன்ன என்பன செய்தவன்ன எனத் திரிந்து நின்றன. (சஉ)

சிந்துரக் கமலத் தாமச் சேவடிக் கழலிற் செவ்விச்
சந்திரப் பதும ராகத் தரளத்திற் றழைத்த சோதி
யந்தரப் புடவி வைப்பி லதிசயம் விளைப்ப வொன்றாய்ச்
சுந்தரச் சுடரோர் மூன்றுந் தோற்றிய துப்பிற் றோற்ற.

இ-ள். சிந்துரக் கமலத் தாமச் சே அடிக் கழலில் - செந்தாமரைமலர் போன்ற அழகிய சிவந்த அடியிற் கட்டிய கழலிலுள்ள,—செவ்விச் சந்திரப் பதுமராகத் தரளத்தில் தழைத்த சோதி - அழகிய பொன்னிலும் பதுமராக மணியிலும் முத்திலும் தழைத்த ஒளியானது,—அந்தரப் புடவி வைப்பில் - ஆகாயத்திலும் பூமியிலும்,—அதிசயம் விளைப்ப - அதிசயத்தை உண்டாக்கும் படி,—ஒன்றாய் சுந்தரச் சுடர் ஓர் மூன்றும் தோற்றிய துப்பில் தோற்ற - ஒருமித்து அழகிய முச்சுடர்களும் உதித்த தன்மைபோலத் தோன்றவும். எ-று.

சோதி தோற்ற என இயைக்க. பொன்னொளி சூரியனையும், பதுமராக வொளி அக்கினியையும், முத்தினொளி சந்திரனையுங் காட்டிற்று என்க. (சங)

வெங்களி விந்தைக் கன்பாம் வண்டலை விளைக்கும் வெய்ய
சங்கொளிப் படைக ளொன்கு மேந்தினர் மருங்கு சாரத்
துங்கவெம் பதாதி வெள்ளத் தார்ப்பொலி யண்டந் துன்றிப்
பங்கமில் பூத மைந்தின் பரப்பெலாம் பாவா நிற்ப.

இ-ள். வெம் களி விந்தைக்கு அன்பு ஆம் வண்டலை விளைக்கும் - விருப்பப்படுகின்ற களிப்பினையுடைய வீரலக்குமிக்கு விருப்பமாகிய போர்

விளையாட்டைச்செய்கின்ற.—வெய்ய சங்க ஒளிப் படைகள் நான்கும் ஏந்தினர் மருங்கு சார - கொடிய கூட்டமாகிய ஒளியையுடைய நால்வகைப் படைகளையும் ஏந்தினவர்கள் பக்கத்தேவரவும்,—துங்க வெம் பதாதி வெள்ளத்து ஆர்ப்பு ஒலி - உயர்ச்சிபொருந்திய வெவ்விய சேனைவெள்ளத்தினது ஆர்ப்போசை,—அண்டம் துன்றி பங்கம் இல் பூதம் ஐந்தின் பரப்பு எலாம் பரவா நிற்ப - அண்டமெங்கும் நெருங்கிக் குற்றமில்லாத பஞ்சபூதங்களின் பரப்பெங்கும் பரவவும். எ-று.

நால்வகைப்படையாவன எய்வன, எறிவன, குத்துவன, ஓச்சுவன என்பன. சங்கவொளி என்பதில் அகரந் தொக்குநின்றது. (சச)

சொல்லரி பிறக்குஞ் செங்கட் புலியன சூரர் சூழக்
கொல்லரி யேறு போன்ற கொற்றவ ராறு முன்னச்
சல்லரி முழவங் கோடு தண்ணுமை தடாரி தக்கை
யெல்லரி யோதை பொங்கி யெழுகட லொலியை வீட்ட.

இ-ள். சொல் அரி பிறக்கும் செங்கண் புலி அன சூரர் சூழ - சொல்லப்படுகின்ற அக்கினிதோற்றுஞ் சிவந்த கண்களையுடைய புலியையொத்த வீரர்கள் சூழவும்,—கொல் அரி ஏறு போன்ற கொற்றவர் ஆறு முன்ன - கொல்லுகின்ற சிங்கேறுபோன்ற அரசர்கள் வழியை நோக்கவும்,—சல்லரி முழவம் கோடு தண்ணுமை தடாரி தக்கை எல்லரி ஓதை பொங்கி - சல்லரியும் முழவும் கொம்பும் தண்ணுமையும் தடாரியும் தக்கையும் கைமணியுமாகிய இவற்றின் ஒலி கிளர்ந்து,—எழு கடல் ஒலியை வீட்ட - எழுகடலினதும் ஒலியைக் கீழ்ப்படுத்தவும். எ-று.

அன்ன என்பது அன என விகாரமாயிற்று. (சரு)

கொழுங்கனல் வடிவோர் மூரற் கொடுங்கனல் புரங்கண் மூன்றும்
விழுங்கிட வுய்த்த நாளில் வாசுகி விசிப்பு நீங்கி
யழுங்கலி லனந்த மாகி யந்தர மடைத்திட் டம்பொற்
செழுங்கிரி வழிப்பட் டாங்குத் திகிரியந் தேர்கள் செல்ல.

இ-ள். கொழும் கனல் வடிவோர் - செழிய அக்கினி சொரூபராகிய சிவபெருமான்,—மூரல் கொடும் கனல் புரங்கள் மூன்றும் விழுங்கிட உய்த்த நாளில் - தமது சிரிப்பிற்றோன்றிய கொடிய அக்கினியைத் திரிபுரத்தை உண்ணும்படி விடுத்த நாளிலே,—வாசுகி விசிப்பு நீங்கி - (நாணாகிய) வாசுகியின் கட்டை நீங்கி,—அழுங்கல் இல் அனந்தம் ஆகி - குறைவற்ற அளவில்லாத வடிவையுடையதாகி,—அந்தரம் அடைத்திட்டு - ஆகாயத்தை மறைத்துக்கொண்டு,—அம்பொன் செழும் கிரி வழிப்பட்டாங்கு - அழகிய பொன்மயமாகிய செழிய மேருமலை வழிக்கொண்டு சென்றாற்போல,—திகிரி அம் தேர்கள் செல்ல - உருளையையுடைய தேர்கள் செல்லவும். எ-று.

வழிப்பட்டாங்குச் செல்ல என இயைக்க. வழிப்படுதல்-வழிக்கொண்டு செல்லல். "பாரிடம் வழிப்பட்டாங்கு" என்றார் பிறரும். (௪௬)

புடைத்தகு சிறைக டம்மை யரிந்துநம் பொலிந்த மொய்ம்பைத்
துடைத்தவன் றன்னை வென்றோ னிவனெனச் சூழ்ச்சி யாலு
ளடைத்துல குள்ள மற்றைக் கிரியெலா மமரை நாடிப்
படைத்துணை வந்த போலப் படுமதக் களிறு போத.

இ-ள். புடைத் தகு சிறைகள் தம்மை அரிந்து - பக்கத்திலேபொருந்திய சிறகுகளையரிந்து,—நம் பொலிந்த மொய்ம்பைத் துடைத்தவன் தன்னை - நமது மிகுந்த வலியை நீக்கினவனாகிய இந்திரனை,—வென்றோன் இவன் எனச் சூழ்ச்சியால் உள் அடைத்து - வென்றவன் இவ்வரசன் என்று ஆலோசனையினோடு மனத்திற் பதித்து,—உலகுள்ள மற்றைக் கிரியெலாம் - உலகிலுள்ள மற்றைய மலைகளெல்லாம்,—அமரை நாடிப் படைத்துணை வந்தபோல - போரைக்கருதிப் படைத்துணையாக வந்தாற்போல,—படு மதக் களிறு போத - தோன்றுகின்ற மதத்தையுடைய யானைகள் செல்லவும். எ-று.

தம் பகைவனை வென்றவனுக்குத் தாமும் உதவிசெய்யவேண்டுமென்று மலைகள் படைத்துணையாக வந்ததுபோல யானைகள் செல்ல என்றபடி. சூழ்ச்சி இன்னும் அவனை வெல்லுவிக்கவேண்டுமென்ற சூழ்ச்சி. (௪௭)

கதந்தரு புரவி யேழு கொண்டுநங் கண்முன் யாவன்
மதங்கொடு வருவா னென்னு விரவியுந் தேரு மாவும்
புதைந்திட வாளி போய குரத்தினிற் புடவி புல்லித்
துதைந்தெழு தூளி போக்கித் துரகத ராசி செல்ல.

இ-ள். கதம் தரு புரவி ஏழுகொண்டு - வேகமான குதிரைகள் ஏழைக் கொண்டு,—நம் கண் முன் மதம்கொடு வருவான் யாவன் என்னு - நமது கண்ணுக்குமுன்னே கருவங்கொண்டு வருபவன் எவன் என்று,—இரவியும் தேரும் மாவும் புதைந்திட - சூரியனும் அவன்றேரும் குதிரைகளும் மறையும்படி,—வாளி போய குரத்தினில் புடவி புல்லித் துதைந்து எழு தூளி போக்கி - வட்டமாகச்சென்ற குளம்பினால் பூமியைத் தழுவிச் செறிந்து எழுகின்ற துகளைப் போகச்செய்து,— துரகத ராசி செல்ல - குதிரைக்கூட்டம் செல்ல. எ-று.

என்னுப் போக்கிச் செல்ல என முடிக்க. (௪௮)

அலங்குவா ளதனிற் றோற்று மணிநிழல் விந்தை யென்னும்
பொலங்கொடி யுவகை மிக்கு நடஞ்செயும் பொலி விற்றுக
வலங்கெழு வாகை சூடி வச்சிரன் றிசையை நோக்கி
யிலங்குமா மணிப்பைம் பூணு னிசையொடு மெய்தினானே.

இ-ள். அலங்கு வாளதனில் தோற்றும் அணி நிழல் - விளங்குகின்ற வாளிலே தோற்றுகின்ற அழகிய ஒளியானது,—விந்தை என்னும் பொலங்கொடி உவமை மிக்கு நடம் செயும் பொலிவிற்று ஆக - வீரலக்குமி என்னும் பொற்கொடிபோல்வாள் மகிழ்ச்சிமிக்கு நடனஞ்செய்யும் பொலிவினையுடையதாக,—வலங்கெழு வாகைசூடி - வெற்றிபொருந்திய வாகைமாலையைச்சூடி,—வச்சிரன் திசையை நோக்கி - கீழ்த்திசையை நோக்கி,—இலங்கு மா மணிப் பைம்பூணன் - விளங்குகின்ற மாணிக்கரத்தினங்களாலாகிய ஆபரணங்களையுடையவனாகிய இரகு,—இசையொடும் எய்தினன் - புகழோடும் சென்றான். எ-று.

ஒளி அசைதல் நடனம்செய்தல் போன்றிருந்தது என்க. சூடி நோக்கி எய்தினன் என வினைமுடிபு செய்க. (சகூ)

வேறு

இட்ட காலெடுத் தெய்தலா வகையள றிழைப்ப
கட்டு வார்கழல் வீரர்த முரத்திழி கலவை
மட்டு லாவுமக் கலவையிற் குழிந்துமண் சுமக்கு
நெட்ட ராமுடி தொடுவதேர் போகிய நெறிகள்.

இ-ள். இட்ட கால் எடுத்து எய்தலாவகை அளறு இழைப்ப - (நடக்கும்படி) வைத்த காலை எடுத்துச் செல்லாதபடி சேற்றைச் செய்வன,—கட்டு வார் கழல் வீரர்தம் உரத்து இழி கலவை - கட்டிய நீண்ட வீரக்கழலையுடைய வீரர்களது மார்பினின்றும் சொரிகின்ற கலவைச்சாந்து,—மட்டு உலாவும் அக்கலவையில் குழிந்து - வாசனைபொருந்திய அக்கலவைச் சாந்திலே குழிந்து,—மண் சுமக்கும் நெட்டு அரா முடி தொடுவ - பூமியைச் சுமக்கும் நெடிய பாம்பினது முடியைத் தொடுவன,—தேர் போகிய நெறிகள் - தேர் சென்ற வழிகள். எ-று.

நெறிகள் தொடுவ என்பது செய்யாதவற்றைச் செய்வன போலக் கூறப்பட்டது. (ருo)

இனிதி னன்னெறி தொறுநிரம் பாமிகுந் தெழுவ
புனித வெம்பரி விலாழிமா நதிதிசை புடைத்து
நனிது ளும்பிநேர் பாய்தரு வேகவந் நதியைத்
தனி விழுங்குவ கைம்மலை மும்மதச் சலதி.

இ-ள். இனிதின் நல் நெறி தொறும் நிரம்பா மிகுந்து எழுவ - இனிதாக நல்ல வழிகடோறும் நிரம்பி மிகுந்து எழுவன,—புனித வெம் பரி விலாழி மா நதி - சுத்தமான விரும்பப்படுகின்ற குதிரைகளின் விலாழியாகிய பெரிய நதி,—திசை புடைத்து நனி துளும்பி நேர் பாய்தரு வேக அ நதியைத் தனி விழுங்குவ - திசைகளிற் சென்று அடித்து மிகவு மசைதலைப்பொருந்தி நேரே பாய்ந்து செல்லுகின்ற வேகமான அந்த நதியைத்

தனியே விழுங்குவன,—கைமலை மும்மதச் சலதி - யானைகளின் மும்மதமாகிய கடல். எ-று.

விலாழி - குதிரைவாய்நுரை. விலாழியினும் மதப்பெருக்கு அதிகம் என்பதுதோன்ற வேகவந்நதியைத்தனிவிழுங்குவ கைம்மலைமும்மதச்சலதி என்றார். விழுங்குதல் - தன்னுளடக்குதல். (௫௧)

மலைந்தவ் வாரிதி திரைக்கரம் புடைத்திடை வைய
முலைந்தி டாவகை பருகுவ வுவைவிழி யுகுதீ
கலைந்தி யாவையு மவ்வனல் சுடச்சுடக் கருகித்
தொலைந்தி டாதவிப் பனவவை கையுமிழ் துவலை.

இ-ள். அ வாரிதி மலைந்து திரைக் கரம் புடைத்து இடை வையம் உலைத்திடா வகை பருகுவ - அக்கடல் பொருது திரையாகிய கையாற் புடைத்து இடையே பூமியை உலைவுறச் செய்யாதபடி பருகிவிடுவன,— உவை விழி உகு தீ - உந்த யானைகளின் கண்களினின்றுஞ் சொரிகின்ற அக்கினி,—அ அனல் சுடச்சுடக் கருகி யாவையும் கலைந்து தொலைந்திடாது அவிப்பன - அந்த அக்கினி சுடச்சுடக் கருகி பூமியிலுள்ள எப்பொருள்களும் நிலைகுலைந்து அழியாதபடி அவ்வக்கினியைத் தணிப்பன,—அவை கை உமிழ் துவலை - அவைகள் கையினின்றுஞ் சொரிகின்ற துவலைகள். எ-று.

உலைந்திடாவகை என்பதில் தகரம் எதுகைநோக்கி மெலிந்துநின்றது. புடைத்து என்னுஞ் செய்தெனெச்சத்தை எதுவாக்கிப் புடைத்தலால் வையமுலையாதபடி எனப் பொருள்கோடலுமாம். (௫௨)

தடைப்ப டாதவத் துவலைமா ரியைத்தடுத் தெழாவிண்
கிடைப்ப தூளியத் தூளியை வான்மிசைக் கிளறித்
துடைப்ப பல்கொடி யன்றியு மேற்செலல் சுருங்க
வடைப்ப வெண்ணில வாதபத் திரத்தொகை யம்மா.

இ-ள். தடைப்படாத அத் துவலை மாரியைத் தடுத்து எழா - (பிறிதொன்றாலும்) தடைப்படாத அத்துவலைமழையைத் தடுத்து எழுந்து,— விண் கிடைப்ப தூளி - ஆகாயத்திலே பரம்புவன தூளி,—அத் தூளியை வான்மிசைக் கிளறித் துடைப்ப பல்கொடி - அத்தூளியை ஆகாயத்திலே கிளறித் துடைத்துவிடுவன பலகொடிகள்,—அன்றியும் மேல் செலல் சுருங்க அடைப்ப - அல்லாமலும் அவைகள் மேலே செல்லுதல் குறையும்படி அடைப்பன,—எண் இல ஆதபத்திரத்தொகை - அளவில்லாத குடைக்கூட்டங்கள். எ-று.

அம்மா அசைநிலை. (௫௩)

தொடுங்கை வேலொடுஞ் சூரமர் மதக்களி தோற்ற
நடுங்கை யானன மெனவரு நாந்தரு செய்ய

கடுங்கண் மாதிறன் மறவர்முன் கடாந்திறந் தூற்று
நெடுங்கை மாவெதிர் செல்லினுஞ் செல்வரோ நீத்தோர்.

இ-ள். தொடும் கை வேலொடும் - செலுத்துகின்ற கைவேலொடும்,— சூர் அமர் மதக் களி தோற்ற - வீரமான போர்த்தருக்கின் களிப்பு வெளிப் பட,—நடுங்கு ஐயானனம் என வரும் - கண்டோர் அஞ்சத்தக்க சிங்கத்தைப் போல வருகின்ற,—நாம் தரு செய்ய கடும் கண் மா திறல் மறவர்முன் - அச்சத்தைத்தருகின்ற சிவந்த கொடிய கண்களையும் பெரிய வலியையுமு டைய வீரர்களுக்கு முன்னே,—கடாம் திறந்து ஊற்றும் நெடும் கை மா எதிர் செல்லினும் - மதத்தைத்திறந்து சொரிகின்ற துதிக்கையையுடைய யானைக்கு எதிர்செல்லினும்,—நீத்தோர் செல்வரோ - துறவிகளும் செல்வ ர்களோ. எ-று.

ஓகாரம் எதிர்மறை. வேலொடும் வரும் மறவர், தோற்ற வரும் மறவர் எனத் தனித்தனி முடிக்க. நீத்தோர் யானைக்குமுன் அஞ்சாது எதிர்செல்லி னும் இம்மறவர்க்குமுன் அஞ்சாது எதிர் செல்லமாட்டார் என்பது கருத்து. யானையிலும் இவ்வீரர் கொடுமையுடையர் என்றபடி. கடாத்திறம் தூற்றும் எனினுமாம்; விகாரம். (ருச)

அடல்செய் வாகைமுன் னெய்திட வரவம்பி னடப்பப்
படல்செல் தூளிபின் போதரப் பின்செலும் பகுதி
கடல்செ யோர்நிலை படைத்துள தாயினுங் கணிக்கின்
மிடல்செய் நானிலை படைத்துள போன்றது விளம்பில்.

இ-ள். அடல்செய் வாகை முன் எய்திட - வலிமையைக்கொண்ட வெற்றி முன்னேசெல்ல,—பின் அரவம் நடப்ப - அதன்பின்னே ஒலி செல்ல,—பின் படல் செல் தூளி போதர - அதன்பின்னே படலமாகச் செல்லுகின்ற தூளிபோக,—பின் செலும் பகுதி - பின்னே செல்லுகின்ற சேனை,—கணிக்கில் கடல்செய் ஓர் நிலைபடைத்துளது ஆயினும் - கணித் துப்பார்க்குமிடத்து கடலையொத்த ஒரேநிலையைப் பொருந்தியதாயினும்,— விளம்பில் மிடல் செய் நால் நிலை படைத்துள போன்றது - சொல்லுகில் வலிமையைச்செய்கின்ற நான்குநிலையைப் பொருந்தியதன்மையைப்போன் றது. எ-று.

சேனை கடலை ஒத்த ஒரேநிலையைப் பொருந்தியதாயினும் இவற்றால் நான்குநிலையைப் படைத்ததுபோன்றது என்பதாம். (ருரு)

விறன்மி கும்படை தொடர்ந்திடக் கீட்டிசை வேலை
திறனி னேக்குபு சென்றிடு திங்கள்வெண் குடையோன்
பெறல ருந்தவப் பெற்றியின் வரநதி பின்ன
ருறந டந்திடும் பகீரதன் றன்னையு மொத்தான்.

இ-ள். விறல் மிகும் படை தொடர்ந்திட - வலிமைமிக்க சேனைகள் பின்தொடர,—கீழ்த் திசை வேலை திறனில் நோக்குபு சென்றிடும் திங்கள்வெண்குடையோன் - கிழக்குத்திசைக்கடலைநோக்கி வலிமையோடும் செல்லுகின்ற வெள்ளிய சந்திரவட்டக்குடையையுடையனுகிய இரகு,—பெறல் அரும் தவப் பெற்றியின் - பெறுதற்கரிய தவத்தின் தன்மையினுல், — வரநதி பின்னர் உற - கங்கை பின்னேவர,—நடந்திடும் பகீரதன் தன்னையும் ஒத்தான் - சென்ற பகீரதனையும் ஒத்தான். எ-று.

பெற்றியின் உற என இயைக்க. கங்கை ஒழுக்குக்கும் பின்வருதற்கு முவமை. (ருசு)

சூழிக் கார்வரை நிருபரை யெதிருயிர் தொலைத்தும்
பாழிற் றள்ளியும் பலன்கொண்டு நன்னெறி படர்ந்தா
னூழிற் றார்வனத் தருந்தடை யுலகெலா நூக்கு
மூழிப் பேரொலி வேகமால் யானைக்கு முளவோ.

இ-ள். சூழிக் கார்வரை நிருபரை எதிர் உயிர் தொலைத்தும் - யானைப் படையையுடைய அரசர்களை எதிரே கொன்றும்,—பாழில் தள்ளியும் - கேட்டில் விடுத்தும்,—பலன் கொண்டு நன்னெறி படர்ந்தான் - (திறையாகிய) பயனைக்கொண்டு நல்லவழியிற் சென்ருன்,—நூழில் தார் வனத்து - கொடிகளின் ஒழுங்கையுடைய காட்டிலே,—அரும் தடை - அரிய தடைகள்,—உலகெலாம் நூக்கும் ஊழிப்பேரொலி வேக மால் யானைக்கும் உளவோ - உலகமெல்லாவற்றையு மழிக்கின்ற ஊழிகாலத்திலே நிகழும் பேரொலிபோன்ற பேரொலியையுடைய வேகத்தைக்கொண்ட பெரிய யானைக்குமுள்ளனவோ. எ-று.

ஓ எதிர்மறை. தார் பூவுமாம். தடை உளவோ என இயையும். ஊழிப் பேரொலி என்பதற்கு ஊழியைச்செய்கின்ற பேரொலியெனினுமாம். வேற்றுப்பொருள்வைப்பால் உலகமெல்லாவற்றையுமழிக்கின்ற இரகுவுக்குப் பூமியில் தடையில்லை என்பதாம். (ருஎ)

உலவு நாற்படை மன்னவ ரூன்றுவெஞ் சமத்தை
நிலவு தோற்றிய வேல்கொடு கடந்துசெ னிருபன்
குலவு சோற்றலர்க் கைதைவெண் புளினமென் குன்றப்
புலவு மாற்றிடும் புணரியந் தடங்கரை புக்கான்.

இ-ள். உலவு நால் படை மன்னவர் ஊன்று வெம் சமத்தை - விளங்குகின்ற சதுரங்கசேனைகளையுடைய அரசர்கள் வந்து எதிர்த்த கொடிய போரை,—நிலவுதோற்றிய வேல் கொடு கடந்து செல் நிருபன் - ஒளிதோன்றிய வேலாற் கடந்து செல்லுகின்ற அரசன்,—குலவு சோற்று அலர்க் கைதை - விளங்குகின்ற மகரந்தத்தினைக்கொண்ட பூக்களையுடைய தாழையானது,—வெண் புளின மென் குன்றப் புலவு மாற்றிடும் - வெள்ளிய

மணலாலாகிய மெல்லிய மலையின்மீதுள்ள புலான்மணத்தை நீக்குகின்ற,— புணரி அம் தடம் கரை புக்கான் - கடலின் விசாலமாகிய கரையை அடைந்தான். எ-று.

கைதைமாற்றிடும் கரை என இயைக்க; பெயரெச்சம் இடப்பெயர் கொண்டது. சோற்றால் மாற்றும் என ஆல் உருபுவிரித்துப் பொருள்கூறினுமமையும். (ருஅ)

வேறு

தீவிடா வெரிசிறுகட் சினவேழப் பெருமேக
மோவிடா தெமைப்பருகா வொழியாவென் றுறக்கோடிச்
சேய்விடா நிமிர்தவளத் திரைக்கரத்தால் வயிறலைத்து
வாய்விடா நின்றரற்றி மறுகுதல்போன் றதுவாரி.

இ-ள். தீவிடா எரி சிறுகண் சினவேழப் பெருமேகம் - அக்கினியைக் கான்று எரிகின்ற சிறிய கண்களையுடைய கோபத்தைக்கொண்ட யானைகளாகிய பெரிய மேகங்கள்,—ஓவிடாது எம்மைப் பருகா ஒழியா என்று - நீங்காது எம்மைப் பருகிவிடும் என்று,—உற சேய் விடா நிமிர் கோடி தவளத் திரைக்கரத்தால் வயிறு அலைத்து - மிகவும் தூரத்திலே வீசிக் கிளருகின்ற கோடியான வெண்மையாகிய திரைக்கரத்தினால் வயிற்றிலடித்து,— வாய்விடா நின்று அரற்றி மறுகுதல் போன்றது - வாயைத்திறந்து நின்று புலம்பிச் சுழலுதலைப்போன்றது,—வாரி - கடல். எ-று.

என்று அலைத்து அரற்றி மறுகுதல்போன்றது என வினைமுடிபு செய்க. இது தற்குறிப்பேற்றம். (ருகூ)

முறைகொடே நிமிர்கூம்பின் மிசைத்தொடுப்ப முதிர்காலி
னிறைகொடே விரிபாய திமில்சேற னீராழி
யிறைகொடே வருந்தானைக் கடற்கஞ்சி யேங்குபுபல்
சிறைகொடே திசைபறந்து செல்வதுவும் போன்றுளதே.

இ-ள். முறை கொடு நிமிர் கூம்பின் மிசை தொடுப்ப - முறையாக உயர்ந்த கூம்பின்மீது கட்ட,—முதிர் காலின் நிறைகொடு விரி பாய திமில் சேறல் - முதிர்ந்த காற்றின் நிறைவினால் விரிந்த பாயையுடைய மரக்கலங்கள்செல்லுதல்,—நீர் ஆழி - நீரையுடையகடலானது,—இறை கொடு வரும் தானைக் கடற்கு அஞ்சி ஏங்குபு - அரசன் கொண்டுவருகின்ற சேனைக்கடலுக்குப் பயந்து ஏங்கி,—பல் சிறை கொடு திசை பறந்து செல்வதுவும் போன்றுளது - பல சிறைகளைக்கொண்டு திசைகளிற் பறந்து செல்வதையும் போன்றது. எ-று.

தொடுப்ப விரி பாய என இயையும். சேறல் போன்றது என முடிக்க. இதுவு முன்னையலங்காரம். உம்மை எச்சம். (சூ0)

பந்தியால் விழுந்தெழுவெண் டிரையுடையப் படுவேலை
புந்தியா னெடுங்கோட்டுப் புன்னாகக் குறும்போது
சிந்தியா வெம்வயின்வந் தடைந்தோரைச் செறேலெனமுன்
வந்தியா வரசன்றாள் மரீஇயதும்போன் றதுமாதோ.

இ-ள். பந்தியால் விழுந்து எழு வெண் திரையுடை அப்படு வேலை - வரிசையோடு (கீழே) விழுந்து (பின் மேலே) எழுகின்ற வெண்மையாகிய திரையையுடைய அந்த ஆழமாகிய கடலானது,—புந்தியால் - புத்தியோடு,— நெடும் கோட்டுப் புன்னாகக் குறும்போது சிந்தி - நெடிய கொம்பர்களையுடைய புன்னைகளின் சிறிய பூக்களைச் சிந்தி,—ஆ எம் வயின் வந்தோரைச் செறேல் என முன் வந்தியா - ஆ எம்மிடத்துவந்து அடைந்தவர்களைக் கொல்லற்க என்று முன் வழிபட்டு,— அரசன் தாள் மரீஇயதும் போன்றது - அரசனுடைய பாதங்களை(த் தஞ்சமாக) அடைந்ததையும் போன்றது. எ-று.

விழுந்தெழுதல் வந்தித்தல்போலிருந்ததென்க. கரையில்விழுந்துகிடக்கும் புன்னைப்பூக்களைத் திரைகள் அள்ளிச் சிந்துதலின் புன்னாகக்குறும்போதுசிந்தி என்றார். கோடு கரையுமாம். புந்தி தாளைமருவிற் றன்னிடத்தடைந்தவர்களுடைய உயிர்க்குத் தீங்குவாராதென்னும் புத்தி. மரீஇ வந்தித்ததும்போன்றது என விகுதிபிரித்துக் கூட்டி முடிக்கினுமமையும். இதுவு முன்னையலங்காரம். (௬௧)

பேற்றொடாழ் புனன்மூழ்கி யெழுந்திடும்புட் பேரொலிகள்
தேற்றொடா ரவ்வேலை தேர்வேந்த னாற்புலம்பு
ளேற்றிடா வடைந்தோரை யினையேனெஞ் சினையேலென்
றாற்றிடா வவர்க்கின்சொ லளிப்பதும்போன் றதையம்மா.

இ-ள். பேற்றொடு ஆழ் புனல் மூழ்கி எழுந்திடும் புள் பேர் ஒலிகள் தேற்றொடு ஆர் அவ்வேலை - இரையோடு ஆழமாகிய நீரில் மூழ்கி எழுகின்ற பறவைகளினது பெரிய ஒலிகள் தெளிவோடு நிறையப்பெற்ற அக்கடலானது,—தேர்வேந்தனால் புலம்புள் ஏற்றிடா அடைந்தோரை - தேரையுடைய இரகுமகாராசனால் புலம்புதலைக்கொண்டு (தன்னை) அடைந்தவர்களாகிய அரசர்களை,—நெஞ்சு இனையேல் இனையேல் என்று ஆற்றிடா - மனம் வருந்தாதொழிக வருந்தாதொழிக என்று அவர்களது துன்பத்தை ஆற்றி,—அவர்க்கு இன் சொல் அளிப்பதும் போன்றது - அவர்களுக்கு இன்சொற்களைக் கூறுவதையும் போன்றது. எ-று.

ஐ சாரியை. அம்மா அசைநிலை. புலம்புள் தொழிற்பெயர். இனி புலம்புதலை உள்ளேகொண்டு எனினுமாம். இதற்கு புலம்பு உள் எனக் கண்ணழிக்க. புலம்பு முதனிலைத்தொழிற்பெயர். இதுவுமுன்னையலங்காரம். (௬௨)

சாதுரியத் திறலான்றன் றனிவேலை நிறமேற்றுக்
காதுநீள் சமரினுயிர் கழியாது கடலேறு
மேதிலீ ரென்செய்வீ ரிதுசெய்வீ ரெனப்புதிய
போதுதூய்த் தெளிவிப்ப போன்றகுறும் புன்னாகம்.

இ-ள். சாதுரியத் திறலான் தன் தனிவேலை நிறம் ஏற்று - சாதுரியமான வலியையுடையவனாகிய இரகுவினது ஒப்பற்ற வேற்படையை மார்பிலே ஏற்று,—காது நீள் சமரில் உயிர் கழியாது கடல் ஏறும் ஏதிலீர் - கொல்லுகின்ற நெடிய போரிலே உயிர்நீங்காது கடலேறும் வலியிலீர்காள்,—என் செய்வீர் இது செய்வீர் என - என்செய்யப்போகின்றீர்கள் யான்செய்கின்ற இதனைப்போய்ச் செய்வீர்களென்று,—புதிய போது தூய் தெளிவிப்பபோன்ற - புதிய பூக்களைத்தூவி அவர்களுக்கு அறிவிப்பனவும்போன்றன,—குறும் புன்னாகம் - பூக்களைச்சொரிந்த குறிய புன்னைகள். எ-று.

எச்ச உம்மை தொக்குநின்றது. இதுசெய்தல் என்றது போதுதூவலை. இதுவுமுன்னையலங்காரம். (சுஙு)

வெம்புபோ ரினுக்கஞ்சும் வேல்வேந்த ரெனவொளித்த
வம்புகால் மடற்றாம மூடத்தாழை வனச்சூழல்
கம்புளாங் கவருயிரி னொன்றாகக் கலந்துள்ள
வம்பொனா ரெனவிரியல் போனமட வன்னமெலாம்.

இ-ள். வெம்பு போரினுக்கு அஞ்சும் வேல் வேந்தர் என - கொடிய போருக்கு அஞ்சிய வேலையுடைய அரசர்களைப்போல,—கம்புள் - சம்பங்கோழிகள்,—வம்பு கால் மடல் தாம மூடத் தாழை வனச் சூழல் ஒளித்த - மணத்தைக்காலுகின்ற மடலையுடைய பூக்களைக்கொண்ட வளைவுபொருந்திய தாழைக்காட்டினிடத்தே ஒளித்தன,—அவர் உயிரின் ஒன்றாகக் கலந்துள்ள அம்பொனார் என - அவ்வரசர்களது உயிரோடு ஒன்றாகக் கலந்திருக்கும் மகளிரைப்போல,—மட அன்னமெல்லாம் இரியல்போன - இளமையாகிய அன்னங்களெல்லாம் ஓடிப்போயின. எ-று.

அம்பொனார் என என்றதனால் சம்பங்கோழிகளுக்குப் பின்னே அன்னங்கள் ஓடின என்பது பெறப்படும். (சுச)

வேறு.

இன்னவா ரிதியை நோக்கிக் களிகொண்ட விகல்வேன் மன்னன்
றன்னதாஞ் சிந்தை போய நெறிதொறுஞ் சாரா நின்ற
மன்னர்மா மலையை வவ்வி யெடுத்தெறி தரங்க வாரிக்
கன்னிமா நதியி னின்ற வஞ்சியே கடுத்தார் மன்னோ.

இ-ள். இன்ன வாரிதியை நோக்கிக் களிகொண்ட - இவ்வாறான கடலைநோக்கிக் களிப்படைந்த - இகல் வேல் மன்னன்றன்னது ஆம் சிந்

தை போய - போரையுடைய வேலையேந்திய அரசனது மனஞ் சென்ற,— நெறிதொறும் சாராநின்ற மன்னர் - வழிகடோறும் வந்தெதிர்ப்பட்ட அரசர்கள்.—மாமலையை வவ்வி எடுத்து எறி - பெரிய மலைகளைக் கவர்ந்து எடுத்தெறிகின்ற,—தரங்க வாரிக் கன்னி மா நதியில் நின்ற வஞ்சியே கடுத்தார் - திரைபொருந்திய நீரையுடைய புதிய பெரிய நதியின்முன்னே நின்ற கொடியை ஒத்தார்கள். எ-று.

நதிமுன்னின்ற வஞ்சி அதன்பெருக்கினாற் சாய்தல்போல இவன்முன் எதிர்ப்பட்ட அரசர்களும் இவன் வலியினால் அஞ்சி வணங்கித் திறைகொடுத்தார் என்பது கருத்து. மன்னர் கடுத்தார் என இயைக்க. (சுரு)

முள்ளொடு துறுமுஞ் சாயை முண்டகத் தீர நீங்கி
வள்ளொடு மிளிரும் வேலான் மணிமுர சொலிப்பப் போகிக்
கள்ளொடு கிடந்த பைந்தேன் கணஞிமி றென்னுங் காமப்
புள்ளொடு மொலிக்குஞ் சோலைப் பொங்கெழில் வங்கம் புக்கான்.

இ-ள். முள்ளொடு துறுமும் சாயை முண்டகத் தீரம் நீங்கி - முள்ளோடு நெருங்கிய நிழலைக்கொண்ட தாழைகளையுடைய கழிக்கரையைநீங்கி,—வள்ளொடு மிளிரும் வேலான் - கூரோடு விளங்குகின்ற வேலையுடையனாகிய இரகு,— மணி முரசு ஒலிப்பப் போகி - அழகிய முரசொலிப்பச் சென்று,— கள்ளொடு கிடந்த பைந்தேன் கணஞிமிறு என்னும் காமப் புள்ளொடு ஒலிக்கும் சோலை - தேனொடுகிடந்த பசிய பெடைவண்டுகள் கூட்டமான ஞிமிறு என்கின்ற காமத்தையுடைய வண்டுகளோடும் ஒலிக்கின்ற சோலையையுடைய,—பொங்கு எழில் வங்கம் புக்கான் - பொலிவாகிய அழகிய வங்க தேசத்தையடைந்தான். எ-று.

தேன் ஞிமிறு என்னும் புள்ளொடு ஒலிக்குஞ் சோலை என இயைக்க. ஞிமிறு - ஆணவண்டு. (சுசு)

அன்னக ரரசர் தங்க ளிசையெலா மரத்து ளிட்டுப்
பின்னரி னெழாதே யாணி பெரிதுறக் கடாவி யாங்குத்
தன்னது விசயந் தீட்டுஞ் சயத்தம்ப மாகக் கங்கை
நன்னதி யரங்கத் தான்ற நனந்தலை நிறுவி னானே.

இ-ள். அ நகர் அரசர்தங்கள் இசையெலாம் அரத்துள் இட்டு - அந்தநகரத்திலுள்ள அரர்சகளுடைய புகழையெல்லாம் பாதலத்தினுள்ளே இட்டு,— பின்னர் இன் எழாது ஆணி பெரிது உறக் கடாவியாங்கு - பின்னர் மேலே யெழாதபடி ஓர் ஆணியைப் பெரிதும் கடாவிவைத்தாற்போல,—தனது விசயம் தீட்டும் சயத்தம்பம் - தனதுவெற்றியை எழுதிய தம்பத்தை,—மாகக் கங்கை நன்னதி அரங்கத்து ஆன்ற நனந்தலை நிறுவினான் - ஆகாயத்தினின்றுவந்த கங்காநதியின் அரங்கத்தினது அகன்ற நடுவிலே நிறுத்தினான். எ-று.

இன் சாரியை. கடாவி யாங்கு நிறுவினன் என முடிக்க. தமரக்கங்கை என்னும்பாடத்திற்கு ஒலியையுடைய கங்கை எனப் பொருள்சொள்க. சயம் வாளாபெயர். (சுஎ)

வீறுபட் டுடைய தானை வேந்தனால் வீயா வீயு
மூறுபட் டுடைந்து மீள வுய்ந்துள மனித ரெல்லாஞ்
சேறுபட் டைம்பூ நல்குஞ் செய்யிடைப் பறித்து மீள
நாறுபட் டன பைங் கூழி னன்பல நல்கினரே.

இ-ள். வீறுபட்டுடைய தானை வேந்தனால் வீயா - பெருமைபொருந்திய சேனையையுடைய அரசனால் இறவாமல்,—வீயும் ஊறுபட்டு உடைந்து மீள உய்ந்துள மனிதரெல்லாம் - இறக்கத்தக்க ஊறுபாட்டைப்பொருந்தி மீள'உய்ந்த அரசர்களெல்லாம்,—சேறுபட்டு ஐம்பூ நல்கும் செய்யிடை பறித்து மீள நாறுபட்டன பைங் கூழில் - சேருகி அழகிய பொலிவைத்தரும் வயலிலே பிடுங்கி மீள நாருக நடப்பட்ட பயிரைப்போல,—நன் பலம் நல்கினர் - நல்ல பயன்களைக் கொடுத்தார்கள். எ-று.

மன்னரெல்லாம் நல்கினர் என இயையும். பறித்து மீள நடப்பட்ட பயிர் பலனைக்கொடுப்பதுபோல அரசரும் ஊறுபட்டு மீளப் பிழைத்துப் பலனைக் கொடுத்தார்கள் என்பது கருத்து. (சுஅ)

நிலக்கள முழுதும் வல்லே நிமிர்ந்திடு நேமி வேந்த
னலக்கள முடைய மேக நன்கதிர்ச் செலவை நாளும்
விலக்கள முடைய வேலை யிதுவென வீழ்ந்து நீருண்
குலக்கபி சாந தித்தண் கோட்டகம் குறுகி னனே.

இ-ள். நிலக்களம் முழுதும் வல்லே நிமிர்ந்திடும் நேமி வேந்தன் - பூமியினிடம்முழுவதும் விரைவிலேசெல்லுகின்ற ஆஞ்ஞாசோளத்தையுடைய அரசன்,—நலக்களம் உடைய மேகம் - மிக்க கருநிறத்தையுடைய மேகமானது,—நன் கதிர்ச் செலவை நாளும் விலக்கு அளம் உடைய வேலை இது என வீழ்ந்து நீர் உண் - நல்ல சூரியனுடைய செலவை நாடோறும் விலக்குகின்ற உப்பளத்தையுடைய கடல் இதுஎன்று படிந்து நீரையுண்ணுகின்ற,—குலக் கபிசாநதித் தண் கோட்டகம் குறுகினன் - உயர்ந்த கபிசாநதியினது தண்ணிய கரையை அடைந்தான். எ-று.

மேகம் வேலை இது என நீருண் கபிசாநதி என இயைக்க. (சுகு)

மைவரு முந்நீர்ப் பாரின் வரம்பிகந் தெழுந்து வானந்
தைவரு புகழ்சேர் வென்றித் தடஞ்சுடர்ச் சமர வேலான்
கைவரை யளப்பிலாத நிரைத்திட்டங் கதுவே காட்சிச்
செய்கரை யாகப் போகிச் செறுக்கருங் கலிங்கஞ் சேர்ந்தான்.

இ-ள். மைவரு முந்நீர்ப் பாரின் வரம்பு இகந்து எழுந்து,—கருநிறம் பொருந்திய கடல்சூழ்ந்த பூமியில் வரம்பின்றி எழுந்து,—வானம் தைவரு

புகழ் சேர் - ஆகாயத்தை அளாவுகின்ற புகழை அடைந்துள்ள,—வென்றித் தடம் சுடர்ச் சமர வேலான் - வெற்றியையுடைய பெரிய ஒளியைக்கொண்ட போரை அடைந்த வேலையேந்தியவனுகிய இரகு,—அளப்பு இலாத சைவரை நிரைத்திட்டு - அளவில்லாத யானைகளை (அந்நதியினிடையே) நிரையாக நிறுத்தி,—அதுவே காட்சிச் செய்கரையாகப் போகி - அதுவே அழகிய வரம்பாகக்கொண்டு சென்று,—செறுக்க அரும் கலிங்கம் சேர்ந்தான் - அழிக்கக் கூடாத கலிங்கதேசத்தை அடைந்தான். எ-று.

எழுந்து தைவரு புகழ் என இயையும். அகரம் தொக்குநின்றது. (எ0)

அந்தலை யரசர் கோமா னதோரணை ரடக்கு வான்செங்
கைத்தலத் தெடுத்த வள்வா யங்குசங் கந்து சீறும்
பித்திவர் மத்த மாவின் மத்தகம் பிறங்கிற் றென்ன
வைத்தனன் விசயச் சின்ன மயேந்திரத் துச்சி மாதோ.

இ-ள். அத்தலை அரசர் கோமான் - அவ்விடத்திலே அரசர்க்கரசனுகிய இரகு,—ஆதோரணர் அடக்குவான் செம் கைத்தலத்து எடுத்த வள்வாய் அங்குசம் - பாகர்கள் அடக்கும்படி சிவந்த கையினிடத்து எடுத்த கூரிய வாயையுடைய தோட்டியின் தழும்பு,— கந்து சீறும் பித்து இவர் மத்த மாவின் மத்தகம் பிறங்கிற்று என்ன - தறியைச்சீறுகின்ற மயக்கம்பொருந்திய மதத்தையுடைய யானையின் மத்தகத்தில் விளங்கினாற்போல,— விசயச் சின்னம் மயேந்திரத்து உச்சி வைத்தனன் - வெற்றி இலாஞ்சினையை மயேந்திரமலையினுச்சியிலே விளங்கும்படி பொறித்துவைத்தான். எ-று.

அங்குசம் ஆகுபெயர். விளங்கும்படி என்பது உவமைநோக்கி வருவிக்கப்பட்டது. கந்துசீறும் பித்திவர்மத்தமா என்றமையினால் கெம்பீரவேதி என்னும் யானை என்பது பெற்றாம். கெம்பீரவேதி எவ்வகைப்பட்ட ஊறு செய்யினுங் கீழ்ப்படியாத யானை. (எக)

கல்லென வெழுந்த வோதை கடற்படை கரந்து காமர்
மல்லலம் பேரூ ரெங்கும் வயின்வயின் றாவி மெய்ம்மை
யல்லன வறியா நல்லோ ரகத்தெழு சீற்றத் தாய
சொல்லன வழற்றீ யூட்டி மதிற்புறஞ் சூழ்ந்த தன்றே.

இ-ள். கல்லென ஓதை எழுந்த - அப்பொழுது கல்லென்று ஆரவாரம் எழுந்தது,—கடல் படை கரந்து காமர் மல்லல் அம் பேர் ஊர் எங்கும் வயின் வயின் தாவி - கடல்போலும் சேனைகள் (ஊர்களானவை) மறையும்படி அழகிய பொலிவையுடைய பெரிய அவ்வூர்களெங்கும் இடந்தோறும் விரைந்து சென்று,—மெய்ம்மை அல்லன அறியா நல்லோர் அகத்தெழு சீற்றத்து ஆய சொல்லன அழல் தீ ஊட்டி - பொய்பேசுதலை அறியாத நல்லோரிடத்தெழுந்த கோபத்தாலாய சாபவார்த்தையையொத்த வெப்பமான அக்கினியைக் கொளுத்தி,—மதில் புறம் சூழ்ந்தது - மதிலின் புறத்தே சூழ்ந்தன. எ-று.

ஓதைக் கடற்படை எனவும் பாடம். இதற்கு ஓதையையுடைய கடற் படை எனப்பொருள்கொள்க. நல்லோர்-முனிவர். சரக்க என்னும் செயவெ னெச்சம் திரிந்து நின்றது. ஊர்கள் கரக்க அவற்றின் இடையே சென்று ஊட்டி என்க. இது தும்பையிலுழிஞை. ஓதை ஊட்டிச் சூழ்ந்தது என்றல் சிறப்பின்று. (எஉ)

எடுத்தன வியற்ப தாதிப் பெருக்கினை யியம்ப லெங்கே
கடுத்தன புரவி வெள்ளங் கடையுகக் காலின் யாவும்
படுத்தன வானை மேகம் படிந்தறல் பற்றி வாயின்
மடுத்தன தூளி துள்ள வறந்ததை யகழி வாரி.

இ-ள். எடுத்தன இயல் பதாதிப் பெருக்கினை இயம்பல் எங்கு - எழுந்தனவாகிய இயல்பையுடைய காலாளின் பெருக்கத்தை நாம் சொல் வது எங்ஙனம்,—கடுத்தன புரவி வெள்ளம் கடையுகக் காலின் யாவும் படுத்தன - விரைந்தனவாகிய குதிரை வெள்ளங்கள் ஊழிக்காற்றைப் போல எவற்றையும் அழித்தன,—ஆனை மேகம் படிந்து அறல் பற்றி வாயில் மடுத்தன - ஆனைகளாகிய மேகங்கள் படிந்து அகழிநீரைப் பற்றி வாயின்கண் நிறைத்தன,—தூளி துள்ள அகழி வாரி வறந்தது - அதனால் துகள்கிளரும்படி அவ்வகழிநீர் வறந்தது. எ-று.

ஐ சாரியை. இன் உவமப்பொருட்டு. புரவிமுதலிய இவைகளே இப்படி யானால் பதாதிப்பெருக்கை நாம்சொல்வது எப்படி என்றபடி. எடுத்தன என்பதற்கு எடுக்கப்பட்ட எனப் பொருள்கூறினுமமையும். (எங)

வார்செல லோடு மேனி கருகியே மலிந்து தன்க
ணீர்செல வரற்று நின்று நிரந்தர நெருங்கி நீண்ட
கார்செல விறந்து மீள வுயர்கொடிக் காவ லிஞ்சி
தார்செல விடிந்த தெங்குந் தழைத்தது சமர வோதை.

இ-ள். வார் செல்லலோடு மேனி கருகி - மிக்க துன்பத்தோடு மேனிகறுத்து,—மலிந்து தன் கண் நீர் செல அரற்று நின்று - மிக்குத் தன் கண்ணினின்றும் நீர்பெருகப் புலம்பி,—நிரந்தரம் நெருங்கி நீண்ட கார் செலவு இறந்து மீள - நாடோறும் நெருங்கி மிக்க மேகங்கள் செல்லுகை ஒழிந்து மீளும்படி,—உயர் கொடிக் காவல் இஞ்சி - உயர்ந்த கொடியையுடைய காவலான மதில்,— தார் செல இடிந்தது - கொடிப்படை சென்று தாக்குத லால் இடிந்தது,—எங்கும் சமர ஓதை தழைத்தது - எங்கும் போராரவாரம் மிகுந்தது. எ-று.

மீளும்படி உயர்ந்த மதிலென இயைக்க. கொடி மதிற்கடை. கொடிக் கேற்றல் சிறப்பின்று. வார்செலலோடுமேனிகருகியேமலிந்துதன்கணீர் செலவரற்றுநின்றுமீள என்பது தற்குறிப்பு. (எச)

அவ்வுழித் தூத ரோடி யாயுளிற் றுவ தெல்லா
மிவ்வுழி நிகழ்ந்த தும்ப ரன்றியே யிம்ப ரேகி
யெவ்வுழி யுறைவ தென்னு விரைத்துரை குழறி யேத்தித்
தெவ்வுழிச் செயங்கொள்வேலானடியிணை சென்னிசேர்த்தார்.

இ-ள். அவ்வுழி தூதர் ஓடி - அப்பொழுது தூதுவர்கள் ஓடிச்சென்று,— ஆயுள் இன்று ஆவதெல்லாம் இவ்வுழி நிகழ்ந்தது - ஆயுள்முடிய (அப்பொழுது) படுவதெல்லாம் இவ்விடத்தில் நடந்தது,—உம்பர் அன்றி இம்பர் ஏகி உறைவது எவ்வுழி என்னு - மேலுலகத்தன்றி இவ்வுலகத்திற்சென்று இருப்பது எவ்விதத்தில் என்று கூறி,—இரைத்து உரை குழறி ஏத்தி - சத்தமிட்டு வார்த்தைகள் தடுமாறித் துதித்து,—தெவ்வுழி செயம்கொள் வேலான் அடியிணை சென்னி சேர்த்தார் - பகைவரிடத்து வெற்றியைக்கொள்ளும் வேற்படையையுடையனுகிய இரகுவினது பாதங்களிரண்டையும் சிரசிற் சூடினுர்கள். எ-று.

இற என்னும் செயவெனெச்சம் இற்று எனத் திரிந்துநின்றது. ஆயுளிற்றுவதெல்லாம் என்றது மரணவேதனையை. என்னு என்பது செய்யா என்னும்வாய்பாட்டு வினையெச்சம். (எரு)

சரத்தினிற் குலிசத் தானை வென்றவன் றனை யானீ
டுரத்தினி லெழுந்த செந்தீ முதல்வனுக் கொல்லை நாண்முப்
புரத்தினை யவுண ரோடுந் தீய்த்தலிற் போய சீற்றம்
பரத்தினி லெமதூ ரெங்கும் விளைந்தது பாழி வேலோய்.

இ-ள். பாழி வேலோய் - பருத்த வேலையேந்திய அரசனே!,—சரத்தினில் குலிசத்தானை வென்றவன் தானையால் - அம்பினுல் குலிசப்படையையேந்திய இந்திரனைவென்றவனுகிய இரகுவின் சேனையினுல்,—நீடு உரத்தினில் எழுந்த செந்தீமுதல்வனுக்கு - மிகுந்த வலிமையோடும் எழுந்த அக்கினிதேவனுக்கு,—ஒல்லை நாள் முப்புரத்தினை அவுணரோடும் தீய்த்தலில் போய சீற்றம் - முன்னுளில் திரிபுரத்தை அவுணர்களோடும் அழித்தலாற் கழிந்த கோபம்,—பரத்தினில் எமது ஊரெங்கும் விளைந்தது - மேன்மையோடும் எமது ஊர்களெங்கும் உண்டாயது. எ-று.

எனவே சேனைகள் தீயூட்டி ஊர்களைச் சுடுதலால் நெருப்புப் பெரிது பற்றி எரிகின்றது என்பது கருத்து. தானையால் எழுந்த செந்தீமுதல்வன் எனவும் சீற்றம் விளைந்தது எனவும் இயைக்க. சேனையாநீடுரத்தினிலெழுந்தசெந்தீமுதல்வனுக்கு எனப் பாடங்கொண்டு சேனையாகிய செந்தீமுதல்வனுக்கு என்று பொருள்கோடல் சிறப்பின்று. (எசு)

கானரண் கரிந்த தெங்குங் கல்லரண் பொடிந்த தெண்ணீர்
வானரண் வறந்த தும்பர் மதிலரண் மடிந்த தாகத்

தூனரண் டிறந்திட் டொன்னா ருயிர்க்குவா னுலகு நல்குங்
கூனரண் டருவிற் செங்கைக் கொற்றவ வென்னக் கூறும்.

இ-ள். ஆகத்து ஊன் அரண் திறந்திட்டு ஒன்னார் உயிர்க்கு வான்உலகு நல்கும் - உடம்பிலுள்ள ஊனாகிய அரணை அழித்துப் பகைவருயிருக்குச் சுவர்க்கத்தைக் கொடுக்கும்,—கூன் அரண் தரு வில் செங்கைக் கொற்றவ - வளைந்த காவலான வில்லையேந்திய சிவந்த கையையுடைய அரசனே!,—கான் அரண் எங்கும் கரிந்தது - காட்டரண்முழுவதும் நெருப்பினாற் கருகியது,—கல்லரண் (எங்கும்) பொடிந்தது - மலையரண் முழுவதும் (அழுத்தலால்) பொடியாயிற்று,—தெண்ணீர் வான் அரண் எங்கும் வறந்தது - தெளிந்தநீராகிய பெரிய அரண் முழுவதும் வற்றியது.—உம்பர் மதில் அரண் (எங்கும்) மடிந்தது - மேல் உயர்ந்த மதிலரண் முழுவதும் அழிந்தது,—என்ன கூறும் - என்று (அத்தூதுவர்கள்) சொல்லக் கூறுவான். எ-று.

திறந்திட்டு நல்கும் வில் என இயைக்க. ஆகத்து......கொற்றவ என்றது வில்வித்தையிற் சிறந்த அரசனே என்றபடி. (எஎ)

ஒல்லையே யெழுந்த நஞ்சு மொருவனா லடக்கப் பட்ட
தில்லையே யென்ன நக்காங் கெரியெழ நோக்கி மேக்கிற்
செல்லையேய் நெடுந்தேர் மன்னன் கணத்தினி லெமது சேனை
வல்லையே யெழுக வென்றா னிமைப்பினின் மண்டிற் றன்றே.

இ-ள். ஒல்லை எழுந்த நஞ்சும் ஒருவனால் அடக்கப்பட்டது இல்லையே என்ன நக்கு - முன்னாளில் எழுந்த நஞ்சும் ஒருவனால் அடக்கப்பட்டதில்லையா (அங்ஙனமாக இச்சேனை அடக்கப்படல் அரிதா) என்று சிரித்து,—ஆங்கு எரி எழ நோக்கி - அங்கே அக்கினியுண்டாகப் பார்த்து,—மேக்கில் செல்லை ஏய் நெடும் தேர் மன்னன் - மேலுள்ள மேகமண்டலத்தை (முடியானது) பொருந்திய நெடிய தேரையுடைய அரசன்,—எமது சேனை வல்லை எழுக என்றான் - எமதுசேனை விரைய எழுக என்று கூறினான்,—இமைப்பினில் மண்டிற்று - (அச்சேனைகள்) இமைப்பொழுதினுள்ளே நெருங்கிற்று. எ-று.

நோக்கி எழுக என்றான் என முடிக்க. (எஅ)

மண்டுவெஞ் சேனை யென்னு மதகரிக் குழாத்தி னூடோ
ரொண்டிறற் சீயம் போர்வேட் டெழுந்தன வுருமிற் சீறி
யண்டமு தெங்கு மோடி யமரொலி யடைய மீறுங்
கண்டகர் நடுங்கு மாறங் கெழுந்தனன் கலிங்கர் கோமான்.

இ-ள். மண்டு வெம் சேனை என்னும் மத கரிக் குழாத்தின் ஊடு - நெருங்கிய கொடிய சேனையாகிய மதம்பொருந்திய யானைக்கூட்டத்தினிடையே,—ஓர் ஒண் திறல் சீயம் போர் வேட்டு எழுந்தென - ஒரு ஒள்

ளிய வலியையுடைய சிங்கம் போரைவிரும்பி எழுந்தாற்போல,—உருமில் சீறி - இடிபோலக் கோபித்து,—அண்டமது எங்கும் ஓடி அமரொலி அடைய - அண்டமெங்கும் ஓடிப் பேரொலி செல்ல,—மீறும் கண்டகர் நடுங்குமாறு அங்கு எழுந்தனன் - மேற்பட்ட பகைவர் நடுங்கும்படி அங்கே எழுந்தான்,—கலிங்கர் கோமான் - கலிங்கராசன். எ-று.

ஊடு எழுந்தனன், எழுந்தென எழுந்தனன், சீறி எழுந்தனன், அடைய எழுந்தனன், நடுங்குமாறு எழுந்தனன் எனத் தனித்தனி முடிக்க. (எகூ)

வேறு

முகிலிடு முருமென விழியிணை முதிர்தீ
யுகுதலி னிரவியு முறுமழ லெனவே
துகிலிகை யொலிகொடு துயல்வர விடமே
மகிதல மிலையென மதகரி வரவே.

இ-ள். முகில் இடும் உருமென் விழிஇணை முதிர் தீ உகுதலின் - முகில்கான்ற இடியைப்போலக் கண்ணிரண்டினின்றும் மிக்க அக்கினிப் பொறிகள் சொரிதலினால்,—இரவியும் அழல் ஊறும் என - சூரியனும் உஷ்ணத்தை அடையுமென்று,—துகிலிகை ஒலிகொடு துயல்வர - கொடி ஒலித்தலோடு அசைய,—மகிதலம் இலை என மதகரி வர - இடம் பூமியில் இல்லையென்று சொல்லும்படி மதத்தையுடைய யானைகள் வரவும். எ-று.

உறும் எனத் துயல்வர என்பது உஷ்ணமடையும் என்று விசிறுவது போல அசைய என்றபடி. துயல்வர வர என இயையும். இனி உறும் எனவும் துயல்வரவும் இலையெனவும் வர எனினுமாம். (அ0)

மாவொலி வளையொலி வயிரொலி மறவோர்
கூவொலி கரியொலி கொடியிடை மணிசேர்
நாவொலி யுருளொலி முழவொலி நனிநாண்
மேவொலி யகிலமும் வெருவர மிகவே.

இ-ள். மா ஒலி - குதிரையினொலியும்,—வளை ஒலி - சங்கினொலியும்,—வயிர் ஒலி - கொம்பினொலியும்,—மறவோர் கூவு ஒலி - வீரர்கள் அறை கூவுகின்ற ஒலியும்,—கரி ஒலி - யானையினொலியும்,—கொடியிடை மணிசேர் நா ஒலி - கொடியின்கணுள்ள மணியிற் பொருந்திய நாவினொலியும்,—உருள் ஒலி - தேருருளினொலியும்,—முழவு ஒலி - முழவினொலியும்,—நனி நாண் மேவு ஒலி - மிகவும் வில்லின் நாணிற்பொருந்திய ஒலியும்,—அகிலமும் வெருவர மிக - சகல உலகங்களும் அஞ்சும்படி மேற்படவும். எ-று.

அறைகூவல் - போர்க்கழைத்தல். (அக)

குடைநிழல் கெடவரு குறுகலர் நிறமீர்
படைநிழ லெழமிகு படைஞர்கள் கவசத்

திடைநிழல் கவரிக டியல்வர விடைபோம்
நடைநிழ லவைகெட நனியுற வெழவே.

இ-ள். குடை நிழல் கெட வரு குறுகலர் நிறம் ஈர் படை நிழல் எழ - குடைகளது நிழல் கெடும்படி (தம்மோடு எதிர்த்து) வரும் பகைவரது மார்பை அரிகின்ற படைகளின் ஒளி எழவும்,— மிகு படைஞர்கள் கவசத்து இடை நிழல் - மிக்க வீரர்களது சட்டையினின்றுமுண்டாகுமொளி,—கவரிகள் துயல்வர இடைபோம் நடை நிழலவை கெட நனி உற எழ - இருபக்கமும் சாமரைகள் அசையும்படி நடுவிற் செல்லுகின்ற நடைப்பந்தரின் நிழல் கெடும்படி மிகவுங் கிளரவும். எ-று.

நடை நடத்தலையுடையது. அவை பகுதிப்பொருள் விகுதி. (அஉ)

இசைபுக லொடுபுவி முழுதுந மிறவா
விசைபுக லெமதழி விலநிலை யெனவே
திசைமுக மதவரை செருவர லெனவே
திசைமுக மதுகொடு சிலரெதிர் செலவே.

இ-ள். கல்லொடு இசைபு புவி முழுதும் நம் இறவா இசை புகல் - சக்கரவாளகிரியோடுபொருந்திப் பூமிமுழுவதும் நமது அழியாத புகழ் செல்லுதல்,— எமது அழிவில நிலை என - எமது அழிவில்லாத ஒரு நிலையாகுமென்று,—திசைமுக மதவரை செருவரல் என - திக்கினிடத்துள்ள மதம்பொருந்திய யானைகள் போர்க்கு வருதல்போல,— திசை முகம் கொடு சிலர் எதிர் செல - (பார்த்தோர்) திகைக்கத்தக்க (கோபமான) முகத்தைக் கொண்டு சிலர் எதிராக வரவும். எ-று.

திசைத்தல்-திகைத்தல். எனச் செல, எனச்செல எனத் தனித்தனி முடிக்க. அது பகுதிப்பொருள் விகுதி. (அங)

காமர மதரளி களிகொடு கதறுங்
காமர மலரொடு கலனுர மிலகத்
தோமர மதுகொடு கடிதரு சுடர்சேர்
தோமர மதுகொடு சிலர்முனை தொகவே.

இ-ள். காமரம் மதர் அளி களிகொடு கதறும் கா மர மலரொடு - காமரம் என்னும் பண்ணை மதர்த்த வண்டுகள் களிப்பைக்கொண்டு ஒலிக்கும் காவிலுள்ள மரத்திற்பொருந்திய பூவாற்றொடுத்த மாலையோடு,— கலன் உரம் இலக - ஆபரணம் மார்பில் விளங்க,— தோம் அரமதுகொடு கடிதரு - கறையை அரத்தைக்கொண்டு நீக்கிய, — சுடர்சேர் தோமரமது கொடு சிலர் முனை தொக - ஒளிபொருந்திய இருப்புலக்கையைக்கொண்டு சிலர் போர்க்களத்தில் வந்து கூடவும் எ-று.

இலகத் தொக என இயையும். தோம் - மழுக்கமுமாம். (அச)

காந்தக வெயிறரு கதிரவ வுடைதன்
காந்தக வைவியினெறி கடிதரு ளெனவே
நாந்தக மிளிர்தரு தெறுவலி நனிசேர்
நாந்தக மதுகொடு சிலர்செரு நணுக.

இ-ள். காந்து அக வெயில் தரு கதிரவ - பிரகாசித்தலைத் தன்னிடத்தேகொண்ட வெயிலைத்தருகின்ற சூரியனே,— உடைதன் காந்த - உஷாதேவியின் நாயகனே,—கவ்வையில் நெறி விரை வில் நாம் தக அருள் என-துன்பமில்லாத (வீரசுவர்க்க) வழியை விரைவில் நாம் தகைமையடையுமாறு அருளுக என்று,—மிளிர்தரு தெறுவலி நனி சேர் நாந்தகமது கொடு சிலர் செரு நணுக - விளங்குகின்ற பகைவரைத் தெறுகின்ற வலி மிகவும் சேர்ந்த வாளைக்கொண்டு சிலர் போரில் வரவும். எ-று.

என நணுக என இயையும். அது பகுதிப்பொருள் விகுதி. (அரு)

மெய்த்தனு விதுசமர் விழவிடி லிமையோர்
மெய்த்தனு பவமுத வுவர்மிசை யெனவே
கைத்தனு வொடுதிரி கணைபுற மொளிரக்
கைத்தனு வொடுசிலர் கடிதெதிர் செலவே.

இ-ள். மெய்த்தனுவிது சமர் விழ விடில் - உடம்பாகிய இதனைப் போரில் (வெட்டுண்டு) விழவிடில்,—இமையோர் மெய்த்து அனுபவம் மிசை உதவுவர் என - தேவர்கள் மெச்சப்படும் அனுபவத்தை விண்ணில் தருகுவார்கள் என்று,—கைத்து - (உடம்பை) வெறுத்து,—அனுவொடு - ஒத்த மனத்தோடு,—திரிகணை புறம் ஒளிர - செல்லுகின்ற கணையையுடைய தூணி புறத்தே விளங்க,—கைத்தனுவொடு சிலர் கடிது எதிர்வர - கையில் வில்லோடும் சிலர் விரைந்து எதிராகவரவும். எ-று.

என்று கைத்து செல எனவியையும். (அசு)

பைத்தலை வளருல கமுமெரி படவே
பைத்தலை விலமன வலிகொடு படரா
மொய்த்தலை யனபடை புடைவர முனைசேர்
மொய்த்தலை தனில்விரை வினின் முடுகினனே.

இ-ள். பைதலை வளர் உலகமும் எரிபட - (சேடனுடைய) படம் பொருந்திய தலையிற்கிடக்கின்ற உலகமும் எரிந்துபோகும்படி,— பைத்து அலைவு இல மனவலிகொடு படரா - வருந்தி அலைதல் இல்லாத மனவலியைக்கொண்டுவந்து,—மொய்த்து அலை அன படை புடை வர - கூடிக் கடலையொத்த சேனை பக்கத்தில் வர,—முனை சேர் மொய்த்தலைதனில் விரைவினில் முடுகினன் - பொருதலையுடைய போர்க்களத்தில் விரைவாகச் சென்றான். எ-று

படபடரா மொய்த்து வர முடுகினன் என முடிக்க. பைத்து என்னும் வினையெச்சம் பைதல் என்ற சொல்லினின்று பிறந்தது. (அஎ)

புகலினன் மறைதர வெழுதரு பொடிவான்
புகலின னிலமுழு வதுமிருள் புகவே
யிகலின களனிடை யெறிபடை யெறியா
விகலின வெதிரெதி ரிருபடை களுமே

இ-ள். புகல் இனன் மறைதர எழுதரு பொடி வான் புகலின் - சொல்லப்படுகின்ற சூரியன் மறையும்படி எழுகின்ற துகள் ஆகாயத்திற் செல்லுதலினால்,—நல் நிலம் முழுவதும் இருள் புக - நல்ல நிலமுழுவதும் இருளடைய,—இரு படைகளும் - இருபக்கத்துச் சேனைகளும்,—இகலின களனிடை எறிபடை எறியா எதிர் எதிர் இகலின - வலிமையையுடையனவாய்ப் போர்க்களத்திலே எறியப்படுகின்ற படைகளை எறிந்து எதிரெதிரே பொருதன. எ-று.

புக இகலின என இயையும். (அஅ)

எட்டின வயவரி யெனவிரி திசையோ
ரெட்டினர் மகிழ்தர வெறிபடை களைநேர்
கட்டினர் படைகொடு கடிதுயிர் கழியக்
கட்டினர் சிலர்சிலர் புயமலை களையே.

இ-ள். எட்டின வய அரி என - பாய்ந்த வலிய சிங்கம்போலச் (சென்று),—எறிபடைகளை விரி திசை ஓர் எட்டினர் மகிழ்தர படைகொடு கட்டினர் - தம்மோடெதிர்த்த வீரர்கள் எறிந்தபடைகளைப் பரந்த அட்டதிக்கிலுள்ளாரும் மகிழும்படி (தம் பகைப்) படைளால் நீக்கினார்கள்,—கடிது உயிர் கழிய சிலர் சிலர் புயமலைகளைக் கட்டினர் - விரைவில் உயிர்நீங்கும்படி சிலர் சிலரது புயமலைகளைக் கட்டி மற்போர்செய்தார்கள். எ-று.

சென்று என்பது அவாய்நிலையானே வருவிக்கப்பட்டது. சென்று கட்டினர் என முடிக்க. (அகூ)

ஊறணை வயின்வரு பவவினை யொழியா
தூறணை வுறவிதை யொழிகுவ மெனவே
வேறணை வருமிரி தரவெதிர் மிதியா
வேறணை விடுமென் முனையிடை மிடைவார்.

இ-ள். ஊறு அணை வயின் வரு பவவினை ஒழியாது ஊறல் நைவுற - (சுவர்க்கத்துக்கு) இடையூறாக மாதாவின் வயிற்றிலே வருகின்ற பிறவிவினை நீங்காது ஊறுதல் கெடும்படி,—இதை ஒழிகுவம் என - இவ்வுடம்பை விடுகுவேமென்று,—வேறு அணைவரும் இரிதர எதிர் மிதியா - வேறு

வேறாக எல்லோரும் ஓட்டெடுக்கும்படி எதிரூன்றி,—வேல் தனை விடும் என முனையிடை மிடைவார் - வேற்படைக்கலத்தை விடுங்களென்று போர்க் களத்தில் நெருங்குவார்கள். எ-று.

ஊறாக வயின் ஊறல் நைவுற என்க. பிறவினை - பிறவிக்குக்காரண மாயவினை. (கூ0)

மையற லளகவிண் மகளிர்கை யுறவே
மையறல் பொழிவன வெனவரு கணையாற்
கையறல் கருதிலர் கடிபடை யெதிர்போய்க்
கையற லிலையென நெடிதுயிர் கழிவார்.

இ-ள். மை அறல் பொழிவன என வரு கணையால் கையறல் கருதிலர் - மேகங்கள் நீரைப்பொழிவனபோல வீரர்களால் விடப்பட்டு வருகின்ற பாணங்களாற் கைகள் வெட்டுண்ணுதலைக் கருதாதவராய்,—கையறல் இலையென கடி படை எதிர்போய் - (நாம் போர்ச்செயலில்) ஒழிதல் இல்லையென்று கொல்லுகின்ற படைக்கு எதிரேபோய்,—மை அறல் அளக விண்மகளிர் கையுற நெடிது உயிர் கழிவார் - கருமணல்போலும் அளகத்தையுடைய தேவமகளிர்களுடைய கையிலடையும்படி பெரிதும் உயிர் நீங்கப்பெறுவார்கள். எ-று.

கருதிலராய் எதிர்போய்க் கையுறும்படி கழிவார் என்க. கையறல் என்பதற்கு, துன்பமடைதல் எனினுமாம். (கூக)

விடாதுறு பெருஞ்சமர மிவ்வகையின் விஞ்சத்
தடாதுயர் பெரும்புக ழினன்படை தழைப்பக்
கெடாவமர் செய்தம்பகுதி கெட்டிடுமவ் வேல்வைக்
கடாசல நெடும்படை விடுத்தனர் கலிங்கர்.

இ-ள். விடாது உறு பெரும் சமரம் இவ்வகையின் விஞ்ச - நீங்காது செய்யப்படுகின்ற பெரிய போர் இவ்வாறு மிக்குநடப்ப,—தடாது உயர் பெரும் புகழினன் படை தழைப்ப - தடுக்கப்படாது உயர்ந்த பெரிய புகழையுடையனாகிய இரகுவின் சேனைகள் மேற்பட,—கெடா அமர் செய் தம்பகுதி கெட்டிடும் அ எல்வை - கெடாதுநின்று போர்செய்கின்ற தம் சேனைகள் அழிவடைந்த அச்சமயத்தில்,—கலிங்கர் கடாசல நெடும்படை விடுத்தனர் - கலிங்கர்கள் மிகுந்த யானைப்படையை விடுத்தார்கள். எ-று.

விஞ்ச கெட்டிடும் அவ்வேல்வை விடுத்தனர் என்க. (கூஉ)

பாற்றின மிசைப்பெரிது பந்தரிட முந்தா
வேற்றமொ டுருத்தெதி ரெதிர்ந்தவுயி ரெல்லா
மாற்றன்மத வெற்பின மெனும்பெரு மனந்தங்
கூற்றமெறி கைக்கயி றடர்த்தன கொதித்தே.

இ-ள். பாற்றினம் மிசை பெரிது பந்தர் இட முந்தா - பருந்துக்கூட்டங்கள் மேலே மிகவும் பந்தர்இடச் சென்று,—ஆற்றல் மதவெற்பினம் எனும் பெரும் அனந்தம் கூற்றம் - வலிமையையுடைய யானைத்திரளாகிய பெரிய அளவில்லாத கூற்றுக்கள்,—எற்றமொடு உருத்து எதிர் எதிர்ந்த உயிரெல்லாம் - உயர்ச்சியோடு கோபித்து எதிரே எதிர்ந்த உயிர்களையெல்லாம்,—கொதித்து எறி கைக்கயிறு அடர்த்தன - கோபித்து வீசுகின்ற கையாகிய பாசத்தால் கட்டிக்கொன்றன. எ-று.

முந்தா கொதித்து அடர்த்தன என முடிக்க. (கூங)

பத்தியணி மொய்த்தமரு மந்துளை படப்பா
யத்தியின் மருப்பிடை கிடந்த வடல்வீரர்
மத்தகமிசைப் படைகொ டெற்றவுதிர் மைதீர்
நித்தில நிறைந்தன நெடுங்குருதி வேலை.

இ-ள். பத்தி அணி மொய்த்த மரும்துளைபட பாய் - வரிசையான ஆபரணங்கள்செறிந்த மார்பகந்துளைபடப் பாய்ந்தெடுத்த,—அத்தியின் மருப்பிடை கிடந்த அடல் வீரர் - யானையினது கோட்டிற் கிடந்த வலிய வீரர்கள்,—மத்தகமிசை படைகொடு எற்ற - மத்தகத்தின்மேல் படைகொண்டு எறிய,—உதிர் மைதீர் நித்திலம் நெடும் குருதி வேலை நிறைந்தன - உதிர்ந்த குற்றமில்லாத முத்துக்கள் நெடிய இரத்தக்கடலில் வீழ்ந்து நிறைந்தன. எ-று.

உதிர் என்னும் வினைத்தொகை நித்திலம் என்னும் வினைமுதற்பெயர் கொண்டது. (கூச)

காயுமத வேழமற வோர்கடிய நெஞ்சிற்
பாயவுரு வாநிலை பதிந்தநிமிர் கோடு
தீயவினை வஞ்சகர்த நெஞ்சினிடை செந்நீர்
சாயநம தூதரறை சல்லிய நிகர்த்த.

இ-ள். காயும் மத வேழம் மறவோர் கடிய நெஞ்சிற் பாய - கோபிக்கின்ற மதயானைகள் வீரர்களது வலிய மார்பிலே பாய்ந்து குற்ற,—உருவா நிலைபதிந்த நிமிர்கோடு - ஊடுருவி நிலையாகப் பதிந்த உயர்ந்த கோடுகள்,—தீயவினை வஞ்சகர் தம் நெஞ்சின் இடை - தீவினையையுடைய வஞ்சகர்களது மனத்திலே,—செந்நீர் சாய நமதூதர் அறை சல்லியம் நிகர்த்த - இரத்தம் பெருகும்படி இயமதூதுவர்கள் அறைகின்ற ஆணியை நிகர்த்தன. எ-று.

கோடு நிகர்த்த என்க. (கூரு)

பண்மிகு தொடைத்தரள வெண்குடை பறித்தே
கண்மிகு நிலத்திடை சிதைத்துவரு கைம்மா

வெண்மதி முகத்தெழில் சுருங்கிமெலி வெய்த
மண்மிசை யரைத்தவொரு வானவனை யொக்கும்.

இ-ள். பண்மிகு தரளத் தொடை வெண்குடை பறித்து - அழகுமிக்க முத்துத்தொடை தூக்கப்பெற்ற வெண்குடையைப் பறித்து,—கண்மிகு நிலத்திடை சிதைத்து வரு கைம்மா - இடமிக்க நிலத்தின்கண்ணே (காலால் உழக்கிச்) சிதைவுசெய்துவருகின்ற யானை,—முகத்து எழில் சுருங்கி மெலி வெய்த - முகத்தழகு குறைந்து மெலிவடையும்படி,—வெண்மதி மண்மிசை அரைத்த ஒரு வானவனை ஒக்கும் - வெள்ளிய சந்திரனைப் பூமியிலரைத்த ஒப்பற்ற உருத்திரமூர்த்தியையுமொக்கும். எ-று.

கைம்மா ஒக்கும் என முடிக்க. இது ஒருவயிற்போலியுவமை. (கசு)

மொய்யின்மத மாவிசய வீரரை முருக்கிக்
கையினெடு வான்மிசை யெறிந்தன கவின்றோய்
செய்யகதி ரூடுநனி செல்லு முயிரோடே
மெய்யுமினி தேகும்வகை வீசுவன வொத்த.

இ-ள். மொய்யின் மதமா விசய வீரரை முருக்கி - வலிமையோடு யானையானது வெற்றியையுடைய வீரர்களைக் கொன்று,—கையின் நெடு வான் மிசை எறிந்தன - கையினாலே தூக்கி நெடிய ஆகாயத்தில் எறிந்தவியல்பு,—கவின் தோய் செய்ய கதிர் ஊடு நனி செல்லும் உயிரோடு - அழகுபொருந்திய சிவந்த சூரியனுக்கூடாக மிகவும்செல்லுகின்ற உயிரோடு,—மெய்யும் இனிது ஏகும் வகை வீசுவன ஒத்த - உடம்பும் இனிது செல்லும்படி எறிவதை ஒத்தது. எ-று.

எறிந்தன ஒத்த என இயையும். (கஎ)

மெய்ம்மலை பெருஞ்சிர வியன்மலை விழுந்த
கைம்மலை நிவந்துகுவி கான்மலை மிகுந்த
விம்மலை யெனப்பெருகு வெம்மதம் விடாதே
பெய்ம்மலை விளைத்திடு பெருஞ்சமரி னம்மா.

இ-ள். விம்மு அலையெனப் பெருகு வெம்மதம் விடாது பெய் மலை விளைத்திடு பெரும் சமரில் - ஒலிக்கின்ற கடல்போலப் பெருகுகின்ற வெவ்விய மதத்தை விடாமற் சொரிகின்ற யானைகள் செய்கின்ற பெரிய போரில்,—மெய்மலை பெரும்சிரவியன்மலை விழுந்த - மெய்யாகியமலைகளும் பெரிய தலைகளாகிய சிறந்த மலைகளும் விழுந்தன,—கைமலை நிவந்து குவி கால்மலை மிகுந்த - கைமலைகளும் உயர்ந்துகுவிகின்றகால்களாகிய மலைகளும் மிகுந்தன. எ-று.

அம்மா-அசைநிலை. (கஅ)

விளைந்தசெரு வங்கதை வியந்த ரகுமன்ன
னுளைந்தசின வெங்கன லுறப்புருவ மோட
வளைந்தசிலை கொண்டமர் மலைந்தனன் வயப்போ
ரளைந்திடு கலிங்கரு மதிர்ந்தெதி ரணைந்தே.

இ-ள். விளைந்த செரு அதை வியந்த ரகு மன்னன் - உண்டான போராகிய அதனை வியந்த இரகுமகாராசன்,—உளைந்த சின வெங்கனல் உறப் புருவம் ஓட - திருகிய கோபமாகிய கொடிய அக்கினி மிகவும் புருவம் நிமிரவும்,—வளைந்த சிலைகொண்டு அமர் மலைந்தனன் - வளைந்த வில்லைக் கொண்டு போர்செய்தான்,—வயப்போர் அளைந்திடு கலிங்கரும் அதிர்ந்து எதிர் அணைந்து - வலிய போரைச்செய்கின்ற கலிங்கதேயத்தரசர்களும் ஆரவாரித்து எதிர்சென்று. எ-று.

குளகம். அணைந்து சொரிந்தாரெனவருஞ்செய்யுளுடன் முடிக்க. (கூகூ)

விரிந்திடு தடஞ்சிறை யினைத்தனி வெகுண்டே
யரிந்திடு மடற்குலிச வண்ணலவன் மீதே
கரிந்திடு மலைக்குல மெழுந்தடர்கன் மாரி
சொரிந்திட லெனப்பகழி மாரிகள் சொரிந்தார்.

இ-ள். விரிந்திடு தடம் சிறையினை தனி வெகுண்டு அரிந்திடும் - (தமது) விரிகின்ற விசாலமாகிய சிறைகளை மிகவும் கோபித்து அரிந்த,—அடல் குலிச அண்ணலவன் மீது - வலிய குலிசப்படையையுடையவனாகிய இந்திரன்மேல்,—கரிந்திடும் மலைக்குலம் எழுந்து - கரிய மலைக்கூட்டம் எழுந்து,—அடர் கல்மாரி சொரிந்திடல் என - நெருங்கிய சன்மழையைச் சொரிதல்போல,—பகழி மாரிகள் சொரிந்தார் - அம்புமழைகளைச் சொரிந்தார்கள். எ-று.

அரிந்திடும் அண்ணல் என இயையும். அண்ணலவன் என்பது சிவனவன் என்பதுபோலப் பகுதிப்பொருள் விகுதிபெற்றுநின்றது. (கoo)

அங்கவர் சொரிந்தகணை மாரியி னமிழ்ந்திச்
சங்கமொடு கொம்புதுடி தண்ணுமை தழங்க
மங்கல மதற்குரிய மாநதியி னூடே
முங்கியெழு கின்றதென மொய்ம்பொடு மெழுந்தே.

இ-ள். அங்கு அவர் சொரிந்த கணை மாரியின் அமிழ்ந்தி - அங்கே அவர்கள் சொரிந்த பாணமழையில் அமிழ்ந்தி,—சங்கமொடு கொம்பு துடி தண்ணுமை தழங்க - சங்கும் கொம்பும் துடியும் தண்ணுமையுமாகிய வாத்தியங்களொலிக்க,—மங்கலமதற்குரிய மாநதியினூடு முங்கி எழுகின்றதென - மங்கலமாகியயாகத்திற்குரிய பெரிய நதியின்கண்ணே மூழ்கி எழுகின்றவாறுபோல,—மொய்ம்பொடும் எழுந்து - வலிமையோடும் எழுந்து. எ-று.

மூழ்குதல் அபவிரதஸ்நானஞ்செய்தல். அமிழ்ந்தி எழுந்து என இயைக்க. இதுவும்குளகம். எழுந்து விடுத்தான் என வருஞ்செய்யுளுடன் முடிக்க. (க0க)

பாயுமத வெற்பின மழுங்கவெதிர் பம்புஞ்
சீயமதெ னச்சிலையி னாணொலி சிறப்பக்
காயுமது கைப்பகழி யெண்ணில கடுப்பால்
மேயதிசை யெட்டுமிரி யும்படி விடுத்தான்.

இ-ள். பாயும் மத வெற்பினம் அழுங்க எதிர் பம்பும் சீயமது என - பாய்கின்ற யானைக்கூட்டம் வருந்தும்படி எதிரே கர்ச்சிக்கின்ற சிங்கத்தைப்போல,—சிலை நாண் ஒலி சிறப்ப - தனது வில்லின் நாணோதை சிறப்புற,—காயும் மதுகைப் பகழி எண்ணில - கொல்லுகின்ற வலிய பாணங்கள் அளவில்லாதனவற்றை,—கடுப்பால் மேய திசை எட்டும் இரியும்படி விடுத்தான் - வேகத்தோடு பொருந்திய திக்குகள் எட்டும் புறங்கொடுக்கும்படி விடுத்தான். எ-று.

எட்டும் என்றது எட்டிலுமுள்ளாரை. என சிறப்ப விடுத்தான் என இயையும். (க0உ)

கண்டமத றுத்தசில வத்தலை கவர்ந்தே
யெண்டகு திசைக்கரிமு னிட்டசில பல்ல
மண்டமதி ரச்சில வருங்கணையி னால்வீழ்
தொண்டமத னைக்கொடு நிமிர்ந்தசில தோணி.

இ-ள். கண்டமது அறுத்த சில - கழுத்துகளை அறுத்தன சிலபாணங்கள்,—அத்தலை கவர்ந்து தகு எண்திசைக் கரிமுன் இட்ட சில பல்லம் - அத்தலைகளைக் கவர்ந்துகொண்டுபோய்த் தகைமைபொருந்திய எட்டாகிய திக்கிலுமுள்ள யானைகளுக்குமுன்னே இட்டன சில அம்புகள்,—அண்டம் அதிர சில அரும் கணையினால் வீழ் தொண்டமதனைக் கொடு நிமிர்ந்த சில தோணி - அண்டங்கள் அதிரும்படி சில அரிய கணையினால் (வெட்டுண்டு) வீழ்ந்த துதிக்கைகளைக்கொண்டு நிமிர்ந்தன சில பாணங்கள். எ-று.

அதிர வீழ் தொண்டம் என இயையும். (க0௩)

வேளினுரு வாய்வரு விசைக்கணைகள் கட்ட
தாளினொடு போகியலை யுற்றபல் சரங்க
ளாளினொடு போயலை கடந்தன வனந்தம்
வாளிவாரி னீருள்வெளி பெய்த சிலவண்டு.

இ-ள். வேளின் உருவாய் வரு விசைக்கணைகள் கட்ட தாளினொடு போகி - அருவடிவாய் வருகின்ற விசையையுடைய பாணங்கள் வெட்டி நீக்கிய கால்களோடு போய்,—அலைஉற்ற பல் சரங்கள் - கடலையடைந்தன பலபாணங்கள்,—ஆளினொடு போய் அலை கடந்தன அனந்தம் வாளி -

ஆளோடுபோய்க் கடலைக்கடந்தன அளவில்லாத பாணங்கள்,—வயின் ஈருள் வெளிபெய்த சில வண்டு - வயிற்றிலுள்ள ஈரலை அரிந்து வெளியே சொரிந்தன சிலபாணங்கள். எ-று.

வேளினுரு - அருவம். (கOச)

பாரமத மாவெரி நிமிர்ந்தன பதாகை
யாரவடி வாளிபட வற்றுவிழ லம்மென்
மூரலர மாதரொரு வர்க்கொருவர் முந்தா
வீரருர மேவநில மீதிழிவ தொத்த.

இ-ள். பார மதமா வெரிந் நிமிர்ந்தன பதாகை - பாரமாகிய மதத்தையுடைய யானையின்முதுகில் நிமிர்ந்துள்ள கொடிகள்,—வடிவாளி பட அற்று ஆர விழல் - கூரிய பாணங்கள்பட வெட்டுண்டு மிகவும் விழுதல்,—அ மெல் மூரல் அரமாதர் - அந்த மெல்லிய வரிசையையுடைய தெய்வப் பெண்கள்,—ஒருவர்க்கு ஒருவர் முந்தா வீரர் உரம் மேவ நிலம் மீது இழிவது ஒத்த - ஒருவருக்கொருவர் முற்பட்டுவந்து வீரர்மார்பைத் தழுவுதற்குப் பூமியின்மீது இறங்குவதை ஒத்தன. எ-று.

முந்தா இழிவது ஒத்த என இயையும். (கOரு)

பூசன்மத மாமிசை பொலிந்தமற வோர்நீ
டாசில கடுங்கணை யடத்தரையில் வீழ்தல்
வாசமட மாதர்த மறுப்பினுறு காமப்
பாசமொழி யார்கள்வரை பாய்தலை நிகர்த்த

இ-ள். பூசல் மதமா மிசை பொலிந்த மறவோர் - போரையுடைய யானையின்மீது மொலிந்த வீரர்கள்,—நீடு ஆசு இல கடும் கணை அட தரையில் வீழ்தல் - நெடிய குற்றமில்லாத வேகமான அம்புகள்சென்று கொல்லப் பூமியில் வீழ்தல்,—வாச மடமாதர்தம் மறுப்பின் உறு காமப் பாசம் ஒழியார்கள் - (கூடி) வசித்தற்குரிய மடமையையுடைய மகளிரது மறுப்பினால் அடைந்த காமாசையை நீங்காதவர்கள்,—வரை பாய்தலை நிகர்த்த - மலையிலேறி வீழ்தலை ஒத்தன. எ-று.

வீழ்தல் நிகர்த்த என இயையும். யானைக்கு மலை உவமையாதலின் இங்ஙனங் கூறினர். (கOசு)

தாடழுவு வாலதிய தந்திசில முந்து
மோடுதரு தாடுமிய முன்னர்விழ லின்று
வீடுபுரி பாகினை யடர்த்தெரி சினத்தாற்
கோடுமுத றேயநிழல் குத்துவன வொத்த.

இ-ள். தாள் தழுவு வாலதிய தந்தி சில - காலைத்தழுவிய வாலையுடைய யானைகள் சில,—மோடுதரு தாள் துமிய முன்னர் விழல் - பெருமைபொ

ருந்திய முன்கால் வெட்டுண்ண முறப்பக்கமாக வீழ்தல்,—இன்னு ஈடுபுரி பாகினை அடர்த்து - துன்பத்தைப் பெரிதும்செய்கின்ற பாகனைச்சுழித்து,— எரி சினத்தால் கோடுமுதல் தோய நிழல் குத்துவன ஒத்த - எரிகின்ற கோபத்தாற் கோடு அடிவரையும் அழுந்தும்படி நிழலைக்குத்துதலை ஒத்தன. எ-று.

வீழ்தல் ஒத்த என முடிக்க. (கூ௱எ)

வீழ்ந்தகரி மீதொரு மருப்பிற விழுந்தே
சூழ்ந்தலகை பம்பவெளி துஞ்சுவன வேழ
மாழ்ந்தகுர லோடலறி யஞ்சன வரைக்கட்
டாழ்ந்தமுகி லோடுபிறை தங்குவன போலும்.

இ-ள். வீழ்ந்த கரி மீது - வெட்டுண்டு விழுந்த யானையின்மீது,— ஒரு மருப்பு இற விழுந்து - ஒருகோடு வெட்டுண்ண விழுந்து,—சூழ்ந்து அலகை பம்ப எளி துஞ்சுவன வேழம் - சூழ்ந்து பேய்கள் ஒலிக்க எளிதாக இறந்துகிடக்கின்ற யானை,—பிறையோடு - பிறையோடு,—ஆழ்ந்த குரலோடு அலறி அஞ்சன வரைக்கண் தாழ்ந்த முகில் தங்குவனபோலும் - ஆழமாகிய குரலோடு அலறிக்கொண்டு கரிய மலையின்கண்ணேபடிந்த முகில் தங்குமியல்பினையொக்கும். எ-று.

ஒருமருப்பிற ஒருமருப்போடுவிழுந்த யானை, பிறையோடு முகில் தங்குவனபோலும் என்பது கருத்து. ஓடுருபு மாற்றிக் கூட்டப்பட்டது. (க௦அ)

தும்பிசில குற்றுயிரொ டாழநிமிர் தொண்டஞ்
செம்புனன் மிசைத்தெரிவ சேர்பதியை யெல்லாம்
வெம்புகுரு திக்கடல் விழுங்க வெகுநாக
மம்புவி மிசைத்தலை நிமிர்த்தனவு மன்ன.

இ-ள். தும்பி சில குற்றுயிரொடு செம்புனல் ஆழ - யானைகள் சிலகுற்றுயிரோடு இரத்தக்கடலில் ஆழ,—நிமிர் தொண்டம் மிசை தெரிவ - நிமிர்ந்த துதிக்கை அவ்விரத்தக்கடலின்மேலே தெரிவன,— சேர் பதியை எல்லாம் வெம்பு குருதிக்கடல் விழுங்க - தாங்கள் இருக்கின்ற ஊரை எல்லாம் இரத்தக்கடல் விழுங்க,—வெகு நாகம் அம்புவிமிசைத் தலை நிமிர்த்தனவும் அன்ன - அனேக பாம்புகள்வந்து பூமியின்மீது தலைகளை நீட்டிய வியல்பினையும் போன்றன. எ-று.

தெரிவ அன்ன என முடிக்க. (க௦க)

சொன்னமலை யிற்றனி யெடுத்துவமை சொல்லி
லின்னமலை யொத்ததென வெங்ஙன முரைக்கேன்
முன்னமலை யிற்பெரிது பட்டுவிழு மூரிக்
கன்னமலை கின்றன கடாமலையை மாதோ.

இ-ள். முன்னம் மலையில் பெரிது பட்டு விழும் - முன்னரே மலையைப் போல மிகவும் இறந்து விழுந்த,— மூரிக் கன்னம் மலைகின்றன கடாமலையை - வலிமையைக்கொண்ட கன்னத்தோடு அலைகின்றனவாகிய மதத்தையுடைய யானைகளுக்கு,—சொன்ன மலையில் தனி எடுத்து உவமைசொல்லில் இன்ன மலை ஒத்தது என எங்ஙனம் உரைக்கேன் - நூல்களிற் சொல்லப்பட்ட மலைகளுக்குள்ளே தனியே (ஒருமலையை) எடுத்து உவமைசொல்லுகில் இன்னமலை ஒப்புடையது என்று எவ்வாறு சொல்லுவேன். எ-று.

மலையை உருபு மயக்கம். (கக0)

உய்த்தமன மெய்த்துதிர வீருளுடை யோடப்
பத்தியி னெருக்கிமகிழ் பாடினபல் லோரி
வைத்தவடி பற்றவெடி வான்ஞமலி மண்ணை
கைத்தலை பிடிப்பவினி தாடின கவந்தம்.

இ-ள். உய்த்த மனம் மெய்த்து உதிர ஈருள் - (உண்ணும்படி) வைத்த மனத்தால் மெச்சப்பட்ட இரத்தக்கடலிலுள்ள ஈரலையுடைய உடம்புகளை,— உடை ஓடப் பத்தியின் நெருக்கி பல் ஓரி மகிழ் பாடின - உடைந்த ஓடங்களின்வரிசைகளைப்போல நெருக்கிச் செலுத்திப் பலநரிகள் மகிழ்ச்சியோடு பாடின,—வைத்த அடி வெடி வால் ஞமலி பற்ற - ஆடும்படி தூக்கி வைத்த அடிகளை நிமிர்த்தியவாலையுடைய நாய்கள் பற்ற,—கைத்தலை மண்ணைப் பிடிப்ப கவந்தம் இனிது ஆடின - கையைப் பேய்கள்பிடிப்பக் கவந்தங்கள் இனிதாகக் கூத்தாடின. எ-று.

வெடிவாய்ஞமலி எனவும் பாடம். இதற்கு ஒலிபொருந்திய (குரைக்கின்ற) வாயையுடைய நாய் எனப் பொருள் கொள்க. உடலோடப்பத்தியின் எனவும் பாடம். (ககக)

கீறுதரு துண்டமுரி யும்படி கிடைத்தே
வேறுதரு வெஞ்சமம் விளைத்தன வெயர்ப்பான்
மீறுகழு குண்டன நிணத்தசையில் வீழும்
பாறுக ளுடன்கழுதை வாகினி பதாகை.

இ-ள். கிடைத்து கீறு தரு துண்டம் முரியும்படி வேறு தரு வெஞ்சமம் வெயர்ப்பான் விளைத்தன - (பொரும்படி) எதிர்த்துக் கீறுகின்ற அலகுகள் முரியும்படி மாறுபாட்டைத்தருகின்ற கொடியபோரைக் கோபத்தோடு செய்தன,—மீறு கழுகு உண்டன நிணத்தசையில் வீழும் - மேற்படுகின்ற கழுகுகள் உண்ட நிணம்பொருந்தியதசையில் விழுகின்றனவாகிய,—பாறுகளுடன் கழுதைவாகினி பதாகை - பருந்துகளோடு காக்கைகள். எ-று.

வேறுதருவெஞ்சமம்விளைத்தன என்பதற்கு இப்போரன்றி அவைகளும் வேறான ஒருபோரைச் செய்தன எனினுமாம். (ககஉ)

துருத்திமடி யிற்புடை தொகைத்தலைகள் சேரா
விருத்திமடி குஞ்சர விறும்பு தொறுமேறு
வருத்திமன மிஞ்சநிமி ரங்கையிணை கொட்டிக்
கிருத்திம வினம்பல குதித்தன கிளைத்தே.

இ-ள். துருத்திமடியின் புடை தொகைத் தலைகள் சேரா இருத்தி - துருத்திமடிப்பைப்போலப் பக்கத்தில் தொகையான தலைகளைச் சேர்த்து வைத்து,—மடி குஞ்சர இறும்புதொறும் ஏறு - இறந்த யானைகளாய மலைகடோறும் ஏறி,—அருத்தி மனம் மிஞ்ச நிமிர் அங்கை இணை கொட்டி - ஆசை மனத்தில் அதிகப்பட நிமிர்த்திய அங்கைகள் இரண்டையும் கொட்டி,—கிருத்திம இனம் பல கிளைத்து குதித்தன - பூதங்கள் பல கூடிக் குதித்தன. எ-று.

உயரமாதலாற் றலைகளைச் சேர்த்து இருத்தி மிதித்து ஏறுவன என்க. பலதலைகளையடுக்கலாற் றுருத்தியின் மடிப்புப்போல் இருந்தன என்பார் துருத்திமடியின் என்றார். கை குழல்போலிருத்தலின் துருத்தி உவமையாயிற்று. துருத்திமடியின்புடைதொகைத்தலைகள்சேரா எனப் பாடங்கொண்டு தோலாகியமடியின்புடையே தொகைத்தலைகளைச் சேரவைத்து எனப் பொருள்கொள்வாருமுளர். அது சிறப்பின்று. (கக௩)

மதித்திடுதன் வெம்படைகள் முற்றுமுயிர் மாயக்
கதித்திடு பெருஞ்சமர் கலிங்கர்பதி காணு
வுதித்திடு பெரும்புகழ் பிலத்திடை யுகைப்பான்
கொதித்திடு முளத்தொடு முரங்குலை குலைந்தே.

இ-ள். மதித்திடுதன் வெம்படைகள் முற்றும் உயிர் மாயக் கதித்திடு பெரும் சமர் - மதிக்கப்படுகின்ற தன்னுடைய படைகள் முழுவதும் இறக்கும்படி மிகுகின்ற போரை,—கலிங்கர்பதி காணு - கலிங்கராசன் கண்டு,—உதித்திடு பெரும்புகழ் பிலத்திடை உகைப்பான் - தோன்றிய பெரிய புகழைப் பிலத்தின்கண்ணே சொரியும்படி,—கொதித்திடும் உளத்தொடும் உரம் குலைகுலைந்து - கொதிக்கின்ற மனத்தோடு வலிமை குலைவுற்று. எ-று. உகைப்பான் குலைகுலைந்து என்க. ஒடு உடனிகழ்ச்சி. குளகம். (ககச)

தாவிது நிகழ்ந்ததினி வேறுதிசை தன்னின்
மேவுது மெனிற்றிசையின் மிஞ்சுவன வன்றால்
யாவது நினைந்துபய னன்று சரணெய்த
லாவதென வென்றிய னலர்ப்பத மடைந்தான்.

இ-ள். இது தா நிகழ்ந்தது - இந்தத்திசையிற் போர்நிகழ்ந்தது,— இனி வேறு திசைதன்னில் மேவுதும் எனில் - இனி வேறுதிசைக்குச் செல்லுதுமெனில்,— திசையில் மிஞ்சுவன அன்று - திசைகளுக்குள்ளே அவன் போகாது மிஞ்சுவன இல்லை,— யாவதும் நினைந்து பயன் அன்று - எதை

நினைந்தும் பிரயோசனமில்லை,—சரண் எய்தல் ஆவது என வென்றியன் அலர்ப்பதம் அடைந்தான் - ஆதலாற் சரண்புகுதலே தக்கதென்று இரகுவின் மலர்போலும் பாதத்தை அடைந்தான். எ-று.

தா - பொருமாம். (கசகு)

அங்கவ னடைந்தபி னரும்பதி கொடுத்தே
பொங்குநிதி கொண்டலைய பூகவரை போகித்
துங்கவுடு வின்வடிவு கொண்டுவரி துன்றுஞ்
செங்கைமுனி தங்கியுள தென்றிசை யடைந்தான்.

இ-ள். அங்கவன் அடைந்தபின் - அவன் - சரணடைந்தபின்பு,—அரும்பதி கொடுத்து பொங்கு நிதி கொண்டு - அரிய நகரை அவனுக்கே கொடுத்துப் பெரிய திரவியத்தைத் திறையாகக்கொண்டு,—அலைய பூகவரை போகி - அலைதலையுடைய கமுகாடவியின் வரைப்பைக்கடந்து சென்று,—துங்க உடுவின் வடிவுகொண்டு உவரி துன்றும் செங்கை முனி தங்கி உள - மேலான நட்சத்திரவடிவின் பிரமாணமானவடிவைக்கொண்டு கடலானது அடங்கிய சிவந்தகையையுடைய அகத்தியர்தங்கியுள்ள,—தென்றிசை அடைந்தான் - தென்றிசையை அடைந்தான். எ-று.

அலைய என்பது அலைதல் என்னும் தொழிற்பெயரடியாகப்பிறந்தபெயரெச்சம். (கசகூ)

பாடுலாம் பரியசெம் பவளச் செங்கனற்
காடுலாங் குளிர்மதுத் தடங்க டந்தெழீஇப்
பீடுலா மோதிமப் பிள்ளைக் கொள்ளையின்
கோடுலாங் காவிரிக் கூலத் தெய்தினன்.

இ-ள். பாடு உலாம் பரிய செம்பவளச் செங்கனற்காடு உலாம் - பெருமைபொருந்திய பரிய சிவந்த பவளமாகிய அக்கினிக்காடு விளங்குகின்ற,—குளிர் மதுத்தடம் கடந்து எழிஇ - குளிர்ச்சிபொருந்திய மதுத்தடாகத்தைக் கடந்து எழுந்து,—பீடு உலாம் ஓதிமப்பிள்ளைக் கொள்ளையின் கோடு உலாம் - பெருமைபொருந்திய அன்னப்பறவைகளின்குஞ்சுக்கூட்டத்தினையுடைய கரைவிளங்குகின்ற,—காவிரிக்கூலத்து எய்தினன் - காவிரியின்கரையை அடைந்தான். எ-று.

மதுத்தடம் - ஓர் தடவிசேடம். கொள்ளை இன்கோட்டில் உலாவும் காவிரி எனினுமாம். (கசஎ)

தொக்கெழு வெங்கயக் கவுட் டுளைப்புற
முக்கன மதமணு முலவி யோடலான்
மைக்கொளுங் கடற்பெரு மகிண ரையமே
கைக்கொள வந்நதி கடந்து போகியே.

இ-ள். தொக்கு எழு வெம் கயக் கவுள் துளைப்புறம் உக்கன மத மணம் உலாவி ஓடலால் - கூட்டமாக எழுந்த கொடியயானைகளின் கதுப்பிலுள்ள துளையின்புறத்தினின்றுஞ்சொரிகின்ற மதமணம் பரந்துசெல்லுதலால்,—மைக்கொளும் கடற் பெரு மகிணர் ஐயம் மனக்கொள - கருமையைக்கொண்ட கடலாகிய பெரிய நாயகர் ஐயமுறும்படி,— அந்நதி கடந்து போகி - அந்த நதியைக் கடந்து சென்று. எ-று.

கைக்கொள கடந்து போகி என இயையும். துளைப்புறம் என்பதற்கு துளையினிடம் எனினுமாம். ஐயம் வேறுநாயகரோடுகூடியிருத்தல்வேண்டுமென்னும் ஐயம். (கக அ)

கொலையொடு கூற்றினை யேவல் கொள்படை
யலையொடு மேவினு னரிய வான்கறி
யிலைதரு மிருளிலா ரீதம் புக்குலா
யுலைதரு மலயவெற் பொளிருஞ் சாரலே.

இ-ள். அரிய வான் கறியிலை தரும் இருளில் - அரிய பெரிய மிளகிலைகள் தந்த இருளினிடத்து,—ஆரிதம் புக்கு உலாய் உலைதரும் - பச்சைக் குருவிகள் புகுந்து உலாவியுலைகின்ற,—மலயவெற்பு ஒளிரும் சாரல் - பொதியமலையினது விளங்குகின்ற சாரலை,—கொலையொடு கூற்றினை ஏவல் கொள்படை அலையொடு மேவினன் - கொலைத்தொழிலோடு இயமனையும் ஏவல்கொள்ளுகின்ற சேனைகளாகிய கடலோடு அடைந்தான். எ-று.

சாரல் மேவினன் என்க. உலைதரும் என்னும் பெயரெச்சம் சாரல் என்னும் இடப்பெயர் கொண்டது. (ககக)

மிடறொகா வுயர்பரி வெள்ளத் தின்குர
மிடறவே லஞ்சிதைந் தெழுந்த நுண்பொடி
யடறவா மதமண மடங்க வானையின்
கொடிறுவார் கரடம தடைத்தல் கூடுமே.

இ-ள் மிடல் தொகா உயர் பரிவெள்ளத்தின் குரம் இடற - வலிமை பொருந்தி உயர்ந்த குதிரைவெள்ளத்தின் குளம்பு இடற,—எலம் சிதைந்து எழுந்த நுண் பொடி - எலமானது சிதைந்து எழுந்த நுண்ணிய பொடிகள்,—அடல் தவா மத மணம் அடங்க - வலிமைகுறையாத மதத்தின் மணம் அடங்கும்படி,—ஆனையின் கொடிறு வார் கரடமது அடைத்தல்கூடும் - ஆனையினது கதுப்பிலுள்ள நீண்ட மதம்பாய்சுவட்டையடைக்கும். எ-று

பொடி அடைத்தல்கூடும்என முடிக்க. அடைத்தல்கூடும்ஒருசொல். (கஉ0)

ஓய்வற வுலம்பொடி யெய்த வுன்னுபு
பாய்கரிக் கபோலம தரிஞ்சப் பன்முறை
தேய்வுறு குங்குமப் பொடிக டிண்பரி
வாய்விளை விலாழியம் பெருக்கை மாற்றுமே.

இ-ள். உலம் பொடி எய்த உன்னுபு ஓய்வு அற பாய்கரிக் கபோல மது உரிஞ்ச - திரண்ட கற்கள் பொடியாகுமாறு (அவற்றைப் பகை என்று) கருதி இடைவிடாது பாய்கின்ற யானையின்கதுப்பானது உரிஞ்ச,— பன்முறை தேய்வு உறு குங்குமப் பொடிகள் - பலமுறை தேய்வடைந்த குங்குமமரங்களினின்றும் விழும் துகள்கள்,—திண் பரி வாய் விளை விலாழி பெருக்கை மாற்றும் - திண்ணிய குதிரைகளின்வாயினின்றும் உண்டா கின்ற விலாழியாற்றின்பெருக்கை மாற்றும். எ-று.

பொடிகள் மாற்றும் என முடிக்க. (கஉக)

ஒழிவற விடதரத் துடலஞ் சுற்றிடக்
குழிவுறு சந்தினிற் கொளீஇய சங்கிலி
யழிதர மலைதரு மசல மங்கையாற்
பொழிதரு நீரினு லருவி பொங்குமே.

இ-ள். ஒழிவு அற விடதரத்து உடலம் சுற்றிட குழிவு உறு - நீக்க மின்றிப் பாம்பினது உடல்சுற்றலாற் குழிவடைந்த,—சந்தினிற் கொளீஇய சங்கிலி அழிதர - சந்தனமரத்திற்பூட்டிய சங்கிலி அறும்படி,—மலை தரும் அசலம் அங்கையால் பொழிதரு நீரினுல் அருவி பொங்கும் - பொரு கின்றயானைகள் அழகியகையாற்பொழிகின்ற மதநீரினுல் அருவிகிளரும். எ-று.

அசலமென்றமையின் அருவிபொங்குமென்றார். (கஉஉ)

மறந்தகு பொருநர்கைக் குந்த வைந்துதி
திறந்திட விறலுடைந் தொழுகுஞ் செய்யதே
னிறந்தகு தூளியாற் கொடியர் நெஞ்சினில்
வறந்தன சுனைகளை நிறைக்கு மண்டியே.

இ-ள். மறம்தகு பொருநர் கைக் குந்த வைநுதி திறந்திட - மறத் தன்மையினுற்றக்க வீரர்களது கையிலுள்ள வேலின் நுதி பிளக்க,—இறால் உடைந்து ஒழுகும் செய்யதேன் - இறால்கிழிந்து ஒழுகின்ற சிவந்ததேன், —நிறம் தகு தூளியால் கொடியர் நெஞ்சினில் வறந்தன சுனைகளை - நிறம் மிக்க தூளியினுற் கொடியோரதுமனம்போல வறந்த சுனைகளை,—மண்டி நிறைக்கும் - மிகுந்து நிறைக்கும். எ-று

தேன் மண்டி நிறைக்கும் என முடிக்க. (கஉங)

தெறுகதிர்க் கடவுள்வா னவனுந் தேசுதாழ்
வுறுதிசைப் பாலினி துறைந்து மோங்கிசை
நறுமலர்த் தொடையலான் வீர நான்மடி
பெறுதலிற் பொறுக்கலா துளத்திற் பேகொடே.

இ-ள். தெறுகதிர்க்கடவுள் வானவனும் தேசு தாழ்வு உறு - இருளை அழிக்கின்ற கிரணங்களையுடையனாகிய சூரியதேவனும் (அஞ்சி) ஒளி குறைதலை யடைகின்ற,—திசைப்பால் இனிது உறைந்தும் - தென்றிசையின் கண்ணே நன்கிருந்தும்,—ஓங்கு இசை நறுமலர்த்தொடையலான் வீரம் நான்மடி பெறுதலின் - உயர்ந்தகீர்த்தியையுடைய நறிய மலர்மாலையையணிந்தவனாகிய இரகு வீரத்தை நான்குமடங்குபெறுதலால்,—பொறுக்கலாது உளத்தில் பேஎொடு - தாங்கலாற்றாது மனத்தில் அச்சமுற்று. எ-று.

உறைந்தும் பொறுக்கலாது பேஎொடு என இயைக்க. உறைந்தும் என்னும் உம்மை எதிர்மறை. சூரியனும் தெற்குநோக்கும்போது பாண்டியருக்கஞ்சி ஒளிகுறையுந்திசை என்றது தற்குறிப்பு. அப்படியானதிசையிலிருந்தும் அத்திசையைநோக்கிவரும் இரகு வீரத்திற்குறையாமையினால் அச்சமுற்றார் என்க. குளகம். பேஎொடு வந்து ஈண்டினார் என கஉஅ-ம் செய்யுளுடன் முடிக்க. (கஉச)

செப்பரு மினிய செந்தமிழின் செஞ்சொலார்
கைப்பன வேம்பினங் காமர் கண்ணிய
ருப்பினிற் கயல்பொறித் துளப தாகையார்
மைப்புய றளைத்தளை யிட்ட வாகையர்.

இ-ள். செப்பு அரும் இனிய செந்தமிழின் செஞ்சொலார் - சொல்லுதற்கரிய இனிய செந்தமிழின் செம்மொழியையுடையவரும்,—கைப்பன வேம்பின் அம் காமர் கண்ணியர் - கைத்தலையுடைய வேம்பின் அழகிய மாலையையுடையவரும்,—உப்பினில் கயல் பொறித்துள பதாகையார் - கடலிலுள்ள கயலை எழுதிய கொடியையுடையவரும்,—மைப்புயறளை தளையிட்ட வாகையர் - கரிய மேகத்தை விலங்கிட்ட வெற்றியையுடையவரும். எ-று.

இனிமை, கைப்பு, உப்பு என்பன சுவைமுரண்தோன்ற நின்றன. புயறளைத்தளையிட்டவன் - உக்கிரபாண்டியன். இதனைத் திருவிளையாடற் புராணத்து இந்திரன்முடிமேல்வளையெறிந்தபடலத்தாலறிக. (கஉரு)

மாறில தமிழ்க்கடற் பெருக்கின் மாட்சியான்
மீறிய குறுமுனி வைகும் வெற்புளா
ரீறில பரம்பொரு ளடைத்தி டப்பெருக்
காறிய நெடியன வைகை யாற்றினர்.

இ-ள். மாறு இல தமிழ்க்கடல் பெருக்கின் மாட்சியால் மீறிய - ஒப்பில்லாத தமிழாகிய கடற்பெருக்கின்மாட்சிமையினால் மேற்பட்ட,—குறுமுனி வைகும் வெற்புளார் - அகத்தியமுனிவரிருக்கும் பொதியமலையையுடையவரும்,—ஈறு இல பரம்பொருள் அடைத்திடப் பெருக்கு ஆறிய - அழிவில்லாத பரம்பொருளாகிய சிவபெருமானடைக்கப் பெருக்குத்தணிந்த,—நெடியன வைகை ஆற்றினர் - நெடிய வைகையாற்றை யுடையவரும். எ-று.

பெருக்கு - வெள்ளம். தமிழ்க்கடற்பெருக்கின் மாட்சியான்மீறிய என்பது தமிழ்க்கடலைப்பெருகச்செய்தலின் மாட்சியினால்மிக்க எனவும்பொருள் கொள்ள நின்றது. அடைத்திட ஆறிய வைகையாற்றினர் எனமுடிக்க. (௧௨௬)

தழலென விருநிலப் பரப்பிற் சந்தத
மழல்கலி பிரிதர வளிக்கு நீதியார்
குழலுடைத் தாட்சரோ ருகங்கு ழீஇயலர்
பழனவண் கூடலம் பதியின் வைகுவார்.

இ-ள். தழல் என இரு நிலப் பரப்பில் சந்ததம் அழல் - அக்கினியைப்போலப் பெரியபூமியின்பரப்பில் நாடோறும் அழலுகின்ற,—கலி பிரிதர அளிக்கும் நீதியார் - தீமைநீங்கும்குடி காக்கும் நீதியையுடையவர்களும்,—குழல் உடை தாள் சரோருகம் குழீஇ அலர் - குழலான தண்டினைக்கொண்ட தாமரைகள்கூடி அலருகின்ற,—பழன வண் கூடலம்பதியின் வைகுவார் - வயல்கள்பொருந்திய அழகிய மதுரைப்பதியிலிருப்பவர்களுமாகிய பாண்டியர்கள். எ-று.

குழல் - உட்டுளை. (௧௨௭)

ஆயிர மொட்டகஞ் சகட மாயிரம்
பாயிரும் பகட்டின மனந்தம் பல்பொருள்
மேயின கொணர்ந்திடா விபுலை வைப்பெலாந்
தோய்புகழ் மன்னவற் றொழுவ ணீண்டினர்.

இ-ள். ஆயிரம் ஒட்டகம் ஆயிரம் சகடம் அனந்தம் பாய் இரும் பகடு இனம் மேயின பல் பொருள் கொணர்ந்திடா - ஆயிரம் ஒட்டகங்களும் ஆயிரம் பண்டிகளும் அனந்தம் பரந்த பெரிய எருமைக்கடாக்களும் தாங்கிய பலபொருள்களையும் கொண்டுவந்து,—விபுலை வைப்பு எலாம் தோய் புகழ் மன்னவற் றொழ வந்து ஈண்டினர் - பூமியினிடமெங்கும் பரந்த புகழையுடைய இரகுமகாராசனை வணங்கும்படி வந்து நெருங்கினர்கள். எ-று.

கொணர்ந்திடா வந்து ஈண்டினர் என இயைக்க. (௧௨௮)

வரம்பிலா வலியினர் மடித்த வாயர்கைப்
பிரம்பினர் மலையினும் பெரியர் செம்மையி
னிரம்பிய கண்ணர்கஞ் சுகியர் நீடிகு
ளுரம்புகல் சொல்லின ருணர்ந்து போயினர்.

இ-ள். வரம்பு இலா வலியினர் - அளவில்லாத வலியையுடையவர்களும்,—கைப் பிரம்பினர் - கையிற் பிரம்பையுடையவர்களும்,—மலையினும் பெரியர் - மலையினும்பார்க்கப் பெருத்த உருவமுடையவர்களும்,—செம்மையின் நிரம்பிய கண்ணர் - சிவப்புநிறத்தால் நிரம்பிய கண்களையுடையவர்களும்,—நீடு இகுள் உரம் புகல் சொல்லினர் - நெடிய இடிபோல வலிதா

கச் சொல்லுகின்ற சொல்லையுடையவர்களுமாகிய,—கஞ்சுகியர் உணர்ந்து போயினர் - கஞ்சுகிமாக்கள் (அவர்வந்த கருத்தை) அறிந்துசென்றார்கள். எ-று. (௧௨௯)

தேசினிற் சிறந்துவிண் ணுயர்ந்து செவ்வியான்
மாசறத் திகழ்பட மண்ட பத்தரி
யாசனத் திருந்தரு ளரச ரேறனு
னேசநற் றாடொழா நின்று கூறுவார்.

இ-ள். தேசினில் சிறந்து விண் உயர்ந்து செவ்வியால் மாசு அற திகழ் பட மண்டபத்து-(அவ்வாறுபோன கஞ்சுகிமாக்கள்) ஒளியாற் சிறந்து ஆகாயத்தில் உயர்ந்து அழகாற் குற்றமற விளங்குகின்ற படாம்மண்டபத்தின்கண்ணே,—அரி ஆசனத்து இருந்தருள் அரசர் ஏறனுன் நேச நற்றாள் தொழா - சிங்காசனத்திலே இருந்த பகையரசர்களுக்குச்சிங்கம்போன்றவனாகிய இரகுவினுடைய அன்புக்குரிய நல்ல பாதகங்களை வணங்கி,—நின்று கூறுவார் - நின்று சொல்லுவார்கள். எ-று.

சிறந்து உயர்ந்து திகழ் மண்டபம் என இயைக்க. (௧௩௦)

மன்னவ நம்படைக் கடலின் வான்கரைத்
தென்னவ ரடைந்தனர் திருவு ளத்துநா
ரென்னகொ லென்னலுங் கொணர்மி னீண்டென
வன்னவ ரன்னவ ரயலின் முன்னினார்.

இ-ள். மன்னவ நம் படைக் கடலின் வான் கரைத் தென்னவர் அடைந்தனர் - அரசனே நமது சேனைக்கடலின் பெரிய கரையில் பாண்டியர்கள் வந்தார்கள்,—திருவுளத்து நார் என்னகொல் என்னலும் - திருவுள்ளத்திற்பொருந்தியவிருப்பம் என்னையோவென்று கேட்டலும்,— ஈண்டு கொணர்மின் என - இங்கே அழைத்துக்கொண்டுவாருங்கள் என்றுசொல்ல,—அன்னவர் அன்னவர் அயலின் முன்னினார் - அவர்கள் அப்பாண்டியர்களின் பக்கத்தையடைந்தார்கள். எ-று. (௧௩௧)

நிகழ்வன தெரியலா தெண்ணி நின்றுநின்
றகமிக வயரன்மி னரச ரீர்பெரும்
புகழுடை மன்னவன் பொறுக்கு நல்லருட்
டகையுளன் வருகுவீ ரென்று சாற்றினார்.

இ-ள். அரசரீர் - அரசர்களே!,—நிகழ்வன தெரியலாது எண்ணி நின்று நின்று அகம் மிக அயரன்மின் - நிகழ்வனவற்றையறியாது ஆலோசித்து நின்றுநின்று மனம் மிகவும் அயர்ச்சிகொள்ளாதீர்கள்,—பெரும் புகழுடை மன்னவன் பொறுக்கும் நல் அருள் தகையுளன் - பெரியபுகழையுடைய அரசன் பொறுக்கின்ற நல்ல அருளாகிய தகைமையுள்ளவன்,—வருகுவீர்

என்று சாற்றினூர் - (ஆகையால் நீர் அஞ்சாது) வருகுவீர்கள் என்று கூறி
னூர்கள். எ-று. (௩௩௨)

மத்தவெற் புவரியும் வயங்கு கொய்யுளை
யுத்தரிச் சலதியு மொளிறு வாட்படை
வித்தகப் புணரியுங் கடந்து வெண்ணிலா
முத்தவெண் குடையினுன் முன்ன ரெய்தினூர்.

இ-ள். மத்தவெற்பு உவரியும் - யானைக் கடலையும்,—வயங்கு கொய்
யுளை உத்தரிச்சலதியும் - விளங்குகின்ற பிடர்மயிரையுடைய குதிரைகளா
கிய கடலையும்,—ஒளிறு வாட்படை வித்தகப் புணரியும் - விளங்குகின்ற
வாட்படைப்போரிலே சாமர்த்தியத்தையுடைய பதாதிக் கடலையும்,—கடந்
து - கடந்து.—வெண்ணிலா முத்த வெண்குடையினுன் முன்னர் எய்தினூர் -
வெள்ளிய நிலாவைவீசுகின்ற முத்துக்களாற்செய்த வெண்கொற்றக்குடை
யையுடையவனுகிய இரகுவுக்குமுன்னரே அடைந்தார்கள். எ-று.

உத்தரி - குதிரை. (௩௩௩)

நாவடித் தொழுகுசெந் தமிழி னற்றுதி
பாவடித் தொடையினுற் புகன்று பாயொளித்
தூவடிச் சமரவே லரசன் சுந்தரச்
சேவடிச் சரோருகஞ் சென்னி சேர்த்தினூர்.

இ-ள். நல் துதி நாவடித்து ஒழுகு செந்தமிழில் அடி தொடைப் பாவி
னுல் புகன்று - நல்ல துதிகளை நாவினுலே தெளிவுசெய்யப்பட்டு ஒழுகு
கின்ற செந்தமிழில் அடிகளைத் தொடுத்தலாலாகிய பாக்களாற் கூறி—
பாய் ஒளித் தூவடிச் சமர வேல் அரசன் சுந்தரச் சேவடிச் சரோருகம் -
பரந்த ஒளியையுடைய தசையைப்பொருந்திய கூரிய போரைக்கொண்ட
வேலை ஏந்திய அரசனது அழகிய சிவந்த அடித்தாமரையை,—சென்னி
சேர்த்தினூர் - சிரசிற் சூடினூர்கள். எ-று.

புகன்று சேர்த்தினூர் என முடிக்க. அடித்தொடை உம்மைத்தொகை
யுமாம். (௩௩௪)

நிறைதரு முவகையி னிமிர்ந்து பல்பொருட்
டிறைகுவை செய்துதஞ் சென்னி மீதினின்
முறைமுறை யிருகரங் குவித்து முன்னுறக்
குறைவில் திருவினூர் கூறன் மேயினூர்.

இ-ள். நிறை தரும் உவகையின் நிமிர்ந்து - நிறைந்த மகிழ்ச்சியினுல்
மிகுந்து,—பல் பொருள் திறை குவை செய்து - பலபொருள்களைத் திறை
யாகக் குவித்து,—முன்னுற முறைமுறை தம் சென்னிமீதினில் இருகரம்
குவித்து - முன்னுக முறைமுறையே தஞ்சிரசில் இருகரங்களையும் குவித்து

வணங்கி,—குறைவு இல திருவினர் கூறன்மேயினர் - குறைவற்ற செல்வத்தையுடைய பாண்டியர்கள் கூறுவாராயினர்கள். எ-று.

முறை முறை குவித்து என இயைக்க. (௩௩௫)

வேறு.

எண்ணின் றுயர்பொன் மேரு விரண்டின் றென்ன விமையோர்
கண்ணின் றுள்ளங் கவைக்குங் காட்சிக் கணிய தாகி
மண்ணின் றிருநாற் றிசையும் வெளவிச் செவ்வி வளத்தால்
விண்ணின் றொளிரிச் செம்பொன் மேரு வரையுங் காண்மோ.

இ-ள். எண் நின்று உயர் பொன் மேரு இரண்டு இன்று என்ன - மதிப்போடு நிலைபெற்று உயர்ந்த பொன்மயமான மேருமலை இரண்டு இல்லையே என்று கருதும்படி,—இமையோர் கண் நின்று உள்ளம் கவைக்கும் காட்சிக்கு அணியதாகி - தேவர்களது கண்ணிலே நிலையுற்று மனத்தைக் கவர்படுத்துகின்ற தோற்றத்திற்கு அண்மையாகி,—மண் நின்று இருநாற்றிசையும் வெளவி - பூமியிலேநின்று எட்டுத்திக்கையும் கவர்ந்து,—செவ்வி வளத்தால் விண் நின்று ஒளிர் - அழகின்வளத்தோடு ஆகாயத்தில் உயர்ந்துநின்று விளங்குகின்ற,—இச் செம்பொன் மேரு வரையும் காண் - இந்த மாற்றுயர்ந்த பொன்னாகிய மேருவரையையுங் காணுதி. எ-று.

என்னக் கவைக்கும் காட்சி என இயையும். ஆகி நின்று ஒளிர் மேரு, நின்று வெளவி ஒளிர் மேரு எனத் தனித்தனி முடிக்க. மோ - முன்னிலையசை. இரண்டின்றென என்பதற்கு இன்றைக்கு இரண்டு உளது என்று கருதும்படி எனப் பொருள்கூறுவாருமுளர். (௩௩௬)

மற்றைக் கிரிக ளெவையு மிதனோ டுவமை வகுக்கிற்
பொற்றைப் படுவ தல்லாற் பொருவுந் தகையு முளவோ
வொற்றைத் திகிரித் தேரோன் வெயிலும் வெளிற வொளிரும்
கற்றைக் கதிர்பெய் வெள்ளிக் கயிலை யிதுவுங் காண்மோ.

இ-ள். இதனோடு உவமை வகுக்கில் - இதனோடு உவமைகூறுகில்,—மற்றைக் கிரிகளெவையும் பொற்றைப்படுவது அல்லால் பொருவும் தகையும் உளவோ - (இஃதல்லாத) மற்றைய மலைகளெல்லாம் சிறுமலைகளின் தன்மையையடைவதேயல்லாமல் உவமையாகுந் தன்மையுமுண்டோ,—ஒற்றைத்திகிரித்தேரோன் வெயிலும் வெளிற - ஒற்றையுருளைபொருந்திய தேரையுடையோனாகிய சூரியனது வெயிலும் வெளிறும்படி,—ஒளிரும் கற்றைக் கதிர் பெய் வெள்ளிக் கயிலை இதுவும் காண் - விளங்குகின்ற கூட்டமாகிய கிரணத்தைவீசுகின்ற வெள்ளிமயமான கயிலைமலை என்னும் இதனையும் காணுதி. எ-று.

வெளிறப் பெய் வெள்ளிக் கயிலை என இயைக்க. செய்யுளாதலிற் சுட்டு முன்வந்தது. (௩௩௭)

எண்ணெண் டிசையு நிறையா விலங்குமதியி னிலவின்
செண்ணங் கருகப் பரந்த சேணிற் றிகழ்வெண் புகழோய்
வண்ணந் தருமா மதிய மணிநின் றொழுகும் வனத்திற்
றண்ணென் றகைய சந்தத் தமிழ்வெற் பிதுவுங் காண்மோ.

இ-ள். எண் எண்திசையும் நிறையா இலங்கு மதியின் நிலவின் செண்ணம் கருகப் பரந்த - எண்ணப்படுகின்ற எட்டுத்திக்கையும் நிறைத்து விளங்குகின்ற சந்திரனது நிலவி னிறங்கருகும்படி பரந்த,—சேணில் திகழ் வெண் புகழோய் - தூரத்தில் விளங்குகின்ற வெள்ளிய புகழையுடையானே,—வண்ணம் தரு மா மதிய மணி நின்று ஒழுகும் வனத்தில் - அழகிய பெரிய சந்திரகாந்தக்கல்லினின்றும் ஒழுகுகின்ற நீரைப்போல,—தண்ணென் தகைய சந்தத் தமிழ் வெற்பு இதுவும் காண் - தண்ணென்கின்ற தகைமையையுடைய சந்தனம் என்று சொல்லும் பொதியமலையாகிய இதனையும் காண்குதி. எ-று.

நிறையாப் பரந்த புகழ் என இயையும். பரந்த புகழ், சேணிற் றிகழ் புகழ் எனத் தனித்தனி கூட்டி முடிக்க. (௩௩அ)

அசைவோ விலதாய் மிளிரா வழலுந் தூப மன்றி
நசையோ டெவருந் தீண்டக் குளிரு நலத்த தாகி
மிசைபோ மெழுமா வுடையோன் வெயிலிற் றிகழும் வில்லுத்
திசைபோய் விரிசெம் பவளச் செந்தீக் குன்றங் காண்மோ.

இ-ள். அசைவு இலதாய் - அசைதலில்லாததாய்,—மிளிரா - பிரகாசித்து,—அழலும் தூபம்அன்றி நசையோடு எவரும் தீண்டக் குளிரும் நலத்தது ஆகி - சுடுகின்ற அக்கினிபோலல்லாமல் விருப்பத்தோடு யாவரும் தீண்டக் குளிருகின்ற நன்மையையுடையதாகி,—மிசை போம் எழு மா உடையோன் வெயிலில் திகழும் - மேலேசெல்லும் ஏழுகுதிரையையுடையவனாகிய சூரியனது வெயிலைப்போல விளங்குகின்ற,—வில்லுத் திசைபோய் விரி செம்பவளச் செந்தீக்குன்றம் - ஒளி திக்கிற்போய்ப்பரக்கின்ற சிவந்த பவளமாகிய அக்கினிமலையென்னும் இதனையும் காண்குதி. எ-று.

இலதாய் மிளிரா ஆகி திகழும் செந்தீக்குன்றம், விரி செந்தீக் குன்றம் எனத் தனித்தனி முடிக்க. தூபமின்றி என்பதற்குப் புகையின்றியெனப் பொருள்கொள்ளலுமாம். தூமமின்றி எனவும் பாடம். (௩௩௯)

காமக் கடவு டானுங் கையேற் றினிதே கவரும்
வாமச் சொரூப முடையோய் விலையின் வரம்பு மதிக்கி
லேமப் படிவ வுலகு மிலங்குங் கனக மேருத்
தாமக் கிரியும் போதாத் தரளச் சயிலங் காண்மோ.

இ-ள். காமக் கடவுள் தானும் கையேற்று இனிது கவரும் வாமச் சொரூபமுடையோய் - மன்மதனும் கையேற்று இனிது வாங்கத்தக்க அளகமைந்த வடிவையுடையானே,—விலையின் வரம்பு மதிக்கில் ஏமப்படிவ உலகும் இலங்கும் கனக மேருத் தாமக் கிரியும் போதா - விலையின் அழவை மதித்தாற் பொன்னுலகமும் விளங்குகின்ற பொன்மயமான மேருவாகிய ஒளிபொருந்தியமலையும் போதாத,—தரளச் சயிலம் காண் - முத்துமலையாகிய இதனையும் காண்குதி. எ-று.

கவரும் என்பது வாமத்தை விசேடித்துவந்தது. மதிக்கில் போதாத் தரளச் சயிலம் என இயைக்க. ஏமப் படிவ உலகம் - பொன்னுலாகிய வடிவத்தையுடைய உலகம்=பொன்னுலகம். (௧௪௦)

பொருளிற் படுவோ ருள்ளம் புலமைப் பெரியோர்ச் சேரிற்
றெருளிற் படுமென் பதனைத் தெளிவித் ததையீ தியாரு
மருளக் கதிரி னீல மணிக்குன் றெங்கும் வழங்கு
மிருளைப் பகல்செய் பதும ராகக் கிரியுங் காண்மோ.

இ-ள். ஈது பொருளிற் படுவோர் உள்ளம் புலமைப் பெரியோர்ச் சேரின் தெருளிற் படும் என்பதனைத் தெளிவித்தது - இது பிரபஞ்சப் பொருள்களில் அமிழ்ந்துவோருடைய மனமயக்கம் அறிவுடைய பெரியோரைச்சேர்ந்தால் தெளிவைப்பொருந்தும் என்பதைக் காண்பித்தது.—யாரும் மருளக் கதிரின் நீல மணிக்குன்று எங்கும் வழங்கும் இருளை - (அங்ஙனம் காண்பித்த) யாவரும் மயங்கும்படி கிரணத்தினால் நீலமணிக்குன்று எங்கும் பரப்புகின்ற இருளை,—பகல் செய் பதுமராகக் கிரியும் காண் - பகலாகச்செய்கின்ற பதுமராகமலையாகிய இதனையுங் காண்குதி. எ-று.

மனம் ஆகுபெயர். கதிரின் வழங்கும் இருள் எனவும், காண்பித்த இதனையும் என்வும் இயையும். இருள் பொருளிற்படுவோருள்ளத்திற்கும் பகல் தெருளுக்கும் உவமை. இது நிதரிசனமென்னுமலங்காரம். (௧௪௧)

முதிர்வா ணகைவே லுரவோய் மொய்க்குங் கதிரோன்படங்க
ளிதுகா ணிரவி வலய மென்ன வொளிர்வ திப்பா
லதுகா ணவனா லுடையு மல்லை விளைப்ப தப்பா
லதுகா ணவன்மா வதன்மெய் யொளியிற் றிகழ்கிற்பதுவே.

இ-ள். முதிர் வாள் நகை வேல் உரவோய் - மிக்க ஒளியையுடைய பிரகாசமான வேலையேந்திய வலியோனே,—இது மொய்க்கும் கதிரோன் படங்கள் இரவி வலயம் என்ன ஒளிர்வது - இது செறிந்த சூரியனுடைய பிரதிவிம்பங்கள், சூரியமண்டலம்போலப் பிரகாசிக்கின்றது பார்க்குதி,—இப்பால் அது அவனால் உடையும் அல்லை விளைப்பது காண் - இப்பாலுள்ள அது அவனால் உடைகின்ற இருளை உண்டாக்குவது பார்க்குதி,—அப்பால் அது அவன் மா அதன் மெய்யொளியில் திகழ்வது காண் - அப்

பாலுள்ள அது அவனுடைய குதிரையின்மெய்யொளிபோல விளங்குவது பார்க்குதி. எ-று.

படம் - மாணிக்கம்; ஆகுபெயர். இதனால் மாணிக்கம், நீலம், மரகதம் என்னும் மூன்றும் முறையே கூறப்பட்டது. (கசஉ)

வேறு

என்றரும் பொருள்க ளெல்லா மின்னண மிசைத்துக் காட்டி
நின்றவந் நிருபர் தங்கட் கருட்பெரு நிதிய மீந்து
குன்றது கடந்து போகித் தர்த்துரக் குவடு நீங்கி
மன்றலஞ் சோலைச் சைய மால்வரை மருங்கு சார்ந்தான்.

இ-ள். என்று அரும் பொருள்கள் எல்லாம் இன்னணம் இசைத்துக் காட்டி நின்ற அ நிருபர் தங்கட்கு - என்று அரிய பொருள்களையெல்லாம் இவ்வாறு சொல்லிக் காண்பித்துநின்ற அவ்வரசர்களுக்கு,—அருள் பெரு நிதியம் ஈந்து - அருளாகிய பெரிய திரவியத்தைக் கொடுத்து,—அது குன்று கடந்து போகி - அம்மலையைக்கடந்து சென்று,—தர்த்துரக்குவடு நீங்கி - தர்த்துரமலையையும் நீங்கி,—மன்றலஞ் சோலை மால் சைய வரை மருங்கு சார்ந்தான் - வாசனைபொருந்திய சோலைசூழ்ந்த பெரிய சையகிரி யின்பக்கலை அடைந்தான். எ-று.

அம் - சாரியை. (கசங)

கண்ணினுக் கெட்டா தென்னக் கருத்தினிற் கணித்து வேதன்
விண்ணினுக் களவாய் வைத்த மானதண் டனைய வெற்பின்
மண்ணினைச் சயத்தால் வென்று வானையும் வெல்வ னென்னு
மெண்ணுறச் செல்வான் போல விசையொடு மேறி னானே.

இ-ள். வேதன் பிரமா,—கண்ணினுக்கு எட்டாது என்னக் கருத்தினின் கணித்து - கண்ணின் அளவைக்கு எட்டாது என்று மனத்தினால் (அதன் அளவைக்) கணித்து,—விண்ணினுக்கு அளவாய் வைத்த மானதண்டு அனைய வெற்பில் - ஆகாயத்துக்களவாய்ச் செய்துவைத்த அளவுகோலையொத்த (சைய) மலையின்மேல்,—மண்ணினைச் சயத்தால் வென்று - பூவுலகை வெற்றி யோடு வென்று,—வானையும் வெல்வன் என்னும் எண்ணுறச் செல்வான் போல - வானுலகையும் வெற்றிகொள்வேனென்னும் எண்ணம்பொருந்த ஏறிச்செல்பவனைப்போல,—இசையொடும் ஏறினான் - கீர்த்தியோடும் ஏறி னான். எ-று.

வெற்பில் ஏறினான் என இயையும். கட்பார்வைக்கு இது அளவு படாது என்றுகருதி மனத்தால் இவ்வளவென்று கணித்து ஆகாயத்துக் களவாகச் செய்துவைத்த ஒரு அளவுகோலைப்போன்ற மலை என்க. இவ் வாறன்றி, கண்ணினுக்கெட்டாது என்று மனதிற்கருதி விண்ணினை அளக் கும்படியாகவைத்த ஒரு அளவுகோலையொத்த மலை என்பாருமுளர். அத

ற்கு விண்ணினுக்களவாய் என்னும் பாடமியையின்மையறிக. விசையொடு மேறினன் எனக் கண்ணளித்துப் பொருள்கூறினுமமையும். (௧௪௪)

பொலங்குழை மகளிர் மைக்கண் பாய்தொறும் புதிய நீல
மலங்கவைத் திழைத்த தென்ன வவிரொளி யம்பொற் றாரான்
விலங்கலி னுச்சி வெய்யோன் வெம்பரி யாற மேனின்
றிலங்கெழிற் கோட்டு வென்றி யிலாஞ்சினை பொறித்திட் டானே.

இ-ள். பொலம் குழை மகளிர் மைக்கண் பாய்தொறும் - பொன்னு லாகிய குண்டலத்தையணிந்த மகளிரது மையெழுதிய கண்கள் பாயுந்தோறும்,—புதிய நீலம் அலங்க வைத்து இழைத்தது என்ன அவிர் ஒளி அம் பொன் தாரான் - புதிய நீலரத்தினங்களை அசையும்படி (வைத்துத்) தொடுத்தாற்போல விளங்குகின்ற ஒளிபொருந்திய அழகிய பொன்னாற்செய்த மாலையையுடையனாகிய இரகு,—விலங்கலின் உச்சி வெய்யோன் வெம்பரி ஆற மேல் நின்று இலங்கு எழில் கோட்டு - மலையினுச்சியிலே சூரியனுடைய வெவ்விய குதிரைகள் ஆறும்படி மேலே உயர்ந்து விளங்குகின்ற சிகரத்தின்கண்,—வென்றி இலாஞ்சினை பொறித்திட்டான் - வெற்றிலாஞ்சினையை எழுதினான். எ-று.

பாய்தொறும் அவிர் பொற்றார் என இயைக்க. (௧௪௫)

சொன்மலை புலவர் நாவாற் சொல்லலாந் தொகைப்ப டாத
வின்மலை யோடை நெற்றி வெம்மலை யனந்தஞ் சூழப் [ர்
பொன்மலை யொன்று வல்லே பொருக்கென வெழுந்து போந்தோ
கொன்மலை யிழிந்த தென்னக் குன்றது தணந்து போந்தான்.

இ-ள். சொல் மலை புலவர் நாவால் சொல்லல் ஆம் தொகைப்படாத- சொற்களால் வாதுபோர்செய்கின்ற புலவருடைய நாவினாற் சொல்லக் கூடிய தொகையிலடங்காத,—வில் மலை ஓடை நெற்றி வெம்மலை அனந்தம் சூழ - ஒளிபொருந்திய பட்டத்தையணிந்த நெற்றியையுடைய கொடிய யானைகள் அனந்தம் சூழும்படி,—பொன்மலை ஒன்று வல்லே பொருக்கென எழுந்து போந்து ஓர் கொன் மலை இழிந்தது என்ன - மேருமலை ஒன்று மிகவிரைந்து எழுந்துபோய் ஓர்பெரிய மலையிலேறிச்சென்று இறங்கினாற் போல (இறங்கி),—அது குன்று தணந்து போந்தான் - அம்மலையைநீங் கிப்போனான். எ-று.

சூழ எழுந்து போந்து இழிந்ததென்னத் தணந்து போந்தான் என இயைக்க. (௧௪௬)

வாசத்தண் டொடையல் வாகு வாளப ராந்தர் தம்பா
னேசத்தோ டிருந்த விந்தை நெடுமலை நோக்கத் தன்கைப்
பூசற்றிண் சரத்தை நோக்கிப் போற்றுபு கூற்றந் தன்கைப்
பாசத்தை நோக்கத் தானும் பச்சிம நோக்கி னானே.

இ-ள். வாசத் தண் தொடையல் வாகு வாள் அபராந்தர் தம்பால் நேசத்தோடு இருந்த விந்தை - வாசனைபொருந்திய தண்ணிய மாலையையணிந்த புயத்தையுடைய வாளைஏந்திய அபராந்தர்களிடத்தில் விருப்போடிருந்த வீரலக்குமி,—நெடு மலை நோக்க - நெடியமலையைநோக்கவும்,—தன் கைப் பூசல் திண் சரத்தை நோக்கிப் போற்றுபு கூற்றம் தன் கைப் பாசத்தை நோக்க - தன்னுடைய கையிலுள்ள போரையுடைய திண்ணிய அம்பைநோக்கித் துதித்து இயமன் தன்கையிலுள்ள பாசத்தைநோக்கவும்,—தானும் பச்சிமம் நோக்கினன் - தானும் மேற்குத்திசையை நோக்கினன். எ-று.

விந்தை மலையைநோக்க, கூற்றன் பாசத்தைநோக்க, தானும் பச்சிமம் நோக்கினன் என இயையும். செய்வெனெச்சங்கள் காரியப்பொருளன. அச்சமுற்றோர் மலைக்கு ஒளிக்கச் சேறலின் மலையைநோக்க என்றார். இனித் தனக்குரிய மலையைநோக்க எனினுமாம். (கசஎ)

அடித்துகண் மாட மேறி யடலப ராந்தர் தங்கள்
வடிக்கணார் வாசச் செந்தேன் மலர்க்குழல் பிடிக்கக் கீர்த்தி
நடித்துவிண் பிடிக்கப் போகி முரலைநன் னதியின் கூலம்
பிடித்தன னடங்கா ரச்சம் பிடித்திடப் பிடித்த வேலான்.

இ-ள். அடித்துகள் மாடம் ஏறி அடல் அபராந்தர் தங்கள் வடிக்கணார் வாசச் செந்தேன் மலர்க்குழல் பிடிக்க - பாததூளியானது மாடத்திலேறி வலிய அபராந்தர்களுடைய மனைவியர்களது வாசனைபொருந்திய சிவந்த தேனையுடைய மலரையணிந்த கூந்தலிற் பிடிக்கவும்,—கீர்த்தி நடித்து விண் பிடிக்க - கீர்த்தியானது நடித்து ஆகாயத்தைப்பற்றிக்கொள்ளவும்,—போகி - சென்று,—நல் முரலைநதியின் கூலம் பிடித்தனன் - நல்ல முரலாநதியினது கரையையடைந்தான்,—அடங்கார் அச்சம் பிடித்திடப் பிடித்த வேலான் - பகைவர் அச்சம்பிடிக்க (க் கையிற்) பிடித்த வேலையுடைய வணுகிய இரகுமகாராசன். எ-று.

பிடிக்க பிடிக்கப் போகி பிடித்தான் என முடிக்க. (கசஅ)

மின்னகு படைகொ ளொண்கை விறன்மிகு படைஞர் தங்கள்
பொன்னணி கவச மேல்வெண் புதுப்படா மணிந்த தொப்பக்
கன்னியங் கைதைத் தாது கால்வருந் தாது சேர்த்த
வந்நதி கடந்தா னென்ன ரமர்க்கடல் கடந்து ளானே.

இ-ள். மின் நகு படைகொள் ஒண்கை விறல் மிகு படைஞர்தங்கள் பொன் அணி கவசமேல் - ஒளிவிளங்குகின்ற படையைக்கொண்ட ஒள்ளிய கையையுடைய வலிமைமிக்க படைவீரர்களது பொன்னால் அலங்கரிக்கப்பட்ட சட்டையின்மேல்,—புது வெண் படாம் அணிந்தது ஒப்ப - ஒரு புதிய வெள்ளைவஸ்திரத்தை அணிந்தாற்போல,—கன்னி அம் கைதைத் தாது கால் வருந்தாது சேர்த்த - அழிவில்லாத தாழைகளது மகரந்தங்களை

வாயுவருத்தமின்றிச் சேர்த்திட,—அந்நதி கடந்தான் - அந்நதியைக்கடந்து சென்றான்,—ஒன்னார் சமர்க்கடல் கடந்துளான் - பகைவரது போர்க்கடலைக் கடந்தவனாகிய இரகுமகாராசன். எ-று.

ஒப்ப, சேர்த்த, கடந்தான் என முடிக்க. இதில் கன்னியகங்கைதைத் தாதைக்கால்வருந்தாமற்சேர்த்த எனவுமொருபொருள் தோன்றிநின்றது. கால் - பாதம். (௧௪௯)

ஈட்டிகற் பரசி ராமற் கிடங்கொடுத் தகன்ற முந்நீர்
மீட்டொலி வேலை யாறும் விழுத்துணை யாக மீக்காய்க்
கூட்டுபு பரந்த தென்னக் குழூஉக்கொடு புக்க கொற்ற
வாட்டடந் தானை நோக்கிச் சிலவருண் மருண்டு போனார்.

இ-ள். ஈடு இகல் பரசிராமற்கு இடம் கொடுத்து அகன்ற முந்நீர் - பெரிய வலியையுடைய பரசிராமனுக்கு இடங்கொடுத்துச்சென்ற கடலானது,—மீட்டு ஒலி வேலை ஆறும் விழுத்துணையாகக் கூட்டுபு மிக்காய் பரந்ததென்ன - மீள ஒலிபொருந்திய ஆறுகடல்களையும் சிறந்த துணையாகக் கூட்டிக்கொண்டு மிக்குப்பரந்து வந்தாற்போல,—குழூஉக் கொடு புக்க கொற்ற வாள் தடம் தானை நோக்கி - கூட்டத்தோடுபுகுந்த வெற்றியையுடைய வாளையேந்திய விசாலமான சேனைகளைப்பார்த்து,—சிலவர் உள் மருண்டு போனார் - சிலர் மனமயங்கி ஓடிப்போனார்கள். எ-று.

மீக்காய் - விகாரம். என்ன புக்க தானை என இயையும். இடங்கொடுத்தகன்ற என்றது மழுவெறிந்து மலையாளமுண்டாக்கிய சரித்திரத்தை. (௧௫௦)

நைகுவ தன்றி வேறோர் நல்லரண் டேடிச் சேமஞ்
செய்குவ தன்றெம் மாவி தீர்வதே திண்ணந் திண்ண
முய்குவ தென்னு மாசை யுடன்கொடு போகி யெங்கே
வைகுவ மென்னே யென்னே வந்தது கூற்றம் கூற்றம்.

இ-ள். நைகுவது அன்றி வேறோர் நல் அரண் தேடிச் சேமம் செய்குவதன்று - வருந்துவதன்றி வேறொரு நல்ல புகலிடத்தை நாம்தேடி (நம்மைக்) காவல்செய்தல்கூடாது.—எம் ஆவி தீர்வதே திண்ணம் திண்ணம் - ஆகையால் எம்முயிர் நீங்குவதே நிச்சயம் நிச்சயம்,—உய்குவது என்னும் ஆசை உடன்கொடு போகி எங்கே வைகுவம் - நம் உயிர் உய்தற்குரிய ஆசையை உடன்கொண்டுசென்று எங்கே ஒளித்து இருப்பேம்,—என்னே என்னே வந்தது கூற்றம் கூற்றம் - இது என்னே? இது என்னே? வந்தது இயமன் வந்ததுஇயமன். எ-று.

நாங்கள் வேறோர் புகலிடம் தேடிக்காத்தல் கூடாது. ஆகையால் எம் உயிர்நீங்குதல் நிச்சயம். ஏனெனில் ஒளிக்க இடமுமில்லை இயமன்வந்து விட்டது என்றார்கள் என்பது கருத்து. கூற்றம் கூற்றம் என்னும் அடுக்கு

அச்சம்பற்றிவந்தது. என்னே என்னே என்னும் அடுக்கு மிகுதிபற்றிவந்தது. வந்தது என்பதைப் பின்னுங் கூட்டுக. (௩௯௧)

குடகட றொட்டு மற்றைக் குணகட லளவுங் கொள்ளத்
தடவரை படுத்து மேனுந் தடுப்பது மல்ல வல்ல
வடகட னோக்கித் தெற்கி னின்றிடும் வடவை முன்னே
விடமொடு செலுத்தி யந்தோ வந்தது வேலை வேலை.

இ-ள். குடகடல் தொட்டு மற்றைக் குணகடல் அளவும் கொள்ள தடவரை படுத்துமேனும் - மேற்றிசைக்கடல்தொடங்கி மற்றைய கீழ்க்கடல் வரைக்கும் பொருந்தப் பெரியமலையை அடுக்குவோமாயினும்,—தடுப்பதும் அல்ல அல்ல - தடுப்பதும் கூடாது கூடாது,—வடகடல் நோக்கித் தெற்கில் நின்றிடும் வடவை முன்னே விடமொடு செலுத்தி - வடகடலைநோக்கித் தென்கடலில்நிற்கின்ற வடவாமுகாக்கினியை முன்னே நஞ்சோடு செலுத்தி,—அந்தோ வந்தது வேலை வேலை - ஐயோ! வந்ததுகடல் வந்தது கடல். எ-று

வடவை - கோபம். விடம் - கொலைத்தொழில். (௩௯௨)

இச்சையிற் போகந் துய்த்திட் டின்னலொன் றின்றி மற்றை
நச்செயிற் றரவந் தாங்கு ஞாலத்தார் வாழ்க வாழ்க
வச்சமற் றழிவி லாத வாக்கம்பெற் றினிது வாழும்
பச்சிமத் தெங்கட் கையோ விளைந்தது பாவம் பாவம்.

இ-ள். இச்சையின் போகம் துய்த்திட்டு இன்னல் ஒன்று இன்றி - விரும்பியபடி போகத்தை அனுபவித்துத் துன்பஞ் சிறிதுமின்றி,—மற்றை நஞ்சு எயிற்று அரவம் தாங்கும் ஞாலத்தார் வாழ்க வாழ்க - மற்றைய நஞ்சுபொருந்திய பற்களையுடைய (சேஷனாகிய) பாம்பினாற்றாங்கப்படும் பூமியிலுள்ளார் வாழுக வாழுக,—அச்சம் அற்று அழிவிலாத ஆக்கம் பெற்று இனிது வாழும் பச்சிமத்து எங்கட்கு - அச்சம் இல்லாமல் அழிவில்லாத செல்வத்தைப்பெற்று இனிதாக வாழுகின்ற மேற்றிசையிலுள்ள எங்களுக்கு,—ஐயோ விளைந்தது பாவம் பாவம் - ஐயோ உண்டாயது பாவம் உண்டாயது பாவம். எ-று.

அச்சமற்றுவாழும், ஆக்கம்பெற்றுவாழும் எனத் தனித்தனி கூட்டி முடிக்க. (௩௯௩)

கட்டுண்ட வுதரச் செந்தீ கனன்றிடக் கையேற் றோர்கட்
கிட்டுண்டு வாழார் நம்மூ ரிருந்தனர் போலும் போலு
மட்டுண்டு வாழ்வே மல்லே மாருயி ரதனை யந்தோ
கெட்டுண்டு படுவ தாகச் சூழ்ந்தது கேடு கேடு.

இ-ள். கட்டுண்ட உதரச் செந்தீ கனன்றிட கையேற்றோர்கட்கு - அடிப்பட்ட உதராக்கினிசுட (ப்பசித்துவந்து) கையேற்றவர்களுக்கு,—இட்டு

உண்டு வாழார் நம்மூர் இருந்தனர் போலும் போலும் - கொடுத்து உண்டு வாழாதவர்கள் நம்மூரிலிருந்தார்கள்போலும் போலும்,—அட்டு உண்டு வாழ்வேம் அல்லேம் - இனி நாம் அட்டு உண்டு சீவிப்பேமல்லேம்,—அந்தோ ஆருயிரதனை கெட்டுண்டு படுவதாகச் சூழ்ந்தது கேடு கேடு - ஐயோ அரிய உயிரைக் கேடடைந்துபடுவதாகச் சூழ்ந்துகொண்டதுகேடு சூழ்ந்துகொண்டது கேடு. எ-று.

உயிரதனைச் சூழ்ந்தது என இயையும். இட்டுண்டு வாழாதார் இருந்தபடியாற்றான் நமக்குக் கேடுசூழ்ந்தது என்பது கருத்து. அடுதல் - உணவாக்கல். (௩௰௪)

எனவிஃ துரைத்து வல்லே யெய்தியாங் கீறொன் றில்லாத்
தனவப ராந்த ரென்னுங் கேரள ரடியிற் றாழா
வினையது விளைவ தெல்லா மிக்கெடுத் துரைத்த லோடுஞ்
சினவனல் செங்கட் சிந்தச் சீறுபு செப்புகின்றார்.

இ-ள். என இஃது உரைத்து வல்லே எய்தி - என்று இவற்றைச் சொல்லி விரைந்துசென்று,—ஆங்கு ஈறு ஒன்று இல்லாத் தன அபராந்தர் என்னும் கேரளர் அடியில் தாழா - அங்கே முடிவுசிறிதுமில்லாத செல்வத்தையுடைய அபராந்தரென்னுஞ்சேரர்களது பாதங்களில் வணங்கி,—வினையது விளைவது எல்லாம் மிக்கு எடுத்து உரைத்தலோடும் - தீங்கின்சம்பவத்தையெல்லாம் மிகவும் எடுத்துச்சொல்லிய அளவில்,—சின அனல் செங்கண் சிந்த சீறுபு செப்புகின்றார் - கோபாக்கினி சிவந்தகண்களினின்றுஞ் சிந்தக் கோபித்துச் சொல்லுகின்றார்கள். எ-று.

தாழா உரைத்தலோடும் சீறுபு செப்புகின்றார் என முடிக்க. விளைவது என்பதில் அது பகுதிப்பொருள்விகுதி. (௩௰௫)

வசைவிடா தன்று தோற்ற வச்சிரக் கரத்தி னான்றன்
றிசைவிடா ரோடு தென்பாற் செந்தமிழ்ப் புலவர் போல
நசைவிடா நிதியக் குன்ற நற்றிறை யளித்தற் காட
லிசைவிடா ரகுவேந் தற்கே யாங்களு மெளியம் போலும்.

இ-ள். வசை விடாது அன்று தோற்ற - வசைநீங்காது அன்று தோல்வியடைந்த,—வச்சிரக்கரத்தினான்றன் திசைவிடாரோடு தென்பால் செந்தமிழ்ப்புலவர்போல - கீழ்த்திசையிலுள்ளவரையும் தென்றிசையிலுள்ள செந்தமிழ்ப்புலவர்களாகிய பாண்டியர்களையும்போல,—நசை விடா நிதியக் குன்றம் நல் திறை அளித்தற்கு - அவாநீங்காத நிதிக்குன்றை நல்ல திறையாகக் கொடுத்தற்கு,—ஆடல் இசை விடா இரகுவேந்தற்கு யாங்களும் எளியம்போலும் - போர்வெற்றியால்வரும் புகழ்நீங்காத இரகுமகாராசனுக்கு யாங்களும் எளியேம்போலும். எ-று.

போல அளித்தற்கு எளியம் போலும் என இயைக்க. போல என்பதை எளியம் என்னும் குறிப்புவினைமுற்றின் விகுதியோடு முடித்தலுமாம். உம்மை சிறப்பு. (௩௰௬)

கருதிசைப் பாழி வேற்கைக் காவலன் கடந்த வந்த
விருதிசைப் புனைந்த வாகை யெம்வயி னாக விப்பாற்
பொருதிசைப் புகுந்த வாகை புனையுமேற் புனைக பின்ன
ரொருதிசைப் புகுந்தி யாமே யோங்கமர் மலைக லேமே.

இ-ள். கருது இசைப் பாழி வேல் கைக் காவலன் கடந்த - கருதப்படும் கீர்த்தியையுடைய பருத்த வேலையேந்திய கையையுடைய அரசன் வென்றெடுத்த,—அந்த இருதிசைப் புனைந்த வாகை எம்வயினாக - அந்த இருதிசையிலுஞ்சூட்டியவெற்றி எம்மிடத்திலாகுக,—இப்பால் பொருது இசைப் புகுந்த வாகை புனையுமேல் புனைக - (அல்லது) இவ்விடத்துப் பொருது சொல்லப்பட்ட வெற்றியைச்சூடுவோனாயிற் சூடுக,—பின்னர் ஒரு திசைப் புகுந்து யாம் ஓங்கு அமர் மலைகலேம் - பின்னர் ஓர் திசையிலுள்ளாரையும் போலப்புகுந்து யாம் போர்செய்யேம். எ-று.

எனவே போர்செய்து பின் சரண்புகுதல் செய்யேம் என்றபடி. திசை ஆகுபெயர். (௧௫௭)

பூணித்தங் கினைய கூறிப் போர்முர சதிரப் பொற்பா
லேணிற்றங் கியபோர் விந்தை யெளிதினி லிருகை யேந்திச்
சேணிற்றங் கியபேர் வாகை கொணர்ந்துகைச் சேர்த்த தாகிற்
பாணித்த லென்னோ வென்னு வெழுந்தனர் பாழி வேலோர்.

இ-ள். பூணித்து அங்கு இனைய கூறி - மனமுறுதிப்பட்டு அங்கே இவற்றைச்சொல்லி,—போர் முரசு அதிர - போர்முரசு ஒலிக்க,—பொற்பால் எணில் தங்கிய போர் விந்தை எளிதினில் இருகை ஏந்தி சேணில் தங்கிய போர் வாகை கொணர்ந்து கை சேர்த்ததாகில் - அழகோடு இறுமாப்பின்கண்ணேபொருந்திய போரில் வெற்றியைத்தரும் வீரலக்குமி இலகுவாக இருகையிலும் தாங்கிக்கொண்டுவந்து வலிந்து பெறக்கூடிய போர் வெற்றியை எமதுகையிலே சேர்த்துவிட்டதேயாயின்,—பாணித்தல் என்னோ என்னு எழுந்தனர் - தாமதித்தல் என்னையோ என்று (போர்க்கு) எழுந்தார்கள்,—பாழி வேலோர் - பெரிய வேலையேந்திய அரசர்கள். எ-று.

கூறி எழுந்தார், அதிர எழுந்தார், என்னு எழுந்தார் எனத் தனித் தனி முடிக்க. பூணித்தல் - மனம் பூணுதல். பூணுதல் - கட்டுப்படுதல் = உறுதிப்படல். (௧௫௮)

துடிகுட முழவு சங்கந் துந்துபி படகம் பேரி
யிடியென வதிரச் சேனை யெழுகடன் மருங்கு சூழ
வடிநுனைப் போர்வே லேந்திக் கூற்றமு மருள வார்த்துக்
கடிகைய தொன்றின் வென்றி காண்குவ மென்ன வந்தார்.

இ-ள். துடி குடமுழவு சங்கம் துந்துபி படகம் பேரி இடியென அதிர - துடியும் குடமுழாவும் சங்கும் துந்துபியும் படகமும் பேரியும் இடி

போல ஒலிக்க,—சேனை எழுகடல் மருங்கு சூழ - சேனைகளாகிய எழுகடல்களும் பக்கத்தேசூழ,—வடி நுனைப் போர் வேல் ஏந்தி - கூரிய நுதிபொருந்திய போரையுடைய வேலைத்தாங்கி,—கூற்றமும் மருள ஆர்த்து - இயமனும் மயங்க ஆரவாரித்து,—ஒன்று கடிகையதில் வென்றி காண்குவம் என்ன வந்தார் - ஒருநாழிகைபொழுதினுள்ளே வெற்றிகாண்குவேமென்று வந்தார்கள். எ-று.

கூற்றமும் என்பதில் உம்மை சிறப்பு. (சுருகு)

வேறு.

ஏல வேழுல கமுமிரி தரவட தென்றிசை யிருகாலும்
வேலை யேழொடுங் கிளர்ந்தச லங்களை வேர்பறித் திடமேக ,
சால மாமழைத் தாரைக டாக்குபு தம்மின்மிக் கெதிர்தாக்கிக்
கால வீறுறப் பெருஞ்சமர் விளைத்தென விளைந்தது கடும்போரே.

இ-ள். ஏல ஏழுலகமும் இரிதர வட தென் திசை இருகாலும் வேலை ஏழொடுங் கிளர்ந்து அசலங்களை வேர் பறித்திட - மிகவும் ஏழுலகமும் புறங்கொடுக்கும்படி வடதிசையிலுந் தென்றிசையிலுமுள்ள இரண்டுகாற்றும் கடல்களேழோடுங்கிளர்ந்து மலைகளைவேரோடுபிடுங்க,—மேகசாலம் மாமழைத்தாரைகள் தாக்குபு தம்மின் மிக்கு எதிர் தாக்கிக் கால ஈறுறப் பெருஞ்சமர் விளைத்தென - மேகக்கூட்டங்கள் பெரிய மழைத்தாரைகளைச் சொரிந்து தம்முள்ளேமேற்பட்டு எதிரேபொருது ஊழிஉண்டாகப் பெரிய போரைச்செய்தாற்போல,—கடும்போர் விளைந்தது - (இருபக்கத்துச்சேனைகளுக்கும்) கடியபோர் உண்டாயது. எ-று.

இரிதரக் கிளர்ந்தது என இயைக்க. (சுகூ0)

வரைக ளேயெதிர் பொருவன மற்றில மதியிலீர் வளர்வேலைத்
திரைக ளேயெதிர் பொருவன வென்னையே செய்யன செழுமேக
நிரைக ளேயெதிர் பொருவன வெனவுயர் நிலையவர் தடுமாற்ற [ம்.
வுரைக ளேயெழ யானைமாத் தேர்பல வெதிர்ந்தன வுழையெல்லா

இ-ள். வரைகளே எதிர் பொருவன (என) - மலைகளே எதிராகப்பொருகின்றன என்றும்,—மதியிலீர் மற்றில வளர் வேலைத் திரைகளே எதிர் பொருவன (என) - அறிவிலீர் பிறவல்ல வளராநின்ற கடற்றிரைகளே எதிரேபொருகின்றன (என்றும்),—என்னையே செய்யன செழு மேக நிரைகளே எதிர் பொருவன என உயர்நிலையவர் தடுமாற்ற உரைகள் எழ - இது என்ன ஆச்சரியம்? செவ்விய செழியமேகத்தின்நிரைகளே எதிரேபொருகின்றன என்றும் (இவ்வாறு) தேவர்களது தடுமாற்றமான வார்த்தைகள்தோன்ற,—உழையெல்லாம் யானை மாத் தேர் பல எதிர்ந்தன - இடங்களெல்லாம் யானைகளும் குதிரைகளும் தேர்களும் பலவாக (ஒன்றோடொன்று) எதிர்த்துப் போர்செய்தன எ-று.

என என்பதை முன்னுங் கூட்டுக. என எழ எதிர்ந்தன என இயை யும். இறுதி ஏகாரம் அசைநிலை. மற்றையமூன்றும் பிரிநிலையோடு தேற்ற முமாம். (கசுக)

தவ்வி யோடுவ தலைத்தலைப் படுப்பன தகுமுனைத் தலைதம்மிற்
கவ்வி வீழ்வன காந்தெரி காட்டுவ களத்திடை காணுமே
நொவ்வி லாதன பொருவன வாளியே யாயின நோக்கோடா
தெவ்வி யாவையு நின்றன நின்றன விருபுடை நிமிர்ந்தம்மா.

இ-ள். தவ்வி ஓடுவ - பாய்ந்து ஓடுவனவும்,—தலைத்தலைப் படுப்பன - இடந்தோறும் (ஒன்றையொன்று) அழிப்பனவும்,—தகு முனைத்தலை தம் மில் கவ்வி வீழ்வன - தக்க முனைத்தலைகளைத் தம்முள்ளே கவ்விவிழுவன வும்,—காந்து எரி காட்டுவ - காந்துகின்ற அக்கினியைக்காட்டுவனவுமாகி,— களத்திடை காணுமே நொவ்விலாதன பொருவன வாளியே ஆயின -போர் க்களம் காணப்பெறுது வருத்தமில்லாதனவாய்ப் பொருகின்ற பாணங்க ளேயாயின,—நோக்கு ஓடாது எவ் யாவையும் இருபுடை நிமிர்ந்து நின்றன நின்றன - (அதனால்) கட்பார்வைதானும் நுழையாதபடி எப்பாணங்களும் நிலைப்பொருள்போல இருபக்கத்திலும் நிமிர்ந்துநின்றன. எ-று.

காட்டுவனவாய்ப் பொருவன பாணங்களேயாயின் என இயைக்க. ஏகா ரம் பிரிநிலை. (கசுஉ)

வேனு ழைந்தன வொருவரை மின்னென விளங்குமுத் தலைச்சூலம்
பானு ழைந்தன கப்பணப் படையொடு பையவே நெடுங்குந்தக்
கோனு ழைந்தன வப்பெருஞ் சிலீமுகக் குறும்பொறைக் கிடைகோ
கானு ழைந்தில நீக்கற நெருக்குறிற் புகுவதெக் கணக்கம்மா. [டைக்

இ-ள். அப்பெரும் சிலீமுகக் குறும் பொறைக்கு இடை - அந்தப்பெ ரிய அம்பாலாகிய சிறிய மலைக்கிடையே,—ஒரு வரை வேல் நுழைந்தன - ஒருபக்கத்தில் வேல்கள் நுழைந்தன,—ஒருபால் மின் என விளங்கு முத் தலைச் சூலம் நுழைந்தன - ஒருபக்கத்தில் மின்போலவிளங்குகின்ற முத்த லைச்சூலங்கள் நுழைந்தன,—ஒருபால் கப்பணப் படையொடு பைய நெடும் குந்தக்கோல் நுழைந்தன - ஒருபக்கத்தில் கப்பணப்படையோடு மெல்ல வாக நெடிய பெருஞ்சவளங்களும் நுழைந்தன,—கோடைக்கால் நுழைந் தில - (அதனுல் அதற்கிடையே) காற்று நுழைந்தில,—நீக்கு அற நெருங் குறில் புகுவது எக்கணக்கு - நீக்கமற நெருங்குதலுற்றாற் புகுவது எப்படி. எ-று.

வினை கூடாமை குறித்துநின்றது. மலைக்கிடையே வேல்முதலியனபுகு ந்து நீக்கமற நெருங்கிக்கொண்டமையினுற் காற்று அதற்கிடையே நுழைய மாட்டாமலிருந்ததென்பது கருத்து. (கசுஙு)

பரிப்பி றந்தன வொன்றொடொன்றெதிர்ந்துழிபாய்குரப்பராகங்கிம்
புரிப்பி றந்தன மதகரி நேர்ந்துழிப் பொங்கழற் பொறியாழிச்

சுரிப்பி றந்தன் விரதமொத் திசைந்துழிச் சுழல்புகை நெடுவானிற்
சரிப்பி றந்தன தகுமுகிற் கிளையொடு தடம்பற வைகளெல்லாம்.

இ-ள். ஒன்றொடு ஒன்று எதிர்ந்துழி பாய்குரப் பராகம் பரிப்பிறந்தன - ஒன்றோடொன்று எதிர்த்துப் பொருதபொழுது பரந்தகுளம்பிற்றோன்றும் பராகங்கள் குதிரைகளினிடத்தே உண்டாயின,—மதகரி நேர்ந்துழி பொங்கு அழற் பொறி கிம்புரிப் பிறந்தன - மதத்தையுடையயானைகள் எதிர்த்துப் பொருதபொழுது கிளருகின்ற அக்கினிப்பொறிகள் (கோட்டிலுள்ள) கிம்புரிகளிடத்தே பிறந்தன,—இரதம் ஒத்து இசைந்துழி சுழல் புகை ஆழிச் சுரிப் பிறந்தன - தேர்கள் தம்முள் ஒத்தனவாய் எதிர்த்துப் பொருதபொழுது சுழலுகின்றபுகை உருளையின் சுரியினிடத்தேபிறந்தன,—தகு முகிற் கிளையோடு தடம் பறவைகளெல்லாம் நெடுவானில் சரிப்பு இறந்தன - (அதனால்) தகுந்த முகிற்கூட்டத்தோடு பெரிய பறவைகளெல்லாம் நெடிய ஆகாயத்தில் செல்லுதலை ஒழிந்தன. எ-று.

பராகம் - தூளி. கிம்புரி - யானைக்கோட்டிலிடுமது. சுரி - துளை. துளையிலிடுமதுவுமாம். (௧௬௪)

மத்தக் குன்றத்த மத்தகத் தடத்தினு மதுகைய கடுவேகப்
பித்தக் குந்தத்த நெற்றியந் தலத்தினும் பிறங்கொலிப்பெருநாண்வி
லத்தச் சிங்கத்த வகலத்துங் குளித்தன வகல்புறந் தலைநீட்டி
யெத்திற் பாய்துமென் றெண்ணின விருந்தன வேகலா தெறிவேலே.

இ-ள். எறிவேல் - எறிந்தவேல்களானவை,—மத்தக் குன்றத்த நெற்றியம் தலத்தினும் - யானைகளது மத்தகத்தினிடத்தும்,—மதுகைய கடுவேகப் பித்தக் குந்தத்த நெற்றியந் தலத்தினும் - வெற்றியையுடைய கடியவேகத்தின் பித்துப்பிடித்த குதிரைகளின்நெற்றியிலும்,—பெரு நாண் வில் அத்தச் சிங்கத்த அகலத்தும் குளித்தன - பெரிய நாணையுடைய வில்லை ஏந்திய கையையுடைய சிங்கம்போன்றவீரர்களது மார்பிலும் தைத்தனவாய்,—அகல் புறம் தலை நீட்டி எத்திற் பாய்துமென்று எண்ணின ஏகலாது இருந்தன - அகன்றபுறத்திலே தலையைநீட்டிக்கொண்டு எதனிடத்தேபாய்வோமென்று எண்ணினவாய் அப்பாற்செல்லாது இருந்தன. எ-று.

குளித்தன, எண்ணின முற்றெச்சங்கள். (௧௬௫)

எய்தி யென்மரு மெறிபடை யென்மரு மெறிபொழு திதுகாத்தல்
செய்தி யென்மருந் திரும்புதி யென்மருஞ் சேர்தில கண்போதி
யுய்தி யென்மரு முய்க்குதி யென்மரு முடக்குதி கணைமாரி
பெய்தி யென்மரு மல்லது மற்றது பேசுவார் பிறிதாமே.

இ-ள். எய்தி என்மரும் - எய்குதியென்றுசொல்வாரும்,—படை எறி என்மரும் - படையை எறிகுதியென்று சொல்வாரும்,—எறி பொழுது இது காத்தல்செய்தி என்மரும் - எறியும்பொழுது இதனைக்காக்குதி என்றுசொல்

வாரும்,— திரும்புதி என்மரும் - (தோற்றாய் ஆதலால்) நீ திரும்பிச்செல்லுதி என்று சொல்வாரும்,—கண் சேந்தில போதி உய்தி என்மரும் - கண்கள் சிவந்தில (ஆகையால்) போய் உய்குவாய் என்று சொல்வாரும்,—உய்க்குதி என்மரும் - செலுத்துதி என்று சொல்வாரும்,—உடக்கு உதி கணை மாரி பெய்தி என்மரும் அல்லது - சுரையினுட் புரியையுடைய கணைமழையைச் சொரிகுதி என்பாருமேயல்லாமல்,—மற்றது பேசுவார் பிறிது ஆமே-வேறு பேச்சுக்களைப் பேசுவார் வேறு உண்டா? (இல்லை என்றபடி) எ-று. (௧௬௬)

கடிய மால்கரி கோட்டெறி வீரர்விண் கலந்துவீழ் தரிற்றேரின்
முடிக ளல்லவே லேற்பன வப்பெரு மூரிமா மலைமேற்
கொடிக ளல்லவேற் குந்தங்க ளல்லவேற் கொடியவக் கொலையானை
வடிகொள் வான்பிறை மருப்பிணை யல்லவேன் மண்விடாமறவேலே.

இ-ள். கடிய மால் கரி கோடு எறி வீரர் விண்கலந்து வீழ்தரின் - வேகத்தையுடைய பெரிய யானைகள் கோட்டினுற் குற்றி எறிந்த வீரர்கள் ஆகாயத்தை அடைந்து விழுமிடத்து,—ஏற்பன தேரின் முடிகள் - அவர்களை ஏற்பவைகள் தேரினதுமுடிகள்;—அல்ல வேல் அப்பெரு மூரிமாமலை மேல் கொடிகள் - அல்லாதொழியின் (ஏற்பவைகள்) அந்தப் பெரிய வலிய யானைகளின் மீதுள்ள கொடிகள்,—அல்லவேல் குந்தங்கள் - அல்லாதொழியின் (ஏற்பவைகள்) பெருஞ்சவளங்கள்,—அல்லவேல் கொடிய அக்கொலை யானை வடிகொள் வான் பிறை மருப்பிணை - அல்லாதொழிந்தால் (ஏற்பவைகள்) கொடிய அந்தக் கொலைத்தொழிலையுடைய யானைகளது கூர்மையைக்கொண்ட ஆகாயத்திலுள்ள பிறைபோலுந் தந்த இரட்டைகள்,—அல்லவேல் மண்விடா மறவேல் - அல்லாதொழிந்தால் (ஏற்பவைகள்) பூமியைவிடாது நிமிர்ந்துகிடக்கும் வேலாகும். எ-று.

மண்விடாமறவேல் என்பதற்கு மண்ணுமங்கலஞ்செய்யப்பட்டவேல் எனினுமாம். (௧௬௭)

தலைக டள்ளியுந் தாட்டுணை தள்ளியுந் தார்புனை வயவாகு
மலைக டள்ளியும் மதவரை தள்ளியும் வயின்புகாக் குடர்மாலை
யிலைக டள்ளியு மெய்த்தவே யன்றிமற் றெய்த்தவோ வியற்போரின்
கலைக டெள்ளிய வீரர்கோ ளரியெனக் கலித்தெறி கதிர்வேலே.

இ-ள். இயல் போரின் கலைகள் தெள்ளிய வீரர் கோளரி எனக் கலித்து எறி கதிர் வேல் - தகுதி (பொருந்திய) போர்வித்தைகளைத் தெளிந்த வீரர்கள் சிங்கம்போலக் கர்ச்சித்து எறிகின்ற ஒளிபொருந்திய வேல்களானவை,—தலைகள் தள்ளியும் - தலைகளை (வெட்டித்) தள்ளியும்,—தாள் துணை தள்ளியும் - இருபாதங்களையும் (வெட்டித்) தள்ளியும்,—தார் புனை வய வாகு மலைகள் தள்ளியும் - மாலையையணிந்த வெற்றிபொருந்திய புயமலைகளை வெட்டித்தள்ளியும்,—மதவரை தள்ளியும் - யானைகளை (வெட்டித்) தள்ளியும்,—

வயின் புகா குடர் மாலை இலைகள் தள்ளியும் எய்த்தவே அன்றி மற்று எய்த்தவோ - வயிற்றினுட்புகுந்து குடர்மாலைகளை இலைகளாற்றள்ளியும் (பின்னும் போரைக்) கருதினவேயன்றி இளைத்தனவோ (இல்லை) எ-று.

ஓ எதிர்மறை. இலை-இலைவடிவுடையவுறுப்பு. மற்று வினைமாற்று. (௧௬அ)

கைக்க ளிற்றன வாவுவாம் பரியன கடுந்திறற் காலாள [கி
மெய்க்கி டைப்படா புறத்தவாய் மற்றெதிர்பெருமையின்வெளிபோ
யக்க ணத்தழி யாயுவி னுடல்பல வடைந்தக லான்மாநேர்
புக்கு முத்திபெற் றிருந்தெனத்திசாமுகம்பொருந்தினபுகர்வேலே.

இ-ள். புகர் வேல் - புகர்நிறத்தையுடைய வேல்கள்,—கைக்களிற்றன வாவு வாம் பரியன கடும் திறல் காலாள மெய்க்கிடைப்படா புறத்தவாய் - துதிக்கையையுடைய யானைகளதும் வாவுகின்ற குதிரைகளினதும் மிகுந்த வலியையுடைய காலாளினதும் உடம்புக்கிடையேபொருந்தாமற் புறத்தே புறப்பட்டனவாய்,—மற்று எதிர் பெருமையின் வெளி போகி - வேறு இலக்கைப்பெருமையினாலே வெளியேசென்று,—அக்கணத்து - அப்பொழுதே,— அழி ஆயுவின் உடல் பல அடைந்து அகல் ஆன்மா நேர் புக்கு முத்தி பெற்று இருந்தென திசாமுகம் பொருந்தின - நீங்கிய ஆயுளையுடைய உடம்புகள்பலவற்றை அடைந்து நீங்கின ஆன்மா நேரே முத்தியிற்புக்கு இருந்தாற்போலத் திசாமுகத்தை அடைந்தன. எ-று.

இவை மூன்றனுடைய மெய்க்கிடையே படாமல் என்றதனால் இவை மூன்றிலும் ஊடுருவிற்று என்பது பெறப்பட்டது. (௧௬௯)

இடித்த வானுருமேறெனமுழக்கிநின்றெறிந்தவேலொருவோன்றன்
றடித்த மார்பகங் குளித்தலுங் களித்திகற்றடக்கைவேறனைநேர்ந்த
மடித்த வாயவ னுயிரொடும் போக்குபு மார்பகத்திடை வாங்கிப்
பிடித்த வேலொடும் வீழ்ந்தனன் மற்றையப் பெருவலிமறவோனே.

இ-ள். இடித்த வான் உருமேறு என முழக்கி நின்று எறிந்தவேல் ஒருவோன்றன் தடித்த மார்பகம் குளித்தலும் - (ஒருவன்) இடித்த இடியைப்போல ஆரவாரித்துநின்று எறிந்த வேலானது ஒருவனுடைய தடித்த மார்பகத்திலே அமிழ்ந்துதலும்,—அப்பெருவலி மறவோன் களித்து இகல் தடக்கை வேல்தனை நேர்ந்த மடித்த வாய் அவன் உயிரொடும் போக்குபு - அந்தப் பெரிய வலியையுடைய வீரன்களிப்புற்று வலிய பெரிய கையிலுள்ள வேலை எதிர்த்த மடித்தவாயையுடைய அவ்வீரனுடைய உயிரோடும்போக்கி, —மார்பகத்திடை வாங்கிப் பிடித்த வேலொடும் வீழ்ந்தனன் - தன் மார்பகத்தினின்றும் கழற்றிப்பிடித்தவேலோடும் (கீழே) விழுந்தான். எ-று.

களித்துப் போக்குபு வீழ்ந்தான் என முடிக்க. மற்று அசைநிலை. ஐ சாரியை. (௧௭௦)

எஞ்ச லற்றிகல் விளைத்துநின் றொருவன்மற் றொருவனுக் கெதிராகி
நெஞ்ச முய்த்தவே றடுத்தடுத் தொய்யென நிமிர்தலை களைபோதில்
விஞ்சு கையெடுத் துடற்குறை யாடலும் வெவ்வினை யுளதென்னக்
குஞ்சி பற்றுபு குறுந்தலை விடுத்ததின் கூத்தொழித் தனனன்றே.

இ-ள். எஞ்சல் அற்று இகல் விளைத்து நின்று ஒருவன் மற்றொருவனுக்கு எதிராகி - குறைவின்றிப் போரைச்செய்து ஒருவன் மற்றொருவனுக்கு எதிராகிச்சென்று,—நெஞ்சம் உய்த்தவேல் தடுத்து அடுத்து ஒய்யென நிமிர்தலை களைபோதில் - (அவன்) மார்பிலேசெலுத்திய வேலைத்தடுத்துச் சமீபித்து விரைவாக உயர்ந்த தலையை வெட்டும்பொழுதில்,—விஞ்சு கையெடுத்து உடற்குறை ஆடலும் - மிகுந்தகையை உயர்த்திக்கொண்டு உடற்குறையானது ஆடுதலும்,—வெவ்வினை உளது என்ன குஞ்சி பற்றுபு குறுந்தலை விடுத்து அதின் கூத்து ஒழித்தனன் - இதற்கு இன்னும் போர் உண்டுபோலும் என்று குடுமியிற்பிடித்துச் சிறியதலையை (அதன்மீது) எறிந்து அதன் கூத்தை ஒழித்தான். எ-று.

ஆடலும் ஒழித்தனன் என முடிக்க. (௧௭௧)

இடைந்தி லாவமர்க் களத்திடை வெஞ்சம மியன்றவ ரிகல்வீர
நடந்த வாற்றினை நின்றவ ரியாவரே நாவெடுத் துரைக்கிற்பார்
மிடைந்தயானைபாய்ந்தெடுத்தலும்படையொடுவலங்கைமேற்செலக்
கிடந்தவீரனுமிருந்தவப்பாகனுமிறந்தனர்கீழ்வீழ்ந்தார்.[கோட்டுக்

இ-ள். இடைந்திலா அமர்க்களத்திடை வெஞ்சமம் இயன்றவர் இகல் வீரம் நடந்தவாற்றினை - தோல்வியடையாத போர்க்களத்தின்கண்ணே வெவ்விய போரைச்செய்தவர்களுடைய போர்வீரமானது நிகழ்ந்தபடியை,— நின்றவர் யாவரே எடுத்து உரைக்கிற்பார் - (அங்கே) பார்த்துநின்றவர்கள் யாவர்தான் விதந்து இத்தன்மைத்து என்று சொல்லவல்லவர்கள்,—மிடைந்த யானை பாய்ந்தெடுத்தலும் - (ஏனெனின்) நெருங்கிச்சென்ற யானை பாய்ந்து (கோட்டினாற்குத்தி) எடுத்தவளவில்,—படையொடு வலங்கை மேற்செல கோட்டுக் கிடந்த வீரனும் இருந்த அப்பாகனும் இறந்தனர் கீழ்வீழ்ந்தார் - படையோடு வலக்கைமேலேசெல்ல (அதன்) கோட்டிலேகிடந்தவீரனும் அதன்மேலேயிருந்த அந்தப்பாகனும் இறந்து கீழேவிழுந்தார்கள். எ-று.

எடுத்தலும் இறந்தனர் வீழ்ந்தார் என முடிக்க. இறந்தனர் முற்றெச்சம். படையோடுசென்ற கை இலக்காக வெட்டுதலாற் பாகனும் வீழ்ந்தான் என்க. (௧௭௨)

மறந்த வாதொரு மாவினேன் மற்றொரு மாவினேற் கெதிர்வீதி
சிறந்து பாய்வுளி விடுத்தவே லங்கவன் செந்நிறந் திறந்தோடிப்
புறம்பு பாய்தலு மண்புகா முன்னமே பிடித்தொரு போர்வீர
னிறந்திறந்தனனெனினமர்க்கடுமைதானிகழ்த்தலாந்தகைத்தாமோ.

இ-ள். மறம் தவாது ஒரு மாவினேன் ஒருமாவினேற்கு எதிர் வீதி சிறந்து பாய்வுளி விடுத்த வேல் - வீரந்தவறாது ஒருகுதிரைவீரன் ஒருகுதிரைவீரனுக்கெதிரே நேராகச் சிறப்புற்றுப் பாயும்பொழுது எறிந்தவேலானது,—அங்கவன் செந்நிறம் திறந்து ஓடிப் புறம்பு பாய்தலும் - அவனது சிவந்த மார்பைத் திறந்துசென்று புறம்பே பாய்ந்தவளவில் - ஓர் வீரன் மண்புகா முன்னம் பிடித்து நிறம் திறந்தனன் எனின் - மற்றொரு வீரன் மண்ணிற்போய் விழமுன்னமே (சென்று) அதனைப்பிடித்து எறிந்து எறிந்த அவ்வீரனுடைய மார்பைத் திறந்தான் என்றால்,—அமர்க்கடுமைதான் நிகழ்த்தலாம் தகைத்து ஆமோ - போர்வேகந்தான் சொல்லக்கூடுந் தகைமையதாகுமோ. எ-று.

ஓ எதிர்மறை. பாய்தலும் பிடித்துத் திறந்தனன் என இயைக்க. (௧௭௩)

சந்தத் தார்ப்புயத் தறுகணர் தாக்குவாட் டடுப்பொரு சார்சாரக்
குந்தக் கோற்றடக் கூர்ந்தலைக் கொடுவலிக் குத்தொரு கூறாக
வந்தத் தார்த்துவீ ழசனியி னயிற்படை யடர்ப்புமோ ரயலாகப்
பந்தப் பாணியம் படர்புயப்பருவரைப்பகைப்பொருபாங்கெல்லாம்.

இ-ள். சந்தத் தார்ப் புயத் தறுகணர் தாக்கு வாள் தடுப்பு ஒரு சார் சார - அழகிய மாலையையணிந்த புயத்தினையுடைய வீரர்களது பொருகின்ற வாளின் தடுப்பு ஒருபக்கத்திற் பொருந்த,—குந்தக்கோல் தடம் கூர்ந்தலைக் கொடுவலிக் குத்து ஒருகூறு ஆக - (அவர்களுடைய) பெருஞ்சவளத்தின் வளைந்த கூரிய தலையினது கொடிய வலிய குத்து ஒருபக்கமாக,—அந்தத்து ஆர்த்து வீழ் அசனியின் அயிற்படை அடர்ப்பும் ஓர் அயலாக - (அவர்களது) ஊழிகாலத்து ஆரவாரித்து விழுகின்ற இடியைப்போல வேற்படைகள் தாக்குதலும் ஒருபக்கமாக,—பந்தப் பாணி படர் புயப் பருவரைப் பகைப்பு ஒருபாங்கெல்லாம் - (அவர்களது) கட்டுகின்ற கைகளையுடைய படர்ந்த புயமலையின் பகைப்பு ஒருபக்கமெல்லாம் (பொருந்தும்)எ-று.

அம் சாரியை. தடுப்பு, குத்து, அடர்ப்பு, பகைப்பு என்பன அவற்றையுடைய போரை உணர்த்தின. அடர்ப்பு, பகைப்பு என்பன தொழிற்பெயர்கள். (௧௭௪)

வேறு.

சுருதி யல்லன சொல்லரி தாமமர்
பரிதி யல்லன பார்த்தறி கிற்பதோ
கருதி யல்லன கார்க்கட லெங்கணுங்
குருதி யல்லன கொள்புன லில்லையே.

இ-ள். சுருதி அல்லன சொல்ல அரிதாம் அமர் - வேதஞ் சொல்லுதலேயன்றி அல்லாதன சொல்லுதல் கூடாதபோர்,—கருதி பரிதியல்லன பார்த்து அறிகிற்பதோ - எண்ணிச் சூரியனல்லாதனவற்றைப் பார்த்

தறியும்வல்லமையைப்படுவேதோ? (அன்று),—அல் அனக் கார்க்கடல் எங்கணும் குருதி அல்லன கொள்புனல் இல்லை - இருளை ஒத்த கரியகடல் முழுவதும் இரத்தமேயல்லாமற் கொள்ளப்படும் நீர் இல்லை. எ-று.

ஓ எதிர்மறை. இனி அல்லன அமரைப்பார்த்து அறியவல்லனவோ எனினுமாம். (௧௭௫)

மார்து ளைந்துயர் வன்சவ ளத்தலை
யார்தி றற்பரி யாளொ டமைந்தமை
சார்தி ருக்கொள் சயமக ளந்தரத்
தூர்தி மேற்கொ டுலாவரல் போலுமால்.

இ-ள். மார் துளைத்து உயர் வன் சவளத்தலை - மார்பைத்துளைத்து உயர்ந்தபெருஞ்சவளத்தின் நுதி,—ஆர் திறல் பரியாளொடு அமைந்தமை - நிறைந்த வலியையுடைய குதிரைவீரனோடு வீழாது பொருந்தியிருந்ததன்மை,—சார் திருக்கொள் சயமகள் - பொருந்திய அழகைக்கொண்ட வீரலக்குமி,—ஊர்தி மேற்கொடு அந்தரத்து உலாவரல்போலும் - தன் வாகனமாகிய கலைமானிலிவர்ந்து ஆகாயத்தில் உலாவுதலைப்போலும். எ-று.

அமைந்தமை போலும் என இயைக்க. குதிரைவீரனது மார்பிலே தைத்த பெருஞ்சவளத்தின்றலை தைத்தபடியேவிழாதிருக்க அதன் அடிப்பக்கங் குதிரையின்றலையைத் தீண்டியிருத்தல் மான்கோடுபோலிருத்தலின் இங்ஙனம் கூறினர். இனி, சவளந்தலை எனப் பாடங்கொண்டு பெருஞ்சவளந் தலையிலேபொருந்தப்பெற்றகுதிரை ஆளோடுபொருந்தியதன்மை உலாவரல்போலும் எனப் பொருள்கொள்ளினுமமையும். (௧௭௬)

பண்ணி யற்கரி யின்பட லைப்பழு
நண்ணி யற்ப நகும்பரி திப்படை
வண்ண மைப்புயல் புக்க மதிக்குறை
விண்ணி னெற்றி விளங்குவ தொக்குமே.

இ-ள். பண் இயல் கரியின் படலைப்பழு நண்ணி அற்பம் நகும் பரிதிப்படை - பண்ணப்பட்ட இயல்பையுடைய யானையின் பரந்தபழுவின் உள்ளேபுகுந்து சிறிதுபாகம் விளங்குகின்ற சக்கரப்படை,— வண்ண மைபுயல் புக்க மதிக்குறை - அழகிய கரிய முகிலிற்புகுந்து மறைந்த சந்திரனது மறையாத மற்றப்பாகம்,—விண்ணின் நெற்றி விளங்குதல்போலும் - ஆகாயத்தின் முற்பக்கத்தில் விளங்குதலைப்போலும். எ-று.

பரிதிப்படை ஒக்கும் என முடிக்க. மதிக்குறை என்பதற்குப் பிறை என்றல் சிறப்பின்று. (௧௭௭)

சிறையில் வாளி தெறும்பரி செய்யநீர்த்
துறையி லாற்றெழு கிச்சுழி சுற்றுவ

நிறைய வீதி நிரப்பி நிலைப்படா
முறையில் வாளி முடுக்குவ வொக்குமால்.

இ-ள். சிறை இல் வாளி தெறும் பரி - தடையில்லாது சென்ற பாண ங்கள் கொன்ற குதிரைகள்,—செய்ய நீர்த் துறையில் ஆறு ஒழுகிச் சுழி சுற்றுவ - இரத்தவாற்றின் துறையிலே நேராகச்சென்று பின் சுழியுண்டு சுற்றுதல்,—நிறைய வீதி நிரப்பி - முற்றும்படி நேரோட விடுத்து,—நிலைப் படா முறையில் - (பின்) நிலைப்படாத முறையோடு,—வாளி முடுக்குவ ஒக் கும் - வட்டமாயோடும்படி விரையச்செலுத்துவதை ஒக்கும். எ-று.

ஆற்றொழுகல் - ஆறுபோல நேரேசெல்லல். இது வீதியாகச்செல்லல் போலவும், சுழிசுற்றுதல் வாளியாக ஓடல்போலவுமிருந்ததென்க. வாளி- வட்டமாகச்செல்வது. (௧௭அ)

ஒருவன் மால்கரி யுச்சி பிளந்தமை
யொருவன் மாகைம் மழுப்படை யொண்மலை
யொருவன் மால்சிறை யுள்ளவெ றுப்பமற்
றொருவன் மேல்வள ராதட லொக்குமே.

இ-ள். ஒருவன் மா கை மழுப்படை - ஒருவீரன் (தனது) பெரிய கையிலுள்ள மழுப்படையால்,—ஒரு வன் மால் கரி உச்சி பிளந்தமை - ஒரு வலிய பெரிய யானையினது உச்சியைப் பிளந்தவியல்பு,—ஒண் மலை - ஒள் ளியமலையை,—ஒருவன் மால் சிறை உள்ள ஒறுப்ப - ஒருவன் பெரிய சிறையாக உள்ளவற்றை வெட்ட,—மற்று ஒருவன் மேல் வளராது அடல் ஒக்கும் - வேறொருவன் மேலாக வளராதபடி வெட்டுதலைப்போலும். எ-று.

பிளந்தமை ஒக்கும் என இயையும். சிறைவெட்டிய ஒருவன்-இந்திரன்.

வம்மி னென்றிரு வோரெதி ரோடிமா
வெம்மின் வேல்வெந் புறப்பட மெய்யுற
லெம்மி னாய விருந்திற னன்றெனாத்
தம்மின் மெச்சித் தழீஇயது போலுமால்.

இ-ள். மா வெம் மின் வேல் வெந் புறப்பட - பெருமைபொருந்திய கொடிய ஒளியையுடைய வேல் (தம்) முதுகிலே புறப்பட (அங்ஙனம் புறப் பட்டபடியே),—வம்மின் என்று இருவோர் எதிர் ஓடி மெய் உறல் - வருகு வீரென்று இருவீரர்கள் எதிரே ஓடிப்போய் மெய்யோடு மெய்பொருந்த (க் கட்டி மற்பொருது) நிற்றல்,—எம்மின் ஆய இருந்திறல் நன்று எனா - எம்மிடத்தே பொருந்திய பெரிய வலிமை நல்லாயிருக்கின்றதென்று.— தம்மின் மெச்சித் தழீஇயது போலும் - தம்முள்ளே புகழ்ந்து (ஒருவரையொ ருவர்) தழுவியதுபோலும். எ-று.

மெய்யுறல் போலும் என முடிக்க. (௧அ0)

தேர்பு னைந்த செழுங்கதிர் மண்டில
ஊர்பு னைந்த வொளிக்கிடை யோடியே
வார்பு னைந்து மதர்த்த முலைத்தலைச்
சூர்பு னைந்த சுடர்த்தொடை சூடுவார்.

இ-ள். தேர் புனைந்த செழுங் கதிர் ஊர் புனைந்த ஒளி மண்டிலத்துக்கு இடையோடி - இறந்த வீரர்களாயினோர் தேரைக்கொண்ட செழிய கிரணங்களையுடைய சூரியனது பரிவேடத்தாற் சூழப்பட்ட ஒளியையுடைய மண்டலத்துக்கு இடையாகப்போய்,—வார் புனைந்து மதர்த்த முலைத்தலைச் சூர் புனைந்த - கச்சு அணியப்பெற்று மதர்த்துள்ள முலைமுகப்பையுடைய தெய்வப்பெண்கள் சூட்டிய,—சுடர்த் தொடை சூடுவார் - ஒளிபொருந்திய பொன்னரிமாலைகளைச் சூடுவார்கள். எ-று.

ஒளி மண்டிலத்துக்கு என மாற்றிப் பொருள்கொள்க. முலைத்தலையிலே புனைந்த மாலையை அவர்சூட்டச் சூடுவாரெனினுமாம். (கஅக)

பாக மேற வெறிந்த படைக்கலம்
வேக மேற விளைத்தவை மெய்க்கொளா
வாக மேற வினத்தொ டரற்றிவீழ்
காக மேறக் களித்துவிண் ணேறுவார்.

இ-ள். பாகமேற எறிந்த படைக்கலம் வேகம் ஏற - (மார்பு) பிளக்கும்படி எறிந்த படைக்கலம் வேகமாக ஏற,—விளைந்து அவை மெய்க்கொளா - விரும்பி அவற்றை மார்பிலே ஏற்று,—ஏற இனத்தொடு அரற்றி வீழ் காகம் ஆகம் ஏற - மிகவும் கூட்டத்தோடு கத்திக்கொண்டு வந்து வீழுங் காகங்கள் உடம்பிலே ஏறியிருக்க,—களித்து விண் ஏறுவார் - தாம் களிப்புற்று ஆகாயத்திற்போவார்கள். எ-று.

விளைத்து வலித்தல்விகாரம். மெய் ஆகுபெயர். (கஅ௨)

புகலி னின்றனை போர்வலி யாயெனப்
பகலி னின்றொளிர் பல்படை பாய்த்தியே
மிகலி னின்ற விருப்பு வெறுப்பொடே
யிகலி னின்றன ரெண்ணில வீரரே.

இ-ள். புகலின் நின்றனை போர் வலியாய் என - விருப்போடு நின்றாய் போரின் வலிமையையுடையாய்போலுமென்று,— பகலின் நின்று ஒளிர் பல் படை பாய்த்தி - சூரியனைப்போல நின்று விளங்குகின்ற பல படைகளையும் செலுத்தி,—மிகலின் நின்ற விருப்பு வெறுப்பொடு - மிக்கு நின்ற விருப்போடும் வெறுப்போடும்,— இகலில் நின்றனர் எண்ணில வீரர் - போரில் நின்றார்கள் அளவில்லாத வீரர்கள். எ-று.

விருப்பு போர்விருப்பு. சுவர்க்கவிருப்புமாம். வெறுப்பு - பகைமேற்கொண்ட வெறுப்பு. இனி விருப்பினால் வெறுப்போடு போரில்நின்றார்கள் எனினுமாம். (கஅ௩)

காய வண்கரைச் சூழ்கறை நீரிடைத்
தூய செம்முக மெங்கணுந் தோற்றலாற்
சேய பங்கயத் தேமலர்ப் பொய்கைநேர்
மேய தந்த விளாக வளாகமே.

இ-ள். காய வண் கரைச் சூழ் கறை நீரிடை - உடம்பாகிய அழகிய கரையையுடைய சூழ்ந்த இரத்தநீரினிடத்தே,—தூய செம்முகம் எங்கணுந் தோற்றலால் - (வெட்டுண்டு வீழ்ந்த வீரர்களது) சுத்தமாகிய செவ்விய முகம் எவ்விடத்துந் தோற்றுதலால்,—அந்த விளாக வளாகம் - அந்தப் போர்க்களத்தினிடம்,—செய பங்கயத் தேமலர்ப் பொய்கை நேர் மேயது - செந்தாமரையினது தேன்பொருந்திய மலர்களையுடைய தடாகத்தை ஒத்தது. எ-று.

விளாகவளாகம் மேயது என முடிக்க. (௧அச)

எங்குங் கங்க விரும்பறை யெற்றொலி
எங்குஞ் செங்க ணரிக்குழு வேக்கமா
மெங்கும் வெம்பிணஞ் சாவெடுத் தெய்துவ
வெங்குஞ் சங்க வரிட்ட விரக்கமே.

இ-ள். எங்கும் கங்க இரும் பறை எற்று ஒலி - (அந்த யுத்தகளம்) எங்கும் பருந்துகளது பெரிய சிறைகள் அடிக்கின்ற ஒலி (உள்ளது),—எங்கும் செங்கண் நரிக் குழு ஏக்கம் - எவ்விடத்தும் சிவந்த கண்களையுடைய நரிக்கூட்டத்தின் ஒலி (உள்ளது).—எங்கும் சா வெம்பிணம் எடுத்து எய்துவ - எவ்விடத்தும் பேய்கள் வெவ்விய பிணங்களை எடுத்துச் செல்வன,—எங்கும் சங்க அரிட்ட இரக்கம் - எவ்விடத்துங் கூட்டமாகிய காக்கைகளின் ஒலி (உள்ளது). எ-று. (௧அரு)

ஒற்றைப் பானிண முண்டு முவாவுடற்
பொற்றைப் பால்கடந் தோடிப் புகாக்குறள்
மற்றைப் பாலவும் வௌவலின் மண்ணை மற்
றெற்றைப் பாலு மிரிந்திடு மென்பவே.

இ-ள். ஒற்றைப் பால் நிணம் உண்டும் - ஒருபக்கத்தில் நிணத்தையுண்டும்,—உவா உடல் பொற்றைப் பால் கடந்து ஓடிப் புகா - (அடங்காத ஆசையினால்) யானைகளது உடலாகிய சிறுமலையின் பக்கத்தைக் கடந்து ஓடிப்போய்,—குறள் மற்றைப் பாலவும் வௌவலின் - பூதங்கள் மற்றைப் பக்கத்திலுள்ள நிணத்தையுங் கவர்தலினால்,—மண்ணை எற்றைப்பாலும் இரிந்திடும் - பேய்கள் எந்தப்பக்கத்திலும் (நிணமுண்ணமாட்டாது) அஞ்சி ஓடுவன. எ-று.

உண்டும் என்பதிலும்மை இழிவுசிறப்பு. மற்றைய உம்மைகள் முறையே எச்சத்தோடு முற்றாய்நின்றன. என்ப, ஏ அசைகள். (௧அசு)

வேறு

மின்கண் டாரயில் வேலப ராந்தர்தம் படையின்
முன்கண் டாரினி முடுக்குதி தேரென முடுக்கா
வென்கண் டார்கணை மாரியால் விறற்படை யினைப்போ
ரென்கண் டார்பிணக் குவையலா லிமைப்பில ரெல்லாம்.

இ-ள். மின் கண்டு ஆர் அயில் வேல் அபராந்தர் - மின்தோன்றி நிறைந்துள்ள கூரிய வேற்படையையேந்திய மேற்றிசையரசர்கள்,—இனி முடுக்குதி தேரென முடுக்கா தம் படையின்முன் கண்டார் - இனி விரையச் செலுத்துதி தேரையென்று செலுத்தித் தமது சேனையின்முன் அடைந்தவராய்,—கணை மாரியால் விறற் படையினை வென் கண்டார் - கணைமழையால் வலிய சேனைகளைப் புறங்கொடுக்கச்செய்தார்கள்,—இமைப்பிலர் எல்லாம் பிணக்குவையலால் என்கண்டார் - அப்பொழுது தேவர்களெல்லாம் பிணமலைகளையேயல்லாமல் வேறு எதனைக் கண்டார்கள். எ-று.

எவன் என்னும் வினைப்பெயர் என் என்றாய் ஈண்டின்மைகுறித்து நின்றது. முடுக்காக் கண்டார் கண்டார் என முடிக்க. கண்டார் வினையெச்சமுற்று. (௬அஎ)

நொடிப்பு மற்றன வெனவெதிர் புகுங்கரி நோன்மை
மடிப்பு மற்றன மாவொடு தேர்களின் வலிகண்
ணடிப்பு மற்றன நாற்றிசை பாய்கடு வேகத்
துடிப்பு மற்றன சுடுசரந் துரந்தன துரங்கம்.

இ-ள். சுடுசரந் துரந்தன - சுடுகின்ற பாணங்களாற் றொடரப்பட்ட,—நொடிப்பும் அற்றன என எதிர் புகும் கரி நோன்மை மடிப்பும் அற்றன - நொடிப்பொழுதும் முடிந்தன என்று சொல்லுமாறு எதிரே வருகின்ற யானைகளது வலிய கொலையும் அழிந்தன,—மாவொடு தேர்களின் வலிகள் நடிப்பும் அற்றன - (தங்கட்பூட்டிய) குதிரைகளோடு தேர்களின் வலிமைகளது நடிப்பும் அழிந்தன,—துரங்கம் நால் திசை பாய் கடு வேகத் துடிப்பும் அற்றன - குதிரைகள் நான்குதிக்குகளிலும் பாய்கின்ற கடியவேகத்தின் பதைப்பும் அழிந்தன. எ-று.

நொடிப்பு-நொடித்தலைக்கொண்டது. (௬அஅ)

ஓங்கொ ளிக்கணை யுருவிய வுறுப்புமற் றுள்ள
பாங்கர் பட்டதை யினதென வுரைக்கவும் படுமே
காங்கெ யத்தொழிற் கம்மியர் பலபடக் கம்பி
வாங்கு மச்சென வாயதால் வீரர்த மார்பம்.

இ-ள். ஓங்கு ஒளிக் கணை உருவிய உறுப்பு மற்றுள்ள - (வீரர்களுடைய) கிளருகின்ற ஒளியையுடைய பாணங்கள் ஊடுருவிய அவயங்களாகப்

பிறிதாயுள்ளவைகள்.—பாங்கர் பட்டதை இன்னது என உரைக்கவும் படு மே - பக்கத்திலே பட்டபாட்டை இத்தன்மைத்தென்று சொல்லவுங் கூடு மா,—வீரர்தம் மார்பம் - அவ்வீரர்களுடைய மார்புகளே.—காங்கெயத் தொ ழில் கம்மியர் பலபடக் கம்பி வாங்கும் அச்சு எனல் ஆயது - பொற்கொல்லர் பலவிதம்படப் பொற்கம்பிகளை இழுக்கின்ற அச்சென்று சொல்லும்படியாக விருந்தது (என்றால்.) எ-று.

ஏகாரம் எதிர்மறை. பொற்கொல்லர் - தட்டார். (கஅக)

இரைத்துப் பாய்கணை படப்பட விறுமதக் களிற்றின்
புரைத்துப் பாய்கதி யருதிழி கின்றசெம் புலாநீர்
வரைத்துப் பார்கட மார்தொறு மார்தொறுங் குலிகங்
கரைத்துப் பாய்தரு கறங்கொலி யருவியே கடுத்த.

இ-ள். இரைத்துப் பாய் கணை படப்பட - இரைத்துக்கொண்டு பாய் கின்ற பாணங்கள் (சென்று) படப்பட,—இறு மதக் களிற்றின் புரைத்துப் பாய் கதி அருது இழிகின்ற செம்புலால் நீர் - வெட்டுண்டு இறந்து விழுகி ன்ற மதத்தையுடைய யானைகளினின்றும் புரைகொண்டு பாய்கின்ற கதிநீங் காது பெருகுகிற இரத்தவெள்ளம்,—வரைத் துப்பு ஆர் தட மார்தொறும் மார்தொறும் குலிகம் கரைத்துப் பாய்தரு - மலையினது வலிமையார்ந்த விசாலமாகிய மார்புதோறும் மார்புதோறும் குங்குலிகத்தைக் கரைத்துக் கொண்டு பாய்கின்ற,—கறங்கு ஒலி அருவியே கடுத்த - கறங்குகின்ற ஒலி யையுடைய அருவியையே ஒத்தது. எ-று.

களிற்றினின்றும் இழிகின்ற இரத்தநீர் மலைப்பக்கந்தோறும் பெருகும் குங்குலிக அருவியை ஒத்தது என்பது கருத்து. ஏகாரம் தேற்றம். (கசூ0)

உரப்ப தாகையங் கானுழைந் துடுப்பல வோடித்
துரப்ப வோங்குதேர் முடிபல வீழ்ந்தமை சொல்லில்
வரப்பைந் நாகமேன் மருத்துமா வலியெலா மெடுத்து
நிரப்பு மேருவின் கொடுமுடி தெறித்தமை நிகர்த்த.

இ-ள். உரப் பதாகை கான் நுழைந்து உடு பல ஓடி துரப்ப - வலிமை யினையுடைய கொடிக்காட்டில்நுழைந்து பாணங்கள் பல ஓடி அறுத்து வீச,—ஓங்கு தேர் முடி பல வீழ்ந்தமை - உயர்ந்த தேரின்முடிகள் பலவிழுந் தமை,—சொல்லில் - சொல்லுமிடத்து,—பைநாகம் மேல் வர - படத்தை யுடைய (சேடன் என்னும்) பாம்பு மேல்வந்து மூடிக்கொள்ள,—மருத்து மா வலியெலாம் எடுத்து நிரப்பும் - காற்றுத் தனக்குள்ள பெரிய வலிமைமுழு வதையுங்கொண்டு நிறைத்து வீசி உடைக்கப்பட்ட,—மேருவின் கொடுமுடி தெறித்தமை நிகர்த்த - மேருமலையின்சிகரம் முரிந்துவிழுந்தமையை ஒத் தன. எ-று.

அம் சாரியை. உடுவுக்கு வாயுவும், கொடிக்கானுக்குப் பைநாகமும், தேர்முடிக்குக் கொடுமுடியுமுவமை என்க. (கசூக)

தறுகண் வெஞ்சரந் தடிந்திரு துணிபடத் தள்ளிக்
கறுவி யோடவும் படைவிடா கிடந்தன கரங்க
ளுறுதி யாகிய வுரனொடுங் கெடத்தமக் கொருங்கே
யிறுதி யெய்தினும் பிடித்தது விடுவரோ விறையோர்.

இ-ள். தறுகண் வெஞ்சரம் இருதுணிபடத் தடிந்து தள்ளிக் கறுவி யோடவும் - தறுகண்மையையுடைய வெவ்விய பாணங்கள் இரண்டுதுண்டாகும்படி வெட்டித் தள்ளிவிட்டுக் கறுவுதல்கொண்டு ஓடவும்,—படைவிடா கிடந்தன கரங்கள் - படையைப் (பிடித்தபிடி) விடாதபடி கிடந்தன கைகள்,—உறுதியாகிய உரனொடும்கெட தமக்கு ஒருங்கே இறுதி எய்தினும் - உறுதியாகிய வலியோடும் கெடும்படி தமக்கு ஒருசேர முடிவுவரினும்,—பிடித்தது விடுவரோ இறையோர் - தாங்கள் பிடித்ததை விடுவார்களோ தலைவர்கள். எ-று.

இறையோர் என்பது தலைவரையும் கையையும் உணர்த்திற்று. இது சிலேடையின்முடித்தலாகிய வேற்றுப்பொருள்வைப்பு. (௧௧௨)

நெட்டு ளாருடைத் திகிரியந் தேர்மிசை நின்று
பட்டு ளாரையே யருங்கதி யானிலப் படுத்த
கட்டு ளாருரங் கலந்துள ராயினு நடுவே
தட்டு ளார்க்குமற் றுள்ளதோ தாங்குநற் றகையே.

இ-ள். நெட்டுள் ஆர் உடைத் திகிரியந் தேர் - நெடுமையையுடையதாகிய ஆரையுடைய உருளைபொருந்திய தேரானது,—மிசை நின்று பட்டுளோரை அருங் கதியால் நிலப்படுத்த - தன்மேல் நின்று இறந்தவர்களை அரியவேகத்தினாற் பூமியிலே வீழ்த்தின,—கட்டுளார் உரம் கலந்துளராயினும் - கட்டுப்பாடு பொருந்தினவராகி வலிமைசேர்ந்துள்ளவராயிருப்பினும்,—நடுவே தட்டுளார்க்கு தாங்கு நல் தகை உளதோ - இடையிலே தட்டுதலுள்ளவர்களுக்குத் தாங்குகின்ற நல்ல தகையுமுண்டோ. எ-று.

இனித் தேர்க்கியையப் பொருள்கொள்ளுங்கால் கட்டுள்ளதிறைந்த வலிமைபொருந்தியதாயினும் நடுவே தட்டையுள்ளதற்குத் தாங்குகின்ற தகைமையுமுண்டோ எனப் பொருள்கொள்க. இதுவுமேலையணி. (௧௧௩)

அனைய போதிலங் கவர்படை யும்பெயர்ந் தார்க்கு
முனைமு கத்தையு மூள்சமர் முதிர்ச்சியுங் கண்டான்
வினைய மென்னினி விடுக்குதி தேரென விரைந்தான்
றனைய லாற்றனை நிகர்ப்பதொன் றிலாவொரு தலைவன்.

இ-ள். அனையபோதில் - அவ்வாறாகிய சமையத்தில்.—அவர் படையும் பெயர்ந்து ஆர்க்கும் முனை முகத்தையும் மூள் சமர் முதிர்ச்சியும் கண்டான் - அவர்களுடைய சேனைகளையும், அவைகள் மீளவந்து ஆரவாரிக்கின்ற போர் முகத்தையும், மூண்டபோரின் முதிர்ச்சியையுங் கண்டவனாய்,—இனி வினை

யம் என் விடுக்குதி தேர் என விரைந்தான் - இனி உபாயம் யாது தேரைச் செலுத்துதி என்று விரைந்துசென்றான்,—தன்னை அல்லால் தன்னை நிகர்ப்பது ஒன்று இல்லா ஒரு தலைவன் - தன்னையன்றித் தன்னை நிகர்க்கும்பொருள் உலகிற் பிறிதொன்றில்லாத ஒப்பற்ற தலைவனாகிய இரகு.எ-று.

கண்டான் வினையெச்சமுற்று. (௧௧௪)

கற்பத் திந்திரன் முதலினோ ரிப்படை கணத்தி
னிற்பச் செய்துமே னேரொக்கு மென்பதை நினைவார்
சிற்பத் தாகில செருவிது பெரிதெனக் கணைகள்
முற்பத் தாயிர மாயிர முகம்பட விடுத்தான்.

இ-ள். கற்பத்து இந்திரன் முதலினோர் - கற்பகதருவையுடைய இந்திரன்முதலிய தேவர்கள்,—இப்படை கணத்தில் நிற்பச் செய்து மேல் நேர் ஒக்கும் என்பதை நினைவார் - இந்தச்சேனைகளைக் கணப்பொழுதிற்கு நிற்கச்செய்குவோமாயின் எமக்குச் சமமாகும் என்பதை நினைப்பார்கள்,— செரு இது சிற்பத்து ஆகு இல பெரிது என - (அன்றியும்) இந்தப்போர் அற்பபோராகமுடியாது பெரும்போராகமுடியும் என்று,—கணைகள் முன் பத்தாயிரம் ஆயிரம் முகம்பட விடுத்தான் - பாணங்களை முன்னரே கோடி முகமாகச் செலுத்தினான். எ-று.

என விடுத்தான் என இயைக்க. சிற்பத்தாகிலசெருவிதுபெரிது என்பதற்கு இப்போர்பெரிது ஆகையால் அற்பநேரத்துள் முடியாது எனப் பொருள்கொள்ளலுமாம். சிற்பம் - அற்பம். "சிற்பத்தினெம்மாற்சொல்லச்சிறியவோ" என்றார் பிறரும். (௧௧௫)

நன்ன ரேதிசை முழுதிசை நடத்துவான் றுணிந்த
வந்ந ரேசன்கை யருந்தொடைச் சித்திர மதனை
யென்ன ரேயளந் தறிபவ ரெங்கணு மாகி
முன்ன ரேகணை யல்லதொன் றில்லென முடிந்த.

இ-ள். நன்னர் திசைமுழுது இசை நடத்துவான் துணிந்த - நன்கிதாகத் திக்குமுழுவதும் தன்கீர்த்தியை நடத்தும்படி துணிவுற்ற,—அ நரேசன் கை அரும் தொடைச் சித்திரமதனை என்னர் அளந்து அறிபவர் - அந்த இரகுராசனது கையினால் அரிய பாணங்களைத் தொடுத்தலின்கட்சித்திரத்தை யாவர்தான் அளந்தறியவல்லவர்,—எங்கணும் ஆகி முன்னரே கணை அல்லது ஒன்று இல் என முடிந்த - (என்னையெனில் அப்பொழுது) எவ்விடத்திலும் பரந்து முன்னரே கணைகளேயல்லாமல் பிறிதொன்று இல்லையென்று சொல்லும்படி முடிந்தது. எ-று.

ஆகி முடிந்த என இயையும். (௧௧௬)

விண்ம றைத்தன வாயிர கோடிமெய்ம் மிடைந்து
மண்ம றைத்தன வாயிர கோடியெண் மதிப்போ

றெண்ம றைத்தன வாயிர கோடிமே லிமையோர்
கண்ம றைத்தன வாயிர கோடிவெங் கணைகள்.

இ-ள். விண் மறைத்தன ஆயிரகோடி (வெங்கணைகள்) - (அப்பொழுது) ஆகாயத்தை மறைத்தன ஆயிரகோடி வெவ்விய பாணங்கள்,—மெய் மிடைந்து மண் மறைத்தன ஆயிரகோடி (வெங்கணைகள்) - உடல்களிற் செறிந்து பூமியை மறைத்தன ஆயிரகோடி வெவ்விய பாணங்கள்,—எண் மதிப்போர் எண் மறைத்தன ஆயிரகோடி (வெங்கணைகள்) - அளவைக்கணிப்போரது அவ்வளவைக்கடந்தன ஆயிரகோடி வெவ்விய பாணங்கள்,—மேல் இமையோர் கண் மறைத்தன ஆயிரகோடி வெங்கணைகள் - மேலுள்ள தேவர்களது கண்களை மறைத்தன ஆயிரகோடி வெவ்விய பாணங்கள். எ-று.

மெய்மிடைதல் - ஒன்றோடொன்றுநெருங்கலுமாம். வெங்கணைகள் இறுதிநிலைத்தீபகம். (௧௧௭)

நெருக்கிற் றெத்தனை நிமிர்ந்தவு மெத்தனை நேர்ந்த
முருக்கிற் றெத்தனை முடைந்தவு மெத்தனை முதிர்போர்
சுருக்கிற் றெத்தனை துன்னல ராருயி ருண்டு
தருக்கிற் றெத்தனை யெத்தனை கோடிவெஞ் சரங்கள்.

இ-ள். நெருக்கிற்று எத்தனை (கோடி வெம் சரங்கள் எத்தனை கோடி வெஞ் சரங்கள்) - ஒன்றையொன்று நெருங்கினவைகளும் எத்தனையோ கோடி வெவ்விய பாணங்களாகும் எத்தனையோகோடி வெவ்விய பாணங்களாகும்,—நிமிர்ந்தவும் எத்தனை (கோடி வெம் சரங்கள் எத்தனை கோடி வெம் சரங்கள்) - நிமிர்ந்தனவும் எத்தனையோ கோடி வெவ்விய பாணங்களாகும் எத்தனையோ கோடி வெவ்விய பாணங்களாகும்,—நேர்ந்த முருக்கிற்று எத்தனை (கோடி வெம் சரங்கள் எத்தனை கோடி வெம் சரங்கள்) - எதிர்ந்தவைகளை அழித்தனவும் எத்தனையோ கோடி வெவ்விய பாணங்களாகும் எத்தனையோ கோடி வெவ்விய பாணங்களாகும்,—முடைந்தவும் எத்தனை (கோடி வெம் சரங்கள் எத்தனை கோடி வெம் சரங்கள்) - ஒன்றோடொன்று பின்னியனவும் எத்தனையோ கோடி வெவ்விய பாணங்களாகும் எத்தனையோ கோடி வெவ்விய பாணங்களாகும்,—முதிர் போர் சுருக்கிற்று எத்தனை (கோடி வெம் சரங்கள் எத்தனை கோடி வெம் சரங்கள்) - முதிர்ந்த போரைக் குறைத்தனவும் எத்தனையோ கோடி வெவ்விய பாணங்களாகும் எத்தனையோ கோடி வெவ்விய பாணங்களாகும்,—துன்னலர் ஆர் உயிர் உண்டு தருக்கிற்று எத்தனை (கோடி வெம் சரங்கள் எத்தனை கோடி வெம் சரங்கள்) - பகைவருடைய அரிய உயிரையுண்டு களித்தவைகளும் எத்தனையோ கோடி வெவ்விய பாணங்களாகும் எத்தனையோ கோடி வெவ்விய பாணங்களாகும். எ-று.

எச்சவும்மைகள் முன்னும் பின்னுங் கூட்டப்பட்டன. இதுவு முன்னை யலங்காரம். (௧௧௮)

பாய்ந்த சிற்சில பாய்வன சிற்சில பாய
வேய்ந்த சிற்சில விகற்கணைக் கிடையிடை நுழைந்து
தேய்ந்த சிற்சில திகிரிவான் கிரிப்புறத் தாழி
தோய்ந்த சிற்சில சுருக்கில சுடுசரத் தொகையே.

இ-ள். சுருங்கு இல சுடு சரத் தொகை - குறைவில்லாத அக்கினிபாணக் கூட்டத்துள்,—பாய்ந்த சிற்சில - பாய்ந்தவைகளும் சிற்சில பாணங்களாகும்,—பாய்வன சிற்சில - பாய்கின்றனவும் சிற்சில பாணங்களாகும்,—பாய எய்ந்த சிற்சில - பாயும்படிபொருந்தினவும் சிற்சில பாணங்களாகும்,—இகல் கணைக்கு இடை இடை நுழைந்து தேய்ந்த சிற்சில - வலிமைபொருந்திய பாணங்களுக்கு இடையிடையே நுழைந்து தேய்ந்தவைகளும் சிற்சில பாணங்களாகும்,—வான் திகிரிக் கிரிப் புறத்து ஆழி தோய்ந்த சிற்சில - பெரிய சக்கரவாளகிரிக்குப் புறத்திலுள்ள புறவாழியில் மூழ்கினவைகளும் சிற்சில பாணங்களாகும். எ-று.

சுருக்கு வலித்தல் விகாரம். சுடுகின்ற சரம் - அக்கினிபாணம். (கசுசு)

அற்ற மால்கரிக் கரங்களும் பாய்கதி யருது
துற்ற மாத்திரட் பதங்களுஞ் சுடுசரந் துரப்ப
மற்ற மாத்தடந் தேர்மிசை வானியு மறங்கொள்
கொற்ற வீரர்தங் குலப்படைக் கைகளு மன்றே.

இ-ள். சுடு சரம் துரப்ப - அக்கினிபாணங்கள் தொடர்ந்துவெட்ட,—மால் கரிக் கரங்களும் அற்ற - பெரிய யானைத் துதிக்கைகளும் வெட்டுண்டன,—பாய் கதி அருது துற்ற மாத் திரட் பதங்களும் (அற்ற) - பாய்கின்ற கதி நீங்காது பொருந்திய குதிரைகளது திரண்ட கால்களும் வெட்டுண்டன,—மற்ற மாத் தடம் தேர் மிசை வானியும் (அற்ற) - மற்றைய பெரிய விசாலமான தேரின்மீதுள்ள கொடிகளும் வெட்டுண்டன,—மறம் கொள் கொற்ற வீரர்தம் குலப்படைக் கைகளும் (அற்ற) - மறத்தன்மையைக்கொண்ட வெற்றிபொருந்திய வீரர்களது கூட்டமான படைகளையேந்திய கைகளும் வெட்டுண்டன. எ-று.

அற்ற முதனிலைத்தீபகம். (உ00)

பிளந்த யானையின் கும்பமும் பெருங்கதிப் போக்கி
னுளந்த டாதுசெ லுத்தரி நெற்றியு முலகை
யளந்த வாழியந் தேர்நடுப் பாருமிக் காடல்
வளந்த வாமற வீரர்தம் புயங்களு மாதோ.

இ-ள். யானையின் கும்பமும் பிளந்த - (பாணங்கள் சென்று பிளக்க) யானையின் மத்தகங்களும் பிளந்தன,—பெரும் கதிப் போக்கின் உளம் தடாது செல் உத்தரி நெற்றியும் (பிளந்த) - பெரிய கதியின் போக்கினாலே

மனமுந் தடுக்கமுடியாது செல்லுகின்ற குதிரையின் நெற்றியும் பிளந்தன,—உலகை அளந்த ஆழித் தேர் நடுப்பாரும் (பிளந்த) - உலகத்தை அளந்த உருளையையுடைய தேரின் நடுத்தட்டும் பிளந்தன,—மிக்க ஆடல் வளம் தவா மற வீரர்தம் புயங்களும் (பிளந்த) - மிக்க வெற்றியின்வளம் நீங்காத மறத்தையுடைய வீரர்களது புயங்களும் பிளந்தன. எ-று.

இதுவு முன்னை யலங்காரம். (௨0௧)

துணிந்த வோடிய வாழியு நடந்தன தோற்றத்
திணிந்த காத்திரத் தொகைகளு நிமிர்ந்தசீர்க் கவரி
யணிந்த வாலதி யாயவும் புறக்கிடு மதனைத்
தணிந்த வார்கழ ருழ்தடந் தாள்களு மன்றே.

இ-ள். ஓடிய ஆழியும் துணிந்த - ஓடிய (தேர்களின்) சில்லுகளும் வெட்டுண்டன,—நடந்தன தோற்றத் திணிந்த காத்திரத் தொகைகளும் (துணிந்த) - நடந்தனவாகிய தோற்றத்தையுடைய திண்ணிய (யானைகளது) முன்கால்களின் கூட்டங்களும் வெட்டுண்டன,—நிமிர்ந்த சீர்க் கவரி அணிந்த வாலதி ஆயவும் (துணிந்த) - (குதிரைகளின்) நிமிர்ந்த சிறப்பினையுடைய சாமரைபோன்ற கற்றைமயிர்களையுடைய வால்களும் வெட்டுண்டன,—புறக்கிடும் அதனை தணிந்த வார்கழல் தாழ் தடம் தாள்களும் (துணிந்த) - புறங்கொடுத்தலை நீங்கிய நெடிய வீரக்கழல்பொருந்திய பெரிய பாதங்களும் வெட்டுண்டன. எ-று.

ஆழி - தேர்ச்சில். காத்திரம் - யானைமுன்கால். கவரியணிந்தவாலதி - குதிரைவால். கழல் தாழ் தாள் - வீரர்தாள். எனவே சதுரங்கமும் கூறியவாறு. இதுவு முன்னை யலங்காரம். (௨0௨)

புகைவிளைத்தன பொங்கெரி விளைத்தன பூழித்
தொகைவிளைத்தன சூழ்கடல் விளைத்தன வதனுன்
மிகைவிளைத்தன நாகர்த முலகத்து மேலும்
பகைவிளைத்தன பாரலாற் பகழியின் படலம்.

இ-ள். புகை விளைத்தன - புகையையும் உண்டாக்கின,—பொங்கு எரி விளைத்தன - கிளராநின்ற அக்கினியையும் உண்டாக்கின,—பூழித் தொகை விளைத்தன - பூதுளிக் கூட்டங்களையும் உண்டாக்கின,—சூழ் கடல் விளைத்தன - சூழுகின்ற (இரத்தக்) கடலையும் உண்டாக்கின,—அதனுல் - அங்ஙனமுண்டாக்கிய அதனுல்,—பகழியின் படலம் - அம்புக்கூட்டங்கள்,—பாரலால் மிகை விளைத்தன நாகர்தம் உலகத்தும் மேலும் பகை விளைத்தன - பூமியிலன்றிக் குற்றம்பொருந்திய நாகருலகத்தும் மேலுலகத்தும் பகையைச் செய்தன. எ-று.

புகை முதலியவற்றுல் மேலும் கடலால் நாகருலகினும் பகைவிளைத்தன என்க. இனி மிகைவிளைத்தனநாகர்தமுலகத்துமேலும் - பகைவிளைத்

தனபாரலால் என்பதற்கு, போரைச்செய்த பாரிலன்றி நாகருலகத்தும் மேலுலகத்தும் குற்றத்தைச்செய்தன எனப் பொருள்கொள்வாரும் பாரிலன்றி மேலான தேவருலகத்தின்மேலும் பகையைச்செய்தன எனப் பொருள் கொள்வாரு முளர். (உ0௩)

காழ்த்த கோட்டிபத் தலையரிந் தறுமுனை கவ்விச்
சூழ்த்த நீடிய சுடுசரந் தொடைக்கதி யிடையே
தாழ்த்த வோதிகாந் தங்கொடு போயின தரித்து
வீழ்த்த மேலினுந் தைத்தன வாயிரம் விசிகம்.

இ-ள். சூழ்ந்த நீடிய சுடு சரம்-சூழ்ந்த நெடிய அக்கினிபாணங்கள்,—காழ்த்த கோட்டு இபத்தலை அரிந்து அறுமுனை கவ்வி தரித்து-வயிரித்த கோட்டினையுடைய யானைகளின் தலைகளை அரிந்து அறுக்கின்ற நுதியாற் கவ்வித் தாங்கிக்கொண்டு,—தொடைக் கதி இடையே தாழ்த்த வோ திகாந்தங் கொடு போயின வீழ்த்த-தொடுக்கப்பட்ட கதியிலே இடையிலே ஓய்ந்ததா திகாந்தத்திற் கொண்டுபோயினவாய் வீழ்த்தின,—மேலினும் தைத்தன ஆயிரம் விசிகம்-அதன்மேலும்வந்து தைத்தன ஆயிரம் பாணங்கள். எ-று.

அறுமுனை வினைத்தொகை. மேலினும் என்பதில் இன் சாரியை. போயின வினையெச்சமுற்று. தரித்து - தங்கி எனினுமாம். மேலினும் என்பதற்கு உடம்பினும் எனப் பொருள்கோடல் சிறப்பின்று. (உ0௪)

பழிபட் டேகிய படைக்கணை நுழைந்தவப் பதவை
யுழிபட் டேகின போகநின் றனபுலா லுதிரம்
வழிபட் டுள்ளகூர்ந் தலைமுற்ற வகிர்படப் புங்கங்
கிழிபட் டுள்ளவு மெத்தனை யாயிரங் கிளக்கில்.

இ-ள். பழிபட்டு ஏகிய படைக்கணை நுழைந்த அப்பதவையுழி பட்டு ஏகின போக-பழியைப் பொருந்திச்சென்ற படைகளாகிய அம்புகள் நுழைந்த அவ்வழியினிடத்துப் பொருந்திச் சென்றவைகள் போக,—நின்றன-போகாது நின்றனவாய்,—புலால் உதிரம் வழிபட்டு உள்ள கூர்ந்தலை முற்ற வகிர்பட புங்கம் கிழிபட்டுள்ளவும்-தசையிலுள்ள இரத்தம் வழியப்பட்டுள்ள கூர்மையான தலைமுழுதும் பிளக்கக் குதைகிழிந்தனவும்,—கிளக்கில் எத்தனை ஆயிரம்-சொல்லுகில் எத்தனையாயிரம் (உள்ளன). எ-று.

பழிபடல் - முனைமுறிதன் முதலியனவற்றையுடைத்தாதல். (உ0௫)

அடைந்த விண்ணக மடைந்தவப் புடவியி னிடையே
யிடைந்து பின்னரி னேருமக் கணைநுழைந் திழுக
முடைந்த கோனெரிப் பிறந்தன தீயினால் முளிவேய்
மிடைந்த கானக நிகர்த்தவு மளப்பில விசிகம்.

இ-ள். அடைந்த விண்ணகம் அடைந்த அப்புடவியின் இடை - பாண ங்கள் சென்று நெருங்கிய ஆகாயத்திற்கும் பாணங்கள் சென்று நெருங்கிய பூமிக்கும் இடையே,—இடைந்து பின்னரின் எகும் அக்கணை நுழைந்து இழுக - நெரிவுற்றுப் பின்னரே செல்லுகின்ற அப்பாணங்கள் நுழைந்து மந்தமாகச்செல்ல,—முடைந்த கோல் நெரிப் பிறந்தன தீயினல் - (அவற் ரேடு) பின்னிய பாணங்களின் நெரிப்பினுற் பிறந்த அக்கினியினல்,— முளி வேய் மிடைந்த கானகம் நிகர்த்தவும் அளப்பில விசிகம் - காய்ந்த மூங் கினெருங்கிய காட்டை நிகர்த்தனவும் அளவில்லாத பாணங்களாகும். எ-று.

மூங்கில் எரிந்து குறையாய்க்கிடத்தல்போலப் பாணங்கள் எரிந்து குறையாய்க்கிடந்தன என்பது கருத்து. (உ0௬)

மிடலுண் டோடிய வெங்கணை நுழைந்துசெல் விசையே
படலுங் கார்க்கடற் படிதலை காண்கில தொன்ரே
கடலந் தானையங் களத்திடை யாடிய கவந்த
வுடலுங் காண்கில வுறுகணை காண்பதே யுள்ள.

இ-ள். மிடலுண்டு ஓடிய வெங்கணை நுழைந்து செல் விசையே படலும் - வலிமையைப்பொருந்தி ஓடிய வெவ்வியபாணங்கள் நுழைந்துசெல் லுகின்ற விசையோடேபட்டவளவில்,—கார்க்கடல் படிதலை காண்கிலது ஒன்ரே - கரிய கடலாற்சூழப்பட்ட பூமியிலே தலை காணப்படாமைமாத் திரமா?,—கடல் தானை களத்திடை ஆடிய கவந்த உடலும் காண்கில - கடல்போன்ற சேனைகளையுடைய களத்தின்கண்ணே ஆடிய கவந்தயாகிய உடல்களும் காணப்பட்டில,—உறுகணை காண்பதே உள்ள - செல்லுகின்ற பாணங்கள் காணப்படுதலே உள்ளன. எ-று.

தலையையும் கவந்தங்களையும் பாணங்கள் கொண்டு சேறலிற் காண்கில என்ரூர். (உ0௭)

வேறு.

ககனமு கடெட்டியிடை நிலமுழு தடக்கிவிரி கருபமள விக்க டிதுபாய், தொகையறு கணைப்படலை யிடையிடை யறுப்பவிழு சுடர்செய்தவ ளக்க விகையே, நகைமதி மிசைச்செல்கதி நவைபட வழுக்கிநில நனியுற னிகர்க்கு மலவே, லுகமக ணுதற்கணிடை யெ ழுதுபளி தத்திலத மொருவகை நிகர்ப்ப வுளவே.

இ-ள். ககன முகடு எட்டி இடை நிலமுழுது அடக்கி விரி கருபம் அளவி - அண்டமுகடு வரைக்கு முயர்ந்து (தனக்கு) இடையே நிலமுழுவ தையும் அடக்கிப் பரந்த திக்கு முழுதையும் அளாவி,—கடிது பாய் தொகை அறு கணைப்படலை இடை இடை அறுப்ப விழு சுடர்செய் தவளக்கவிகை - விரைந்து பாய்கின்ற அளவில்லாத கணைப்பரப்பு இடையிடையே அறுப்ப விழுகின்ற ஒளியைச்செய்கின்ற முத்துக்குடைகள்,—நகைமதி மிசைச் செல்

கதி நவைபட வழுக்கி நிலம் நனி உறல் நிகர்க்கும்,—ஒளிபொருந்திய சந்திரன் மேலேசெல்லுகின்ற கதிதவற வழுக்கி நிலத்தில் மிகவும் (விழுந்து) கிடத்தலை ஒக்கும்,—அல்லவேல் - அல்லவேல்,—உகமகள் நுதற்கண் இடை எழுது பளிதத் திலதம் ஒருவகை நிகர்ப்ப உள - பூமிதேவியினுடைய நெற்றியினிடத்து நடுவே எழுதிய பச்சைக்கருப்பூர திலதத்தை ஒருவாறு ஒத்தல் உள்ளன. எ-று.

அளவி விழு கவிகை என இயையும். கணைப்படலைக்கேற்றல் சிறப்பின்று. (௨0அ)

ஒருபஃ திரட்டிவளை கடலனிக முப்பஃதோ டொருகுடையிலக்க முறவே, நிருபதி விடுத்தகணை படநில மிசைப்படியு நிமிர்தரு கதிர்க்கவரியே, கருதிய குடக்கரசர் தமதுபுகழ் பட்டுவிழு கடிகையு நிகர்க்குமலவேற், றுருவிய கணைக்கெதிரு நரைமுகில்கள் ளற்றுவிழு துணியினை நிகர்ப்ப வுளவே.

இ-ள். வளை கடல் அனிகம் - சூழ்ந்த கடல்போன்ற சேனைகளின் மேல்,—ஒருபஃது இரட்டி முப்பஃது இலக்கம் உற நிருபதி ஒருகுடை விடுத்த கணை பட - பத்து இருபது முப்பது என்னும் அளவைப்பொருந்த அரசன் ஒருபக்கத்தில் விடுத்த பாணங்கள்பட,—நிலமிசைப் படியும் நிமிர்தரு கதிர் கவரி - நிலத்தின்மீது விழுகின்ற மேன்மைபொருந்திய ஒளியையுடைய சாமரைகள்,—கருதிய குடக்கு அரசர் தமது புகழ் பட்டு விழு கடிகையும் நிகர்க்கும் -,கருதப்பட்ட மேற்றிசையரசரது புகழ் வெட்டுண்டு விழுகின்ற துண்டங்களையும் ஒக்கும்,—அல்லவேல் துருவிய கணைக்கு எதிரும் நரை முகில்கள் அற்று விழு துணியினை நிகர்ப்ப உள - அல்லவேல் துளைத்துச்செல்லும் அம்புகளுக்கு எதிர்ப்பட்ட வெள்ளைமுகில்கள் அறுந்துவிழுகின்ற துண்டங்களை ஒத்தல் உள்ளன. எ-று.

படப்படியும் கவரி கடிகை நிகர்க்கும்; அலவேல் துணியினை நிகர்ப்பவுள என இயையும். (௨0௯)

வெடிபடு மெதிர்ப்பினொடும் வெயில்படு மதிர்ச்சியொடும் விசைபடு வெருட்டினொடும்வீ, ழிடியன வடிக்கணையி னெரியிடை துகிற்கொடிக ளெரிபடு கழைக்கு ழைகளே, முடிவில நெருக்கமுறு பணையற வுயர்ச்சிபெறு முதையினை நிகர்க்கு மலவேற், கடியல பிழைப்படுது மெனவவ ரெடுத்துவரு கழுவினை நிகர்த்தி டுமரோ.

இ-ள். வெடி படும் எதிர்ப்பினொடும் வெயில்படும் அதிர்ச்சியொடும் விசைபடு வெருட்டினொடும் வீழ் இடி அன வடிக்கணையின் எரியிடை - ஒலிதோன்றுகின்ற தாக்குதலோடும் ஒளிதோன்றுகின்ற முழக்கோடும் விசையாகவந்துபடுதலாலாய அஞ்சுவித்தலோடும் வீழுகின்ற இடியையொத்த கூரிய பாணங்களிற்பிறந்த அக்கினியினிடத்தே,—துகிற் கொடிகள்

எரிபடு கழைக் குறைகள் - புடைவைக்கொடிகள் எரிந்துபோன மூங்கிற் குறைகள்,—முடிவில நெருக்கம் உறு பணை அற உயர்ச்சிபெறு முதையினை நிகர்க்கும் - அளவில்லாத நெருக்கமான கொம்பர்கள் எரிந்துபோக உயர்ந்திருக்கும் எரிந்தகாட்டை ஒக்கும்,—அலவேல் கடியலை பிழைப்படுதும் என அவர் எடுத்துவரு கழுவினை நிகர்க்கும் - அல்லாதொழிந்தால் எம்மைக் கொல்லாதே நாங்கள் இதிலேறி இறப்பேமென்று அவர் எடுத்துவந்த கழுக் கூட்டத்தையுமொக்கும். எ-று.

கழைக்குறை முதையினை நிகர்க்கும்; அலவேல் கழுவினை நிகர்க்கும் என இயையும். உவமையாகிய இடியின் அடைகளைப் பொருட்கும் கொள்க.

நாறிய தசைக்கிழிவி னேறியுடல் முற்றுமுற நாடியொழு கிப்
பொதிதரா, ஊறிய நிணத்தைமிக மூடிமிசை யிற்குருதி யோடிய
பிணச்சயிலமே, நீறணி தனிக்கடவுள் வாசமலை யொத்ததனை நேர்
தரன் மிகப்பிழையெனு, மாறுபு கணப்பொழுதி னேதனி நிகர்த்த
தொளி மாமணி மயச்சயிலமே.

இ-ள். நாறிய தசைக் கிழிவின் ஏறி உடல் முற்றும் உற நாடி ஒழுகி - தோன்றிய தசைக்கிழிவினின்றும் கிளர்ந்து உடம்புமுழுவதும் பொருந்த நரம்புவழியாக ஒழுகி,—பொதிதரா ஊறிய நிணத்தை - அவ்வுடல்களை உள்ளடக்கி ஊறிய நிணங்களை,—மிக மூடி மிசையில் குருதி ஓடிய பிணச்சயிலம் - மிகவும் மூடி மேலாக இரத்தமோடப்பெற்ற பிணமலை,—நீறு அணி தனிக்கடவுள் வாசமலை ஒத்து அதனை நேர்தரல் மிகப் பிழை எனு மாறுபு - விபூதியையணிந்த ஒப்பற்ற சிவபெருமான்வீற்றிருத்தலையுடையதாகிய திருக்கயிலாசமலையை யொத்துப் (பின்) அதனை ஒத்திருத்தல் மிகப்பிழை யென்று மாறி,—கணப்பொழுதினே ஒளி மாமணிமயச் சயிலம் தனி நிகர்த்தது - கணப்பொழுதினுள்ளே ஒளிபொருந்திய மாணிக்கமலையைத் தனியே ஒத்தது. எ-று.

ஏறி ஒழுகி மூடி ஓடிய மலையென முடிக்க. ஓடிய என்னும் பெயரெச்சம் மலையென்னும் செயப்படுபொருட்பெயர் கொண்டது. நிணம் வெள்ளியின்நிறத்தையும், இரத்தம் மாணிக்கத்தின்நிறத்தையும் காட்டியனவென்க. (உகக)

ஒருதுசெல் வடிக்கணைக ளாபகையெனப் பெருகியோடிய மு
டைக்குருதியாற், பொருதெழு திசைப்புணரி யோரிருபுடைக்கரை
பொராவெழ நிரப்பு மதுவோ, வருவுயிரி னிற்பெரிய வாமுடல்க
ளிற்கடிகை யாமவைய வத்தி னகல்வான், சிறுநில நிரப்பின தராதல
நிரப்பின திசாமுக நிரப்பி னவரோ.

இ-ள். ஒருது செல் வடிக் கணைகள் - குறையாது செல்லுகின்ற கூரிய பாணங்கள்,—ஆபகை எனப் பெருகி ஓடிய முடைக் குருதியால் - ஆற்

றைப்போலப் பெருகியோடிய முடை நாற்றத்தைக்கொண்ட இரத்தத்தி னால்,—பொருது எழு திசைப் புணரி ஓரிரு புடைக் கரை பொரா எழ நிர ப்புமதுவோ - பொறுக்காது கிளருகின்ற திக்கிலுள்ள கடல்களை இருபக் கத்திலுமுள்ள கரையோடு பொருது எழும்படி நிரப்பிவிடுகின்ற அதுமாத் திரமா,—அறு உயிரினின் பெரிய ஆம் உடல்களின் கடிகை ஆம் அவயவத் தினின் - அழியாத உயிர்களாலும் பெரிய உடல்களாலும் துண்டுகளாகிய அவயவத்தாலும்,—அகல் வான் சிறு நிலம் நிரப்பின தராதலம் நிரப்பின திசா முகம் நிரப்பின - அகன்ற வானிலுள்ள பெரிய சுவர்க்கலோகத்தையும் நிரப்பின பூமியையும் நிரப்பின திக்கினிடங்களையும் நிரப்பின. எ-று.

குருதியால் நிரப்புமதுவோ எனவும், கணைகள் புணரியை நிரப்புமது வோ, சிறு நிலத்தையும் நிரப்பின, தராதலத்தையும் நிரப்பின திசாமுகத் தையும் நிரப்பின எனவும் இயைக்க. பின்னடி இரண்டும் நிரனிறை. ()

வேறு.

மறந்தகு கதிர்கொள் வேலான் வரிசிலை வடித்த கல்வித்
திறந்தனை யுளைய நோக்கிச் செருத்தலை நின்ற வேந்தர்
பறந்தலை யிதுவே யாகிற் பலித்தது செருவென் றச்சம்
பிறந்துளம் பெருக மாழ்கிப் பெரிதெடுத் துரைக்க லுற்றார்.

இ-ள். மறம் தகு கதிர் கொள் வேலான் வடித்த வரிசிலை கல்வித் திறந்தனை உளைய நோக்கி - வீரத்தாற்றக்க ஒளியைக்கொண்ட வேற்படை யை ஏந்தியவனாகிய இரகுமகாராசனது தெளிவுறக்கற்ற வரிந்த வில்லி னது வித்தையின் மேன்மையைத் தம்மனம் வருந்தும்படி பார்த்து,—செரு த்தலை நின்ற வேந்தர் - போர்க்களத்தில் நின்ற அரசர்கள்,—பறந்தலை இது வே ஆகில் பலித்தது செரு என்று அச்சம் பிறந்து - யுத்தகளம் இவ்வாறே யாயின் இனி (நமக்கு)ப் பயன்பட்டது போர் என்று அச்சந்தோன்றி,— உளம் பெருக மாழ்கிப் பெரிது எடுத்து உரைக்கலுற்றார் - மனம் மிகவும் மயங்கி மிகவும் எடுத்துச்சொல்வாராயினர். எ-று.

நோக்கி, பிறந்து, மாழ்கி, எடுத்துரைக்கலுற்றார் என முடிக்க. வடித்த என்பதற்கு வசமாக்கிய எனப் பொருள்கோடலுமாம். (௨௧௩)

காந்தெழிற் றேவ ரேனுங் கரமொரா யிரங்க ளேனு
மேந்துவி லைஞ்ஞூ றேனு மிருஞ்சம ரிவனொ டாகா
மாந்தரி னுரைப்ப தென்னே யளப்பில மலர்க்கைத் தேவன்
மேந்தக வொருவன் றானன்றில் வெல்லினும் வெல்லு மன்றே.

இ-ள். காந்து எழில் தேவரேனும் - விளங்குகின்ற அழகையுடைய தேவர்களாயிருந்தாலும்,—கரம் ஓராயிரங்களேனும் ஏந்து வில் ஐஞ்ஞூறே னும் இரும் சமர் இவனொடு ஆகா - (அவர்களுக்குக்) கரங்கள் ஆயிரங்களா

யிருந்தாலும் ஏந்திய வில்லு ஐஞ்ஞூறுயிருந்தாலும் பெரிய போரைச்செய்தல் இவனோடு முடியாது,—மாந்தரின் உரைப்பதென்னே - (அவர்கள் அங்ஙனமேயாயின்) மனிதர்களால் ஆகுமென்று சொல்வதென்னை,—அளப்பு இல மலர்க்கைத் தேவன் மேந்தக ஒருவன் தோன்றில் வெல்லினும் வெல்லும் - அளவில்லாத மலர்போலும் கைகளையுடைய தேவனொருவன் மேன்மையுற வந்து வெளிப்பட்டால் (இவனை) வெல்லினும் வெல்லுவான். எ-று.

கரமொராயிரங்களேனும் ஏந்துவில்லைஞ்ஞூறேனும் என்பதற்கு அவர்கள் கரங்கள் ஆயிரத்தையுடையராயினும் ஏந்திய விற்கள் ஐஞ்ஞூறையுடையராயினும் எனப் பொருள்கோடலுமாம். அளப்பில மலர்க்கைத் தேவன் மேந்தகவொருவன்றோன்றில் என்பதற்கு அளவில்லாத மலர்க்கைக்களையுடைய தேவனாய் மேன்மையுறவொருவன்றோன்றில் எனவும், விஷ்ணு மேன்மையுற ஒருவராய் அவதரிக்கின் எனவும் பொருள்கூறுவாருமுளர். (உகச)

தொடுப்பதுந் தொடுத்த வெம்போர் சுருக்கலுஞ் சுருக்கில் வீ
விடுப்பதும் வினையம் வேட்ட வெம்மனோர் மேற்ற தாக [ரம்
வெடுப்பது மெடுத்த பூச லேற்பது மேற்ற வாகை
யடுப்பது மற்று மெல்லா மையற்கே யாவ தன்றே.

இ-ள். தொடுப்பதும் - போரைத் தொடுப்பதும்,—தொடுத்த வெம்போர் சுருக்கலும் - தொடுத்த வெவ்விய போரை ஒடுக்குதலும்,—சுருக்கில் வீரம் விடுப்பதும் - குறைவில்லாத வீரத்தை விடுத்தலும்,—வினையம் வேட்ட எம்மனோர் மேற்றதாக - போரைவிரும்பிய எம்மையொத்தோர் மேலாக,—எடுப்பதும் - போரை எடுப்பதும்,—எடுத்த பூசல் ஏற்பதும் - அவ்வாறு எடுத்த போரில் (வந்தோரை) எதிர்ப்பதும்,—ஏற்ற வாகை அடுப்பதும் - இயைந்த வெற்றியைப் பெறுவதும்,—மற்றும் எல்லாம் ஐயற்கே ஆவது - பிறவுமெல்லாம் அரசனுக்கே பொருந்துகின்றன. எ-று.

எடுத்தல் - தொடங்குதல். எடுத்த பூசல் ஏற்பதும் என்பதற்கு எடுத்த வற்றிலே போரை ஏற்றுக்கொள்ளுதலும் எனப் பொருள்கொண்டு, ஏற்ற வாகை அடுப்பதும் என்பதற்கு அங்ஙனம் ஏற்றவற்றிலே வாகையைப் பெறுவதும் எனினுமாம். இப்பொருளுக்கு எடுத்த ஏற்ற என்பவைகளை வினைப்பெயராகக் கொள்க. (உகரு)

கரியெவற் றறிதல் வெய்ய கடுஞ்சினத் தசுரர் வெம்போ
ரரியவற் குடைத லாற்றற் கழகன்றி யல்ல துண்டோ
உரியவிற் றொழிலின் மாச றுதியிலா ருடைய வாகைப்
பெரியவர்க் குடைத ருனு மிழிபினைப் பிடியா தன்றே.

இ-ள். கரி எவற்று அறிதல் - (யாம்) சாட்சியை எவற்றில் வைத்தறிவது,—வெய்ய கடும் சினத்து அசுரர் வெம் போர் அரியவற்கு உடைதல்

ஆற்றற்கு அழகு அன்றி அல்லது உண்டோ - கொடிய மிக்க கோபத்தினை யுடைய அசுரர்கள் வெவ்விய போரில் விஷ்ணுவுக்குத் தோற்றல் வலிமைக்கு அழகன்றிக் குறைவாவதுமுண்டோ,—உரிய வில் தொழிலின் மாசு அறுதி யிலார் - (தமக்கு) உரிய வில்வித்தையிலே குற்றமுடையோர்,—உடைய வாகைப் பெரியவர்க்கு உடைதல்தானும் இழிபினைப் பிடியாது - தம்மிடத்தேகொண்ட வெற்றியையுடைய பெரியோர்க்குத் தோற்றலும் இழிவைப் பொருந்தாது. எ-று.

உண்டோ எனவே இந்தக் கரியிலே வைத்தே நாமறியலாம் என்பது எஞ்சி நின்றது. மாசு அறு உதியிலார் எனக் கண்ணழித்துக் குற்றமற்ற ஞானமில்லாதவர் எனப் பொருள்கொள்ளினுமாம். (உகசு)

காற்றொன் றுதீயின் மூண்ட கடுஞ்சமர்க் குடைந்த போது
மாற்றொன்றி லாது சூரன் மயிலும் வாரணமு மான
தேற்றின்றே முருக வேளுக் கிசைந்தின்றே வுலகிற் கேல
வேற்றொன்றி லுணர்வ தென்னே சரண்புகல் விழுமி தன்றே.

இ-ள். காற்று ஒன்று தீயின் மூண்ட கடும் சமர்க்கு உடைந்தபோது - காற்றேடுகூடிய அக்கினியைப்போல மூண்ட கடியபோருக்குத் தோற்ற போது,—சூரன் மாறு ஒன்று இலாது முருகவேளுக்கு மயிலும் வாரணமும் ஆனது ஏற்றின்றே - சூரன் எதிர்ப்பது சிறிதுமின்றிக் குமாரனுக்கு மயிலும் சேவலுமானது இழிபோ,—உலகிற்கு இசைந்தின்றே - அது உலகிற்கு ஏற்கவில்லையோ?—ஏல வேற்று ஒன்றில் உணர்வது என் சரண்புகல் விழுமிது - பொருந்த வேறொருசாட்சியில் வைத்தறிவதென்னே? (இந்தச் சாட்சியே போதும் ஆதலால்) அடைக்கலம் புகுதலே சிறப்புடைத்து. எ-று.

ஏற்றமின்றே என்பது ஏற்றின்றே என விகாரமாயிற்று. தேற்றேகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. (உகஎ)

ஏக்கற மணிசெய் செம்பொ னாசனத் திருந்து தூரத் [கி
தூக்கற முன்னர்ச் சொன்ன சொல்லொன்று துணிவொன் றா
நீக்கற வெடுத்துப் பல்கா லின்னண நிரந்து கூறித்
தீக்கற வுருகா நிற்கு மெழுகினிற் றேம்பி னாரே.

இ-ள். ஏக்கற மணி செய் செம்பொன் ஆசனத்து இருந்து - (கண்டோர்) ஆசைகொள்ள மணியாற்செய்த செவ்விய பொன்னாசனத்திலிருந்து,—தூரத்து ஊக்கம் அற முன்னர்ச் சொன்ன சொல் ஒன்று துணிவு ஒன்றாகி - தூரத்திலேநின்று உள்ளக்கிளர்ச்சியின்றி முன்னரே சொன்ன சொல் ஒன்றும் (இப்போ) துணிவு ஒன்றுமாகி,—நீக்கற எடுத்துப் பல் கால் இன்னணம் நிரந்து கூறி - இடையீடின்றி எடுத்துப் பலதரம் இவ்வாறு கூடிச் சொல்லி,—தீக்கு அற உருகாநிற்கும் மெழுகினில் தேம்பினார் - அக்கினிக்கு மிக உருகுகின்ற மெழுகைப்போலத் தேம்பினார்கள். எ-று

ஆகிக் கூறித் தேம்பினர் என முடிக்க. எக்கறச் செய் ஆசனம் என இயையும். (உகஅ)

சேட்படர் கலினப் பாய்மாத் திரளொடு மதமா வென்னுங்
கோட்படைக் குழுவும் பின்ன ரெய்தவெங் குரூர மிக்க
காட்படை நெஞ்ச மெஞ்சக் கலங்குபு முன்ன ரேக
வாட்படை நிறுவி யேகி வரும்படை மருங்கு சார்ந்தார்.

இ-ள். சேண் படர் கலினப் பாய்மாத் திரளொடு - ஆகாயத்திற் செல்லுகின்ற கடிவாளத்தையுடைய பாய்கின்ற குதிரைத்திரளோடு,—மதமா என்னும் கோள் படைக் குழுவும் பின்னர் எய்த - யானையென்னும் கொலையையுடைய சேனைக்கூட்டமும் பின்னே பொருந்த,—வெம் குரூரம் மிக்க காட்பு அடை நெஞ்சம் எஞ்சக் கலங்குபு முன்னர் ஏக - வெவ்விய கொடுமைமிக்க வயிரம்பொருந்திய மனம் அவ்வயிரம் குறைவடையக் கலங்கி (த்தமக்கு) முன்னே செல்ல,—வாட்படை நிறுவி ஏகி வரும் படை மருங்கு சார்ந்தார் - வாளையேந்திய சேனைகளை நிறுத்திச்சென்று (தமக்கு எதிரே) வரும் சேனைகளின் பக்கலை அடைந்தார்கள். எ-று.

ஏகிச் சார்ந்தார் என முடிக்க. (உகக)

அனையவர்ச் சார்ந்து வீர ரடைந்தமை வினவ வன்னார் [கேம்
புனைமணிப் பொலம்பூட் கோமான் பொன்னடி வணங்கப் புக்
வினையமர்க் கடந்த கொற்ற வீரரீ ரென்ன வீரர்
துனைபடப் பெயர்ந்து போகிக் காவலற் றொழுது சொல்வார்.

இ-ள். அனையவர்ச் சார்ந்து வீரர் அடைந்தமை வினவ - (சார்ந்த) அவர்களை அடைந்து வீரர்கள் அடைந்தவாற்றைக் கேட்க,—அன்னார் அமர் வினை கடந்த கொற்ற வீரரீர் புனை மணிப் பொலம் பூண் கோமான் பொன் அடி வணங்கப் புக்கேம் என்ன - அவர்கள் போர்த்தொழிலைக் கடந்த வெற்றிபொருந்திய வீரர்களே? அலங்கரிக்கப்பட்ட மணிகளையுடைய பொன்னாலாகிய ஆபரணங்களையணிந்த இரகுமகாராசனது பாதங்களை வணங்கும்படி புகுந்தேம் என்று கூற,—வீரர் துனைபடப் பெயர்ந்து போகிக் காவலற் றொழுது சொல்வார் - வீரர்கள் விரைவாகத் திரும்பிச்சென்று அரசனை வணங்கிச் சொல்வார்கள். எ-று. (உஉ0)

பெரும்பய மென்னு மாவித் துணைவனர் பின்ன ரேநின்
றரும்பிடர் பிடித்தே யுந்த வபராந்தர் பாந்த ராகி
யிருங்கடற் புடவி வேந்தே நிற்றொழ வெமது சேனை
மருங்குவந் தடைந்தா ரென்ன விறைவனும் வரவு நேர்ந்தான்.

இ-ள். இரும் கடல் புடவி வேந்தே - பெரிய கடலாற் சூழப்பட்ட பூமிக்கரசனே,—பெரும் பயம் என்னும் ஆவித் துணைவனர் பின்னரே நின்று

அரும் பிடர் பிடித்தே உந்த - பெரிய அச்சமென்னும் உயிர்த்துணைவர் பின்னேநின்று அரிய பிடரைப் பிடித்துத் தள்ள,—அபராந்தர் பாந்தர் ஆகி - அபராந்தர் வழிக்கொண்டு,—நின் தொழ எமது சேனை மருங்கு வந்து அடைந்தார் என்ன - உன்னை வணங்கும்படி எமது சேனையின் பக்கத்தே வந்து அடைந்தார்கள் என்று சொல்ல,—இறைவனும் வரவு நேர்ந்தான் - அரசனும் வருகைக்குடன்பட்டான். எ-று.

தொழ ஆகி வந்தாரென்ன நேர்ந்தான் என வினைமுடிபு செய்க. உம்மை சிறப்பு. (௨௨௧)

பணியது தலைமேற் கொண்டு படைஞரும் வல்லை யேகி
மணியணிந் திலங்கு பூணீர் வம்மின்க ளென்ன லோடும்
தணிவில கால மேகஞ் சாதகங் கண்டா லொப்பத்
திணிபுய வரச ரேற்றைக் கண்டடி சென்னி சேர்த்தார்.

இ-ள். அது பணி தலைமேல் கொண்டு படைஞரும் வல்லை ஏகி - அந்தக் கட்டளையைச் சிரமேற்கொண்டு வீரர்களும் விரையச் சென்று,— மணி அணிந்து இலங்கு பூணீர் வம்மின்கள் என்னலோடும் - இரத்தினங்கள் பதிக்கப்பெற்று விளங்குகின்ற ஆபரணங்களையுடையீர் வாருங்கள் என்று சொல்லுதலும்,—தணிவில கால மேகம் சாதகம் கண்டால் ஒப்ப திணி புய அரசரேற்றைக் கண்டு - குறையாத காலமேகத்தைச் சாதகப் பறவை கண்டாற்போலத் திணிந்த புயத்தையுடைய அரசசிங்கத்தைக் கண்டு,—அடி சென்னி சேர்த்தார் - பாதங்களைச் சிரசிற் சூடினார்கள். எ-று.

என்னலோடும் கண்டு சேர்த்தார் எனவும், ஒப்பக் கண்டு எனவும் இயைக்க. (௨௨௨)

பார்த்திபர் தமக்கு நேரொன் றொழிவுற பகரிற் பாரிற்
பார்த்திப னிகர்ப்ப தல்லான் மற்றுண்டோ பணியு மன்ன
பார்த்திபர் நிகர்ப்பர் கங்கை யாரியன் பதுமத் தாள்சேர்
பார்த்திப ரினையன் றனைப் பார்த்திப னிகர்ப்ப னன்றே.

இ-ள். பார்த்திபர் தமக்கு நேர் ஒன்று ஒழிவுற பகரில் - அரசர்களுக்கு உவமை ஒன்றை அழிவுபடாது நிலையுறச் சொல்லுகில்,—பாரில் பார்த்திபன் நிகர்ப்பர் அல்லால் மற்றுண்டோ - பூமியில் இரகுமகாராசனை ஒப்பார்களல்லாமல் பிறிதுண்டோ,—பணியும் அன்ன பார்த்திபர் கங்கை ஆரியன் பதுமத் தாள் சேர் பார்த்திபரினை நிகர்ப்பர் - இரகுமகாராசனை வணங்கிய அந்த மேற்றிசையரசர்கள் பரராசசேகரனது தாமரைமலர்போலும் பாதங்களை அடைந்த அரசர்களை ஒப்பார்கள்,—அன்றனைப் பார்த்திபன் நிகர்ப்பன் - அவனை இரகுமகாராசன் ஒப்பான். எ-று.

இங்கே ஆசிரியன் மற்றோர்க்கு உவமையாக நிற்கும் இரகு பரராசசேகரனை ஒப்பான் என்று கூறி பரராசசேகரனை இரகுவிலும் விசேஷித்தவனென உயர்ச்சி கூறிற்று. (௨௨௩)

தங்குமூ விடத்தும் வந்த தலைக்கய மதனோ டெண்ணி
லைங்கதிப் பரியு மன்ன ரருந்திறை யாக நல்கப்
பொங்கரு ளவர்க்கு நல்கிப் பூந்திரி கூட மென்னும்
துங்கவெங் கிரியின் செவ்வித் துப்புடைப் பக்கஞ் சேர்ந்தான்.

இ-ள். அன்னர் - அவ்வபராந்தர்,—தங்கு மூவிடத்தும் வந்த தலைக் கயமதனோடு - பொருந்திய மூவிடத்தினின்றும் தோன்றிய மேலான யானைகளோடு,—எண்ணில் ஐங்கதிப் பரியும் அருந் திறையாக நல்க - அளவில்லாத புஞ்சகதிகளையுடைய குதிரைகளையும் அரிய திறையாகக் கொடுக்க,— அவர்க்கு பொங்கு அருள் நல்கி - அவர்களுக்கு மிக்க அருளைக் கொடுத்து,— பூந் திரிகூடம் என்னும் துங்க வெம் கிரியின் செவ்வித் துப்பு உடைப் பக்கஞ் சேர்ந்தான் - பொலிவாகிய திரிகூடமென்றுசொல்லும் உயர்ச்சிபொருந்திய வெவ்விய மலையின் சிறப்புப்பொருந்திய வலிமையையுடைய பக்கத்தை அடைந்தான். எ-று.

நல்க நல்கிச் சேர்ந்தான் என இயையும். மூவிடம் நதி, மலை, வனம்.

கனமுகிற் சேக்கை யாமக் கன்னெடு வரையிற் கன்றிப்
பனிமதக் குவடு கோட்பட் டெழுந்துறப் பாய்ந்த வாற்றாற்
குனிசிலைக் கொற்ற வேந்த னதனையே குலவு சீர்த்தி
தனிபொறித் தங்க ணட்ட சயத்தம்ப மாக்கி னானே.

இ-ள். கன முகில் சேக்கை ஆம் அக் கல் நெடு வரையில் - கூட்டமாகிய முகில்களின் துயிலிடமான அந்தக் கல்லாலாகிய நெடிய மலையில்,— கன்றி பனி மதக் குவடு கோட்பட்டு எழுந்து உறப் பாய்ந்தவாற்றால் - (பகையென்று) கோபித்துக் குளிர்ந்த மதத்தையுடைய யானை வலிப்பட்டு எழுந்து மிகவும் பாய்ந்து கொம்புகளாற் குத்தியதன்மையினால்,—குனி சிலைக் கொற்ற வேந்தன் - வளைந்த வில்லையேந்திய வெற்றியையுடைய இரகுமகாராசன்,—அதனையே குலவு சீர்த்தி தனி பொறித்து அங்கண் நட்ட சயத்தம்பம் ஆக்கினான் - அம்மலையையே விளங்குகின்ற புகழை மிகவும் எழுதி அங்கே நட்ட வெற்றித்தம்பம் ஆக்கினான். எ-று.

பாய்ந்தவாற்றால் ஆக்கினானென இயையும். திரிகூடமென்னும் மலையைப் பகையானையென்றுகருதி யானை தன்கோட்டாற் பாய்ந்து குத்தியதனால் அம்மலையை மேற்றிசையிலே தன் புகழைப்பொறித்துநட்ட வெற்றித்தம்பமாக விட்டுச் சென்றான் என்பது கருத்து. கோட்டடையாளம் புகழ்பொறித்தது போன்றது என்க. (௨௨௫)

விருப்புறு மரவச் சூழல் காலையின் மேவி வெய்யோ
னுருப்பம தகல நாகச் சூழலி னுச்சி வைகிக்
கருப்புரச் சூழற் கங்குற் கவிக்குலஞ் சேக்கு மன்ன
பருப்பத மயலிட் டேகிப் பாரசீ கத்திற் புக்கான்.

இ-ள். கவிக் குலம் - குரங்குக் கூட்டங்கள்,—விருப்பு உறும் மரவச் சூழல் காலையில் மேவி - விரும்பப்படுகின்ற குங்குமமரங்களின் சோலையிலே பிராதக்காலத்திலிருந்து,—வெய்யோன் உருப்பமது அகல நாகச் சூழலின் உச்சி வைகி - சூரியனாலுண்டான உஷ்ணம் நீங்கும்படி நாகமரச்சோலையிலே உச்சிக்காலத்தில் இருந்து,—கருப்புரச் சூழல் கங்குல் சேக்கும் அன்ன பருப்பதம் அயல்இட்டு எகி - கருப்பூரமரச் சோலையிலே இராக்காலத்திலே சயனிக்கும் அந்தத் திரிகூடாசலத்தைப் பக்கத்தில் விட்டுச் சென்று,—பாரசீகத்திற் புக்கான் - பாரசீகதேசத்திற் புகுந்தான். எ-று.

மேவி வைகி சேக்கும் பருப்பதம் என முடிக்க. (௨௨௬)

முரியெழு புணரி வேலை மிசைத்துயி லொழிந்து முன்னி
யரியெழ வண்டங் கொள்ளு மார்ப்பெழ யமன் புரூர [ண்க
நெரியெழ வளப்பில் பாய்மா நிரந்தெழு மிசைக்கொண் டொ
ணெரியெழ வழாவந் தீண்டி யவனரு மமரை யேற்றார்.

இ-ள். முரி எழு புணரி வேலை மிசைத் துயில் ஒழிந்து முன்னி அரி எழ - (திரைகள்) முரிந்து எழுகின்ற கடலின்மேல் நித்திரைகோடலை நீங்கி (இது என்ன ஆரவாரமென்று) சிந்தித்து விஷ்ணுமூர்த்தியானவர் எழும்படி,—அண்டங் கொள்ளும் ஆர்ப்பு எழ - அண்டமெங்கும் நிறைகின்ற ஆரவாரம் எழவும்,—யமன் புரூர நெரி எழ - (அதனால்) யமனுடைய புரூரம் நெரிதலைப் பொருந்தவும்,—அளப்பில் பாய்மா நிரந்து எழ - அளவில்லாத குதிரைகள் நிறைந்து எழ,—மிசைக்கொண்டு ஒண் கண் எரி எழ வழா வந்து ஈண்டி யவனரும் அமரை ஏற்றார் - அவற்றின்மேல் ஏறி ஒள்ளிய கண்களினின்றும் அக்கினி உண்டாகும்படி முறைதவறாது வந்து நெருங்கி யவனர்களும் போரை ஏற்றார்கள். எ-று.

எழ ஆர்ப்பெழவும் (அதனால்) நெரி எழவும் எழ மிசைக்கொண்டு ஈண்டி ஏற்றார் என இயைக்க. (௨௨௭)

விடுப்பவே வினைய தாகில் மிசைக்கொள்வார் வர்க்கம் பற்றித்
தடுப்பவே கலினப் பாய்மாச் சண்டமா ருதங்க ளாமே
கடுப்பவே கதியிற் றாகிக் கண்ணிமை பிந்த முந்தி
மடுப்பதே புரிந்த வாற்றல் வன்சம ரதனின் மாதோ.

இ-ள். கலினப் பாய்மா - கடிவாளம் பூண்ட குதிரைகள்,—வினையது ஆகில் விடுப்பவே - போராகில் விடுமோ,—மிசைக்கொள்வார் வர்க்கம் பற்றித் தடுப்பவே - மேற்கொண்ட வீரர்கள் கடிவாளத்தைப்பிடித்து இழுத்தவளவிலே,—சண்டமாருதங்களே கடுப்பக் கதியிற்று ஆகி - அவைகள் பிரசண்ட வாயுக்களையே ஒக்கும்படி வேகத்தையுடையனவாகி,—கண்ணிமை பிந்த முந்தி வன் சமரதனின் மடுப்பது புரிந்த - மாத்திரைப்பொழுதும் பிந்த முந்திச்சென்று வலிய போர்க்களத்தில் முகஞ்செய்தன. எ-று.

விடுப்பவே என்பதில் ஏகாரம் எதிர்மறை. (௨௨௮)

பரவிரு திசையின் முந்நீ ரோர்தலைப் பட்டு வீடா
தூரவமர் புரிந்தா லொக்க வொன்றுற வோங்கி வெம்போர்
விரவிரு பதாதி முற்றும் விழுங்கியெத் திசையும் விஞ்சி
யிரவியு மிடுக்க ணெய்த வெழுந்தது பராக வீட்டம்.

இ-ள். பரவு இரு திசையின் முந்நீர் ஓர்தலைப்பட்டு வீடாது உர அமர் புரிந்தால் ஒக்க - பரந்த இரண்டுதிசையிற்கடல்களும் ஓரிடத்திற் கூடி அழியாது வலியபோரைச் செய்தாற்போல,—ஒன்று உற ஓங்கி வெம் போர் விரவு இரு பதாதி முற்றும் விழுங்கி - ஒன்ருகக்கிளர்ந்து வெவ்விய போரிற் கலந்த இரண்டுபக்கத்துச் சேனைகள்முழுவதையும் விழுங்கி,— எத்திசையும் விஞ்சி இரவியும் இடுக்கண் எய்த பராக ஈட்டம் எழுந்தது - எத்திசைகளிலும் மிக்குச் சூரியனும் துன்பமுறத் தூளிக்கூட்டம் எழு ந்தது. எ-று.

ஒக்க ஓங்கி விரவு பதாதி என இயையும். (௨௨௯)

இடும்படை யுளத்த வெய்ய வெறுழ்வலிப் படையை யேந்தி
யடும்படை விடுக்கு நாமென் றந்தரத் தயிலை யுய்ப்பார்
விடும்படை தடுக்க லாதே மெய்யயர்ந் துருகி வேரா
நெடும்படை கையிற் றேனு நிராயுத ராகி நிற்பார்.

இ-ள். படை இடும் உள்ளத்த வெய்ய எறுழ் வலிப் படையை ஏந்தி - போரைக்குறித்த மனத்தின்கண்ணே கொடிய மிக்க வலியாகிய படையைத் தாங்கி,—அடும் படை நாம் விடுக்கும் என்று அந்தரத்து அயிலை உய்ப் பார் - கொல்லுகின்ற படையை நாம் விடுப்போமென்று ஆகாயத்தில் வேலைச் செலுத்துவார்கள் (சிலர்),—விடும் படை தடுக்கலாது மெய் அயர் ந்து உருகி வேரா - விட்ட படையைத் தடுக்காது சரீரம் சோர்ந்து உருகி வேர்த்து,—நெடும் படை கையிற்றேனும் நிராயுதர் ஆகி நிற்பார் - நெடிய படைகள் கையிலிருந்தும் ஆயுதமில்லாதவர்கள்போல (வாளா) நிற்பார்கள் (சிலர்). எ-று. (௨௩௦)

மற்கொண்ட திண்டோள் வெற்பின் நெருக்கினாண் வாங்க லாது
விற்கொண்டு பயனின் றென்னுக் குறும்பிடி விரைந்து கொள்வா
கற்கொண்ட நெஞ்சர் தம்போர் கழறுபு கனன்று காதுஞ் [ர்
சொற்கொண்டு தெளிந்து வாளாற் றலைபல துமித்து நிற்பார்.

இ-ள். மல் கொண்ட திண் தோள் வெற்பின் நெருக்கின் - மற்போ ரமைந்த திண்ணிய புயமலைகளின் நெருக்கினால்,—நாண் வாங்கலாது விற் கொண்டு பயன் இன்று என்னு - நாணைப்பூட்ட முடியாமையினாலே வில் லைக்கொண்டதினாலே பயனில்லை என்று கருதி,—குறும்பிடி விரைந்து கொள்வார் - உடைவாளை விரைந்து எடுப்பார்கள்,—கல் கொண்ட நெஞ்சர் தம் போர் கழறுபு கனன்று காதுஞ் சொல் கொண்டு - கற்போன்ற வயிர

மான மனத்தையுடையராய்த் தம் பேரரை எடுத்துச் சொல்லிக் கோபித்து வீரச்சொற்களைக் கூறி,—தெளிந்து வாளால் பல தலை துமித்து நிற்பார் - இடம் அறிந்து வாளினுற் பலதலைகளை வெட்டி நிற்பார்கள். எ-று.

வீரன் என்று தெளிந்து எனினுமாம். (உ௩௪)

செருவந்த மதமா நோக்கிச் செறுநவெம் மோடு சீறிப்
பொருவந்து புறங்கொ டேலென் றடற்படை போக்கிநிற்பார்
வெருவந்து போவா யல்லை யெனப்படை விடுத்து வீழ்ந்த
சருவந்து கைக்கொண் டொன்னார் தலையென நோக்கு கிற்பார்.

இ-ள். செரு வந்த மதமா நோக்கிச் செறுந எம்மோடு சீறிப் பொரு வந்து புறங்கொடேல் என்று - போரில்வந்த யானையையொத்த வீரனைப் பார்த்துப் பகைவனே எம்மோடு கோபித்துப் போர்செய்து புறங்கொடாதே என்று,—அடற் படை போக்கி நிற்பார் - வலிய படையை எறிந்து நிற்பார்கள் (சிலர்),—வெருவந்து போவாய் அல்லை எனப் படை விடுத்து - அஞ்சிப் போகாதேயென்று படையை எறிந்து,—வீழ்ந்த சருவந்து கைக்கொண்டு ஒன்னார் தலை என நோக்குகிற்பார் - (அவர்கள் அஞ்சி ஓடலால்) வீழ்ந்த தலைச்சீராவைக் கையில் எடுத்து அதனைப் பகைவருடைய தலைபோலும் என்று பார்ப்பார்கள் (சிலர்). எ-று.

மதமா உவமையாகுபெயர். படைதாக்கலால் வீழ்ந்த எனினுமாம். ()

முற்றினர் நெருக்கில் வீழா நிற்றலு மூரி மார்பத்
தெற்றிவான் போருக் கஞ்சி யிடைந்தனிர் போலு மென்பார்
கற்றகு மார்பத் தூடு குளித்திடுங் கதிர்வே லங்கை
பற்றுபு கள்வ னெங்கே யொளித்தனன் பாரு மென்பார்.

இ-ள். முற்றினர் நெருக்கில் வீழாநிற்றலும் - போரில்வந்து சூழ்ந்தவர்களது நெருக்கத்திலே (சில வீரர்) வீழ்தலும்,—மூரி மார்பத்து எற்றி வான் போருக்கு அஞ்சி இடைந்தனிர் போலும் என்பார் - (தம்) வலிய மார்பில் அடித்துப் பெரிய போருக்கஞ்சி வருந்தினீர்கள் போலும் என்பார்கள் (சிலர்),—கல் தகு மார்பத்து ஊடு குளித்திடும் கதிர்வேல் அங்கை பற்றுபு - கல்லையொத்த மார்பினூடே மூழ்கிய ஒளிபொருந்திய வேலை அழகிய கையாற்பிடித்துக்கொண்டு,—கள்வன் எங்கே ஒளித்தனன் பாரும் என்பார் - (இவ்வேலை எறிந்த) கள்வன் எங்கே ஒளித்தான் பாரும் என்பார்கள் (சிலர்). எ-று. (உ௩௩)

சுந்தரக் கவசங் கீறச் சுடர்க்கையால் வாம வாகு
மந்தரத் தறைந்து வீர மாளமா ழாந்து நிற்பார்
செந்துகிற் படைஞர் செவ்வே செலுத்தவாம் புரவி செல்லா
தந்தரிற் றிரியத் தாரி ஞர்ப்பெறிந் தட்டு நிற்பார்.

இ-ள். சுந்தரக் கவசம் கிற சுடர்க் கையால் வாம வாகு மந்தரத்து அறைந்து - அழகிய சட்டை கிழியும்படி ஒளிபொருந்திய கையினால் அழகிய புயமலையில் அடித்து,—வீரம் மாள மாழாந்து நிற்பார் - (தம்) வீரம் அழிய மயங்கி நிற்பார்கள் (சிலர்),—செந்துகில் படைஞர் செவ்வே செலுத்த வாம் புரவி செல்லாது அந்தரில் திரிய - சிவந்த வஸ்திரத்தையுடைய படைவீரர்கள் தாம் செவ்விதே செலுத்தவும் பாய்கின்ற குதிரைகள் செல்லாமற் குருடர்களைப்போலத் திரிய,—தாரின் ஆர்ப்பெறிந்து அட்டு நிற்பார் - மணியினால் ஒலித்து ஒறுத்துநிற்பார்கள் (சிலர்). எ-று.

படைஞர் ஆர்ப்பெறிந்து அட்டுநிற்பார் என இயைக்க. (உ௩ச)

பொருதிவிண் டகலே லென்று மற்கட்டித் தலையு டைத்துக்
குருதிகொண் டிருகண் ணாரக் கழீஇ வெறுங் குருடராவார்
கருதியெண் டிசையு மோச்சு மாயிரங் கரமுங் கொண்டு
பருதிமண் டலமு மெங்கே யொளித்தது பகலி னென்பார்.

இ-ள். பொருதி விண்டு அகலேல் என்று மற்கட்டித் தலையுடைத்து - (எம்மோடு) போர் செய்குதி புறங்கொடுத்துப் போகாதே என்று மல்லுக் கட்டித் தலைகளை யுடைத்து,—குருதிகொண்டு இருகண் ஆரக் கழீஇ வெறும் குருடர் ஆவார் - இரத்தத்தினால் இருகண்களையும் மிகவும் கழுவி வெறுங்குருடராவார்கள்,—கருதி - போரைக் கருதி,—எண் திசையும் ஓச்சும் ஆயிரம் கரமும் கொண்டு - எட்டுத்திக்கிலும் செலுத்துகின்ற ஆயிரங் கிரணங்களையும் கொண்டு,—பருதி மண்டலமும் பகலில் எங்கே ஒளித்தது என்பார் - சூரியமண்டலமும் இப்பகலில் எங்கே ஒளித்துவிட்டது என்பார்கள். எ-று.

ஆவார் என்பார் என்பவைகளை முற்றாக்கித் தனித்தனி முடித்தல் சிறப்பின்று. (உ௩ரு)

ஊழிவெம் புணரி காட்டற் பாலதே யுலக முற்றப்
பூழியுங் காட்டுங் கொல்லோ வென்றுளம் பொருமி நிற்பார்
பாழியி னெழுந்த விந்த வெண்டுகள் பற்றப் பற்ற
வாழியுங் கிடந்த கோவென் றதிசய மகத்துக் கொள்வார்.

இ-ள். ஊழி - ஊழியானது,—வெம் புணரி காட்டற் பாலதே - வெவ்விய கடலைக்காட்டும் பகுதியையுடையதேயாம்,—உலகம் முற்றப் பூழியும் காட்டும் கொல்லோ என்று - (அதுவன்றி) உலகம் முழுவதும் பூதூளியையும் காட்டும் பகுதியையுடையதோ என்று,—உளம் பொருமி நிற்பார் - மனம் விம்மி நிற்பவர்கள்,—பாழியின் எழுந்த இந்த வெண் துகள் பற்ற பற்ற ஆழியும் கிடந்தகோ என்று - மிகுதியாக எழுந்த இந்த வெண்மையாகிய துகள் பிடிக்கப் பிடிக்கச் சமுத்திரம் வற்றாது இன்னமும் கிடந்ததுவோ என்று,—அதிசயம் அகத்துக் கொள்வார் - அதிசயத்தை மனத்துக் கொள்வார்கள். எ-று.

ஊழி எழுவாய். நிற்பார், கொள்வார் என்பவைகளை முற்றுக்கித் தனித்தனி முடித்தல் சிறப்பின்று. (௨௩௬)

கருவரு முயிரின் பொம்மற் காட்சிய வண்ட மெல்லாம்
வெருவரு குமில வெம்போ ரின்னணம் விளையா நிற்பத்
தருவரு கடகத் திண்கைத் தலத்திடைத் தனுவொன் றேந்திச்
செருவருவேலான் முன்போய்நோக்கினன் றிகைத்துநின்றான்.

இ-ள். கருவரும் உயிரின் பொம்மல் காட்சிய அண்டம் எல்லாம் வெருவரு குமில வெம் போர் இன்னணம் விளையாநிற்ப - கருவிற்றோற்றும் உயிர்ப்பொலிவினது தோற்றத்தையுடைய அண்டங்களெல்லாம் அஞ்சுகின்ற பேரோசையையுடைய போர் இவ்வாறு நடக்க,—தருவரு கடகத் திண் கைத் தலத்திடைத் தனு ஒன்று ஏந்தி - கற்பகதருவையொத்த கடகத்தை அணிந்த திண்ணிய கையில் ஒரு வில்லைத் தாங்கி,—செருவரு வேலான் முன் போய் - போரில் வருகின்ற வேலையுடையவனுகிய இரகுமகாராசன் முன்னேசென்று,—நோக்கினன் திகைத்து நின்றான் - (யவனர்களினது போரின் கடுமையைப்) பார்த்துத் திகைப்புற்று நின்றான். எ-று.

ஏந்திப் போய் நோக்கினன் திகைத்து நின்றான் என முடிக்க. நோக்கினன் வினையெச்சமுற்று. தன்சேனை இறத்தலாலே திகைத்து நின்றான் எனினுமாம். (௨௩௭)

கத்தலைப் புவனி காக்குங் காவலன் சிலையின் கல்வி
வித்தக மிருந்த வாறு விளம்பலாந் தகைமைத் தாமோ
வத்தலை யவனர் தங்கள் சிருங்கத்தி னார்ப்புக் கேளா
வுய்த்தனன் பகழி மாரி யோடிய துதிர வாரி.

இ-ள். கத்து அலை புவனி காக்கும் காவலன் சிலையின் கல்வி வித்தகம் இருந்தவாறு - ஒலிக்கின்ற கடலாற் சூழப்பட்ட பூமியைக் காக்கும் இரகுமகாராசனது வில்வித்தையின் சாதுரியம் இருந்ததன்மை,—விளம்பல் ஆம் தகைமைத்து ஆமோ - சொல்லுந்தகைமையதோ,—அத்தலை யவனர் தங்கள் சிருங்கத்தின் ஆர்ப்புக் கேளா - அவ்விடத்து யவனர்களது வின்ஞணின் ஆரவாரத்தைக் கேட்டு,—பகழி மாரி உய்த்தனன் - பாண மழையைச் சொரிந்தான்,—உதிர வாரி ஓடியது - (அப்பொழுது) இரத்தவெள்ளம் ஓடியது. எ-று.

சிருங்கம் - வில்; ஆகுபெயர். (௨௩௮)

அற்றன துகளின் பொம்ம லழிந்தவர் தலைக ளங்கைப்
பற்றின கூளி யெங்கும் பரந்தன கழுகும் பாறு
முற்றின புரவி வெள்ள முதிர்கொலை யவனர் தென்பா
லுற்றன ரன்றி மற்றோ ரோடின ருயிர்கொண் டம்மா.

இ-ள். துகளின் பொம்மல் அற்றன - (இரத்தப்பெருக்கினால்) துகட் கூட்டம் நீங்கிப்போயின,—அழிந்தவர் தலைகள் கூளி அங்கைப் பற்றின - இறந்தவருடைய தலைகளைப் பூதங்கள் அழகிய கைகளால் எடுத்தன,—கழுகும் பாறும் எங்கும் பரந்தன - கழுகுகளும் பருந்துகளும் எவ்விடத்தும் பரந்தன,—புரவி வெள்ளம் முற்றின - குதிரை வெள்ளங்கள் முடிந்தன,—முதிர் கொலை யவனர் தென்பால் உற்றனர் அன்றி மற்றோர் உயிர் கொண்டு ஓடினர் - முதிர்ந்த கொலையையுடைய யவனர்களுள்ளே தென்திசையை அடைந்தவர்களன்றி மற்றையோர் தம் உயிரைக்கொண்டு ஓடினார்கள். எ-று. (உநகூ)

பெரும்பொரு ளுணர்ந்த முன்னூற் பெரியவர் கொண்ட சீற்றம்
வரும்பய மொருவிப் போற்றத் தீர்வதே வழக்க தாமாற்
றிரும்பிய யவனர் வந்து சேவடி வணங்க வன்னன்.
வரும்பொருள் விளக்கு வான்போற் றனதரு ளளித்திட் டா

இ-ள். முன் நூல் பெரும் பொருள் உணர்ந்த பெரியவர் கொண்ட சீற்றம் - பழைய நூல்களின் மிக்க பொருள்களையறிந்த பெரியோர்கள் கொண்ட கோபம்,—வரும் பயம் ஒருவிப் போற்ற தீர்வதே வழக்கு - (தமக்கு) உண்டான அச்சந்தீர்ந்து துதிக்க நீங்குவதே முறையாகும்,—திரும்பிய யவனர் வந்து சேவடி வணங்க - புறங்கொடுத்த யவனர்கள்வந்து சிவந்த பாதங்களை வணங்க,—அன்ன அரும் பொருள் விளக்குவான்போல் தனது அருள் அளித்திட்டான் - (மேற்கூறிய) அந்த அரியபொருளை விளக்குபவனைப்போல (இரகு) தனது அருளைக்கொடுத்தான். எ-று.

அது பகுதிப்பொருள் விகுதி. ஆம், ஆல் அசைகள். வணங்கக் கொடுத்தான் என்க. (உசo)

ஏனைவன் சமர வன்க ணிருட்கண மிரிய வாகை
யானதிண் டிறல்சேர் வாளி யலர்கதி ரனந்த மோச்சித்
தானைமன் னியபோர் வேத்துத் தடம்புனல் வறப்பப் பானு
வானவன் றன்னி னோக்கா வடதிசை முன்னி னானே.

இ-ள். ஏனை வன் சமர வன்கண் இருட்கணம் இரிய - ஏனைய வலிய போராகிய வன்கண்மையையுடைய இருட்கூட்டம் புறங்கொடுக்கும்படி,—வாகை ஆன திண் திறல் சேர் வாளி அலர் கதிர் அனந்தம் ஓச்சி - வெற்றி அமைந்த திண்ணிய வலிமைபொருந்திய பாணங்களாகிய பரந்த கிரணங்கள் அளவில்லாதனவற்றைச் செலுத்தி,—தானை மன்னிய போர் வேத்துத் தடம் புனல் வறப்ப - (அவற்றால்) சேனைகளையுடைய நிலையான போரையுடைய அரசர்களாகிய மிக்க நீர்வற்ற,—பானுவானவன் தன்னின் - சூரியனைப்போல,—வடதிசை நோக்கா முன்னினான் - வடதிசையை நோக்கிச் சென்றான். எ-று.

வேத்து வலித்தல்விகாரம். ஓச்சி முன்னினன், வறப்ப முன்னினன் எனத் தனித்தனி முடிக்க. சூரியனும் இருட்கூட்டம் இரியக் கிரணங்களைப் பரப்பி நீரை வற்றச்செய்தலின் அவனை உவமை கூறினர். இனி வாளிகளாகிய கிரணங்களை விடுத்து வடதிசையிலுள்ள அரசர்களாகிய புனலை வறப்பச்செய்யப்போனன் என முதனூற்கியைய முடித்தலுமாம்.

எள்ளலி லகில மின்னாண் மருமத்தி னிலக விட்ட
தெள்ளிரு விளிம்பு முற்றச் செம்பொனு முத்துஞ் செய்ய
வொள்ளிய மணியுஞ் சேர்த்த வுத்தரீ யத்தை யொத்த
கள்ளவிழ் மலர்ப்பூஞ் சிந்து மாநதி கடந்தா னன்றே.

இ-ள். எள்ளலில் அகில மின்னாள் மருமத்தின் இலக இட்ட -இகழ்ச்சியற்ற பூமிதேவியின் மார்பில் விளங்கும்படி இட்ட,—தெள் இரு விளிம்பு முற்றச் செம்பொன்னும் முத்தும் செய்ய ஒள்ளிய மணியும் சேர்த்த உத்தரீயத்தை ஒத்த - தெள்ளிய பெரிய விளிம்புமுழுவதும் சிவந்தபொன்னையும் முத்துக்களையும் சிவந்த ஒளியையுடைய மணிகளையும் சேர்த்து இழைத்த உத்தரீயத்தையொத்ததாகிய,—கள் அவிழ் மலர் பூ சிந்துமாநதி கடந்தான் - தேன்பொருந்திய விரிந்தமலரையுடைய பொலிவாகிய சிந்து நதியைக் கடந்துசென்றான். எ-று.

இட்ட உத்தரீயத்தை ஒத்த சிந்துமாநதி என இயைக்க. (உசஉ)

துளிநறுப் பொலிந்து மென்றாக் குங்குமத் துணர்கள் சுற்ற
வளிநல்லார்ப் பெழத்தா ரோடுங் கொய்யுளை யலையா நிற்ப
நளினமாப் போது போர்த்துப் போகுநன் னதியின் கோட்டுப்
புளினமீப் புரளா வின்புற் றாறின புரவி யெல்லாம்.

இ-ள். புரவி எல்லாம் - குதிரைகள் எல்லாம்,—துளி நறுப் பொலிந்து குங்குமத்துணர்கள் சுற்ற - துளிக்கின்ற தேனாற் பொலிந்து குங்குமப்பூந் தாதுக்கள் சூழவும்,—அளி நல் ஆர்ப்பு எழ - (அப்பூக்களிலுள்ள) வண்டுகளின் நல்ல ஆரவாரம் உண்டாகவும்,—தாரொடு கொய்யுளை அலையா நிற்ப - கிங்கிணிமாலையும் பிடர்மயிரும் அசையவும்,—நளினமாப் போது போர்த்துப் போகு நல் நதியின் கோட்டுப் புளினம் மீப்புரளா இன்பு உற்று ஆறின - பெரிய தாமரைமலர்களை மேலே பரப்பிச் செல்லுகின்ற நதியின் கரையிலுள்ள மணற்குன்றின்மேற் புரண்டு இன்பமுற்று ஆறின. எ-று.

சுற்றவும், எழவும், அலையா நிற்பவும், புரளா இன்புற்று ஆறின என இயையும். (உசங)

காணமா பேரி னான்ற னுயிர்கொளக் கறுவி வன்கற்
றாணமாட் டுதித்த வெய்ய சூரனுஞ் சுழன்றிட் டுள்ள

நாணமா கதத்தி னோங்கு நரவரி யென்னப் போகி
யூணமா நகரிற் புக்கா னொருதனிக் கவிகை யானே.

இ-ள். காணமா பேரினன் தன் உயிர்கொளக் கறுவி வன் கல் தூணம் மாட்டு உதித்து - இரணியனது உயிரைக் கவரும்படி கறுவுதலுற்று வலிய கற்றூணினிடத்திலே தோன்றி,—அவ் வெய்ய சூரனுஞ் சுழன்றிட்டு உள்ளம் நாண - அந்தக் கொடிய வீரனாகிய இரணியனும் சுழன்று மனம் நாணமடையும்படி,—மா கதத்தின் ஓங்கும் நரவரி என்னப் போகி - பெரிய வேகத்தோடுமெழுந்த நரசிங்கத்தைப்போலப் போய்,—ஊணமாநகரில் புக்கான் - பெரிய ஊணநகரத்திற் போனான்,—ஒரு தனிக் கவிகையான் - ஒப்பற்ற ஏகசத்திரத்தையுடையவனாகிய இரகு. எ-று.

உயிர்கொள உதித்து ஓங்கும் நரவரி என இயைக்க. (உ௪௪)

வெம்முக மதமால் யானை வேந்தர்கோ னனிக மீற
வம்முது நகரோர் பட்ட தறைவதெ னவர்த நேச
மைம்முகி லளக நல்லார் தமதெழின் மாழ்கி மிக்குச்
செம்முக வனசஞ் சேப்பச் செய்தகைக் காந்தண் மாதோ.

இ-ள். வெம் முக மத மால் யானை வேந்தர் கோன் அனிகம் மீற - போர்முகத்தையுடைய மதத்தைக்கொண்ட பெரிய யானைப்படையையுடைய அரசர்க்கரசனாகிய இரகுவினுடைய சேனைகள் (போரில்) மேற்பட,—அம் முது நகரோர் பட்டது அறைவது என் - அந்தப் பழைய நகரத்திலுள்ளார் அடைந்தவியல்பை யாம் சொல்வதென்னை,—அவர்தம் நேச மை முகில் அளக நல்லார் தமது செம் முக வனசம் எழின் மாழ்கி மிக்குச் சேப்ப - அவர்களுடைய அன்பான கரியமுகில்போலுங் கூந்தலையுடைய மகளிரது சிவந்த முகத்தாமரை அழகுகுறைந்து மிகவும் சிவக்கும்படி,—கைக்காந்தள் செய்த - (அவர்களுடைய) கைகளாகிய காந்தண்மலர்கள் செய்தன. எ-று.

நல்லார் தமது முகவனசம் சேப்ப எனச் சினவினை முதலொடு முடிந்ததாகப் பொருள் கூறினு மமையும். (உ௪௫)

குழைபறித் திருக்கப் பட்டார் கூவிளி குரைக்கப் பட்டா
ரிழைநிலத் தெறியப் பட்டா ரிருகணீ ருகுக்கப் பட்டார்
தழைமலர்க் கூந்த னாலத் தம்மினின் றயரப் பட்டார்
பிழையுடைத் தாத லாலே பின்பட்ட தறிகி லேமே.

இ-ள். குழை பறித்து இருக்கப்பட்டார் - (அம்மகளிர்) குழைகளைக் கழற்றி இருந்தாரும்,—கூவிளி குரைக்கப்பட்டார் - கூக்குரல் செய்தவரும்,—இழை நிலத்து எறியப்பட்டார் - ஆபரணங்களைப் பூமியிலே எறிந்தவரும்,—இரும் கணீர் உகுக்கப்பட்டார் - மிக்க கண்ணீர் சொரிந்தவரும்,—தழை மலர்க் கூந்தல் நாலத் தம்மில் நின்று அயரப்பட்டார் - தழைத்த

மலரையணிந்த கூந்தல்தொங்கத் தம்மிலே நின்று அயர்ந்தவர்களுமாயி னார்கள்,—பிழையுடைத்து ஆதலாலே பின்பட்டது அறிகிலேம் - (அந்நகர்) இவ்வாறு பிழைபடுதலுடைத்து ஆதலால் அங்கே பின் நிகழ்ந்ததை அறியேம். எ-று.

பிழைபடுதல் - அழிதல். முற்றுயழிந்தது ஆதலால் பின் அங்கே நடந்தது ஒன்றுமில்லை என்றபடி. செய்வினை செயப்பாட்டுவினையாகக் கூறப்பட்டது. (உசசு)

காகங்க டொடருஞ் செவ்வே லரசனுங் கங்குற் போதிற்
பாகங்கொ டீப சாலம் பகல்செயப் பரிந்து கூடுங்
கோகங்க ளெல்லைப் போதிற் றணந்திட விருளின் கூட்டம்
பூகங்கொள் சோலை காட்டும் பொருவில்காம் போசம் புக்கான்.

இ-ள். காகங்கள் தொடரும் செவ்வேல் அரசனும் - பிணத்தைக் கவரும்படி காகங்கள் தொடருகின்ற சிவந்த வேலையுடைய இரகுவும்,—கங்குல் போதில் பாகங்கொள் தீப சாலம் பகல் செயப் பரிந்து கூடும் கோகங்கள் - இராக்காலத்திற் பக்கத்திலுள்ள சோதிமரக்கூட்டம் பகலைச்செய்ய விரும்பிக்கூடுஞ்சக்கரவாகங்கள்,—எல்லைப்போதில் தணந்திட - பகற்காலத்தில் பிரியும்படி,—இருளின் கூட்டம் பூகங்கொள் சோலை காட்டும் - இருளின் கூட்டத்தைக் கமுகஞ்சோலை காட்டுகின்ற,—பொருவில் காம்போசம் புக்கான் - ஒப்பில்லாத காம்போசதேசத்தை அடைந்தான். எ-று.

தணந்திடக் காட்டும் காம்போசம் என இயைக்க. (உசஎ)

வெருளினு னிலத்தி லாவி மிசைவந்த வினைக ளெல்லாம்
பொருளினுற் றீர்வ தல்லாற் புறத்தொரு பொருளு முண்டோ
மருளினுன் மறுகு மன்ன நகருளார் நிதிய வாரி
தெருளினு னல்கக் கொள்ளா விமாசலஞ் சென்று சேர்ந்தான்.

இ-ள். வெருளினுல் நிலத்தில் ஆவி மிசை வந்த வினைகளெல்லாம் - பூமியில் அச்சத்தோடு ஆன்மாக்கண்மேல் வந்த தீவினைகளெல்லாம்,—பொருளினுல் தீர்வது அல்லால் புறத்து ஒரு பொருளும் உண்டோ - பொருளினுல் நீங்குவதன்றி (அதற்கு) வேருக ஒருபொருளால் நீங்குவதும் உண்டோ,—மருளினுல் மறுகும் அன்ன நகருளார் நிதிய வாரி தெருளினுல் நல்க - மயக்கத்தினுற்சுழலுகின்ற அந்த நகரத்திலுள்ளார் திரவிய வெள்ளத்தைத் தெளிவோடு கொடுக்க,—கொள்ளா இமாசலம் சென்று சேர்ந்தான் - வாங்கிக்கொண்டு இமயமலையைச் சென்றடைந்தான். எ-று.

இவர்களுடைய பகையும் பொருளினுல் நீங்கியதென்பார் தீர்வதுண்டோ என்றுர். (உசஅ)

வேறு.

நிலைமுதற் றழுவிவிண் ணிமிர்ந்து நீண்டவம்
மலைமுகட் டுச்சியை வளரப் பண்ணுமாற்
கொலைமுகக் கவனமாக் குரங்க டாக்கவே
தொலைவுறத் தாதினஞ் சிதைந்த தூளியே.

இ-ள். கொலை முகக் கவனமாக் குரங்கள் தாக்க - போர்முகத்தையுடைய வேகம்பொருந்திய குதிரைகளின் குளம்புகள் (அடிவாரத்தைத்) தாக்குதலால்,—தொலைவு உறத் தாது இனம் சிதைந்த தூளி - அழிவுபொருந்தச் செங்கற்கள் சிதைவுற்ற தூளிகள்,—நிலைமுதல் தழுவி விண் நிமிர்ந்து நீண்ட அம் மலை முகட்டு உச்சியை - அடிநிலத்தைத்தழுவி ஆகாயத்தில்நிமிர்ந்து உயர்ந்த அம்மலையின் சிகரத்தினுச்சியை,—வளரப் பண்ணும் - வளரச் செய்யும். எ-று.

தூளி வளரப்பண்ணும் என இயைக்க. கொலைமுகம் என்பதற்குக் கொலையைத் தன்னிடத்தே கொண்ட எனினுமாம். (௨௪௯)

மாடுடைச் சந்தன மொடித்து வாரமா
பீடுடைத் தாகவே பெருகச் செய்யினு
மோடுடைப் பெருமதக் கரிகண் மொய்ம்பினுற்
கோடுடைத் தம்மலை குறையச் செய்யுமே.

இ-ள். மாடு உடைச் சந்தனம் ஒடித்து - பக்கத்திலேகொண்ட சந்தனமரங்களை முரித்து,—வாரம் மா பீடு உடைத்தாகப் பெருகச் செய்யினும் - அடிவாரத்தை மிகவும் பெருமையுடையதாகப் பெருகும்படிசெய்தாலும்,—அம்மலை - அம்மலையை,—மோடு உடைப் பெரு மதக் கரிகள் - பெருமையையுடைய மிக்க மதத்தைக்கொண்ட யானைகள்,—மொய்ம்பினுல் கோடு உடைத்துக் குறையச் செய்யும் - வலிமையோடு சிகரங்களையுடைத்துக் குறையும்படிசெய்யும். எ-று.

செய்யினும் செய்யும் என முடிக்க. பெருகுதல் - விருத்தியாதல். (௨௫௦)

ஈட்டிய சமபெல வீர ரேங்கலாற்
கேட்டிய னோக்கமன் னெறியிற் கேடிலா
தோட்டிய கோளரிப் பார்வை யொன்றுமே
காட்டிய தவ்வழிக் கலக்க மின்மையே.

இ-ள். ஈட்டிய சமபெல வீரர் ஏங்கலால் - அடைந்த சமபெலத்தையுடைய வீரர்கள் ஆரவாரித்தலால்,—கேட்டு இயல் நோக்கம் அ நெறியில் கேடு இலாது ஓட்டிய கோளரிப் பார்வை ஒன்றுமே - அதனைக்கேட்டுப் பார்க்கின்றபார்வையை அவர்கள்செல்லுகின்ற வழியிலே நன்குசெலுத்திய

சிங்கத்தினது அங்நோக்கமொன்றுமே,—அவ்வழிக் கலக்கமின்மை காட்டியது - அவ்விடத்துக் கலக்கமில்லாமையைக் காண்பித்தது. எ-று.

எனவே அவ்வொலியைக்கேட்டு ஏனையவெல்லாங் கலங்கியது என்பது குறிப்பெச்சம். (உருக)

செடிந்தில பாகெனுஞ் சிங்க வேற்றுடைக்
கடிந்திடு மங்குச வுகிரின் காப்பலாற்
படிந்திடு முகில்களைப் பகடென் றேயெதிர்
தடிந்துசெல் கரிக்கொரு தடையு மில்லையே.

இ-ள். செடிந்து இல பாகு எனும் சிங்கவேற்றுடைக் கடிந்திடும் அங்குச உகிரின் காப்பலால் - குற்றமில்லாத பாகனென்றுசொல்லும் சிங்கேற்றினது உறுத்துகின்ற தோட்டியாகிய நகத்தின் காவலேயன்றி,—படிந்திடும் முகில்களைப் பகடு என்று எதிர் தடிந்து செல் கரிக்கு - (அம்மலையிற்) படிந்த முகில்களை யானைகளென்று எதிரே அழித்துச்செல்லுகின்ற யானைகளுக்கு,—ஒரு தடையும் இல்லை - அங்கே வேறொருதடையுமில்லை. எ-று.

எனவே பாகன் தடுக்காதொழியில் அங்கே அது தனதிட்டமாய்ச்சென்று எல்லாவற்றையும் அழித்துவிடுமென்பது குறிப்பெச்சம். (உருஉ)

அஞ்சலி னயனநீ ருகுத்த ரூபமாய்
விஞ்சையர் குறைபகர்ந் தென்ன மேயொலி
தஞ்சவா னதிச்சிறு துளித ழீஇப்புரை
விஞ்சுவே யொலிகொடு மெல்ல வீசுமே.

இ-ள். அஞ்சலின் நயன நீர் உகுத்து - அஞ்சுதலினாலே கண்ணீரைச் சொரிந்து,—அரூபமாய் விஞ்சையர் குறை பகர்ந்தென்ன - அரூபமாய்வந்து விஞ்சையர்கள் தங்குறையைக் கூறினாற்போல,—மே ஒலி - மேலான காற்றனது,—தஞ்ச வான் நதிச் சிறு துளி தழீஇ - தஞ்சமாக ஆகாயத்தையுடைய கங்கையின் சிறிய துளிகளைத் தழுவி,—புரை விஞ்சு வேய் ஒலிகொடு மெல்ல வீசும் - உட்டுளைபொருந்திய மிக்க மூங்கில்களை ஒலித்தலைக்கொண்டு மெல்லவாக வீசும். எ-று.

என்ன வீசும் எனவும், தழீக்கொடு வீசும் எனவும் முடிக்க. தஞ்சம் - ஆதாரம். அற்பமெனப் பொருள்கொண்டு துளிக்கு விசேடணமாக்கினுமமையும். மேய் எனக் கண்ணழித்து மேவி எனப் பொருள்கூறலுமாம். ()

மண்டுவான் வரையுளீர் வல்லை யாவிகொண்
டெண்டிசா முகத்தினு மேகு மென்பபோற்
கண்டைவா யொலிகொடு கரியின் காதெழு
சண்டமா ருதமிரு மருங்குந் தாவுமே.

இ-ள். மண்டு வான் வரையுளீர் - நெருங்கிய பெரிய மலையிலிருப்பவர்களே,—வல்லே ஆவிகொண்டு எண் திசாமுகத்தினும் ஏகும் என்பபோல் - விரைவில் உமது உயிரைக்கொண்டு எட்டுத்திக்கிலும் செல்லுங்கள் என்பது போல,—கண்டைவாய் ஒலிகொடு - கண்டாமணியின் வாயினின்றுமுண்டாகின்ற ஒலியைக்கொண்டு,—கரியின் காது எழு சண்டமாருதம் - யானையின் காதுகளினின்றும் எழுகின்ற பிரசண்டவாயு,—இருமருங்கும் தாவும் - இருபக்கத்திலும் செல்லும். எ-று.

என்பபோல் கொடு தாவும் என இயைக்க.

பூட்டிய வாசினை கழற்றிப் பொன்னணி
வாட்டர வதிந்தன மறவ ரால்வழைக்
கோட்டிழி நாவிகள் கோதி லாமண
மூட்டிய பாறைக டிருவொ டோங்குமே.

இ-ள். பூட்டியவா பொன்னணி சினை கழற்றி - பூட்டியவாறே பொன்னாபரணங்களை அவயவங்களினின்றுங் கழற்றிவைத்து,—வாள் தர வதிந்தன மறவரால் - அவைகள் ஒளியைத்தர இருந்தவீரர்களால்,—வழைக் கோடு இழி நாவிகள் கோது இலா மணம் ஊட்டிய பாறைகள் - புன்னைக் கொம்பர்களினின்றும் இறங்கிய நாவிகள் குற்றமில்லாத (தம்புழுகின்) வாசனையையூட்டிய பாறைகள்,—திருவொடு ஓங்கும் - இலக்குமீகரத்தோடு விளங்கும். எ-று.

அன் சாரியை. மறவரால் ஓங்கும் என இயைக்க. இனி மறவரால் கழற்றி வைக்கப்பட்டு பொன்னணிகள் ஒளியைத்தர, அவைவதியப்பெற்ற பாறைகள் திருவொடோங்கும் எனினுமாம். (உ௫௫)

அறிந்தசெங் கதிர்ச்சுடர்க் கழிவி லாதன
பிறிந்தபல் குவைப்பனிக் கணங்கள் பேரொளி
செறிந்தபல் படைக்கல நெருக்கிற் றேய்ப்புற
மறிந்தெழு பொறிவிழ வறுமை யானவே.

இ-ள். அறிந்த செங் கதிர்ச் சுடர்க்கு அழிவு இல்லாதன - (பனிக் கூட்டங்களை அழிக்குமியல்பின என்று யாவராலும்) அறியப்பட்ட சூரிய கிரணங்களுக்கும் அழிவில்லாதனவாகிய,—பிறிந்த பல் குவைப் பனிக் கணங்கள் - பிரிவுபட்டுள்ள பலதிரளான பனிக்கூட்டங்கள்,—பேர் ஒளி செறிந்த பல்படைக்கலம் நெருக்கில் தேய்ப்பு உற - பெரிய ஒளிசெறிந்த பலபடைக்கலங்கள் நெருக்கத்தினாலே (ஒன்றோடொன்று) தேய்ப்புறலால்,—மறிந்து எழு பொறி விழ வறுமையான - மடங்கியெழுகின்ற அக்கினிப்பொறிகள்விழ வறுமையாய்ப்போயின. எ-று.

பனிக்கணங்கள் வறுமையான என முடிக்க. வறுமையாதல் - இன்மையாதல். (உ௫௬)

ஆங்கொளிச் சரளத்திற் பிணித்த வானையின்
பூங்கதிர்ச் சங்கிலி யதனிற் போகிய
வோங்கெரி மரத்தடஞ் சுடர்க ளோவற
வீங்கிரு ளிரவிற்கே விளக்க மாகுமே.

இ-ள். ஆங்கு ஒளிச் சரளத்தில் பிணித்த - அவ்விடத்தே ஒளிபொருந்திய சரளவிருட்சத்திற் கட்டிய,—ஆனையின் பூ கதிர் சங்கிலியதனில் போகிய - யானைகளது பொலிவாகிய ஒளியையுடைய சங்கிலியிற் சென்று தாக்கிய,—ஓங்கு எரிமரத் தடம் சுடர்கள் - உயர்ந்த இரவெரிமரத்தினது பெரிய கிரணங்கள்,—ஓவு அற வீங்கு இருள் இரவிற்கே விளக்கம் ஆகும் - நீக்கமறப்பொலிந்த இருளையுடைய இராக்காலத்திற்கே தீபமாகும். எ-று.

சோதிவிருட்சத்தினொளி சங்கிலியிற்சென்று பற்றி ஒளிசெய்தலின் விளக்கமாகும் என்றார். (உ௫ள)

வழுவில வாரம தெங்கு மன்னவர்
தொழுதிடும் பொற்குவை சுமந்து துன்றிய
பழுதில பண்டிக ளூரப் பாங்கின்மீ
தெழுபுகை பகலெலா மிரவுச் செய்யுமே.

இ-ள். வழு இல வாரமது எங்கும் - குற்றமில்லாத மலைப்பக்கமெங்கும்,—மன்னவர் தொழுது இடும் பொற்குவை சுமந்து துன்றிய - அரசர்கள் வணங்கிக்கொடுத்த பொற்குவியல்களைச் சுமந்துநெருங்கிய,—பழுது இல பண்டிகள் ஊர - குற்றமில்லாத பண்டிகளைச்செலுத்த,—பாங்கின் மீது எழு புகை - பக்கங்களில் மேலேயெழுந்த புகையானது,—பகல் எலாம் இரவுச் செய்யும் - பகற்காலம்முழுதையும் இராக்காலமாகச் செய்யும். எ-று.

எங்கும் ஊர எழு புகை செய்யும் என்க. பண்டிகள் கற்களை அழுத்திச்செல்லுதலினாலே மலைப்பக்கங்களில் நெருப்புண்டாக அதினின்று புகை உண்டாகுமென்றபடி. பண்டிகள் ஊர என்பதற்குப் பண்டிகள் செல்ல எனினுமாம். (உ௫அ)

மற்படு திண்ணிய மருப்பி னான்மத
வெற்படு தேவதா ரத்தின் மேல்வடுப்
பிற்பட வருகிரா தர்க்குப் பேணத
னற்புத வுன்னதத் தளவைக் காட்டுமே.

இ-ள். மல் படு திண்ணிய மருப்பினால் - வலிபொருந்திய திண்ணிய கோட்டினால்,—மதவெற்பு அடு தேவதாரத்தின்மேல் வடு - யானை குத்திய தேவதாரவிருட்சத்தின் மேலுள்ள வடுவானது,—பிற்பட வரு கிராதர்க்கு -

பின்னாக வருகின்ற வேடர்களுக்கு,—பேணு அதன் அற்புத உன்னதத்து அளவைக் காட்டும் - விரும்பப்படுகின்ற அந்தயானையின் அதிசயமான உயரத்தினளவைக் காட்டும். எ-று.

வடுக் காட்டும் என இயையும். வடு - தழும்பு. (உ௫௯)

காண்டகு மின்னண காட்சித் தானைமே
லீண்டியே கேல்லையி னண்ட மெங்கணுந்
தாண்டுவெண் சீர்த்தியுற் சவசங் கேதரோ
டாண்டருஞ் சமர்பெரி தாய தங்கரோ.

இ-ள். காண் தகும் இன்னண காட்சித் தானை - காணப்படும் இவ்வாறான காட்சியையுடைய சேனைகள்,—மேல் ஈண்டி ஏகு எல்லையின் - மேலாக நெருங்கிச்செல்லும்பொழுது,—அண்டம் எங்கணும் தாண்டுவெண் சீர்த்தி உற்சவசங்கேதரோடு - அண்டம் முழுதையுங் கடந்த வெண்மையாகிய கீர்த்தியையுடைய உற்சவசங்கேதர்களோடு,—ஆண்டு அரும் சமர் பெரிது ஆய - அவ்விடத்து அரியபோர் மிகவுமுண்டாயது. எ-று.

மேல் ஏகும் எல்லையின் எனக் கூட்டுக. மேல் என்றது உற்சவசங்கேதர்மேல் என்றபடி. உற்சவசங்கேதர் - கொண்டாட்டத்தை நியமமாகவுடையவர்; அவர் எழுவர். (உ௬0)

அன்னவர் விழவையச் சமரி னோடழித்
துன்னிய விழவில ராக்கி யொண்புகழ்
கின்னரர் பாடவுண் மகிழ்ந்து கேட்டனன்
றன்னிக ரிலாவடற் றானை வீரனே.

இ-ள். தன் நிகர் இலா அடல் தானை வீரன் - தனக்கு (ப் பிறரொருவரும்) நிகரில்லாத வலிமையைக்கொண்ட சேனைகளையுடைய வீரனாகிய இரகுமகாராசன்,—அன்னவர் விழவை சமரினோடு அழித்து - அவர்களுடைய விழவை அப்போரினோடழித்து,—உன்னிய விழவு இலர் ஆக்கி - கருதிய அவ்விழவை இல்லாதவர்களாகச் செய்து,—ஒண் புகழ் கின்னரர் பாட உள் மகிழ்ந்து கேட்டனன் - தனது ஒள்ளியபுகழைக் கின்னரர்கள் பாட மனம்மகிழ்ந்து கேட்டான். எ-று.

இல்லாத என்பது இலா என விகாரமாயிற்று. (உ௬௧)

சிற்றமிற் றன்னவர் திறைசொ ரிந்தனர்
சாற்றரு மன்னற்குஞ் சயில நாதர்க்கு
மாற்றரும் பெருந்தன வளர்வும் வெஞ்சம
ராற்றலுந் தனித்தனி யறியப் பட்டவே.

இ-ள். சீற்றம் இற்று அன்னவர் திறை சொரிந்தனர் - கோபநீங்கி அந்த உற்சவசங்கேதர்கள் திறைப்பொருளைச் சொரிந்தார்கள்,—சாற்று அரு மன்னற்கும் சயிலநாதர்க்கும் - (அதனாற்) புகழ்ந்து சொல்லப்படுகின்ற அரிய இரகுமகாராசனுக்கும் மலையரசர்களாகிய அந்த உற்சவசங்கேதர்களுக்கும் (உள்ள),—மாற்று அரும் பெரும் தன வளர்வும் வெம் சமர் ஆற்றலும் தனித்தனி அறியப்பட்ட - மாற்றுதற்கரிய பெரிய செல்வப்பெருக்கும் கொடிய போராற்றலும் தனித்தனியே அறியப்பட்டன. எ-று.

மன்னற்குள்ள சமராற்றலும், சயிலநாதர்க்குள்ள பெருந்தனவளர்வும் அறியப்பட்டன என எதிர்நிரனிறையாகக் கொள்க. இனி, குவ்வுருவை எதுப்பொருட்கண் வந்ததாகக்கொண்டு இரகுவால் சயிலநாதருடைய தனவளர்வும், சயிலநாதரால் இரகுவின் சமராற்றலும் அறியப்பட்டன எனினுமாம். (உ௬உ)

வித்தக வம்மலை நின்று வெம்முடி
பத்துள னெடு பட்ட வெள்ளிவெ
ணத்திரி தனிற்புகா ததற்கு நாணினை
வைத்திடு வான்புகழ் வாய்ப்ப மீள்வுறா.

இ-ள். வித்தக அம்மலை நின்று - வித்தகமான அம்மலையினின்றும்,— வெம் முடிபத்துளனால் எடுபட்ட வெண் வெள்ளி அத்திரிதனில் புகாது - கொடிய இராவணனாலே தூக்கப்பட்ட வெண்மையாகிய வெள்ளிமலையிற் புகாமல்,—அதற்கு நாணினை வைத்திடு வான் புகழ் வாய்ப்ப மீள்வுறா - அதற்கு நாணத்தை உண்டாக்குகின்ற பெரிய புகழ்வாய்க்க மீண்டு. எ-று.

வித்தகம் - அதிசயம். எடுக்கப்பட்ட என்பது எடுபட்ட என விகாரமுற்றுநின்றது. (உ௬௩)

அரவுலோ கத்திடை யாழ்ந்து மாமலை
பரவுலோ கிதமல ரோடும் பைம்பொனுந்
திரவுலோ கத்தைமீச் சிதறுந் தெண்டிரைக்
கரவுலோ கிதநதிக் கரையின் முன்னினன்.

இ-ள். அரவுலோகத்திடை ஆழ்ந்தும் - பாதலத்திலாழ்ந்தும்,—மா மலை பரவு லோகித மலரோடும் பைம் பொனும் திர உலோகத்தை மீச் சிதறும் - வண்டுகள் மலைகின்ற பரந்த செந்நிறமான மலர்களோடும் பசிய பொன்னாகிய வலியலோகத்தை மேலே சிதறுகின்ற,—தெள் திரைக் கர உலோகித நதிக்கரையின் முன்னினன் - தெள்ளிய திரையாகிய கரத்தையுடைய உலோகிதநதிக்கரையையடைந்தான். எ-று.

ஆழ்ந்தும் சிதறும் கரம் என இயைக்க. (உ௬௪)

வேறு.

மோடு தழீஇ யறு காலிசை யோடு முயங்கு கருங்குவளைத்
தோடு தழீஇயிரு போது மறுதிரு டெற்றிய கற்றையெலா
மாடு தழீஇநெரி வால்வரு வேய்கள் வழங்க மலிந்துதடங்
கோடு தழீஇயுல வாநில வீனுவ கொத்தொளிர் நித்திலமே.

இ-ள். மோடு தழீஇ அறுகால் இசையோடு முயங்கு கருங்குவளைத் தோடு தழீஇ - பெருமையைப்பொருந்தி வண்டுகளினிசையோடுசேர்ந்த கருங்குவளைப்பூக்களைத் தழுவலால்,—இருபோதும் அறுத இருள் துற்றிய கற்றையெலாம் மாடு தழீஇ - இரண்டுகாலத்திலும் நீங்காத இருளாகிய செறிந்த கூட்டத்தையெல்லாம் பக்கத்திலே தழுவி,—நெரிவால் வரு வேய்கள் வழங்க தடம் கோடு கொத்து ஒளிர் நித்திலம் தழீஇ மலிந்து - கண்ணெரிதலால் வளராநின்றமூங்கில்கள் ஈன விசாலமாகியகரைகளினுற் கூட்டமாகவிளங்குகின்றமுத்துக்களைத்தழுவிப் பொலிந்து,—உலவா நிலவு ஈனுவ - அழியாதநிலவைக் காலுவன. எ-று.

மோடுதழீமுயங்கு குவளை என இயைக்க. அந்த ஆறுனது தோடு தழுவலால் இருட்கற்றையைத் தழுவி, கோட்டால் நித்திலத்தைத் தழுவி நிலவை ஈனுவ என்க. பன்மைநோக்கி ஈனுவ என்றார். துவ்விகுதி கெட்டதுமாம். கோடுதழுவலால் நித்திலம் ஈனுவ என்றல் இத்துணைச் சிறப்பின்று. (உகூ௫)

மெல்லிய கொத்தலர் சந்தகில் குங்கும வேரியு மென்றுகிரின்
வல்லியு நித்தில வாரியு நாளு மயங்கி வயங்குதலாற்
புல்லி மதித்திள வல்லி பிடித்துறு புட்குல புஞ்சநெடுங்
கொல்லி யிசைத்திடு குந்தள வோதியர் கொங்கையு மொப்பது [வே.

இ-ள். மெல்லிய கொத்து அலர் சந்து அகில் குங்கும வேரியும் - மெல்லிய கொத்திலலர்ந்தபூக்களும் சந்தனமும் அகிலும் குங்குமமுமாகிய இவற்றின் மணமும்,—மெல் துகிரின் வல்லியும் - மெல்லிய பவளக்கொடிகளும்,—நித்தில வாரியும் - முத்தின் வருவாயும்,—நாளும் மயங்கி வயங்குதலால் - நாடோறுஞ் சேர்ந்து விளங்குதலால்,—புல்லி மிதித்து இள அல்லி பிடித்து உறு புட்குல புஞ்சம் - புறவிதழில் மிதித்து இளமையான அகவிதழைப் பற்றியிருக்கின்ற வண்டுச்சாதியின் கூட்டம்,—நெடுங் கொல்லி இசைத்திடு - நெடிய கொல்லிப்பண்ணைப் பாடுகின்ற,—குந்தள ஓதியர் கொங்கையும் ஒப்பது - கூந்தலையுடைய பெண்களது முலைகளையும் (அந்த ஆறுனது) ஒப்பது. எ-று.

வயங்குதலால் ஒப்பது என இயைக்க. (உகூகூ)

அரும்புற வுந்தி மடந்தையர் தங்க ளகத்துறு மாசையறக்
கருங்கடன் மங்கல நாயக ருள்ள மருட்டுதல் காரணமாய்
மருங்கு நெருங்கு மலர்ப்புது மேகலை மின்ன மணம்புனையா
நெருங்கு தரங்க நுதற்கொடி மெல்ல நெரித்து நடப்பதரோ.

இ-ள். அரும் புற உந்தி மடந்தையர் தங்கள் அகத்து உறும் ஆசை அற - அரிய பிற ஆறுகளாகிய பெண்களிடத்திலுள்ள ஆசையை ஒழியும் படி,—கரும் கடல் மங்கல நாயகர் உள்ளம் மருட்டுதல் காரணமாய் - கரிய கடலாகிய மங்கலத்தையுடைய நாயகரது மனத்தை மருட்டித் தன் வசப்படுத்துதல் காரணமாக,—நெருங்கு மலர்ப் புது மேகலை மின்ன மணம் புனையா - நெருங்கிய மலர்களாகிய புதிய மேகலை மருங்கிற் பிரகாசிக்க மணம் புனைந்து,—நெருங்கு தரங்க நுதல் கொடி மெல்ல நெரித்து நடப்பது - நெருங்கிய திரைகளாகிய நெற்றிப்புருவத்தை மெல்ல நெரித்து (அந்த ஆறு) நடக்குந்தன்மையையுடையது. எ-று.

அகம் - இடம். அரும்புறவுந்தி மடந்தையர்தங்கள் அகத்துறும் ஆசை அற என்பதற்கு, தான் சுயமே பற்றிக்கொள்ளுதலாலே புறவாறுகளாகிய பெண்கள் தங்கள் மனத்திலுள்ள ஆசையையொழிய எனப் பொருள்கூறினு மமையும். மணம் புனையா என்பதற்கு மணத்தைப்பொருந்தி எனவும், மணக்கோலமுற்று எனவும் பொருள்கொள்க. திரையினடுக்கு நுதல் நெரிப்புப்போலும் என்க. (உ௬எ)

நாரி னடைந்து படிந்திடு கேள்வரை நங்கைய ரையமுறச்
சேரு மிடங்க டொறும்புதி தேமிகு தெய்வ மணந்தருமா
னீரி னுவந்து குடைந்திடு மும்ப ரரம்பையர் நீடளகக்
காரி னிழிந்த நறும்பிர சந்தரு கற்பக நன்மலரே.

இ-ள். நீரின் உவந்து குடைந்திடும் உம்பர் அரம்பையர் நீடு அளகக் காரின் இழிந்த - நீரின்கண் மகிழ்ந்து குடைகின்ற தேவரம்பையரது நெடிய கூந்தலாகிய மேகத்தினின்றும் இறங்கிய,—நறும் பிரசம் தரு கற்பக நன்மலர் - நறிய தேனைத்தருகின்ற கற்பகத்தின் நல்ல பூக்கள்,—நாரின் அடைந்து படிந்திடு கேள்வரை - விருப்பத்தோடுவந்து அந்நீரில் மூழ்கிய நாயகரை,—நங்கையர் ஐயம் உற - அவர்களுடைய பெண்கள் சந் தேகம் கொள்ளும்படி,—சேரும் இடந்தொறும் புதிதே மிகு தெய்வமணந் தரும் - புணருமிடந்தோறும் புதிதாகவே மிகுகின்ற தெய்வமணத்தைக் கொடுக்கும். எ-று.

இழிந்தமலர் தரும் என இயைக்க. (உ௬அ)

மேய தடங்கரை துன்றி விசைத்து மிகுந்து வகிர்ந்துறவே
தூய பெரும்புன னள்ளிடை நின்று சுழிப்பன வுஞ்சுழியோ

நேய முளங்கொ டணைந்தவர் தங்க ளகத்தினை நீடிரையே
யாய கரங்கொடு சுற்றி யிழுத்து ளடக்குவ தாகுமரோ.

இ-ள். தூய பெரும் புனல் மேய தடம் கரை துன்றி விசைத்து மிகுந்து உற வகிர்ந்து - சுத்தமாகிய மிக்கநீரானது பொருந்தியபெரிய கரையை நெருங்கி விசைகொண்டு மேற்பட்டு (ப் பின்) மிகவும் பிளவு பட்டு,—நள்ளிடை நின்று சுழிப்பனவும் சுழியோ - நடுவேநின்று சுழிப் பனவுஞ் சுழிகளா? அன்று,—நேயம் உளம் கொடு அணைந்தவர் தங்கள் அகத்தினை - (பின் அவைகள்) அன்பை மனத்திற்கொண்டு (மூழ்கும்படி) அடைந்தவர்களது மனத்தை,—நீள் திரை ஆய கரங்கொடு சுற்றி இழுத்து உள் அடக்குவது ஆகும் - நெடிய திரையாகியகையினாலே சுற்றி இழுத்துத் தனக்குள்ளே அடக்கிக்கொள்வதேயாகும். எ-று.

அவைகள் அடக்குவதாகும் என இயைக்க. எழுவாய் வருவிக்கப்பட்டது. தேற்றேகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. (உசுக)

ஓர்துறை மான்மத புண்டர வாடவ ராடி யுவப்பதுவே
யோர்துறை மான்மத வாரண மூழ்கி யுழக்கி முழக்குவதே
யோர்துறை யோதிம மாமுலை மாத ருவந்தினி தாடுவதே
யோர்துறை யோதிம சால முலாவி யொதுங்கி யிருப்பதுவே.

இ-ள். ஓர் துறை மான்மத புண்டர ஆடவர் ஆடி உவப்பது - அந்த ஆற்றின் ஓர்துறை கஸ்தூரித்திலதத்தையுடைய ஆடவர்கள் மூழ்கி மகிழப்படுவது,—ஓர் துறை மால் மத வாரணம் மூழ்கி உழக்கி முழக்குவது - ஓர்துறை மயக்கத்தையுடைய மதயானைகள் மூழுகி உழக்கி முழக்கஞ் செய்யப்படுவது,—ஓர் துறை ஓதிம மாமுலை மாதர் உவந்து இனிது ஆடுவது - ஓர்துறை மலைபோலும் பெரிய முலைகளையுடைய பெண்கள் மகிழ்ந்து நன்கு ஆடப்படுவது,—ஓர் துறை ஓதிம சாலம் உலாவி ஒதுங்கி இருப்பது - ஓர்துறை அன்னக்கூட்டங்கள் உலாவி ஒதுங்கி இருக்கப் படுவது. எ-று.

உவப்பது முதலிய வினைகள் படுவிகுதி தொக்குநின்ற செயப்பாட்டு வினைகள். இவ்வினைகளுக்கு ஆற்றை எழுவாயாக்கித் துறையை இடப் பொருட்டாகக் கொள்ளுதலும் பொருந்தும். (உஎ0)

வேறு.

எண்ணரு மினைய செவ்வி யீர்ம்புனல் யாறு நீங்கித்
தண்ணற வறவு மாந்தித் தமரவண் டுழக்குந் தாரான்
றிண்ணிய புகழ்ப் பிராச்சோ திடமெனுஞ் சிறப்பின் செல்வக்
கண்ணகர் கடந்து போகிக் காமரூ பத்திற் புக்கான்.

இ-ள். எண்ண அரும் இனைய செவ்வி ஈர்ம்புனல் யாறு நீங்கி - மதித்தற்கரிய இத்தன்மையான சிறப்பையுடைய குளிர்ந்த நீர்பொருந்திய ஆற்றை நீங்கி,—தண் நறவு அறவும் மாந்தி தமர வண்டு உழக்கும் தாரான் - குளிர்ச்சிபொருந்திய தேனை மிகவுமுண்டு ஒளியையுடைய வண்டுகள் உழக்குகின்ற மாலையையுடையவனாகிய இரகு,—திண்ணிய புகழ் பிராச்சோதிடம் எனும் சிறப்பின் செல்வக் கண் நகர் கடந்து போகி - வலிய புகழையுடைய பிராச்சோதிடமென்று சொல்லும் சிறப்பினையுடைய செல்வத்தைக்கொண்ட விசாலமான நகரைக் கடந்துசென்று,—காமரூபத்தில் புக்கான் - காமரூபமென்னும் நகரத்திற் புகுந்தான். எ-று.

நீங்கிக் கடந்து போகிப் புக்கான் என வினைமுடிபு செய்க. கண் நகர் - கண்போன்ற நகருமாம். (உஎக)

நினைப்பருங் கரவு கொண்ட நீண்முகி லூருந் தேவன்
றனைப்பெரி தமர்செய் தாடற் சரங்கொடு வென்றா னென்றான்
முனைத்திறத் தெதிர்ந்து வஞ்ச முற்றிய மூரிக் கள்ள
வினைப்பெரு மாயஞ் செய்யா வெல்வதின் றெங்ங னாமே.

இ-ள். நினைப்பு அரும் கரவு கொண்ட நீண் முகில் ஊரும் தேவன் றனை - (இவன்) நினைத்தற்கரிய கரவினைக்கொண்ட நெடிய முகிலை வாகனமாக ஊருகின்ற தேவனாகிய இந்திரனை,—பெரிது அமர் செய்து ஆடல் சரங்கொடு வென்றான் என்றால் - மிகவும் போர்செய்து வெற்றியையுடைய அம்பைக்கொண்டு வெற்றிகொண்டானென்றால்,—முனைத் திறத்து எதிர்ந்து வஞ்சம் முற்றிய மூரிக் கள்ள வினைப் பெரு மாயம் செய்யா - போர் முனையில் வலியோடும் எதிர்த்து வஞ்சம் முதிர்ந்த வலிய கள்ளத்தொழிலாகிய பெரிய மாயங்களைச்செய்து,—வெல்வது இன்று எங்ஙன் ஆம் - (இவனை) வெற்றிகொள்வது இன்றைக்கு எவ்வாறாகும். எ-று.

கரவு - வஞ்சனை; கள்ளமென்றல் ஈண்டுச் சிறப்பின்று. என்றால் வெல்வது எங்ஙன் ஆம் என இயையும். குளகம். (உஎஉ)

என்றுளத் தமைத்து முன்ன மியாவரு மிட்ட செம்பொற்
குன்றனைத் தையுமோர் வைப்பிற் குவித்தென நிதியக் குன்றா
நன்றுறக் குவித்திட் டன்ன நகருளார் நளின நாணு
மின்றுணைக் கழலிற் றாழ்ந்தா ரிறைவனு மெழுந்து போனான்.

இ-ள். என்று உளத்து அமைத்து - என்று மனத்திற்கருதி,—அன்ன நகர் உள்ளார் - அந்த நகரத்திலுள்ளவர்களாகிய அரசர்கள்,—முன்னம் யாவரும் இட்ட செம்பொன் குன்றனைத்தையும் ஓர் வைப்பில் குவித்தென - முன்னரே மற்றைய அரசர்கள் யாவரும் கொடுத்த சிவந்த பொன்மலைகளனைத்தையும் ஓரிடத்திற் குவித்தாற்போல,—நிதியக் குன்றம் நன்று உறக்

குவித்திட்டு - திரவிய மலையை நன்ருகக் குவித்து,—நளினம் நாணும் இன் துணைக் கழலில் தாழ்ந்தார் - தாமரையு நாணுகின்ற இனிய இரண்டாகிய பாதங்களில் வணங்கினுர்கள்,—இறைவனும் எழுந்து போனன் - (அப்பொழுது) இரகுமகாராசனும் எழுந்து சென்ருன். எ-று.

அமைத்துக் குவித்துத் தாழ்ந்தார் என வினைமுடிபு செய்க. (உஎ௩)

திணிபுய வரச னிவ்வா றரும்புகழ் செவ்வான் றீண்டித்
தணிவறத் திசையோ ரெட்டுஞ் சயங்கொண்டு தழைத்த செல்வப்
பணிதரு புதிய கோலம் படுத்தலாற் பைம்பொ னுமத்
தணிநகர் புதுக்கி யன்ன வயோத்திவந் தடைந்தா னன்றே.

இ-ள். திணிபுய அரசன் - திணிந்த புயத்தையுடைய அரசனுகிய இரகு,—அரும் புகழ் செவ்வான் தீண்டித் தணிவு அறத் திசை ஓர் எட்டும் இவ்வாறு சயம் கொண்டு - அரிய புகழ் செவ்விய ஆகாயத்தைத் தீண்டி மேற்படத் திசைகளெட்டையும் இவ்வாறு வெற்றிகொண்டு,—தழைத்த செல்வப் பணிதரு புதிய கோலம் படுத்தலால் - வளர்ந்த செல்வத்தாலாய தொழிலமைந்த புதிய அலங்காரத்தைச் செய்தலால்,—அணி பைம்பொன் நாமத்து நகர் புதுக்கியன்ன - அழகிய பொன்னுலகத்தைப் புதுக்கினுற் போன்ற,—அயோத்தி வந்து அடைந்தான் - அயோத்திநகரை வந்து அடைந்தான். எ-று.

கொண்டு வந்தான் என முடிக்க. (உஎ௪)

எத்திசை வைப்பு நோக்கின் வறிதுற விசைந்து கொண்ட
வித்தக நிதிய மெல்லா மள்ளுபு மெல்ல மெல்லத்
துய்த்திடும் பெரிய தோற்றத் தொல்லைவிச் சுவசித் தென்னு
நித்திய வேள்வி தன்னை நெறியொடுந் திருத்தி னுனே.

இ-ள். நோக்கின் எத்திசை வைப்பும் வறிது உற இசைந்து கொண்ட வித்தக நிதியம் எல்லாம் - நோக்குமிடத்து எந்தத்திசையிலுள்ள இடங்களும் வறிதாகும்படி சென்று வாங்கிய,—வித்தக நிதியம் எல்லாம் - மேன்மையான திரவியங்களையெல்லாம்,—அள்ளுபு மெல்ல மெல்லத் துய்த்திடும் - அள்ளி மெல்ல மெல்ல உண்ணுகின்ற,—பெரிய தோற்றத் தொல்லை விச்சுவசித்து என்னும் நித்திய வேள்விதன்னை - பெரிய தோற்றத்தையுடைய பழைய விச்சுவசித்து என்று சொல்லும் அழிவற்ற யாகத்தை,—நெறியொடும் திருத்தினுன் - முறையாகச் செய்தான். எ-று.

அள்ளித் துய்த்திடும் வேள்வி என இயையும். (உஎ௫)

வசையடு மீற்றி னின்ற வான்பொரு ளன்றி மூன்றி
னசையொடு மிருபா னல்கு நடுவணின் றதனை நாடித்

திசையொடும் பெரிய தானஞ் செய்வதற் கன்றே தேயா
விசையொடும் பெரியோர் யாரு மின்புற வீட்டன் மாதோ.

இ-ள். பெரியோர் யாரும் - பெரியோர்கள் யாவரும்,—வசை அடும் ஈற்றில் நின்ற வான் பொருள் அன்றி மூன்றில் - வசையை நீக்குகின்ற கடையில் நின்ற பெரிய (முத்தியாகிய) பொருளேயன்றி (ஏனையவாயுள்ள) மூன்றில்,—நசையொடும் இருபால் நல்கும் நடுவண் நின்றதனை நாடி இசையொடும் இன்பு உற ஈட்டல் - ஆசையோடும் அறமும் இன்பமும் என்னும் இருபகுதியையும் கொடுக்கின்ற நடுவாகநின்ற பொருளை நோக்கி யழியாத கீர்த்தியோடும் இன்பமுறும்படி சம்பாதித்தல்,—திசை யொடும் பெரிய தானம் செய்வதற்கன்றே - திக்கிலுள்ளார்க்குப் பெரிய தானங்களைச் செய்தற்கல்லவா. எ-று.

ஆனபடியாற்றான் அரசனும் பிரயாசப்பட்டுச் சம்பாதித்த பொருளைச் செலவு செய்து தக்கிணைகொடுக்கிற விச்சுவசித்து யாகத்தைச் செய்தான் என்பது குறிப்பெச்சம். அன்றே என்பது தேற்றப்பொருளில் வந்தது. திசையொடும் என்பதை ஈட்டலோடு முடித்து திசைகடோறுஞ்சென்று ஈட்டல் எனப் பொருள்கொள்ளினுமமையும். (௨௭௬)

வியன்றரு மிரவி சூழ்ந்த வெண்மதிக் குழுவிற் றொக்க
பயன்றரு பான்மைத் தாய பாரிடை யரச ரெல்லா
நயன்றரு மினிய வாய்மை நயத்தொடு நாமவேலா
னியன்றரு ணல்க வின்புற் றிணையடி வணங்கிப் போனார்.

இ-ள். வியன் தரும் இரவி சூழ்ந்த வெண்மதிக் குழுவில் தொக்க - சிறப்புப்பொருந்திய சூரியனைச் சூழ்ந்த வெள்ளிய சந்திரர்களது கூட்டத்தைப்போலத் தொக்குள்ள,—பயன் தரு பான்மைத்து ஆய பாரிடை அரசர் எல்லாம் - பயனைக் கொடுக்குந் தன்மையையுடைய பூமியிலுள்ள அரசர்களெல்லாம்,—நாமவேலான் நயன் தரும் இனிய வாய்மை நயத்தொடு இயன்று அருள் நல்க - அச்சத்தைத்தரும் வேலையுடையனாகிய அரசன் நன்மையைத் தருகின்ற இனிய வார்த்தையை முகமனோடும் கூறி அருள் கொடுக்க,—அன்பு உற்று இணை அடி வணங்கிப்போனார் - அன்புகொண்டு இரண்டாகிய பாதங்களையும் வணங்கிப்போனார்கள். எ-று.

குழுவில் தொக்க அரசரெல்லாம் வணங்கிப்போனார் என இயைக்க. அருள் - உத்தரவு. (௨௭௭)

திக்குவிசயப்படலமுற்றிற்று.



# பிழை திருத்தம்.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| க | ச | இதைய | இதய |
| ,, | கஉ | ,, | ,, |
| ,, | ,, | இருந்ததாயின் | இருக்குமாயின் |
| சு | உசு | லெழா | லெழாப் |
| அ | எ | சத்திப்பதுபோல | காலுவதுபோல |
| ,, | ,, | இருள் | இருள் |
| கூ | கரு | இருளையுடைய | கரிய |
| ,, | ,, | நீர்த்துளிகள் | ஆலங்கட்டிகள் |
| கக | கஉ | தலை-ஆயிரம் | தலைப்படியுடல் - ஆயிரமுடல் |
| கரு | கரு | பிடுங்கி | முறித்து |
| கரு | உரு | தாளா | தாழா |
| கஎ | உஉ | அழிவில்லாத | அழகில்லாத |
| ககூ | அ | ஆகம் | வாகம் |
| உக | கo | திலகத்தை | காப்பை |
| ,, | கரு | ஆட்டுதலைச்செய்வன | ஆட்டுவன |
| ,, | ககூ | ,, | ,, |
| உச | கo | கொழுவி | கொளுவி |
| ரு௩ | கச | அசை | அசைஇ எனவும் பாடம் |
| ருரு | கஅ | தொத்கு | தொக்கு |
| ,, | உஉ | ஞெரு கொண்டார் | ஞெருக்கொண்டார் எனப் பாடங்கொண்டு ஒறுத்துக்கொண்டார் எனினுமாம். ஒறுத்தல் - தண்டித்தல் |
| ருசு | கஅ | பரிதி அம் குடிங்கு | பருதியங்குடிங்கு |
| ருஎ | கச | விலந்தைய | வலந்தைய |
| சo | கசு | ஞேசையை | ஞேசையால் |
| ருo | உச-உரு | படைத்துளது | படைத்துள |
| ருஎ | கச | மானமதிற் பொறி | மான மதிற்பொறி |
| ,, | கசு | விமானத்திற்செய்த | மதிலிற்செய்த |
| ருஅ | கஎ | மொய் | மெய் |
| ,, | ககூ | வளை | வளைஇ |
| ,, | உக | ,, | ,, |
| ,, | ௩உ | மாள் விதனீமதி | மதிலிதனீள் |
| சுக | கஅ | கொளு | கொலு |
| சு௩ | கo | ஆகாசம் எடுத்துநிற்றல் | ஆகாசம்மேருமலையை எடுத்து நிற்றல் |
| சுரு | உஅ | பளிக்கு | பளிங்கு |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௬௫ | ௩௭ | நிரணிறை | நிரணிறை. அனங்களெல்லாம் எனக்கண்ணழித்து பொருள்கொள்வாருமுளர். அது சிறப்பின்று. |
| ௬௭ | ௨௪ | நன்கு அடிபொருந்தி | காற்றடிக்க |
| ௬௮ | ௧ | வடிவு | காம்பின் வடிவு |
| ௭௦ | ௩௪ | சுணம் | சுண்ணம் |
| ௭௬ | ௧௯ | மறை | மறைக் |
| ௭௯ | ௩ | [illegible] | ஆலயி |
| ௮௦ | ௨௯ | எ-செய்யுள்கள் | ஏழுசெய்யுள் |
| ௮௧ | ௨௯ | நன்காத்தலும் | நன்கு காத்தலும் |
| ௮௬ | ௫ | விடுப்பதுகொண்டு நிலன் விழுப்புனலை ஆயிரமாமடஙகு | ஆயிரமாமடங்குவிடுப்பது கொண்டு நிலன்விழுப்புனலை |
| ௮௮ | ௨௯ | மாறுதல் கொடுக்கல்வாங்கல் செய்தல் | மாறுதல் திலீபன் சுவர்க்கத்தையும் இந்திரன் பூமியையுமாக மாறுதல் |
| ௮௯ | ௧௨ | தக்கணை | தக்கிணை |
| ” | ௧௫ | ” | ” |
| ” | ௧௬ | ” | ” |
| ” | ௨௩ | ” | ” |
| ௯௩ | ௭ | மிகுவதும் | பெறுவதும் |
| ௧௦௧ | ௬ | காணப்படலால் | தோன்றலால் |
| ” | ௬-௭ | (அரசன் விரும்பும்படி) | (அரசன்) |
| ௧௦௩ | ௧ | நாட்டிய | நாட்டிய தேர் உருளையின் |
| ௧௦௮ | ௨௩ | காட்டி | தபோவனத்தி |
| ” | ௨௪ | காட்டிற்கும் | தபோவனத்திற்கும் |
| ௧௦௯ | ௨௬ | ஒழுக்கம் | முறை |
| ” | ௩௦ | என்றமையைய | என்றபடி |
| ௧௧௫ | ௧௦ | தேனுக் | தேனு |
| ௧௧௭ | ௧௨ | ௬௩ | ௬௪ |
| ௧௧௮ | ௯ | ஒத்ததென்க | ஒத்தவென்க |
| ௧௧௯ | ௨௫-௨௬ | துலங்கும் | துஞ்சும் |
| ௧௨௧ | ௨௯ | மாதோடு | மாதொடு |
| ௧௨௪ | ௧௫ | கதிர் | கர |
| ௧௨௭ | ௨௩ | அ பண்டறிசுட்டு | |
| ௧௨௯ } ௧௩௦ } | ௩௫-௧ | பொய்யாகிய இடை | பொய்த்தன்மையயுடைய இ [டை |
| ௧௩௧ | ௧ | | மத்தகம் - தலையுமாம் |
| ௧௩௨ | ௮ | ஒலிக்கின்ற | ஒலிக்கின்ற வேதங்களையுடை [ய |
| ௧௩௬ | ௧ | துணை | துணை |
| ” | ௭ | ” | ” |
| ” | ௩௪ | அரசனேவெனின் | அரசனே |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௩௬ | ௩௭ | ௧௩ | ௧௧ |
| ௧௩௮ | ௧௭ | நவில்வான் | நவில்வ |
| ,, | ௧௯ | நின்றதன்றே | நின்றவன்றே |
| ௧௩௯ | ௩௫ | முகிளம் | முகுளம் |
| ௧௪௦ | ௧௮ | பிற்பிழை | பிற்பிழை களவிற்கு ஆக |
| ௧௪௧ | ௩ | உணர்த்திடாவகை | உணர்ந்திடாவகை |
| ,, | ௫ | நேர்மை | முறைமை |
| ,, | ௭ | வலிமையையுடை | வலிமையையுடைய |
| ,, | ௨௫ | அறிந்துபகரித்த | அறிந்துபகரியாத |
| ௧௪௨ | ௩௨ | வளத்து | வளர்த்து |
| ௧௪௩ | ௩ | ,, | ,, |
| ,, | ௪ | ,, | ,, |
| ௧௪௭ | ௬ | இன்பத்தேனு என்பதற்குக் காமதேனு எனினுமாம் | |
| ,, | ௩௨ | கடை | இடை |
| ௧௪௮ | ௮ | வறிவுப் | வறிவின் |
| ,, | ௯ | மன்ளியல் | மண்ணியல் |
| ௧௪௯ | ௧௯ | விளுங் | விழுங் |
| ௧௫௧ | ௬ | நீடலாற் | னீடலாற் |
| ,, | ௧௧ | காலுதல் | காலுதன்மிகுதல் |
| ,, | ௨௪ | பிருப்பரால் | ருப்பரால் |
| ,, | ௩௪ | அவர்கள் புணர்ச்சியைக் கண்டறிதற்கு | ஊடி |
| ,, | ௩௫ | சோலையிலே | சோலையிலே சென்று |
| ௧௫௨ | ௨௦ | சில் | இல் |
| ௧௫௩ | ௭ | சமையம் | சமயம் |
| ,, | ௧௦ | நிதனு | நிதழ்நு |
| ௧௫௪ | ௨௮ | புதலை | புல்லை |
| ,, | ௩௦ | பொறையகல்புழை | பொறைய கற்புழை |
| ,, | ௩௩ | என்றபடி | என்றபடி மெல்லப்போயது எனமுடித்தலுமாம் |
| ௧௫௫ | ௨௨ | நாகுளறி | ஆகுழறி |
| ,, | ௨௩ | நாக்குளறி | பசுவானது குழறி |
| ,, | ௨௪-௨௫ | படரின் ஆகுளறிவீழ்ந்தது எனக்கண்ணளிப்பினுமமையும் | |
| ௧௫௬ | ௧௫ | வலதுகரமானது | வலக்கரமானது |
| ,, | ௩௨ | ஒரு | ஓர் |
| ௧௫௭ | ௧ | எழுதுதல் ஈண்டுத்தொழிலுறச் செய்தல் என்னுப் பொருள்படநின்றது | எழுதுதல் - சித்திரித்தல் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| கரு௦ | கஉ | உரியவாம் | உரியதாம் |
| ,, | கரு | உரிய | உரியது |
| ,, | உஉ | தருவினுமகன்றுள்ளது | தருவைப்போலப் பெருமையுடையது |
| கருக | ௩௩ | அவ்விடத்தே | அப்பொழுது |
| கருஉ | க | என | எனவேண்ட |
| ,, | உ | வினவு | வேண்டுதல்செய்ய |
| கருச | ரு | சேறெனவறைந்து | சேறியென்றறைந்து |
| ,, | கக | சேறு என | செறி என்று |
| ,, | உச | முனிவனின் | முனிவனின் |
| கருடு | ௩௩ | கருவரி | சருவரி |
| கருரு | க | ,, | ,, |
| ,, | ,, | சூரியகிரணத்தால் | சூரியகிரணத்துக்கு |
| ,, | கக | வெயிற்கு என்பது வேற்றுமை மயக்கம் | |
| கருள | கடு-கரு | தருமநீதியிலே நின்று அறிந்து சொல்லுதி | தருமத்துக்கொத்தது இது; நீ ஆராய்ந்து பார் |
| கருஅ | உ௩ | யான் | யாம் |
| கருகூ | டு | உகழுகின்ற | உகளுகின்ற |
| களக | உஎ | யுடைய | யுடைய பிரிக்கப்படாது |
| ,, | ,, | பிரித்தற்கரிய | அழித்தற்கரிய |
| கள௩ | உச | தேனுவை | தன்னை |
| ,, | ௩உ | தேனுவை | திலீபனை |
| களச | ௩௦ | எய்ப்புற | எய்ப்புற |
| ,, | ,, | அதனையுண்ணும்படிபொருந்தி | இளைப்புற |
| களஅ | ச | | மயிலினேடும் எனப் பாடங்கொண்டு சுதக்கிணையோடும் எனப் பொருள்கோடலே சிறப்பு |
| ,, | கூ | பகிர்ந்தாற்போற் | பகிர்ந்தாற் |
| கஅ௦ | உக | மற்ருே | ஓ |
| ,, | உகூ | ஆவி | மற்று-அசைநிலை. ஆவி |
| கஅஉ | ௩ | செவ்வியால் அளியின் ததைந்து | செவ்வியால் ஆம் களியின் ததைந்து |
| ,, | ச | பருவத்தோடு வண்டுகளால் நெருக்கமுற்று | பருவத்தாலாகிய களிப்பினேடு செறிந்து |
| ,, | உரு | நரிதல் | கரிதல் |
| ,, | உகூ | | வேறு. |
| கஅ௩ | கஅ | துயர் | துயர். கருப்பத்தாலாய துயருமாம். |
| கஅடு | ௩உ | என்ருர் | என்ருர். ஓதை பாரெலாம் மிகுந்த என முடித்தலுமாம். |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| கஅசு | ௩ | அய | திலீப |
| கஅகூ | ரு | தலைமை | ஒலி [த்தலுமாம். |
| ,, | உஎ | இயையும் | இயையும். இழைத்தல் - அரை |
| ககூசு | உஎ | பகுதிப்பட்ட | பெருமைபொருந்திய |
| ககூஎ | கஉ | கோல் | கோள் |
| உOO | கூ-கO | என்றுஞ் | என்று |
| ,, | ககூ | உயர் | உயர்வு |
| ,, | ,, | இழி | இழிவு |
| உOஉ | உச | புதிதாந்தன்மை [ன் | புதுமை |
| உOஎ | உ | ஆலோசித்து கொண்டா | ஆலோசித்து நிச்சயித்தரன் |
| ,, | ௩O | சுழிந்தனமாட்சித்தாயின | சுழிந்தன |
| ,, | ௩க | சுழிந்தனவாய் மாட்சிமை யையுடைத்தாயின | சுழிந்தன |
| ,, | ,, | பலம்படு | மாட்சித்தாயின பலம்படு |
| ,, | ௩உ | பயனைக்கொண்ட | மாட்சிமையுடைத்தானபயனை க்கொண்ட |
| உOகூ | கச | தொக்குநின்றது | தொக்கு நின்றது. பூத்தன - விரிந்த பூவின் மடலை ஒத் தன எனினுமாம். |
| ,, | கசு | | மற்றுள விளக்கமும் என்பதை மற்றுள விலக்கமும் எனப் பாடங்கொண்டு, இலக்கம் என்பதற்குக் குறி என உ ரைத்தலுமாம் |
| உகஉ | ௩க-௩உ ௩௩-௩ச | ன் | ற் |
| உக௩ | அ-கூ | முதலினு மீற்றினுமுள்ள இன்சாரியைகள் எது கைநோக்கித் திரியாதி யல்பாயின | துதியின் என்பதில் இன்சாரி யை எதுகைநோக்கித் திரி ந்தது |
| ,, | கO | மாழ | மாள |
| உகச | ரு | னெரிவா | நெரிவா |
| ,, | கO | குலன் | குலம் |
| ,, | ௩க | எவற்றினும் | எவற்றினதும் |
| உகசு | ௩O | தாஙகும்படி | தங்கும்படி |
| உஉகூ | கO | பிறிப்பரோ | பிரிப்பரோ |
| உ௩உ | கக | | எதிர்ந்தவாறளவை என்பது எதிர்ந்தவற்றளவைஎனவும் பாடம் |
| ,, | உரு | துமித்தான் | துமித்து வீழ்த்தான் |
| உ௩சு | உO | வேகத்தை | தொழிலினது வேகத்தை |
| உ௩எ | சு | கையிற்புகுந்த | கைபுகுந்துசெய்த |
| ,, | ௩௩ | வறிது | வெறிது |

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| உ௩௯ | ௩௩ | வாயும் | வாயுவும் |
| உ௪0 | உ௩ | வலிமையைப்பொருந்தி | பகுதியைப் பொருந்தி |
| உ௪உ | உ௪ | பொற்குஞ்ச மென்பாருமுளர் | பொற்குஞ்சமென்பாரும் பொற்குதை என்பாரும் உளர் |
| உ௪௫ | ௧ | பயனைத்தருவாய் | பயனை என்பிதாவுக்குக் கொடுப்பாய் |
| ,, | அ | வந்தன. | வந்தன. எந்தைக்கு என்பதை முன்னுங்கூட்டிப் பொருள் கொள்க. |
| உ௪௬ | ௩௫ | | மனத்தினின் என்பதற்கு இஃடப்படி எனப் பொருள்கூறினும் பொருந்தும். |
| உ௪அ | உ௧ | சாமார்த்தியம் | சாமர்த்தியம் |
| உ௫௧ | ௧0 | கந்தமே | காந்தமே |
| உ௬௪ | ௩ | சின | வீழ் அதரச் சின |
| ,, | ௧௧ | வேத்தினை | வேகத்தினை |
| உ௭௩ | ௧அ | உலைந்திடாவகை | உலைத்திடாவகை |
| உ௭௪ | ௧0 | செல்வர் | செல்வார் |
| உ௭௫ | உ | நோக்கி வலிமையோடும் | கூறுபாட்டோடும் நோக்கி |
| ,, | ௧௧ | யுலாகெலா | யுலகெலா |
| உ௭௬ | ௬ | கோடிச் | கோடி |
| உ௭அ | ௩௧ | றன்னதாந் | றன்னதாஞ் |
| உ௭௯ | ௬ | கொடியை | கொடியையே |
| ,, | ௩0 | அரர்ச | அரசர் |
| உஅ௩ | ௬ | இன்று | இற்று |
| ,, | ௧உ | இரகுவினது | கலிங்கராசனது |
| ,, | ௧௯ | தீய்த்தலிற் | தீத்தலிற் |
| உஅ௪ | உ௪ | பொரிந்திய | பொருந்திய |
| உஅ௫ | ௩ | பேரொலி | போரொலி |
| ,, | ௧௭ | மகிதலம் | இடம் மகிதலம் |
| உஅ௬ | ௩ | எழு | எழ |
| உஅஅ | உ0 | கட்டினர் | நேர்கட்டினர் |
| ,, | உஉ | தம்பகைப் | தங்கைப் |
| ,, | ,, | படைளால் | படைகளால் முறையே |
| உஅ௯ | ௪ | பிறவினை | பிறவி வினை |
| ,, | உ0 | | வேறு |
| உ௯0 | ௧௩ | மரும் | மருமம் |
| உ௯௪ | உஉ | மொலிந்த | பொலிந்த |
| உ௯அ | ௧உ | அலைதலையுடைய | கடற்கரையிலுள்ள |
| ,, | ௧௭ | அலைய பெயரெச்சம் | |
| ௩0௪ | அ | விளங்குகின்ற | விளங்குகின்ற கொய்யப்படுகின்ற |
| ௩௧௧ | ௩௧ | வந்தது | வந்தனன் |
| ,, | ௩உ | ,, | ,, |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௩கக | ௩௫ | வந்துவிட்டது | வந்துவிட்டான் |
| ௩கஎ | ௨௦-௨க | நெற்றியந்தலத்தினும் | மத்தகத் தடத்தினும் |
| ,, | ௨க | மத்தகத்தினிடத்தும் | மத்தகத்தின் பரப்பிலும் |
| ௩௨௪ | க௫ | விளைத்தவை [ரம். | விழைந்தவை |
| ,, | ௨௪ | விளைத்து வலித்தல்விகா | |
| ௩௨௫ | ௩௫ | இழிவு | உயர்வு |
| ௩௪க | ௩௦ | பிறிதுண்டோ | வேறுண்டோ |
| ௩௪௨ | ௩௫ | சூழற் | சூழல் |
| ௩௪௪ | கக | மனத்தின்கண்ணே | மனத்திலுள்ள |
| ௩௪௫ | ௨௩-௨௪ | போரில் வந்து சூழ்தவர்களது நெருக்கத்திலே (சில வீரர்) வீழ்தலும் | தம்மை வந்து சூழ்ந்தவர்கள் நெருக்கத்தில் வீழ்தலும் |
| ௩௪௬ | க௮ | குருடராவார்கள் | குருடராபவர்கள் |
| ,, | ௨௮ | கிடந்தகோ | கிடந்ததோ |
| ௩௪௮ | ௩௨ | வேத்து | வேந்து |
| ௩௫௦ | ௩௦ | பறித்து இருக்கப்பட்டார் | பறித்திருக்கப்பட்டார் |
| ,, | ௩க | கழற்றி இருந்தாரும் | கழற்றினவரும் |
| ௩௫௨ | ௮ | ச்செங்கற்கள் | லோகங்கள் |
| ,, | ௩க | சமபெலத்தை | ஒத்தபெலத்தை |
| ௩௫௬ | ௩க | சயிலநாதர்க்கு | சயிலநாதற்கு |
| ௩௫எ | ௩ | ,, | ,, |
| ,, | ௪ | மலையரசர்களாகிய அந்த உற்சவசங்கேதர்களுக் குமுள்ள | மலையரசனுக்கு |
| ,, | ௮ | சயிலநாதர்க்குள்ள | சயிலநாதற்குள்ள |
| ,, | க௦ | சயிலநாதருடைய | சயிலநாதனுடைய |
| ,, | கக | சயிலநாதரால் | சயிலநாதனுல் |
| ,, | ௩௪ | கரம் | நதி |
| ௩௫௮ | க௩ | காலுவன | காலுவது |
| ,, | க௬ | ஈனுவ என்க | ஈனுவது என்க. துவ்விகுதி கெட்டுநின்றது |
| ௩௬௨ | ௨எ | துய்திடும் | துய்த்திடும் |
| ௩௬௩ | க௪ | தோற்றம் | தேற்றம் |